இவான் துர்கேனிவ்

# மூன்று காதல் கதைகள்



முன்னேற்றப் பதிப்பகம் மாஸ்கோ

# இவான் துர்கேனிவ்

# மூன்று காதல் கதைகள்



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: பூ. சோமசுந்தரம்
தயாரிப்புக் கலைஞர்: த. தல்ஸ்தாயா

**Иван Тургенев**
ТРИ ПОВЕСТИ О ЛЮБВИ
*На тамильском языке*

I. S. Turgenev
Three Short Novels
*In Tamil*



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

$T\ \frac{70301-683}{014(01)-82}\ 692-82$ 4702010100

## பொருளடக்கம்

# முன்னுரை

தலைசிறந்த ருஷ்ய எழுத்தாளர்களில் ஒருவரான இவான் துர்கேனிவ் (1818—1883) மிக நுட்பமான உரைநடை உணர்ச்சிக் கவிஞர், உளவியல் பகுப்பாய்வில் தேர்ந்த நிபுணர், மனித உணர்ச்சிகளின் உலகில், எட்டுவதற்கு அரிய ஆழத்துக்குள் கூரிய பார்வை செலுத்தும் திறன் பெற்றவர், அழகிய நடை கைவந்தவர், உண்மையான சொல் ஓவியர் என்று தம் தாய்நாட்டிலும் தொலைதூர வெளிநாடுகளிலும் பெரும் புகழ் பெற்றிருக்கிறார். பெருத்த இலக்கியச் செல்வத்தை அவர் விட்டுச் சென்றுள்ளார். ஆறு நாவல்கள், ஏராளமான குறுநாவல்கள், சிறு கதைகள், நாடகங்கள், செய்யுட்கள் முதலியன இதில் அடங்கும்.

மனிதனது அந்தரங்க உணர்ச்சிகளுக்கும் வரலாற்றுப் பிரச்சினைகளுக்கும் உள்ள பிரிக்க முடியாத ஒருமையை அவருடைய படைப்புக்கள் வழக்கமாகக் காட்டுகின்றன. ஆயினும், பற்பல நூல்களில், தூய உளவியல் சிக்கல்களுக்கு, தனி மனித ஒழுக்க நெறிப் பிரச்சினைகளுக்கு, தீர்வு காண்பதில் கலைஞர் என்ற முறையில் அவருடைய கவனம் ஒருமுனைப்பட்டிருக்கிறது.

இந்தத் தொகுப்பில் உள்ள ''ஆஸ்யா'', ''முதல் காதல்'', ''வசந்தகால வெள்ளம்'' என்னும் மூன்று குறுநாவல்கள் இந்த வரிசையைச் சேர்ந்தவை. இவை காதல் கதைகள். உள் தூண்டல் பெற்ற காதல் இசைஞரான துர்கேனிவின் புரிவில் காதல் என்பது துன்ப உணர்வு, வாழ்க்கையின் மகத்தான மர்மங்களில் ஒன்று. இயற்கையினுடைய உற்பாதச் சக்தியின் வெளிப்பாடு இது. இந்த ஆற்றலுக்கு முன் மனிதன் முற்றிலும் தற்காப்பு அற்றவன், புகல் அற்றவன். துர்கேனிவின் மிகப் பெரும்பாலான நாவல்களிலும் குறுநாவல்களிலும் சிறுகதைகளிலும் காதல் மனிதர்களை விதி போலத் தாக்குகிறது, ஆர்வமாகப் பீரிடுகிறது, வாழ்க்கையில் கவிதை ஒளி பரப்புகிறது, பின்பு துன்பமாக முடிகிறது.

மிக ஆழ்ந்த உணர்ச்சிக் கவிஞரான துர்கேனிவுக்கு அவருடைய சொந்த உணர்வுகளும் புலன் உணர்ச்சிகளும் அனுபவங்களும் படைப்பில் நிர்ணயகரமானவையாக இருந்தன. தமது நெஞ்சு உணர்ந்து அனுபவித்தவற்றை, தாம் நேரில் அறிந்தவற்றை,இலக்கியத்துக்குக் கொண்டுவந்தார் துர்கேனிவ். உதாரணமாக, இருபத்தைந்து வயது இளைஞராய் இருக்கையில் பாடகி பவீனு கார்ஸியா-வியார்தோ மேல் அவர் கொண்டிருந்த மோகத்தை விதிவசம் என்று அல்லாமல் வேறு விதமாகக் குறிப்பிட முடியாது. பவீனுவின் பின்னே இளம் எழுத்தாளர் பிரான்சுக்குப் போனுர். பாடகி பவீனு மணமானவள், மணவிலக்கு செய்து கொள்ளும் எண்ணம் அவளுக்கு இல்லை. துர்கேனிவ் பவீனுவுக்கும் அவளுடைய குடும்பத்துக்கும் அருகே, அவருடைய சொற்படி, ''வேற்றுக் கூட்டின் விளிம்பில்'' ஆயுள் முழுதும்

வீணே கழித்தார். காதலின் துன்பியலை அவர் அவ்வளவு கூர்மையாக உணர்ந்ததன் காரணம் இதுதான் போலும்.

இந்தத் தொகுப்பில் அடங்கிய குறுநாவல்கள் துர்கேனிவுக்கு மிகவும் மதிப்பு உள்ளவையாக இருந்தன, ஏனெனில், அவருடைய வாழ்க்கையில் நடந்த, அவரது இதயம் அனுபவித்த நிகழ்ச்சிகள் இவற்றில் விவரிக்கப்படுகின்றன. இந்த நூல்கள் தமக்குச் சிறப்பாகப் பிடித்தவை என்பதைத் துர்கேனிவ் பல முறை ஒப்புக் கொண்டிருக்கிறார். அவருடைய படைப்புக்களில் எல்லாவற்றிலும் முக்கியமானவையாக, எல்லாவற்றிலும் கருத்தாழம் மிக்கவையாக இவை இல்லாதிருக்கலாம். ஆனாலும் இவை அவருடைய உள்ளத்தின் விடுக்கள், அதோடு, ருஷ்ய உணர்ச்சி உரைநடையின் அழியாச் சிறப்பு வாய்ந்த படைப்புக்கள் இவை. அசாதாரணக் கவிநயமும் உணர்ச்சி வெளிப்பாடும் உருவ அழகும் கொண்டவை. துர்கேனிவின் வருணனைகள் எழிலார்ந்தவை. லேவ் தல்ஸ்தோய்கூட இவற்றால் மகிழ்ந்து பரவசமடைந்தார். ''இவை உண்மையான நன்முத்துக்கள். எழுத்தாளர்களில் யாருக்கும் கிடைக்க முடியாதவை''* என்றார் அவர்.

ருஷ்ய இலக்கியத்தின் இந்த அபூர்வமான நன்முத்துக்களை விளக்குவதில் அர்த்தமில்லை என்பது கண்கூடு. இவற்றுக்கு விளக்கம் தேவை இல்லை. எனவே இந்த நூல்களின் படைப்பு வரலாறு

---

* துர்கேனிவ் இ.செ., முழு நூல் திரட்டும் கடிதங்களும் 28 தொகுதிகளில். தொகுதி 7. மாஸ்கோ — லெனின்கிராது, ''நவூகா'' 1964, பக்கம் 431.

குறித்த சில விவரங்களேயும் அவை பற்றிய சம காலத்தவர்களின் சில கருத்துக்களேயும் எடுத்துக் காட்டுவதுடன் நிறுத்திக் கொள்வோம்.

1857ம் ஆண்டில் எழுதப்பட்ட ''ஆஸ்யா'' என்னும் குறுநாவல் கதாநாயகியின் பெயரைக் கொண்டது. பொங்கும் உற்சாகமும் பெருமிதமும் துணிவும் உள்ள மங்கை ஆஸ்யா ''எங்கேனும் தொலேவுக்கு, கல்லறைக்கு, கடினமான அருஞ் செயல் ஆற்றப் போக வேண்டும்'' என்று ஆசைப் படுகிருள். அவளுடைய சுபாவத்தின் முழுமையும் உளத் தூய்மையும் ஆர்வமும் நம்மை வசீகரிக்கின் றன. ஆஸ்யாவின் வாழ்க்கைப் போக்கு கடின மானது. பணக்கார நிலப்பிரபுவுக்கும் பண்ணே யடிமை விவசாயிப் பெண்ணுக்கும்—நடப்பில் அடிமைக்கும்—''முறைகேடாகப் பிறந்த'' மகள் அவள். ஓவியம் பயிலும் தமையன் அவளே வெளி நாட்டுக்கு அழைத்துப் போகிருன், ஏனெனில் தாயகத்தில் தனது ''போலி நிலேமை'' காரண மாக அவள் இடர்ப்பட்டாள். ஆஸ்யாவின் முன் மாதிரிகளில் ஒருத்தி, துர்கேனிவின் மகள் பலீனு, சாதாரண விவசாயிப் பெண்ணுக்கு முறையான மணம் இன்றிப் பிறந்தவள். விதியின் கணக்கற்ற தாக்குதல்களிலிருந்தும் தன்மானத்தின் உறுத்தும் குத்தல்களிலிருந்தும் பலீனுவைக் காக்கும் பொருட்டுத் துர்கேனிவ் அவளே நிரந்தரமாக பிரான்சில் குடியேற்றிஞர், பிரெஞ்சு உயர்குடி மங்கையாக அவள் வளர்வதற்கு ஏற்பாடு செய் தார். ருஷ்யாவில் ஆஸ்யாவின் வாழ்க்கை பல அம்சங்களில் பலீனுவின் வாழ்க்கையை ஒத்திருந் தது. துர்கேனிவின் சொற்படி அவர் இந்தக் குறு நாவலே''அனேகமாகக் கண்ணீர் பெருக்கியவாறு'' எழுதிஞர்.

ஆஸ்யாவின் உள்ளமுருக்கும் காதல் துன்ப கரமாக முடிந்தது. எவனை அவள் காதலித்தாளோ, தன் காதலை எவனுக்குத் தானே முதலில் வெளியிட்டாளோ, அவன் எதையும் தீர்க்கமாகச் சிந்திப்பவன், உறுதியாகச் செயலாற்றும் வல்லமை குறைந்தவன். காதலை வெளியிட்ட ஆஸ்யாவுக்கு அவன் சந்தர்ப்பப் பொருத்தமற்ற அபத்த உபதேசத்தை வறண்ட முறையில் வழங்கத் தலைப்பட்டான்... ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினின் காவிய நவீனமான ''யெவ்கேனி அனேகின்'' என்பதன் கதைக்கருவை இந்தக் கட்டம் ஓரளவு நினைவூட்டுகிறது.

துர்கேனிவுடைய குறுநாவலில் கவிதைப் பாங்கிலும் ஒழுக்க நெறிநோக்கிலும் காணப்படும் ''அழகும் தூய்மையும்'' அவரது சமகாலத்தவர்களுக்குப் பரவசமூட்டின. ''ஆஸ்யா'' முதன் முதலில் வெளியான ''ஸவ்ரிமேன்னிக்'' (''சமகாலத்தவன்'') சஞ்சிகையின் ஆசிரியரும் சிறந்த கவியுமான நிக்கலாய் நிக்ராஸவ் நாவலாசிரியருக்கு எழுதினார்: ''உன்னுடைய குறு நாவலுக்காகவும் அது இவ்வளவு அருமையானதாக வாய்த்திருப்பதற்காகவும் உன்னைத் தழுவிக் கொள்கிறேன். உள்ளத்தின் இளமை அதிலிருந்து மணம் பரப்புகிறது. அது முழுவதுமே சொக்கத் தங்கமான கவிதை''.* ''ஆஸ்யா''வின் உணர்ச்சிக் கவிதை அழகால் வசீகரிக்கப்பட்ட எழுத்தாளர் திமீத்ரி கிரிகரோவிச், ''உனக்குள் ஊதாப் பூ மலர்ந்திருக்கிறது''** என்று கூறினார்.

---

* துர்கேனிவ் இ.செ. அதே தொகுப்பு. தொகுதி 7, பக்கம் 434.

** அதே பக்கம்.

1860ல் எழுதப்பட்ட "முதல் காதல்" என்னும் குறுநாவலில், ஆசிரியரின் சொற்படி, உண்மை நிகழ்ச்சி வருணிக்கப்பட்டிருக்கிறது. அதன் பாத்திரங்கள் உண்மை நபர்கள். துர்கேனிவும் அவருடைய தகப்பனுரும் முக்கியமானவர்கள். தகப்பனுர் முன்னுள் படை அதிகாரி. பெரும் பணக்காரியும் தமக்குப் பத்து வயது மூத்தவளுமான ஒருத்தியை, காதல் இன்றி, வெறுமே பணத்துக்காக, மணந்து கொண்டவர்... வருணிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சியோ, எழுத்தாளரின் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒன்று. இதைப் பற்றித் துர்கேனிவ் பின்வருமாறு கூறினுர்: " 'முதல் காதலில்" நான் என் தகப்பனுரைச் சித்திரித்திருக்கிறேன். இதற்காக என்னைப் பலர் கடிந்து கொண்டார்கள். நான் இதை ஒருபோதும் மறைக்கவில்லை என்பதற்காகச் சிறப்பாகக் கடிந்து கொண்டார்கள். ஆனுல் இதில் கெட்டது ஒன்றும் இல்லை என்று நினைக்கிறேன். மறைப்பதற்கு என்னிடம் எதுவும் இல்லை. என் தகப்பனுர் அழகர். நான் அவரைச் சிறிதும் ஒத்திருக்கவில்லை என்பதால் நான் இதைச் சொல்லலாம். முக அமைப்பில் நான் தாயாரைக் கொண்டிருக்கிறேன். தகப்பனுர் மிக நன்ருய் இருந்தார்—உண்மையான ருஷ்ய அழகு வாய்ந்தவராக,வழக்கமாக உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் அசட்டையாகவும் அணுக முடியாதவராகவும் இருந்தார். ஆனுல் மற்றவர்களுக்குப் பிடித்தவராக வேண்டும் என்று விரும்பினுல் போதும், அவருடைய முகத்திலும் அவருடைய பழகு முறைகளிலும் எதிர்த்து நிற்க முடியாதபடிச் சொக்க வைக்கும் ஒரு தன்மை காணப்பட்டது. தமக்குப் பிடித்த மாதர்

களிடம் அவர் சிறப்பாக இந்தப் பாங்கை மேற்கொண்டார்.''*

குறுநாவலின் கதைக்கருவுக்கும் தம் பிள்ளைப் பிராயத்து உண்மை நிகழ்ச்சிகளுக்கும் உள்ள தொடர்பை மறைக்க முதலில் துர்கேனிவ் விரும்பினார். உதாரணமாக, வலோத்யாவைத் தகப்பனாரை இழந்தவன், சிறிய தகப்பனார் வீட்டில் வசிப்பவன் என்று சித்திரிக்க எண்ணினார். ஆனால் வாழ்க்கையில் நேர்ந்தது போலவே தகப்பனாருக்கும் மகனுக்கும் ஏற்பட்ட மோதலாக இது இருக்க வேண்டும் என்று பிறகு முடிவு செய்தார். உண்மையில் நடந்தது போலவே நிகழ்ச்சிகள் 1833ம் ஆண்டில் நடந்ததாகக் குறுநாவலில் வருணிக்கப் பட்டன. துர்கேனிவுக்கு அப்போது வயது பதினைந்து. ஆனால், பதினாறு வயதுப் பையன் தன் குடும்பத்தில் நடந்த சிக்கலான உளவியல் துன்ப நிகழ்ச்சியின் சூழ்நிலை முழுவதையும் கணிசமாக அதிக ஆழமாகவும் நுட்பமாகவும் புரிந்து கொள்வான், அனுபவிப்பான் என்பதால் வலோத்யாவை அவர் ஒரு வயது மூத்தவனாகச் சித்திரித்தார்.

கதைப் போக்கு முக்கியமான இரண்டு களங்களில் நிகழ்கிறது. முதன்மையாக இது கோடை கால நகர்ப்புற விடுதியில் பக்கத்து வீட்டுக்காரியான ஜினயீதா என்னும் கவர்ச்சிக் கன்னி மீது இளைஞன் என்பதை விடச் சிறுவன் என்று கூறத் தகுந்த வலோத்யாவுக்கு ஏற்பட்ட காதலின் விரிவான வருணனை. அதே சமயம் பின்புலத்தில் போல, வலோத்யாவின் உணர்வுவாயிலாக நிகழ்கிறது அடிப்படையான கதை—ஜினயீதாவுக்கும்

---

* துர்கேனிவ் இ.செ., அதே தொகுப்பு, தொகுதி 9, பக்கங்கள் 459—460.

வலோத்யாவின் தகப்பனுரான பியோத்தர் வசீலி யெவிச்சுக்கும் ஏற்பட்ட காதல்.

ஜினயீதாவின் பாத்திரப் படைப்பு எல்லா வற்றிலும் சுவாரசியமானது எனலாம். முதலில் நமக்கு முன் தோன்றுகிருள் பார்வைக்கு அழகான சரசக்கார மங்கை. வழிபடுவோர் குழாம் அவளைச் சூழ்ந்திருக்கிறது. ஆனுல் ஜினயீதாவின் சிறப்பு அவளுடைய தோற்றக் கவர்ச்சி மட்டும் அல்ல. அவள் கூர்ந்த அறிவும் நுட்பமும் தீவிர அழகு ணர்வும் உள்ளவள். சொந்த வீட்டின் பாங்கற்ற அன்ருட வாழ்க்கையும் அற்பச் சூழலும் அவளுக்கு அருவருப்பு உண்டாக்கி இருந்தன. பியோத்தர் வசீலியெவிச்சை அவள் தற்செயலாகச் சந்திக் கிருள். அவர் மிகுந்த அழகர், அசாதாரணமான வர், ஒளி வட்டம் போன்று இரகசியத்தால் சூழப் பட்டவர். அவரைக் கண்டதும் முதலில் ஏற்பட்ட இயல்பான உணர்வுக்கு ஜினயீதா தன்னை முழு மையாக ஒப்புக் கொடுத்து விடுகிருள். வருங் காலத்தைப் பற்றி அறவே எண்ணுமல், துணிவு டன் ஒப்புக் கொடுத்து விடுகிருள். அந்தோ, அவர்களுடைய காதல் துன்பகரமாக இடை முறியாமல் இருக்க முடியாது. அவளுடைய வழியில் அளவு கடந்து ஏராளமான தடைகள். காதலர்கள் பிரிவது கட்டாயம் ஆகிறது.

வேருெரு எழுத்தாளரின் பேஞ இந்த நிகழ்ச் சியை வழக்கமான உள நெகிழ்ச்சிக் கதையாகச் சித்திரித்திருக்கும். தம் பாத்திரங்களின் எல்லா உணர்ச்சிகளுக்கும் செயல்களுக்கும் நுட்பமாகக் காரணங்கள் காட்டிச் செல்லும் மாபெரும் கலை ஞரான துர்கேனிவின் கலைத்திறனுல்தான் ''முதல் காதல்'' அவரது இன்னெரு தலைசிறந்த படைப்பு ஆயிற்று. ''ஒரு குறுநாவலைத்தான் நான் மகிழ்ச்சி

யுடன் திரும்பத் திரும்பப் படிக்கிறேன்'' என்று முதுமையில் கூறினார் துர்கேனிவ். ''அதுதான் 'முதல் காதல்'. அது என் அன்புக்குரிய படைப்பு எனலாம். மற்றவற்றில் கொஞ்சமாவது கற்பனை கலந்திருக்கிறது. 'முதல் காதலிலோ' உண்மை நடப்பு கொஞ்சங்கூட மிகைப்படுத்தாமல் அப்படியே விவரிக்கப்பட்டிருக்கிறது. திரும்பப் படிக்கையில் பாத்திரங்கள் உயிருள்ளவர்களாக என் முன்னே தோன்றுகிறார்கள்''.* சமகாலத்தவர்கள் பலர் இந்த நூலை உயர்வாக மதித்தார்கள். துர்கேனிவின் நெருங்கிய நண்பரும் சிறந்த ருஷ்யப் புரட்சியாளரும் ஜனநாயகவாதியும் எழுத்தாளருமான அலெக்சாந்தர் ஹெர்சன் அவர்களில் ஒருவர். ''உன்னுடைய 'முதல் காதல்' வியந்து பாராட்டுவதற்கு உரியது''** என்று துர்கேனிவுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டார் ஹெர்சன். வாசகர்கள் '' 'முதல் காதலை' ஆர்வத்துடன் சுவைத்துப் படிக்கிறார்கள். இவ்வளவிற்கும் அதில் அம்பலப்படுத்துவதோ அறிவு புகட்டுவதோ எதுவும்—உணர்ச்சிப் பெருக்கையும் நறுமணத்தையும் கவிதையையும் தவிர எதுவும்—இல்லை...''*** என்று கூறுகிறார் அந்தக் காலத்துத் திறமைசான்ற இலக்கிய விமர்சகர் அப்பலோன் கிரிகோரியெவ்.

''வசந்த கால வெள்ளம்'' என்னும் குறுநாவலை எழுதுவதில் 1870ம் ஆண்டின் நடுவிலி

---

* துர்கேனிவ் இ.செ. அதே தொகுப்பு, தொகுதி 9, பக்கம் 460.

** துர்கேனிவ் இ.செ. அதே தொகுப்பு, தொகுதி 9, பக்கம் 465.

*** அதே பக்கம்.

ருந்து 1871ம் ஆண்டின் முடிவு வரை துர்கேனிவ் ஈடுபட்டிருந்தார். துன்பகரமாக முடிந்த காதலைப் பற்றியே இதுவும் கூறுகிறது. திமீத்ரி ஸானினுக்கும் ஜெம்மாவுக்கும் ஏற்பட்ட முதலாவது, தூய, இளமைக் காதலை மாய்த்து விடுகிறது தற்செயலாகச் சந்தித்த ''விதிவடிவான'' மாதின் மேல் ஸானின் கொண்ட கண்ணற்ற, இழிவுபடுத்துகிற மையல். இந்த மாது கொடியவள், வஞ்சகி, ஆனால் அதே சமயம் அசாதாரணமான பெண்மைக் கவர்ச்சி உள்ளவள். இந்தக் குறுநாவலுக்கும் அடிப்படையாக விளங்குவது துர்கேனிவின் சொந்த அனுபவம். ஸானின் போலவே இளைஞர் துர்கேனிவ் ஒருமுறை இத்தாலியிலிருந்து திரும்புகையில் மைன் ஆற்றின் கரையில் உள்ள பிராங்க்பர்ட் நகரில் மிட்டாய்க் கடை ஒன்றில் அழகிய நங்கை ஒருத்தியைக் கண்டார். ஆழ்ந்த மூர்ச்சை அடைந்துவிட்ட தன் தம்பிக்கு உதவும்படி அவள் அவரை வேண்டிக் கொண்டாள். அந்தப் பெண் மேல் தமக்குப் பொங்கி வந்த மோகத்தை விரைவில் தாய்நாடு திரும்பியதன் மூலம் போக்கிக் கொண்டார் துர்கேனிவ். ஆனால் சுயசரிதை வகைப்பட்டது ''வசந்தகால வெள்ளத்தின்'' முதல் பகுதி மட்டும் அல்ல. துர்கேனிவ் தாமே அதைப் பற்றிப் பின்வருமாறு கூறினார். ''இந்த நவீனம் முழுவதும் உண்மை. நானே அதை அனுபவித்தேன், உணர்ந்தேன். இது என்னுடைய சொந்த வரலாறு. திருமதி போலஸவா சிற்றரசி துருபேத்ஸ்கயா. அவளை நான் நன்கு அறிந்திருந்தேன். ஒரு காலத்தில் அவள் பாரிஸ் நகரில் பெரும் சர்ச்சைக்கு உள்ளாகி இருந்தாள். அங்கே பலர் அவளை இப்போதும் நினைவு வைத்திருக்கிறார்கள். பந்தலியோனே அவள் வீட்டில் வசித்து வந்தான்.

நண்பனுக்கும் வேலைக்காரனுக்கும் இடைப்பட்ட நிலையை வகித்தான். இத்தாலியக் குடும்பமும் உண்மையானதை அடிப்படையாகக் கொண்டது. விவரங்களை மட்டும் நான் மாற்றி அவற்றின் இடங்களையும் மாற்றினேன், ஏனெனில் கண்களை மூடிக் கொண்டு புகைப்படம் பிடிக்க என்னால் முடியாது. உதாரணமாக, சிற்றரசி பிறப்பில் ஜிப்சி. நான் அவளைத் தாழ் குடியில் பிறந்த ருஷ்யச் சீமாட்டி வகையினள் ஆக்கினேன். பந்தலியோனேயை இத்தாலியக் குடும்பத்துக்குக் கொண்டுவந்தேன்...''*

''வசந்தகால வெள்ளம்'' ருஷ்யாவில் வெளியானதற்குப் பிறகு விரைவில் அதன் மொழி பெயர்ப்புக்கள் பிரான்ஸ், அமெரிக்கா, பிரிட்டன், இத்தாலி, டென்மார்க், போலந்து முதலிய நாடுகளில் வெளிவந்தன... சமகாலத்தவர்களின் கணக்கற்ற பாராட்டுரைகளில் குஸ்தாவ் பிளாபெரின் மதிப்புரை சிறப்பாக அக்கறைக்கு உரியது. அருமையான பிரெஞ்சு எழுத்தாளர் பிளாபெர் துர்கேனிவின் நெருங்கிய நண்பராகவும் திகழ்ந்தார். அவர் துர்கேனிவுக்கு எழுதினார்: ''நான் 'வசந்தகால வெள்ளத்தைப்' படித்து விட்டேன் என்று உங்களுக்குக் கூற விரும்புகிறேன். அது எனக்குக் கிளர்ச்சி ஊட்டியது, கண்ணீர் விடச் செய்தது. நான் ஓரளவு இறுக்கத்தை உணர்ந்தேன் போலும். இது, அந்தோ, நம்மில் ஒவ்வொருவருக்கும் நிகழ்ந்த சேதி! நம்முடைய நடத்தைக்காக நம்மை நாணச் செய்யும் நிகழ்ச்சி. எப்பேர்ப்பட்ட மனிதர் என் நண்பர் துர்கேனிவ், எப்பேர்ப்பட்ட மனிதர்! மிட்டாய்க் கடையின்

---

* துர்கேனிவ் இ.செ., அதே தொகுப்பு, தொகுதி 11, பக்கம் 461.

உட்புற வருணனை கவர்ச்சியானது, பரவச மூட்டு வது. இருவருமாகக் காலையில் உலாவுவதும் பெஞ் சியில் அமர்ந்து உரையாடுவதும் அப்படியே. பந்தலியோனே, சடைநாய், எமீலியோ... அதே போல முடிவு, சந்தடி அற்றது, அழுகை வருவிப் பது. ஆகா, காதல் நவீனம் என்ற ஒன்று உண்மை யில் நிலவினுல், இது தான் காதல் நவீனம்! நீங்கள் வாழ்க்கையைப் பற்றி நிறைய அறிந்திருக்கிறீர் கள், என் அருமை நண்பரே, தவிர, அறிந்தவற்றை விவரிக்க உங்களுக்குத் திறமை இருக்கிறது. இந்தத் திறமை இன்னும் அரிதாகவே காணப்படு கிறது. உங்கள் நூல்களை விளக்கி விவரிப்பதற் காக இலக்கிய ஆசானுகப் பணியாற்ற எனக்கு விருப்பம் உண்டாகிறது. ஒன்று சொல்லி விடு கிறேன். நான் அவற்றை விளக்கவே மாட்டேன். தேவை இல்லை! எனக்குப் பரவசமூட்டும் உங்கள் கலைத் திறமையை மந்தன் கூடப் புரிந்து கொள் ளும்படிச் செய்ய என்னுல் முடியும் என்று எனக் குத் தோன்றுகிறது. உதாரணமாக, உங்களுடைய 'வசந்தகால வெள்ளத்தில்' வரும் இரண்டு மாதர் பாத்திரங்களுக்கு இடையிலும் அவர்களுடைய சூழல்களுக்கும் இடையிலும் உள்ள வேறுபாடு கள். உங்களுடைய புதிய படைப்பு பற்றிய என் கருத்தை வெளியிடுவதற்கு ''வசீகரமானது!'' என்ற மிக அசட்டுத்தனமான சொல் தவிர வேறு எதுவும் என்னிடம் இல்லை. ஆனுல் இந்தச் சொல்லை இயல்பான ஆழ்ந்த பொருளில் புரிந்து கொள் ளுங்கள். உங்கள் நூல் வாசகர்களின் உள்ளங் களில் காதலைத் தளிர்க்கச் செய்கிறது: புன்னகை செய்கையில் அழுகையும் வருகிறது.''*

---

* துர்கேனிவ் இ.செ. அதே தொகுப்பு, தொகுதி 11, பக்கங்கள் 471—472.

துர்கேனிவின் இந்த மூன்று குறுநாவல்களும் ருஷ்ய இலக்கியத்திற்கு மூலச் சிறப்பு உள்ளவை யாக வெகு காலமாகத் திகழ்ந்து வருகின்றன. இவை துர்கேனிவ் தன்மை நிரம்பப் பெற்றவை. அவருடைய மேதையின் சிறந்த அம்சங்களை இவை பிரதிபலிக்கின்றன ஆகையால் இந்த நூல்களை உள்ளக் கிளர்ச்சி இல்லாமல் படிப்பது இன்றள வும் முடிவதில்லை. இளம் வாசகர்கள் துர்கேனிவின் படைப்பை அறிமுகம் செய்து கொள்ள இந்தக் குறு நாவல்களிலிருந்தே அடிக்கடி தொடங்கு கிறார்கள், மனித உணர்ச்சிகளின் தன்னிகரற்ற உலகை இவற்றில் காண்கிறார்கள். துர்கேனிவ் வருணித்துள்ள நிகழ்ச்சிகள் நம் காலத்துக்கு நூறு ஆண்டுகளுக்கும் முற்பட்டவை ஆயினும், நம் காலத்தவர்களையும் நேரடியாகப் பங்கு கொள்ள வைக்கின்றன, ஏனெனில் என்றும் நிலைத்திருப்ப வையும் அழிக்க முடியாதவையுமான, இயல்பான மனித உணர்ச்சிகளை இவை விவரிக்கின்றன.

அர்தூர் தல்ஸ்தியகோவ்

1*

எனக்கு அப்போது இருபத்தைந்து வயது இருக்கும் என்று கதையைத் தொடங்கினார் என். என். நீங்களே பார்க்கிறீர்கள், என்றோ நடந்து முடிந்து போன சேதி. அப்போதுதான் நான் தளை களிலிருந்து விடுபட்டு வெளிநாடு சென்றேன். அந்தக் காலத்தில் வழக்கமாகக் கூறப்பட்டது போல ''என் கல்விப் பயிற்சியை நிறைவுபடுத்து வதற்காக'' அல்ல, உலகத்தைப் பார்க்க வேண் டும் என்று எனக்கு விருப்பம் உண்டானதால்தான். நான் உடல்நலம் உள்ளவன், இளைஞன், குதூகலப் பேர்வழி. பணம் என்னிடம் நிறைய இருந்தது. கவலைகள் என்னை இன்னும் சூழவில்லை. மனம் போன போக்கில் வாழ்ந்து,விரும்பியதைச் செய்து வந்தேன். சுருங்கச் சொன்னால் செழித்துத் தழைத் துக் கொண்டிருந்தேன். மனிதன் தாவரம் அல்ல,

---

* இந்தக் குறுநாவல் ''ஸவ்ரிமேன்னிக்'' (சமகாலத்தவன்) என்னும் சஞ்சிகையின் 1858ம் ஆண்டின் இதழ் 1ல் முதன்முதலில் வெளியா யிற்று.

வேறு விதமாகக் குறிக்கப்படாதவரை எல்லா அடிக் குறிப்புக்களும் பதிப்பகத்தாருடையவை.

நெடுங்காலம் செழித்துத் தழைப்பது அவனுக்குக் கூடாது என்பது அப்போது என் மூளையில் படவே இல்லை. இளமை தங்கரேக்குகள் இட்ட தின்பண்டங்களை உண்கிறது, அவையே வாழ்வுக்கு இன்றியமையாத உணவு என்று எண்ணுகிறது. வேளை வரும் போதோ, நல்லுணவைக் கெஞ்சிப் பெற நேரிடும். ஆனால் இதைப் பற்றிப் பேசிப் பயன் இல்லை.

எந்த விதமான நோக்கமும் இல்லாமல், திட்டம் இல்லாமல் நான் பயணம் செய்தேன். எனக்குப் பிடித்த எல்லா இடங்களிலும் தங்கினேன், புது முகங்களை — முகங்களைத்தான் — பார்க்க ஆசை ஏற்பட்டதுமே புறப்பட்டு மேலே சென்றேன். மனிதர்கள் மட்டுமே என் கவனத்தைக் கவர்ந்தார்கள். அக்கறைக்கு உரிய நினைவுச் சின்னங்களையும் அற்புதமான பொருட்காட்சிகளையும் நான் வெறுத்தேன். லோன்-லாக்கேயின்* தோற்றமே எனக்குள் ஏக்கத்தையும் எரிச்சலையும் கிளப்பி விட்டது. டிரெஸ்டன் ''கிரியூனே கெவியோல்பே'' யில்** எனக்கு அனேகமாகப் பைத்தியம் பிடித்து விட்டது. இயற்கை என்மீது தனிப்பட்ட பாதிப்பு நிகழ்த்தியது. ஆனால் அதனுடைய அழகுகள் எனப்பட்டவற்றை, அசாதாரணமான மலைகள், செங்குத்துப் பாறைகள், அருவிகள் முதலிய

---

* லோன்-லாக்கே என்பது கூலிப் பணியாள் என்று பொருள்படும் பிரெஞ்சுச் சொல். இங்கே ஓட்டல் பணியாளையும் பயணிகளால் கூலிக்கு அமர்த்தப்படும் வழிகாட்டிகளையும் குறிக்கிறது.

** சொற்பொருள்: பசிய வளைமுகடு (ஜெர்மன்). டிரெஸ்டனில் உள்ள ''நகைக் காட்சிசாலை'' எனப்படுவது. சக்சோனிய அரசர்களின் மகுட மணிகள் உள்ளிட்ட மூவாயிரம் வகை நகைகள் இங்கே திரட்டி வைக்கப்பட்டுள்ளன.

வற்றை, நான் விரும்பவில்லை. இயற்கை என் மேல் சுமத்தப்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. மாறாக முகங்கள், உயிர்த்துடிப்புள்ள மனித முகங்கள் —மனிதர்களின் பேச்சுக்கள், அவர்களுடைய இயக்கங்கள், சிரிப்பு—இவை இல்லாமல் என்னால் சமாளிக்க முடியவில்லை. கூட்டத்தில் எனக்கு எப் போதும் சிறப்பாக எளிதாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. மற்றவர்கள் போன திக்கில் போவதும் மற்றவர்கள் கத்திய போது கத்துவதும் எனக்குக் குதூகலம் அளித்தன. அதே சமயம் இந்த மற்ற வர்கள் எப்படிக் கத்துகிறார்கள் என்று பார்ப் பதையும் நான் விரும்பினேன். மனிதர்களைக் கூர்ந்து கவனிப்பது எனக்கு வேடிக்கையாக இருந் தது... உண்மையில் நான் அவர்களைக் கூர்ந்து கவனிக்கக் கூட இல்லை. களி பொங்கிய, தெவிட் டாத ஒரு வித ஆவலுடன் அவர்களை நோட்டமிட் டேன். ஆனால் சொல்ல வந்ததை விட்டு நான் மறுபடி விலகி விட்டேன்.

ஆக, சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு ஜெர்மானியச் சிற்றூரில் நான் சிறிது காலம் வசித்தேன். ஸி. என்னும் இந்தச் சிற்றூர் ரைன் ஆற்றின் இடது கரையில் அமைந்திருந்தது. நான் தனிமையை நாடினேன். கனிய நீரூற்றின் அருகே நான் அறிமுகம் செய்து கொண்ட இளம் விதவை ஒருத்தியால் என் நெஞ்சு அப்போதுதான் புண் பட்டிருந்தது. அவள் பேரழகி, கூர்ந்த அறிவு உள்ளவள். எல்லோருடனும்—பாவியான என் னுடனும்தான்—சரசமாடினாள். முதலில் எனக்கு உற்சாகம் அளித்து நம்பிக்கை கூட ஊட்டினாள். பின்போ, சிவந்த கன்னங்கள் கொண்ட பவேரிய லெப்டினண்டு ஒருவனுக்கு தன்னை பலி கொடுத்து, என்னைக் கொடுமையாகப் புண்படுத்தி விட்டாள்.

உள்ளதை ஒப்புக்கொள்வதானால் என் நெஞ்சுப் புண் மிக ஆழ்ந்ததாக இருக்கவில்லை. ஆனாலும், ஏக்கத்துக்கும் தனிமைக்கும் கொஞ்ச காலம் ஆளாவது கடமை என்று நான் கருதியதால்— இளமைக்கு எல்லாமே விளையாட்டு தானே—ஸி. என்ற சிற்றூரில் குடியேறினேன்.

உயரமான இரண்டு மலைகளின் அடிவாரத்தில் அமைந்திருந்த இந்த ஊரின் இட வாய்ப்பும், சிலமான நகரச் சுவர்களும் கோபுரங்களும், நூற்றாண்டுக் கால லிண்டன் மரங்களும் ரைன் ஆற்றில் விழும் தெள்ளிய சிற்றாற்றின் மேலே கட்டப்பட்ட செங்குத்தான பாலமும் முதன்மையாக ஊரின் அருமையான மதுவும் எனக்குப் பிடித்தன. மாலை வேளையில் சூரியன் மறைந்ததும் (நான் குறிப்பிடும் நிகழ்ச்சி ஜூன் மாதத்தில் நடந்தது), சணல் நிற முடியுள்ள மிக அழகான ஜெர்மன் மகளிர் ஊரின் குறுகிய தெருக்களில் உலாவினார்கள். அயல் நாட்டானைச் சந்தித்ததும், "Guten Abend!"* என்று இனிய குரலில் மொழிந்தார்கள். பழங்காலக் கட்டிடங்களுடைய கூர் முகடுகளின் பின்னிருந்து நிலா வானில் எழுந்து அதன் அசைவற்ற கிரணங்களின் ஒளியில் வீதிச் சிறு கற்கள் துலக்கமாகத் தென்படத் தொடங்கிய போதும் கூட அவர்களில் சிலர் போகவில்லை. அந்த வேளையில் ஊரில் காலாற நடப்பதை நான் விரும்பினேன். தெளிந்த வானிலிருந்து சந்திரன் சிற்றூரை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. ஊரும் இந்தப் பார்வையை உணர்ந்தது போன்று, நிலவின் ஒளியில்

---

* **நன் மாலை!** என்று பொருள்படும் ஜெர்மன் சொற்றொடர்.

—கிளர்ச்சி அற்ற, அதே சமயம் நெஞ்சில் மெல் லிய குதுகுதுப்பு ஏற்படுத்திய ஒளியில்—முழுக் காடியவாறு நுண் உணர்வுடனும் அமைதியுடனும் திகழ்ந்தது. கோத்திக் பாணியில் அமைந்த உயர மான மணிக் கூண்டின் உச்சியில் இருந்த சேவல் ஒரு வெளிர் பொன் நிறத்தில் ஒளிர்ந்தது. ஆற் றின் கரு நீர்ப் பரப்பில் பெருகிய தாரைகளும் அதே போன்ற பொன் ஒளியில் மினுமினுத்தன. கற்பலகைக் கூரைகளின் அடியில், குறுகிய சன் னல்கள் உள்ள அறைகளில் எரிந்து கொண்டிருந் தன மெல்லிய மெழுகுவத்திகள் (ஜெர்மானியன் செட்டுக்காரன்!). முந்திரிக் கொடிகள் தங்கள் முறுக்கிய சிறு மீசைகளைச் சுற்றுக் கற்சுவர் களின் பின்னுலிருந்து இரகசியமாக நீட்டிக் கொண்டிருந்தன. முக்கோணச் சதுக்கத்தில் இருந்த பழங்காலக் கிணற்றின் அருகே நிழலில் எதுவோ ஓடியது. இரவுக் காவலாளின் தூக்க மயக்கமுள்ள ஊதல் திடீரென்று ஒலித்தது. நல்லி யல்புள்ள நாய் தணிந்த குரலில் உறுமிற்று. காற்று முகத்தை மென்மையாக வருடியது. லிண் டன் மலர்களிலிருந்து கமழ்ந்த மணத்தின் இனிமை காரணமாக நெஞ்சு தன் வசம் இன்றியே மேலும் மேலும் ஆழ்ந்து மூச்சு இழுத்தது. கிரெட்ஹென்* என்ற சொல், வியப்பு ஒலியாகவும் இல்லாமல் கேள்விக் குறியாகவும் இல்லாமல் தானுகவே நாவில் எழுந்தது.

---

* கிரெட்ஹென் என்பது மார்கிரெட் என்ற பெயரின் ஒரு ஜெர்மன் வடிவம். ஜெர்மானியக் கவிஞர் கியோத்தேயின் (1749 — 1832) ''பாவுஸ்ட்'' நாடகக் கதாநாயகி மார்கிரெட்டுக் கும் துர்கேனிவின் கதாநாயகி ஆஸ்யாவுக்கும் உள்ள தொடர்பை இது குறிப்பால் உணர்த்து கிறது.

சிற்றூர் ஸி. ரைன் ஆற்றிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவில் இருந்தது. அந்தப் பேராற்றைப் பார்ப்பதற்காக நான் அடிக்கடி போனேன். துரோகம் செய்த விதவையைப் பற்றி ஓரளவு இறுக்கத்துடன் எண்ணமிட்டவாறு பிர மாண்டமான தனி அசோக மரத்தின் அடியில் இருந்த கல் பெஞ்சியில் மணிக்கணக்காக உட் கார்ந்திருந்தேன். அனேகமாகக் குழந்தையினது போன்ற முகமும் வாட்களால் துளைக்கப்பட்ட சிவந்த இருதயமும் கொண்ட மரியம்மையின்* சிறிய சிலை அதன் கிளைகளிலிருந்து துயர் ததும்ப நோக்கியது. ஆற்றின் எதிர்க் கரையில் இருந்தது சிற்றூர் ல. நான் தங்கியிருந்த ஊரைக் காட்டி லும் அது கொஞ்சம் பெரியது. ஒரு நாள் மாலை யில் எனக்குப் பிடித்தமான பெஞ்சியில் உட் கார்ந்து, ஆற்றின் மீதும் வானத்தின் மேலும் முந்திரித் தோட்டங்கள் மீதும் மாறி மாறிப் பார்வை செலுத்திக் கொண்டிருந்தேன். கரைக்கு இழுத்துவரப்பட்டு, கீல் பூசிய முதுகு மேலே இருக்கும்படிக் குப்புறக் கவிழ்த்தப்பட்டிருந்த படகு ஒன்று எனக்கு எதிரே கிடந்தது. அதன் விலாக்களின் மேல் தொற்றி ஏறிக் கொண்டிருந் தார்கள் சணல் முடிச் சிறுவர்கள். காற்றில் லேசாகப் புடைத்த பாய்களுடன் சிறு கப்பல்கள் மெதுவாக ஊர்ந்தன. பசிய அலைகள் சற்றே உப் பியவாறு அவற்றின் அருகாக வழுகிச் சென்றன. திடீரென்று என் காதுக்கு எட்டின இசை ஒலிகள். நான் உற்றுக் கேட்டேன். ல. சிற்றூரில் வால்ட்ஸ் நடன இசை முழங்கியது. பாண்டு வாத்தியம் விட்டு

* கிறிஸ்துவின் தாய் பட்ட துன்பங்களைக் காட்டும் உருவகம் இது.

விட்டு ஒலித்தது. பிடில் தெளிவின்றி இசைத்தது. புல்லாங்குழல் உற்சாகமாக ஊதியது.

போலி மென்பட்டு மார்புச் சட்டையும் நீலக் காலுறைகளும் வார்ப்பூட்டுகள் உள்ள செருப்புக் களும் அணிந்து அருகே வந்த ஒரு கிழவரிடம், ''இது என்ன?'' என்று கேட்டேன்.

அவர் சுங்கான் குழாயை உதடுகளின் ஓர் ஓரத்திலிருந்து மறு ஓரத்துக்கு முதலில் நகர்த்தி விட்டு, ''ப. நகரத்திலிருந்து மாணவர்கள் கம் மெர்ஷுக்கு வந்திருக்கிறார்கள்'' என்று எனக்கு விடை அளித்தார்.

''இந்தக் கம்மெர்ஷை நானும் பார்த்து விடு கிறேனே. ல. சிற்றூருக்கும் நான் இது வரை போகவில்லை'' என்று எண்ணினேன். பரிசல்கா ரனைத் தேடிப் பிடித்து மறு கரைக்குப் புறப் பட்டேன்.

## 2

கம்மெர்ஷ் என்றால் என்ன என்று ஒருவேளை பலருக்குத் தெரிந்திராது. ஒரே இடத்தை அல் லது சோதரக் குழுவை (Landsmannshaft) சேர்ந்த மாணவர்கள் கலந்து கொள்ளும் தனி வகைக் கொண்டாட்ட விருந்து இது. கம்மெர்ஷில் பங்கு கொள்ளும் அனேகமாக எல்லோரும் நெடுங்கால மாக வழக்கில் இருந்து வரும் ஜெர்மானிய மாண வர் சீருடையை அணிவார்கள். மார்புப் பக்கம் குறுக்கு நாடாக்கள் தைத்த ஜாக்கெட்டு, பெரிய பூட்சுகள், குறிப்பிட்ட நிறங்கள் உள்ள ரிப்பன் சுற்றிய தொப்பி ஆகியவை அடங்கியது இந்தச் சீருடை. சீனியரின், அதாவது முதுநிலையினரின் தலைமையில் மாணவர்கள் வழக்கமாக மதிய விருந்

துக்குக் கூடுவார்கள், மறு நாள் காலை வரை விருந்து கொண்டாடுவார்கள், குடிப்பார்கள், Landesvater, Gaudeamus* என்ற பாட்டுக்களைப் பாடுவார்கள், புகைப்பார்கள், கிணற்றுத் தவளை மனப்பான்மையினரைத் திட்டுவார்கள். சில வேளை களில் இசைக் குழுவைக் கூலிக்கு அமர்த்திக் கொள்வார்கள்.

சிற்றூர் ல.வில் **சூரியன்** என்ற பெயர்ப் பலகை மாட்டிய சிறு தங்கு விடுதிக்கு எதிரே, வீதிப் பக்கத்தில் இருந்த தோட்டத்தில் இதே மாதிரிக் கம்மெர்ஷ் நடந்து கொண்டிருந்தது. தங்கு விடு திக்கு மேலேயும் தோட்டத்துக்கு மேலேயும் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. கிளைகள் துணிக்கப்பட்டிருந்த லிண்டன் மரங்களுக்கு அடி யில் மேசைகளின் அருகே வீற்றிருந்தார்கள் மாணவர்கள். ஒரு மேசையின் கீழ் பிரமாண்ட மான புல்டாக் படுத்திருந்தது. ஒரு பக்கத்தில், பூம்பட்டுப் பந்தரில் உட்கார்ந்திருந்த இசைக் குழுவினர் நடு நடுவே பீர் பருகித் தென்பு ஊட் டிக் கொண்டு உற்சாகமாக வாத்தியங்களை இசைத் தார்கள். தோட்டத்தின் தணிவான சுற்றுச் சுவ ருக்கு முன்னே வீதியில் கணிசமாக நிறைய ஆட் கள் கூடியிருந்தார்கள். வெளியூரிலிருந்து வந்த விருந்தினரைக் கண்ணுரைக் காணும் வாய்ப்பை நழுவ விட ல. சிற்றூரின் நல்லியல்புள்ள குடிகள் விரும்பவில்லை. நானும் பார்வையாளர்களின் கூட்டத்தில் கலந்து கொண்டேன். மாணவர்களின் முகங்களைப் பார்க்க எனக்கு மகிழ்ச்சியாக இருந்

---

* **லாண்டெஸ்வாட்டர், காவுடமஸ்** என்பவை பழங்கால மாணவர் பாடல்கள். முதலாவது ஜெர்மன் இரண்டாவது லத்தீன்.

தது. அவர்களுடைய தழுவல்கள், வியப்பொலி கள், களங்கம் அற்ற, இளமைக்கு இயல்பான சரசங்கள், உற்சாகம் பொங்கும் பார்வைகள், காரணம் அற்ற சிரிப்பு—உலகில் ஆகச் சிறந்த சிரிப்பு—இளமையும் புதுமைப் பொலிவும் உள்ள வாழ்வின் இந்த மகிழ்ச்சிப் பொங்கல் அனைத்தும், இந்த முன்னோக்கிய பாய்ச்சலும்—எந்தத் திக் கிலாயினும் சரியே, முன்னோக்கியதாய் இருந்தால் போதும் — நல்லியல்புள்ள இந்தக் கட்டற்ற சுயேச்சையும் எனக்கு உள் நெகிழ்ச்சி ஏற்படுத்தி என்னைத் தூண்டின. ''இவர்களோடு போக லாமா?'' என்று என்னையே கேட்டுக் கொண்டேன்.

''ஆஸ்யா, போதுமா உனக்கு?'' என்று ருஷ்ய மொழியில் என் பின்னே திடீரென்று ஒலித்தது ஓர் ஆண் குரல்.

''இன்னும் பொறுப்போம்'' என்று அதே மொழியில் விடை இறுத்தது பெண் குரல்.

நான் விரைவாகத் திரும்பினேன்... விளிம்பு வைத்த தொப்பியும் அகலமான ஜாக்கெட்டும் அணிந்த அழகான இளைஞன் ஒருவன் மேல் என் பார்வை பட்டது. உயரம் அற்ற ஒரு பெண்ணின் கையை அவன் பிடித்துக் கொண்டிருந்தான். அவள் போட்டிருந்த வைக்கோல் தொப்பி அவ ளுடைய முகத்தின் மேல் பகுதி முழுவதையும் மறைத்திருந்தது.

''நீங்கள் ருஷ்யர்களா?'' என்ற கேள்வி என் வசமின்றியே என் வாயிலிருந்து வெளிப்பட்டது.

இளைஞன் புன்னகை செய்து, ''ஆம், ருஷ்யர் கள்'' என்று கூறினான்.

''நான் எதிர்பார்க்கவே இல்லை... இந்த மாதிரி அத்துவானத்தில்'' என்று நான் ஆரம்பித் தேன்.

''நாங்களும் எதிர்பார்க்கவில்லை'' என்று என் பேச்சை இடை முறித்தான் அவன். ''அதனுல் என்ன? இன்னும் நல்லதாயிற்று. அறிமுகப்படுத்திக் கொள்ள அனுமதியுங்கள்: என் பெயர் காகின். இதோ இவள் என்னுடைய...'' அவன் கண நேரம் தயங்கினுன். ''என்னுடைய தங்கை. உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?''

நான் என் பெயரைச் சொன்னேன். நாங்கள் உரையாடினேம். காகின் என்னைப் போலவே தன் திருப்திக்காகப் பயணம் செய்தவாறு ஒரு வாரத்துக்கு முன்னுல் சிற்றூர் ல. வந்து சேர்ந்ததாகவும் இங்கே தங்கி விட்டதாகவும் நான் தெரிந்து கொண்டேன். உள்ளதைச் சொல்வதானுல் வெளி நாடுகளில் ருஷ்யர்களை அறிமுகம் செய்து கொள்ள நான் விரும்பவில்லை. அவர்களுடைய நடை, உடையின் பாங்கு ஆகியவற்றைக் கொண்டும், முதன்மையாக அவர்களுடைய முகபாவத்தைக் கொண்டும் தொலைவிலிருந்து கூட அவர்களை நான் இனம் கண்டு கொண்டேன். சுயதிருப்தியும் இகழ்ச்சியும் அடிக்கடி அதிகார தோரணையும் உள்ள இந்த முகபாவம் எச்சரிக்கையையும் கூச்சத்தையும் காட்டுவதாகச் சட்டென்று மாறியது... மனிதன் திடீரென ஒரேயடியாக எச்சரிக்கை அடைந்தான், பார்வை அமைதியின்றி அலைந்தது... 'அட என் அப்பனே! நான் பொய் பேசி விட்டேனே, மற்றவர்கள் என்னை எள்ளி நகையாடுகிருர்களோ?' என்று கேட்பது போல் இருந்தது அந்தச் சஞ்சலப் பார்வை... கண நேரம் கழிந்ததும் முகத்தின் பெருமிதத் தோற்றம் மீண்டும் வந்தது. மந்த புத்தியையும் விளங்காமையையும் காட்டும் பார்வை எப்போதாவது இடையிடையே காணப்பட்டது. ஆமாம், நான் ருஷ்யர்களைத் தவிர்த்து

வந்தேன். ஆனால் காகினை எனக்குக் கண்டதும் பிடித்து விட்டது. உலகில் சில இனிய முகங்கள் உண்டு: அவற்றைப் பார்க்க எவருக்குமே, அவை இதமாக வெப்பம் ஊட்டுவது போலவோ வருடு வது போலவோ உவப்பாய் இருக்கும். காகினு டைய முகம் இத்தகையதே. இனிமையும் அன் பும் அதில் தவழ்ந்தன. மென்மையான பெரிய விழிகளும் மென்மையான சுருட்டை முடியும் கொண்டிருந்தான் அவன். அவனுடைய முகத் தைப் பார்க்காமலே, அவனது குரலின் ஒலியை மட்டும் கொண்டு அவன் புன்னகை செய்கிறான் என்று உணர முடிந்தது. அவன் பேசிய விதம் அப்படி இருந்தது.

அவன் தன் தங்கை என்று குறிப்பிட்ட பெண் முதல் பார்வையிலிருந்தே மிக இனிய தோற்றம் உள்ளவளாக எனக்குத் தென்பட்டாள். சிறிய, மெல்லிய மூக்கும் அனேகமாகக் குழந்தை யினுடையவை போன்ற கன்னங்களும் கரிய, பளிச்சிடும் விழிகளும் கொண்டு அவளது சற்றே பழுப்பேறிய வட்ட முகத்தின் அமைப்பில் அதற்கே உரிய, சிறப்பான ஏதோ ஒன்று இருந்தது. அவள் ஒயிலுள்ள மேனி வாகு பெற்றிருந்தாள், ஆனால் இன்னும் முழு வளர்ச்சி அடையாதவள் போலக் காணப்பட்டாள். தன் தமையனை அவள் சிறிதும் ஒத்திருக்கவில்லை.

''எங்கள் இருப்பிடத்துக்கு வர விரும்புகிறீர் களா?'' என்று என்னிடம் கேட்டான் காகின். ''ஜெர்மானியர்களை நாம் போதுமான அளவு பார்த்தாகிவிட்டது என்று நினைக்கிறேன். நம்ம வர்களாய் இருந்தால் கட்டாயம் கண்ணாடித் தம் ளர்களை நொறுக்கி நாற்காலிகளை முறித்திருப் பார்கள். இவர்கள் நிரம்ப அடக்கம் உள்ளவர்

கள். நீ என்ன நினைக்கிறாய், ஆஸ்யா, நாம் வீட்டுக்குப் போவோமா?''

மங்கை இசைவைக் காட்டும் விதத்தில் தலையை ஆட்டினாள்.

''நாங்கள் ஊருக்கு வெளியே தங்கி இருக்கிறோம்'' என்று தொடர்ந்தான் காகின்.''முந்திரித் தோட்டத்தில், தனி வீட்டில், வெகு உயரத்தில். எங்கள் இடம் அருமையானது, பார்ப்பீர்கள். வீட்டுக்காரி எங்களுக்குப் பாலைத் தோய்த்து வைப்பதாகச் சொல்லி இருக்கிறாள். இப்போது விரைவில் இருட்டி விடும். நிலவில் ரைன் ஆற்றைக் கடப்பது உங்களுக்கு மேலாய் இருக்கும்.''

நாங்கள் புறப்பட்டோம். ஊரின் தாழ்ந்த வாயில் வழியாக (உருளைக் கற்களால் கட்டிய பழங்கால மதில் ஊரை எல்லாப் புறங்களிலும் சூழ்ந்திருந்தது. பீரங்கித் துவாரங்கள் கூட எல்லாம் இன்னும் தகர்ந்து விடவில்லை) நாங்கள் திடலுக்கு வந்தோம். சுற்றுச் சுவரை ஒட்டினாற்போல ஒரு நூறு அடி நடந்து குறுகிய திட்டி வாசலின் முன் நின்றோம். காகின் அதைத் திறந்து, செங்குத்தான ஒற்றையடிப் பாதை வழியாக எங்களை மலைக்கு இட்டுச் சென்றான். இரு புறமும் பாறை விளிம்புகளில் முந்திரிக் கொடிகள் வளர்ந்திருந்தன. சூரியன் அப்போதுதான் மறைந்திருந்தது. பசிய கொம்புகள் மேலும், உயரமான அகவிதழ்கள் மேலும், பெரியவையும் சிறியவையுமான கற்பாளங்கள் எங்கும் சிதறிக் கிடந்த உலர்ந்த தரை மேலும், சிறு வீட்டின் வெள்ளைச் சுவர் மேலும் படர்ந்தது மெல்லிய செவ்வொளி. நாங்கள் ஏறிக் கொண்டிருந்த மலையின் உச்சியில் அமைந்த அந்த வீடு கோணலான கரிய குறுக்கு

விட்டங்களும் வெளிச்சமுள்ள நான்கு சாளரங்களும் கொண்டிருந்தது.

''இதுதான் எங்கள் இருப்பிடம்!'' என்று நாங்கள் வீட்டை நெருங்கத் தொடங்கியதும் கூறினுன் காகின். ''இதோ வீட்டுக்காரி தோய்த்த பாலைக் கொண்டுவருகிருள். Guten Abend, Madame!..* நாங்கள் இதோ சாப்பிட உட்காருகிறேம். ஆனல் அதற்கு முன், சுற்று முற்றும் பாருங்கள்... காட்சி எப்படி இருக்கிறது?''

காட்சி மெய்யாகவே அற்புதமாய் இருந்தது. ரைன் ஆறு பசிய கரைகளுக்கு நடுவே முழுதும் வெள்ளிமயமாக எங்களுக்கு முன்னே தகதகத்தது. ஓர் இடத்தில் அது அஸ்தமனத்தின் செம்பொன்னல் தழல் வீசிற்று. கரையோரமாக அமைந்திருந்த சிற்றூர் தன் எல்லா வீடுகளையும் வீதிகளையும் காட்டிக் கொண்டிருந்தது. மலைகளும் வயல்களும் விரிந்து பரந்திருந்தன. கீழே நன்ருய் இருந்தது, ஆனல் மேலேயோ, இன்னும் அழகாக இருந்தது. வானத்தின் தூய்மையும் ஆழமும் காற்றின் ஒளி திகழும் தெளிவும் என்னைச் சிறப்பாக வியப்பில் ஆழ்த்தின. குளிர்ச்சியாகவும் இலேசாகவும் இருந்த காற்று மெல்லென அசைந்து அலைகளாகப் பரவியது. உயரத்தில் அதற்கும் அதிக விடுதலை கிடைத்திருந்தது போலத் தோன்றியது.

''அருமையான வீட்டைத் தெரிந்தெடுத்திருக்கிறீர்கள் நீங்கள்'' என்றேன் நான்.

''ஆஸ்யாதான் இதைக் கண்டுபிடித்தாள்'' என்று பதிலளித்தான் காகின். ''இந்தா, ஆஸ்யா, ஏற்பாடு பண்ணு. எல்லாவற்றையும் இங்கே

---

* ''நன் மாலை, அம்மணீ!'' (ஜெர்மன்).

கொண்டு வரச் சொல்லு. நாம் திறந்த வெளி யில் சாப்பிடுவோம். இங்கே சங்கீதம் நன்ருய்க் கேட்கிறது'' என்று திட்டமிட்டுவிட்டு என்னைப் பார்த்து, ''ஒன்றைக் கவனித்தீர்களா, பக்கத்தில் இருக்கும் போது சில சமயம் வால்ட்ஸ் இசை யைக் கேட்கவே பிடிப்பதில்லை—கீழ்த் தரமான, முரட்டு ஒலிகள் என்று தோன்றுகிறது—தொலை விலோ, அற்புதம்! நம் உள்ளத்தின் புத்தார்வக் கற்பனைத் தந்திகள் எல்லாவற்றையும் அனுயாச மாக மீட்டி விடுகிறது'' என்ருன்.

ஆஸ்யா (உண்மையில் அவளுடைய பெயர் ஆன்ன, ஆனல் காகின் அவளை ஆஸ்யா என்று அழைத்து வந்தான், ஆகவே அவளை ஆஸ்யா என்றே அழைக்க என்னையும் அனுமதியுங்கள்)—ஆஸ்யா வீட்டிற்குப் போய் விரைவில் வீட்டுக் காரியோடு திரும்பி வந்தாள். பால் பாத்திரமும் தட்டுக்களும் கரண்டிகளும் சர்க்கரையும் காட்டுப் பழங்களும் ரொட்டியும் வைத்த பெரிய டிரேயை இருவரும் எடுத்து வந்தார்கள். நாங்கள் உட் கார்ந்து சாப்பிடலானேம். ஆஸ்யா தொப்பியைக் கழற்றினுள். கத்தரித்து வாரி விடப்பட்டிருந்த சிறுவனது போன்ற அவளுடைய கருமுடி பருத்த சுருள்களாகக் கழுத்தின் மேலும் காதுகளின் மேலும் படிந்திருந்தது. தொடக்கத்தில் அவள் என்னிடம் கூச்சப்பட்டாள். ஆனல் காகின் அவளிடம் சொன்னுன்:

''ஆஸ்யா, கூசிக் குறுகியது போதும்! இவர் கடித்து விட மாட்டார்.''

அவள் புன்னகை செய்தாள். சிறிது நேரம் கழிந்ததும் தானே என்னேடு பேசத் தலைப்பட் டாள். அவளைக் காட்டிலும் துடியான ஜீவனை நான் கண்டதில்லை. ஒரு கணங்கூட அவள் அமைதி

யாக உட்காரவில்லை. எழுந்தாள், வீட்டுக்கு ஓடினாள், திரும்பி ஓடி வந்தாள், வாய்க்குள் பாடினாள், அடிக்கடி சிரித்தாள், அதுவும் மிக விந்தையான விதத்தில். அவள் சிரித்தது தான் கேட்டதற்கு அல்ல, தன் மனத்தில் எழுந்த பல வகையான எண்ணங்களால் என்று தோன்றியது. அவளுடைய பெரிய விழிகள் நேராக, ஒளியுடன், துணிவுடன் நோக்கின. ஆனால் சில வேளைகளில் இமைகள் சற்றே இடுங்கின. அப்போது அவளுடைய பார்வை திடீரென்று ஆழமும் மென்மையும் உள்ளதாயிற்று.

நாங்கள் சுமார் இரண்டு மணி நேரம் அரட்டை அடித்துக் கொண்டிருந்தோம். பகல் வெகு நேரத்துக்கு முன்பே முடிந்து விட்டது. முதலில் முழுவதும் நெருப்பு மயமாகவும், பின்பு தெளிவும் செம்மையுமாகவும், பிறகு வெளிறலும் கலங்கலுமாகவும் இருந்த மாலை மெதுவாகக் கரைந்து இரவில் கலந்தது. ஆனாலும் எங்களைச் சூழ்ந்திருந்த காற்று போன்றே அமைதியும் பணிவும் வாய்ந்த எங்கள் பேச்சு இன்னமும் தொடர்ந்தது. ஒரு புட்டி ரைன்வயின் கொண்டுவரும்படி காகின் பணித்தான். நாங்கள் அதை அவசரப்படாமல் சுவைத்துப் பருகினோம். இசை முன்போலவே எங்களுக்குக் கேட்டுக் கொண்டிருந்தது. அதன் ஒலிகள் அதிக இனிமையும் மென்மையும் உள்ளவையாக எங்களுக்குப் பட்டன. ஊரிலும் ஆற்றின் மேலேயும் விளக்குகள் எரியலாயின. ஆஸ்யா திடீரென்று தலையைக் குனியவே, அவளுடைய முடிச் சுருள்கள் கண்கள் மேல் விழுந்தன. அவள் பேச்சை நிறுத்திப் பெருமூச்செறிந்தாள். பின்பு தனக்குத் தூக்கம் வருவதாக எங்களிடம் சொல்லி விட்டு வீட்டுக்குள் போனாள். ஆனால், அவள் மெழுகு

வத்தியை ஏற்ருமல், மூடிய சாளரத்தின் பின் நெடு நேரம் நின்றதை நான் கண்டேன். முடிவில் சந்திரன் உதித்தது, நிலவு ரைன் ஆற்றின் மேல் பளபளக்கலாயிற்று. எல்லாம் வெளிச்சமாயிற்று, இருண்டது, மாறியது. எங்கள் பட்டை தீட்டிய கண்ணுடித் தம்ளர்களில் இருந்த மது கூட மர்ம ஒளியுடன் பளிச்சிடத் தொடங்கிற்று. காற்று சிறகுகளை மடக்கிக் கொண்டது போல அடங்கி அசையாது நின்று விட்டது. இரவின் நறிய வெம்மை தரையிலிருந்து பரவியது.

''நேரமாகி விட்டது!'' என்றேன் நான். ''இல்லாவிட்டால் பரிசல்காரனைக் கண்டுபிடிப்பது சிரமம் ஆகி விடும்.''

''நேரமாகி விட்டது'' என்று திருப்பிச் சொன்ஞன் காகின்.

நாங்கள் ஒற்றையடிப் பாதையில் கீழே சென்ரேம். எங்கள் பின் கற்கள் திடீரென்று சிதறின. ஆஸ்யா எங்களை எட்டிப் பிடித்தாள்.

''நீ உறங்கவில்லையா என்ன?'' என்று கேட்டான் அவளுடைய தமையன். ஆனல் அவளோ, அவனுக்கு ஒரு வார்த்தை கூடப் பதில் சொல்லாமல், அருகாக ஓடி முன்னே சென்ருள்.

தங்கு விடுதித் தோட்டத்தில் மாணவர்கள் ஏற்றி வைத்த கண்ணுடி அகல் விளக்குகளில் கடைசியாக அணையும் தறுவாயில் இருந்தவை மரங்களின் இலைகளைக் கீழிருந்து ஒளியுறுத்தின. இதனல் அவை உற்சவக் 'கோலத்துடன் விந்தைக் காட்சி அளித்தன. ஆஸ்யாவை நாங்கள் கரை அருகே கண்டோம். அவள் பரிசல்காரனுடன் பேசிக் கொண்டிருந்தாள். நான் படகில் தாவி, என் புதிய நண்பர்களிடம் விடை பெற்றேன். மறு நாள் என்னை வந்து காண்பதாக காகின் உறுதி

அளித்தான். நான் அவனுடன் கை குலுக்கி விட்டு ஆஸ்யாவின் பக்கம் என் கையை நீட்டினேன். ஆனால் அவள் என்னை வெறுமே பார்த்துத் தலையை ஆட்டினாள். படகு, துறையை விட்டு விலகி விரைந்த ஆற்றோட்டத்தில் சென்றது. உற்சாக முள்ள கிழவனான பரிசல்காரன் கரிய நீரில் துடுப்புக்களை இறுக்கத்துடன் ஆழ்த்தினான்.

''நீங்கள் நிலாப் பட்டையில் புகுந்து விட்டீர்கள், நீங்கள் அதைச் சிதைத்து விட்டீர்கள்'' என்று என்னை நோக்கிக் கத்தினாள் ஆஸ்யா.

நான் பார்வையைத் தாழ்த்தினேன். படகைச் சுற்றிலும் அலைகள் கருமை படிந்து தளும்பின.

''போய் வாருங்கள்!'' என்று மீண்டும் ஒலித்தது அவளுடைய குரல்.

''நாளை சந்திப்போம்'' என்று அவளுக்குப் பின் கூறினான் காகின்.

படகு மறுகரையைச் சேர்ந்தது. நான் இறங்கித் திரும்பிப் பார்த்தேன். எதிர்க் கரையில் இப்போது யாரும் பார்வைக்குப் புலப்படவில்லை. நிலாப்பட்டை தங்கப் பாலம் போல ஆறு முழுவதன் குறுக்காகவும் மறுபடி நீண்டிருந்தது. லானெருடைய* பழங்கால வால்ட்ஸ் இசையின் ஒலிகள் விடை அளிப்பவை போல மிதந்து வந்தன. காகின் சொன்னது சரிதான். உள்ளங் கவரும் அந்த மெட்டுக்களுக்கு எதிரொலிப்பவை போன்று என் இருதயத் தந்திகள் அனைத்தும் முரன்றன. சற்றே இருள் படர்ந்த வயல்களின்

---

* இயோஸப் லான்னெர் — (1801—1843) ஆஸ்திரிய இசை அமைப்பாளர். வியன்னா வால்ட்ஸை இயற்றியவர்களில் ஒருவர்.

வழியாக, நறிய காற்றை நிதானமாக மூச்சிழுத்தவாறு நடந்து என் வீட்டை அடைந்தேன். குறித்த நோக்கம் அற்றவையும் முடிவு இல்லாதவையுமான எதிர்பார்ப்புக்களின் இனிய சோர்வினுல் முழுதும் கனிந்த உள்ளத்துடன் என் அறையில் புகுந்தேன். நான் இன்பமுள்ளவன் என்று உணர்ந்தேன்... ஆனுல் எதனுல் நான் இன்பம் அடைந்திருந்தேன்? நான் எதையும் விரும்பவில்லை, எதைப் பற்றியும் எண்ணவில்லை... நான் இன்பம் அடைந்திருந்தேன்.

இனிமையும் வேடிக்கையுமான உணர்வுகளின் மிகுதியால் அனேகமாக வாய் விட்டுச் சிரித்தவாறு படுக்கையில் அமிழ்ந்து கண்களை மூடிக் கொள்ளப் போனவன், முந்தின நாள் முழுதும் எனது கொடிய அழகியை நான் ஒரு தரங்கூட நினைத்துக் கொள்ளவில்லை என்பதைத் திடீரென்று நினைவுகூர்ந்தேன்... ''இதற்கு என்ன அர்த்தம்? நான் காதல் கொண்டு விட்டேனே?'' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். ஆனுல் என்னையே இந்தக் கேள்வி கேட்டுக் கொண்ட பின் தொட்டில் குழந்தை மாதிரி விரைவில் தூங்கி விட்டேன் போலிருக்கிறது.

## 3

மறு நாள் காலையில் (நான் விழித்துக் கொண்டு விட்டேன், ஆனுல் படுக்கையை விட்டு இன்னும் எழுந்திருக்கவில்லை) என் சன்னலின் கீழ் கழியால் தட்டிய ஓசை கேட்டது. காகினுடையது என்று நான் உடனே அடையாளம் தெரிந்து கொண்ட குரல் பாடத் தொடங்கிற்று:

''உறங்குகிறுயோ? கிதாரிஞல்
உன்னே எழுப்புவேன்...''*

அவனுக்குக் கதவைத் திறந்து விட விரைந்தேன்.

காகின் உள்ளே வந்து, ''வணக்கம். நான் அதி காலேயில் உங்களே எழுப்பி விட்டேன், ஆனுல் பாருங்கள், எப்பேர்ப்பட்ட காலே என்று. குளிர்ச்சி, பனித் துளிகள், வானம்பாடிகள் பாடுகின்றன...'' என்ருன்.

பளபளப்பான சுருட்டை மயிரும் திறந்த கழுத்தும் ரோஜாக் கன்னங்களுமாக அவனே காலே போன்று புது மலர்ச்சியுடன் திகழ்ந்தான்.

நான் உடை அணிந்து கொண்டேன். நாங்கள் தோட்டத்துக்கு வந்தோம், பெஞ்சியில் உட்கார்ந்தோம். காப்பி கொண்டுவரப் பணித்து விட்டு உரையாடத் தொடங்கிளுேம். காகின் தன் வருங்காலத் திட்டங்களே எனக்குத் தெரிவித்தான். போதிய சொத்துக்காரன், யாரையும் சார்ந்தவன் அல்ல ஆதலால் அவன் ஓவியக் கலேயில் ஈடுபட விரும்பினுன். தான் நிறைய நேரத்தை வெட்டியாகக் கழித்து விட்டதற்காகவும் நேரம் கடந்த பின்பே அறிவார்ந்த முறையில் செயல்படத் தொடங்கியதற்காகவுமே வருந்திஞன். நானும் என் திட்டங்களே விவரித்தேன். பேச்சோடு பேச்சாக எனது ஆக்கமற்ற காதலின் இரகசியத்தையும் அவனுக்குத் தெரிவித்தேன். நான் சொன்னதை அவன் பெருந்தன்மையுடன் முடிவு

---

* ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினது ''நான் இங்குள்ளேன், இனெஸீலியா'' என்னும் கவிதையின் சொற்களேக் கொண்டு ருஷ்ய இசை அமைப்பாளர் மிகயீல் கிளீன்கா (1804—1857) இயற்றிய இசை நாடகம்.

வரை கேட்டான். ஆனால் எனது கவனத்தில் பட்டதைக் கொண்டு பார்க்கையில், என் ஆர்வத்துக்குப் பலத்த அனுதாபத்தை அவனிடம் நான் ஏற்படுத்தவில்லை என்று தோன்றியது. மரியாதைக்காக என்னைத் தொடர்ந்து இரண்டொரு முறை பெருமூச்சு விட்டு விட்டு, தன் வீட்டுக்கு வந்து தனது பயிற்சி ஓவியங்களைப் பார்க்கும்படி கூறினான் காகின். நான் உடனே இசைந்தேன்.

நாங்கள் போன போது ஆஸ்யா வீட்டில் இல்லை. அவள் ''இடிபாடுகளைப்'' பார்க்கப் போயிருப்பதாக வீட்டுக்காரி சொன்னாள். ல. சிற்றூரிலிருந்து சுமார் இரண்டு கிலோமீட்டர் தொலைவில் நிலப்பிரபுத்துவக்காலக் கோட்டையின் எஞ்சிய பகுதிகள் இருந்தன. காகின் தன் படங்கள் எல்லாவற்றையும் எனக்குக் காட்டினான். அவனுடைய பயிற்சி வரைவுகளில் நிறைய உயிரோட்டமும் உண்மையும் இருந்தன. அவற்றோடு கட்டற்றதும் விரிந்து பரந்ததுமான உணர்வும் புலப்பட்டது. ஆனால் அவற்றில் ஒன்று கூட நிறைவு பெறவில்லை. ஓவிய வரைவு அலட்சியமும் பிழையும் உள்ளதாக எனக்குப் பட்டது. எனது கருத்தை ஒளிவு மறைவில்லாமல் அவனுக்குத் தெரிவித்தேன்.

''ஆம், ஆம்'' என்று பெருமூச்சுடன் ஒத்துக் கொண்டான் அவன். ''நீங்கள் சொல்வது சரி. இது எல்லாம் மிக மோசம், பக்குவம் இல்லாதது. ஆனால் என்ன செய்வது? நான் முறையாகக் கற்றுக் கொள்ளவில்லை. தவிர, பாழாய்ப் போன ஸ்லாவியக் கட்டுப்பாடின்மை தன் பாதிப்பை ஏற்படுத்தித் தீர்கிறது. வேலையைப் பற்றி எண்ணமிடும் வரையில் கழுகு போல இறக்கைகளை

விரித்து வானில் வட்டமிடுகிறோம். உலகையே இடம் பெயர்த்து விடலாம் போலத் தோன்று கிறது. ஆனால் வேலையைச் செய்யும் போதோ உடனே வலு இழந்து களைத்துப் போகிறோம்.''

நான் அவனை உற்சாகப்படுத்தத் தொடங் கினேன், ஆனால் கையை வீசி ஆட்டித் தடுத்து விட்டு, ஓவிய அட்டைகளைக் கட்டாகத் திரட்டி சோபா மேல் போட்டான்.

''போதுமான அளவு பொறுமை இருந்தால், நான் உருப்படியாக ஏதாவது செய்வேன்'' என்று பற்களைக் கடித்தவாறு கடுப்புடன் சொன்னான். ''இல்லாவிட்டால் உயர்குடியினரில் முழு வளர்ச்சி பெறாதவனாக இருந்து விடுவேன். வாருங்கள், ஆஸ்யாவைத் தேடப் போவோம்.''

நாங்கள் கிளம்பினோம்.

4

இடிபாடுகளுக்குப் போகும் பாதை காடு அடர்ந்த குறுகிய பள்ளத்தாக்கின் சரிவு வழியே வளைந்து சென்றது. அதன் அடித் தரையில் பெரு கிய நீரோடை, செங்குத்தாகச் செதுக்கப்பட்ட வை போன்ற மலைச் சிகரங்களின் கரும் பட்டை களுக்குப் பின்னால் அமைதியாகப் பளிச்சிட்ட பேராற்றில் கலக்க விரைவது போலப் பாறைகள் வழியே இரைச்சலுடன் தத்தி ஓடியது. வாய்ப் பாக ஒளியூட்டப் பெற்றிருந்த சில இடங்களின் பால் என் கவனத்தை ஈர்த்தான் காகின். அவ னுடைய சொற்களில் ஓவியன் இல்லாவிட்டால் கட்டாயமாகக் கலைஞனின் குரல் ஒலித்தது. விரை வில் இடிபாடுகள் தென்பட்டன. மொட்டைப் பாறையின் உச்சியில் நாற்கோணக் கோபுரம்

உயர்ந்து நின்றது. அது முழுவதும் கறுப்பாக, இன்னமும் உறுதியாக இருந்தது. ஆனால் நீண்ட வெடிப்பினால் இரண்டாக வகிரப்பட்டது போலத் தோற்றம் அளித்தது. பாசி படர்ந்த சுவர்கள் கோபுரத்தை ஒட்டி இருந்தன. சிற்சில இடங் களில் ஐவிக் கொடிகள் படர்ந்திருந்தன. கோணல் மாணலான மரக் கன்றுகள் சாம்பல் நிறப் பீரங்கித் துவாரங்களிலும் தகர்ந்த வளை முகடுகளிலு மிருந்து தொடங்கின., கற்பாங்கான ஒற்றையடிப் பாதை எஞ்சி இருந்த வாயில்களுக்கு இட்டுச் சென்றது. நாங்கள் அவற்றை நெருங்கி விட்ட போது எங்களுக்கு முன்னே மினுக்கிட்டது ஒரு பெண் உருவம். இடிபாடுகளின் மேல் விரைவாக ஓடி, கிடுகிடு பள்ளத்துக்கு நேர் மேலே சுவர் விளிம்பில் இடம் பிடித்துக் கொண்டது அது.

''அட இவள் ஆஸ்யா அல்லவா?'' என்று கூவினான் காகின். ''சரியான பைத்தியக்காரி!''

நாங்கள் வாயிலில் புகுந்து, காட்டு ஆப்பிள் மரங்களும் காஞ்சொறிப் புதர்களும் பாதி தூரம் மண்டியிருந்த சிறு முகப்பை அடைந்தோம். சுவர் விளிம்பில் உட்கார்ந்திருந்தவள் மெய்யாகவே ஆஸ்யா தான். அவள் எங்களுக்கு முகத்தைக் காட்டித் திரும்பிக் களுக்கென்று நகைத்தாளே தவிர இடத்தை விட்டு அசையவில்லை. காகின் விரலைக் காட்டி அவளை அச்சுறுத்தினான். நானோ, அசாக்கிரதைக்காக அவளை உரக்கக் கடிந்து கொண்டேன்.

''போதும்'' என்று என்னிடம் கிசுகிசுத்தான் காகின். ''இவளைச் சீண்டாதீர்கள். உங்களுக்கு இவளைத் தெரியாது. இவள் மேற்கொண்டு கோபு ரத்தில் தொற்றினாலும் தொற்றுவாள். இவளை

விடுங்கள். இந்த வட்டார வாசிகளின் சாமர்த்தியத்தை வியந்து பாராட்டுங்கள்.''

நான் அக்கம் பக்கம் பார்வை செலுத்தினேன். மூலேயில் சின்னஞ்சிறு மர மேடையில் வசதியாக அமர்ந்து கொண்டு காலுறை பின்னியவாறு கண்ணுடி வழியே எங்களேப் பார்த்துக் கொண்டிருந்தாள் ஒரு கிழவி. சுற்றுலாப் பயணிகளுக்கு பீரும் தின்பண்டங்களும் கனிய நீரும் விற்றுக் கொண்டிருந்தாள் அவள். நாங்கள் பெஞ்சியில் உட்கார்ந்து கனத்த ஈயக் குவளேகளிலிருந்து மிகக் குளிர்ந்த பீரைப் பருகலானேம். ஆஸ்யா கால்களே மடக்கியவாறு, மஸ்லின் கழுத்துக் குட்டையைத் தலேயில் கட்டிக் கொண்டு முன்போலவே அசையாமல் உட்கார்ந்திருந்தாள். தெள்ளிய வானின் பின்னணியில் அவளுடைய வடிவமைந்த உருவம் துலக்கமாகவும் அழகாகவும் தென்பட்டது. ஆனுல் நான் நட்பற்ற உணர்வுடன் அவளே நோக்கினேன். இறுக்கம் நிறைந்த, முற்றிலும் இயல்பற்ற ஒன்றை முந்திய நாளே அவளிடம் கண்டிருந்தேன்... 'இவள் நம்மை வியப்பில் ஆழ்த்த விரும்புகிருள். எதற்காக இது? இதென்ன குழந்தைத் தனமான குறும்பு?' என்று எண்ணினேன். என் எண்ணங்களே ஊகித்து அறிந்தவள் போல விரைவான, ஊடுருவும் பார்வையை அவள் திடீரென என் மேல் செலுத்திஞள், மீண்டும் உரக்கச் சிரித்தாள், சுவற்றிலிருந்து இரண்டு தாவல்களில் குதித்துக் கிழவி அருகே வந்து ஒரு தம்ளர் தண்ணீர் கேட்டாள்.

''எனக்குத் தாகமாய் இருப்பதாக நினேக்கிருயோ? இல்லே. இங்கே சுவர்களில் பூச்செடிகள் இருக்கின்றன. அவற்றுக்குக் கட்டாயம் தண்ணீர்

விட வேண்டும்'' என்று தமையனை நோக்கிக் கூறினாள்.

காகின் அவளுக்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. தம்ளரும் கையுமாக அவள் இடிபாடுகள் மேல் தொற்றி ஏறினாள். சிற்சில சமயங்களில் நின்று, சாய்ந்து, வேடிக்கையான பெருமிதத்துடன் சில நீர்த் துளிகளைச் சிந்தினாள். அவை வெயிலில் பளிச்சென்று மின்னின. அவளுடைய அங்க அசைவுகள் மிகவும் இனியவையாக இருந்தன, ஆனாலும் எனக்கு அவள் மேல் முன்போலவே எரிச்சலாய் இருந்தது. எனினும் அவளுடைய அனாயாசத்தையும் லாகவத்தையும் நான் என் வசமின்றியே கண்டு வியந்தேன். ஆபத்தான ஓர் இடத்தில் அவள் வேண்டுமென்றே வீரிட்டாள், பின்பு கெக்கலி கொட்டினாள்... எனக்கு இன்னும் அதிக எரிச்சல் உண்டாயிற்று.

கிழவி காலுறை பின்னுவதை ஒரு கணம் நிறுத்தி விட்டு, ''வெள்ளாடு போலத் தாவி ஏறுகிறாள்'' என்று வாய்க்குள் முணுமுணுத்தாள்.

முடிவில் ஆஸ்யா தன் தம்ளரை அறவே காலி செய்து விட்டு, குறும்பாக அசைந்தாடியவாறு எங்களிடம் திரும்பி வந்தாள். வேடிக்கையான சிரிப்பு அவளுடைய புருவங்களையும் மூக்குத் துளைகளையும் உதடுகளையும் சற்றே நெளித்தது. கரு விழிகள் பாதி துணிவும் பாதிக் குதூகலமும் பளிச்சிடச் சிமிட்டின.

''என்னுடைய செயல் நய நுட்பம் அற்றது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனாலும் நீங்கள் என்னை வியந்து நோக்குவதை நான் அறிவேன்'' என்று கூறியது அவளுடைய முகத் தோற்றம்.

''சாமர்த்தியம், ஆஸ்யா, சாமர்த்தியம்'' என்று தணிந்த குரலில் சொன்னான் காகின்.

அவள் திடீரென்று நாணியவள் போன்று தன் நீண்ட இமை மயிர்களைத் தாழ்த்தி, குற்றம் செய்தவள் போல அடக்கமாக எங்கள் அருகே அமர்ந்தாள். அவளுடைய முகத்தை அப்போது தான் முதன் முறையாக நான் நன்றாகக் கூர்ந்து நோக்கினேன். நான் பார்த்தவை எல்லாவற்றை யும் விட அதிக அடிக்கடி மாறும் முகம் அது. சில விநாடிகள் சென்றதும் அது முழுதும் வெளிறி ஒருமுனைப்பாடுள்ள, அனேகமாகத் துயரத்தைக் காட்டும் தோற்றத்தை மேற்கொண்டது. அவ ளுடைய முக அமைப்புக் கூறுகளே முன்னைவிடப் பெரியவையாகவும் அதிகக் கண்டிப்பும் எளிமை யும் உள்ளவையாகவும் எனக்குத் தென்பட்டன. அவள் முற்றிலும் அடங்கி விட்டாள். நாங்கள் இடிபாடுகளைச் சுற்றிக் கடந்து (ஆஸ்யா எங்களை அடியொற்றித் தொடர்ந்தாள்), காட்சிகளை விரி வாகப் பார்வையிட்டோம். இதற்குள் மதியச் சாப்பாட்டு நேரம் நெருங்கியது. கிழவிக்குப் பணம் கொடுத்து இன்னொரு குவளை பீர் தரும்படி கேட்ட காகின் என் பக்கம் திரும்பி முகத்தை மர்மமாக நெறித்து, ''உங்கள் உளம் கவர்ந்த பெண்மணியின் உடல் நலத்துக்காக!'' என்று கூறி னான்.

''அப்படியானால் இவருக்கு, உங்களுக்கு அந்த மாதிரிப் பெண்மணி இருக்கிறாளா என்ன?'' என்று திடீரென வினவினாள் ஆஸ்யா.

''அட யாருக்குத்தான் அவள் இல்லை?'' என்று மறுத்துரைத்தான் காகின்.

ஆஸ்யா கண நேரம் சிந்தனை செய்தாள். அவ ளுடைய முகம் மறுபடி மாறியது. சவால் விடுகிற, அனேகமாகத் துணிச்சல் நிறைந்த ஏளனப் புன் னகை அதில் மீண்டும் அரும்பியது.

திரும்பும் வழியில் அவள் முன்னிலும் மோசமாகக் கெக்கலித்தாள், குறும்புகள் செய்தாள். நீண்ட கிளை ஒன்றை முறித்து, துப்பாக்கி போலத் தன் தோளில் சாத்திக் கொண்டு, கழுத்துக் குட்டையைத் தலையில் கட்டிக் கொண்டாள். எனக்கு நினைவு இருக்கிறது, சணல் முடியும் ஒழுங்குக் கண்டிப்பும் உள்ள ஆங்கிலேயர்களின் பெரிய குடும்பம் ஒன்று எங்களுக்கு எதிர்ப்பட்டது. அவர்கள் எல்லோரும் ஏதோ கட்டளைக்குக் கீழ்ப்படிபவர்கள் போல, கடுகடுப்புள்ள வியப்புடன் ஆஸ்யாவைத் தங்கள் கண்ணுடி விழிகளால் தொடர்ந்து நோக்கினார்கள். அவளோ, அவர்களைப் பழி வாங்குபவள் போல உரக்கப் பாடத் தலைப்பட்டாள். வீடு திரும்பிய உடனே அவள் தன் அறைக்குப் போய் விட்டாள். மதியச் சாப்பாட்டுக்கு முன்புதான், தனது சிறந்த உடையை அணிந்து, கவனமாகத் தலைவாரிச் சீர்படுத்திக் கொண்டு கையுறைகள் மாட்டியபடி வந்தாள். சாப்பாட்டின் போது அவள் மிகுந்த பண்புடன், அனேகமாக ஒழுங்குக் கண்டிப்புடன் நடந்து கொண்டாள். உணவுப் பண்டங்களைப் பெயருக்குத் தான் ருசி பார்த்தாள். மதுக் கிண்ணத்தில் தண்ணீர் பருகினாள். எனக்கு முன்னே புதிய பாத்திரத்தில்—நயப்பாங்குள்ள, நன்கு பயிற்றி வளர்க்கப்பட்ட பிரபு வம்ச மங்கையின் பாத்திரத்தில்—நடிக்க அவளுக்கு விருப்பம் உண்டானது தெளிவாகப் புலப்பட்டது. காகின் அவள் போக்கில் குறுக்கிடவில்லை. எல்லாவற்றிலும் அவளுக்கு நிறைய இடங் கொடுத்து அவன் பழகி விட்டான் என்பது தெரிந்தது. அவ்வப்போது நல்லியல்பு தோன்ற என்னை நோக்கித் தோளை மட்டும் குலுக்கினான்—''இவள் குழந்தை. பெரிய மனது பண்ணுங்கள்'' என்று

சொல்வது போல. சாப்பாடு முடிந்ததும் ஆஸ்யா எழுந்து எங்களுக்கு உயர்குடிப் பாங்கில் வணக்கம், தெரிவித்து விட்டு, தொப்பியை மாட்டிக் கொண்டு, பிராவு லுயிஸே வீட்டுக்குத் தான் போகலாமா என்று காகினிடம் கேட்டாள்.

அவன் தனது மாருத, இப்போது ஓரளவு கூச்சமுள்ள புன்னகையுடன், ''எவ்வளவு காலமாக என்னிடம் அனுமதி கேட்கத் தொடங்கி இருக்கிருய்? எங்களோடு இருப்பது உனக்கு அலுத்துப் போயிற்ருே?'' என்று வினவினுன்.

''இல்லே. பிராவு லுயிஸே வீட்டுக்கு வருவதாக நேற்றே அவளிடம் சொல்லி இருந்தேன். தவிர, நீங்கள் இருவருமாக இருப்பது உங்களுக்கு அதிக சௌகரியமாக இருக்கும் என்று நினேத்தேன். திருவாளர் என். (அவள் என்னேச் சுட்டினுள்) இன்னும் ஏதாவது உனக்குச் சொல்லுவார்.''

அவள் போய் விட்டாள்.

காகின் என் பார்வையைத் தவிர்க்க முயன்றவாறு பேச்சைத் தொடங்கினுன்: ''பிராவு லுயிஸே இவ்வூரின் முன்னுள் பர்கோமிஸ்டரின்* விதவை. நல்லவள், ஆனுல் மொத்தத்தில் கவைக்கு உதவாத கிழவி. அவளுக்கு ஆஸ்யா மேல் பெருத்த அன்பு விழுந்து விட்டது. தாழ் நிலே வட்டாரத்தாரைப் பழக்கம் செய்து கொள்வதில் ஆஸ்யாவுக்கு ஆர்வம். இதன் காரணம் எப்போதும் கர்வந்தான் என்பதை நான் கவனித்தேன். அவள் கணிசமாகச் செல்லம் கொடுத்துக் கெடுக்கப்பட்டிருப்பதை நீங்களே காண்கிறீர்கள்''

---

* பர்கோமிஸ்டர் சட்ட முதல்வர் என்று பொருள்படும் ஜெர்மன் சொல்.—மொ-ர்.

என்று சற்று நேர மௌனத்துக்குப் பிறகு அவன் தொடர்ந்தான்: ''என்ன செய்யச் சொல்லுகிறீர் கள்? யாரையுமே கட்டாயப் படுத்த எனக்கு முடி யாது. இவளையோ கேட்கவே வேண்டாம். இவ ளிடம் பரிவு காட்ட நான் கடமைப்பட்டவன்.''

நான் பேசாதிருந்தேன். காகின் பேச்சை மாற் றினன். அவனை நான் எவ்வளவு அதிகமாகத் தெரிந்து கொண்டேனே, அவ்வளவு வலிவாக அவனிடம் அன்பு பாராட்டினேன். நான் அவனை விரைவில் புரிந்து கொண்டேன். அவன் நேரான ருஷ்ய மனிதன். நியாயமுள்ளவன், நேர்மையான வன், வெகுளி, ஆனல் வருந்தத்தக்க விதத்தில் ஓரளவு சோர்ந்தவன், திட்பமும் உள்ளார்ந்த ஆவேசமும் இல்லாதவன். இளமை அவனுக்குள் ஊற்றெடுத்துப் பொங்கவில்லை. அமைதியான விளக்காகப் பிரகாசித்தது. அவன் மிக இனி யவன், அறிவுள்ளவன். ஆனல் அவன் முதிர்ச்சி அடைந்ததும் எத்தகையவன் ஆவான் என்பதை என்னல் எண்ணிப் பார்க்க முடியவில்லை. ஓவியன் ஆக... கடுமையான, இடையருத உழைப்பு இல் லாமல் யாரும் ஓவியர்கள் ஆவதில்லை... அவனு டைய மென்மையான முக அமைப்புக் கூறுகளைப் பார்த்து, அவனுடைய நிதானமான பேச்சைக் கேட்ட போது, ''நீ உழைக்கப் போவதில்லை! உறுதிப் படுவது உனக்கு இயலாது'' என்று நான் நினைத்துக் கொண்டேன். ஆனல் அவனை நேசிக் காமல் இருப்பது முடியவில்லை. இருதயம் தானு கவே அவன் மேல் ஈடுபாடு கொண்டது. சிறிது நேரம் சோபாவில் உட்கார்ந்திருப்பதும் சிறிது நேரம் வீட்டுக்கு முன்னல் மெதுவாக நடப்பது மாக நாங்கள் இருவரும் ஒரு நான்கு மணி நேரம்

கழித்தோம். இந்த நான்கு மணி நேரத்தில் முடிவாக நெருங்கிய நண்பர்கள் ஆகி விட்டோம்.

சூரியன் மறைந்தது, எனக்கு வீடு செல்ல நேரம் ஆயிற்று. ஆனால் ஆஸ்யா இன்னும் திரும்பக் காணோம்.

''கொஞ்சங்கூடக் கட்டில்லாதவள் இவள்!'' என்றான் காகின். ''நீங்கள் விரும்பினால் நான் உங்களை வழியனுப்ப வருகிறேன், வரட்டுமா? வழியில் பிராவு லுயிஸே வீட்டுக்குப் போவோம். ஆஸ்யா அங்கே இருக்கிறாளா என்று கேட்கிறேன். சுற்று அவ்வளவு பெரிதல்ல.''

நாங்கள் இறங்கி நகரத்துக்குப் போனோம். குறுகிய கோணல் சந்தில் திரும்பி, இரண்டு சன்னல்கள் அகலமும் நான்கு மாடிகள் உயரமும் கொண்ட ஒரு வீட்டின் முன் நின்றோம். இரண்டாவது மாடி முதல் மாடியைக் காட்டிலும் அதிகமாக வீதியில் நீட்டிக் கொண்டிருந்தது. மூன்றாவதும் நான்காவதும் இரண்டாவதைக் காட்டிலும் அதிகமாக நீட்டிக் கொண்டிருந்தன. கிலமான செதுக்கு வேலை, கீழே இரண்டு பருத்த தூண்கள், கூரிய ஓட்டுக் கூரை அலகு வடிவில் துருத்திக் கொண்டிருந்த முகட்டறை வாயில் ஆகியவை காரணமாக வீடு முழுவதும் பிரமாண்டமான கூனிய பறவை போலத் தோற்றம் அளித்தது.

''ஆஸ்யா! நீ இங்கே இருக்கிறாயா?'' என்று கத்தினான் காகின்.

மூன்றாம் மாடியில் விளக்கு வெளிச்சம் தெரிந்த சன்னல் தட்டப்பட்டுத் திறந்தது. ஆஸ்யாவின் கரிய தலையை நாங்கள் கண்டோம். ஜெர்மன் கிழவியின் பல்லற்ற, அரைக்குருடான முகம் அவளுக்குப் பின்னே தென்பட்டது.

முழங்கைகளை ஒய்யாரமாக சன்னல் குறட்டில்

ஊன்றியவாறு, ''நான் இங்கே இருக்கிறேன்'' என்றாள் ஆஸ்யா. ''எனக்கு இங்கே நன்றாய் இருக்கிறது. இந்தா, எடுத்துக் கொள்'' என்று ஜெரேனியம் மலர்க் கொம்பை காகின் அருகே வீசினாள். ''நான் உன் காதல் மங்கை என்று எண்ணிக் கொள்'' என்றாள்.

பிராவு லுயிஸே கலீரென நகைத்தாள்.

''என். போகிறார். உன்னிடம் விடை பெற விரும்புகிறார்'' என்றான் காகின்.

''அப்படியா? அப்படியானால் என் மலர்க் கொம்பை அவரிடம் கொடு, நான் இதோ திரும்பி வருகிறேன்'' என்று கூறினாள் ஆஸ்யா.

அவள் சன்னலைச் சாத்தி விட்டு பிராவு லுயிஸேயை முத்தமிட்டாள் போலிருந்தது. காகின் பேசாமல் மலர்க் கொம்பை என்னிடம் நீட்டினான். நான் மௌனமாக அதைப் பையில் வைத்துக் கொண்டேன், பரிசல் துறை சென்று படகில் மறு கரை சேர்ந்தேன்.

எனக்கு நினைவு இருக்கிறது, நான் எதைப் பற்றியும் எண்ணமிடாமல் வீட்டை நோக்கி நடந்தேன். என் நெஞ்சு மட்டும் விந்தையாகக் கனத்தது. பழக்கமான, ஆனால் ஜெர்மனியில் அரிதான ஆழ்ந்த மணம் ஒன்று திடீரென்று என்னைத் தாக்கியது. நான் நின்று பாதை ஓரத்தில் ஒரு சிறு சணல் செடிப் பாத்தியைக் கண்ணுற்றேன். ஸ்தெப்பி வெளிக்கு உரிய அதன் மணம் தாய் நாட்டை எனக்கு ஒரு நொடியில் நினைவுபடுத்தி, அதற்காகத் தீவிரமான ஏக்கத்தை என் நெஞ்சில் எழுப்பியது. ருஷ்யக் காற்றை மூச்சு விடவும் ருஷ்ய மண்ணில் நடமாடவும் எனக்கு விருப்பம் உண்டாயிற்று. ''நான் இங்கே என்ன செய்கிறேன், வேற்று நாட்டில், வேற்று மனிதர்களுக்கு

இடையே எதற்காக ஏங்குகிறேன்?'' என்று சொல்லிக் கொண்டேன். நெஞ்சில் நான் உணர்ந்த உயிரற்ற சுமை கசப்பான, காந்தச் செய்யும் கிளர்ச்சியாக எதிர்பாரா விதத்தில் மாறியது. தலைக்கு நாளுக்கு முற்றும் மாறுன உள நிலையில் நான் வீடு சேர்ந்தேன். எனக்குள் அனேகமாகக் கோபம் பொங்கியது. வெகு நேரம் வரை என்னுல் அமைதி அடைய முடியவில்லை. எனக்கு விளங் காத எரிச்சல் என்னை ஆட்கொண்டது. முடிவில் நான் உட்கார்ந்து எனக்குத் துரோகம் இழைத்த விதவையை நினைவு கூர்ந்து (இந்தப் பெண்மணி யை அதிகாரபூர்வமாக நினைவுபடுத்திக் கொள்' வதுடன் நிறைவுற்றது என் ஒவ்வொரு நாளும்), அவள் எழுதிய கடிதங்களில் ஒன்றை எடுத்தேன். ஆனுல் அதை நான் பிரிக்கக் கூட இல்லை. என் எண்ணங்கள் அக்கணமே வேறு திசையில் சென் றன. நான் சிந்தனை செய்யலானேன்... ஆஸ்யா வைப் பற்றிச் சிந்தனை செய்தேன். தான் ருஷ்யா திரும்பத் தடையாய் இருக்கும் எவையோ இடர் கள் பற்றி காகின் என்னிடம் சாடையாகக் குறிப் பிட்டது எனக்கு நினைவு வந்தது... ''போதும், அவள் அவனுடைய தங்கைதானு?'' என்று நான் உரக்கக் கூறினேன்.

உடை களைந்து விட்டுப் படுத்து உறங்க முயன் றேன். ஆனுல் ஒரு மணி நேரம் சென்றதும் நான் தலையணையில் முழங்கைகளை ஊன்றியவாறு படுக் கையில் மறுபடி அமர்ந்து, ''சஞ்சல சித்தமும் போலிச் சிரிப்பும் உள்ள அந்தப் பெண்ணைப்...'' பற்றி மறுபடி எண்ணமிடலானேன். ''இவள் பர் னெஸீனில் ரபேல் தீட்டியுள்ள சிறு கலாத்தேயா*

* இங்கு குறிக்கப்படுவது மேதை வாய்ந்த இத்தாலிய ஓவியர் ரபேல் (1483—1520) ரோம்

போன்ற வடிவமைப்பு உள்ளவள்'' என்று கிசு கிசுத்தேன். ''ஆம். தவிர, அவள் அவனுடைய தங்கை அல்ல...''

விதவையின் கடிதமோ, நிலவு ஒளியில் வெண்மையாகப் பளிச்சிட்டவாறு அமைதியாகத் தரையில் கிடந்தது.

**5**

மறு நாள் காலையில் நான் ல. சிற்றூருக்கு மறுபடி போனேன். காகினைப் பார்க்க நான் விரும்புவதாக எனக்கே நம்பிக்கையூட்ட முயன்றேன், ஆனால், ஆஸ்யா என்ன செய்யப் போகிறாள், முந்திய நாளில் போலவே ''வேடிக்கை செய்யப்'' போகிறாளா என்று பார்க்க எனக்கு உள்ளூற ஆசையாய் இருந்தது. நான் போன போது இருவரும் விருந்தறையில் இருந்தார்கள். விந்தையான சேதி! இரவிலும் காலையிலும் நான் ருஷ்யாவைப் பற்றி நிறையச் சிந்தனை செய்து கொண்டிருந்ததாலோ என்னவோ, ஆஸ்யா எனக்கு முற்ற முழுக்க ருஷ்யப் பெண்ணாகத் தோற்றம் அளித்தாள். ஆம், சாதாரணப் பெண்ணாக, கிட்டத்தட்ட வீட்டு வேலைக்காரியாக. அவள் பழைய உடையை அணிந்திருந்தாள். முடியைக் காதுகளுக்குப் பின் வாரி விட்டிருந்தாள். சன்னலோரமாக அசையாமல் உட்கார்ந்து பூவேலைச் சட்டத்தில் அடக்கமும் அமைதியுமாகப் பூத்தையல் போட்டுக் கொண்டிருந்தாள். வாழ்நாள் முழுதும் அவள் வேறு எந்த வேலையும் செய்ததில்லை போலத்

---

நகரில் பர்னெஸீன் மாளிகையில் தீட்டியுள்ள 'கலாத்தேயாவின் வெற்றி' என்னும் புகழ் பெற்ற சுவரோவியம்.

தோன்றியது. அவள் அனேகமாக ஒன்றும் பேச வில்லை. தனது தையல் வேலையை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய முக அமைப்புக் கூறுகள் சிறப்பற்ற அன்றாடத் தோற்றத்தை மேற்கொண்டதால், வீட்டிலேயே வளர்ந்த நம்முடைய காத்யாக்களும் மாஷாக்களும் என் வசமின்றியே என் நினைவுக்கு வந்தார்கள். இந்த ஒப்புமையை நிறைவுபடுத்துவதற்காக ஆஸ்யா ''மாதுஷ்கா, கலூபுஷ்கா''* என்னும் ருஷ்யப் பாடலை வாய்க்குள்ளாகப் பாடத் தலைப்பட்டாள். அவளுடைய மஞ்சள் பாரித்த, ஒளி மங்கிய சிறு வதனத்தை நோட்டமிட்ட நான் முந்திய நாளின் விழைவுகளை நினைவுகூர்ந்தேன். எதனாலோ எனக்கு வருத்தம் உண்டாயிற்று. பருவநிலை அற்புதமாய் இருந்தது. அன்று இயற்கைக் காட்சிகளை நேரில் கண்டு பயிற்சிப் படம் வரையப் போவதாக காகின் அறிவித்தான். நானும் கூட வரலாமா, அவனுக்கு நான் இடைஞ்சலாய் இருக்க மாட்டேனா என்று நான் அவனிடம் கேட்டேன்.

''மாறாக, நீங்கள் எனக்கு நல்ல யோசனைகள் சொல்லக் கூடும்'' என்றான் அவன்.

வட்டத் தொப்பியை à la Van Dyck** அணிந்து

---

* அருமை அம்மா என்று பொருள்படும் இந்தப் பாடலை இயற்றியவர் அ. குரில்லேவ் (1803—1858). விரிவாகப் பரவிய இந்தப் பாடல் நாட்டுப் பாடலாக ஏற்கப் பெற்றது.

** வான் டைக் பாணியில் (பிரெஞ்சு). பிளெமிஷ் ஓவியரான வான் டைக் அந்தோனியோ (1599—1641) அணிந்த தளர் சட்டையும் வட்டத் தொப்பியும் பிரெஞ்சு ஓவியர்களின் வழக்கமான உடை ஆயிற்று.

தளர் சட்டை மாட்டிக் கொண்டான், வரைவு அட்டையைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு புறப்பட்டான். நான் அவனைப் பின் தொடர்ந்தேன். ஆஸ்யா வீட்டில் தங்கினாள். சூப் மட்டுமீறி நீர்க்க இல்லாதவாறு பார்த்துக் கொள்ளும்படி போவதற்கு முன் காகின் அவளைக் கேட்டுக் கொண்டான். சமையல் அறையில் இருப் பதாக ஆஸ்யா வாக்களித்தாள். காகின் எனக்கு இதற்குள் பழக்கம் ஆகி விட்ட பள்ளத்தாக்குக்குப் போய், பாறை மேல் அமர்ந்து, நாற்புறமும் கிளை களைப் பரப்பி நின்ற,பொந்து உள்ள பழங்கால ஓக் மரம் ஒன்றைப் பார்த்து வரைய முற்பட்டான். நான் புல்லில் படுத்துப் புத்தகத்தை எடுத்துக் கொண்டேன். ஆனால் நான் இரண்டு பக்கங்கள் கூடப் படிக்கவில்லை. அவனும் வெறுமே காகி தத்தைக் கறைப்படுத்தினான். நாங்கள் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தோம். எப்படி வேலை செய்ய வேண்டும், எதைத் தவிர்க்க வேண்டும், எதைக் கடைப்பிடிக்க வேண்டும், நம் காலத்தில் ஓவிய னின் முக்கியத்துவம் உண்மையில் என்ன என்ப வற்றைப் பற்றி நாங்கள் விவாதித்தோம், என்னால் மதிப்பிட முடிந்த அளவுக்குக் கணிசமாக அறி வார்ந்த முறையிலும் நுட்பமாகவும் விவாதித் தோம். தனக்கு ''அன்று வேலை ஓடவில்லை'' என்று காகின் முடிவில் தீர்மானித்து என் பக்கத்தில் படுத்துக் கொண்டான். அப்புறம் கட்டின்றிப் பெருகியது இளைஞர்களான எங்களுடைய பேச்சு, சில போது உக்கிரமும்,சில போது சிந்தனையும், சில போது உவகைப் பெருக்கும், ஆனால் எப்போதும் தெளிவின்மையும் உள்ள பேச்சு, ருஷ்ய மனிதன் மகிழ்ச்சியுடன் திளைக்கும் வகையான பேச்சு. தெவிட்டத் தெவிட்ட அரட்டை அடித்து, நாங்

கள் உருப்படியாக ஏதோ செய்தது போலவும், எதையோ நிறைவேற்ற எங்களுக்கு வாய்த்தது போலவும் முழுத் திருப்தி அடைந்து, நாங்கள் வீடு திரும்பினோம். நான் எந்த நிலையில் ஆஸ்யாவை விட்டுச் சென்றேனோ அதே நிலையில் அவளைக் கண்டேன். அவளை உற்றுக் கவனிக்க நான் எவ்வளவோ முயன்றும் பிலுக்கின் சாயலையோ செயற்கையாக வருவித்துக் கொண்ட நடிப்பின் குறியையோ நான் அவளிடம் காணவில்லை. பசப்புக்காக அவளைக் கடிந்து கொள்ள இந்தத் தடவை வாய்ப்பு கிடைக்கவில்லை.

''ஆமாம்! விரதமும் கழிவிரக்கமும் கடைப் பிடிக்கிறாள்'' என்றான் காகின்.

மாலைத் தறுவாயில் அவள் பல தடவை நடிப் பின்றிக் கொட்டாவி விட்டாள், முன்னதாகத் தன் அறைக்குப் போனாள். நானும் விரைவில் காகினிடம் விடை பெற்றேன். வீடு திரும்பியதும் எதைப் பற்றியும் நான் எண்ணமிடவில்லை. அன்றைய தினம் அறிவு நிதானமுள்ள உணர்ச்சிகளில் கழிந்தது. ஆனால் எனக்கு நினைவு இருக்கிறது, உறங்குவதற்காகப் படுத்த போது என் வசமின்றியே நான் உரக்கச் சொன்னேன்:

''எப்பேர்ப்பட்ட பச்சோந்தி இந்தப் பெண்!'' பின்பு சற்று யோசித்து விட்டு இதையும் கூறினேன்: ''என்ன ஆனாலும் அவள் அவனுடைய சகோதரி அல்ல.''

## 6

முழுதாக இரண்டு வாரங்கள் கழிந்தன. நான் ஒவ்வொரு நாளும் காகின் வீட்டுக்குப் போய் வந்தேன். ஆஸ்யா என்னைத் தவிர்த்து வந்தாள்

போல் காணப்பட்டாள். எங்கள் அறிமுகத்தின் முதல் இரண்டு நாட்களில் என்னைப் பெரிதும் வியப்பில் ஆழ்த்திய குறும்புகளில் ஒன்றைக் கூட இப்போது அவள் செய்யவில்லை. மனதுக்குள் வருந்துபவள், அல்லது நாணுபவள் போலக் காணப்பட்டாள். அவள் சிரித்ததும் முன்னை விடக் குறைவாகவே. நான் ஆவலுடன் அவளைக் கூர்ந்து கவனித்தேன்.

பிரெஞ்சு மொழியும் ஜெர்மன் மொழியும் அவள் போதிய அளவு நன்றாகப் பேசினாள். ஆனாலும் குழந்தைப் பருவம் முதல் அவள் மாதர்களின் கைகளில் இருக்கவில்லை என்பதும், காகினுடைய பயிற்சி வளர்ப்புடன் பொது அம்சம் எதுவும் இல்லாத விந்தையான முறையில் பயிற்றி வளர்க்கப்பட்டிருக்கிறாள் என்பதும் எல்லாவற்றிலும் புலப்பட்டன. Á la Van Dyck தொப்பியும் தளர் சட்டையும் அணிந்தாலும் மென்மையுள்ள, ஓரளவு சீராட்டி வளர்க்கப்பட்ட ருஷ்யப் பிரபு வம்சத்தினனின் தோரணை காகினிடம் இயல்பாகக் காணப்பட்டது. அவளோ, பிரபு வம்ச மங்கையை ஒத்திருக்கவில்லை. அவளுடைய அங்க அசைவுகள் எல்லாவற்றிலும் அமைதியற்ற ஒரு தன்மை இருந்தது. இந்தக் காட்டுச் செடிக் கன்று அண்மையில்தான் ஒட்டு சேர்க்கப்பட்டிருந்தது. இந்த மது இன்னும் நொதித்துக் கொண்டிருந்தது. இயல்பில் நாணமும் கூச்சமும் உள்ளவளான அவள் தன் சங்கோசத்தின் மேல் எரிச்சல் கொண்டிருந்தாள். எரிச்சல் காரணமாக, கட்டற்றவளாகவும் துணிவுள்ளவளாகவும் இருக்க வலிந்து முயற்சி செய்தாள். அவளுடைய இந்த முயற்சி எப்போதும் பலிக்கவில்லை. ருஷ்யாவில் அவளுடைய வாழ்க்கையைப் பற்றி, அவளுடைய கடந்த

காலத்தைப் பற்றி, நான் அனேக முறை அவளிடம் பேச்சுக் கொடுத்தேன். என் கேள்விகளுக்கு விருப்பம் இன்றியே அவள் விடை அளித்தாள். ஆனால் வெளி நாடுகளுக்குப் பயணம் புறப்படுவதற்கு முன் அவள் நீண்ட காலம் கிராமத்தில் வசித்தாள் என்பதை நான் தெரிந்து கொண்டேன். ஒரு தடவை அவள் தனியாக, புத்தகம் படித்துக் கொண்டிருக்கக் கண்டேன். தலையை இரண்டு கைகளாலும் தாங்கிக் கொண்டு விரல்களைக் கூந்தலில் ஆழச் செருகியவாறு வரிகளைக் கண்களால் விழுங்கிக் கொண்டிருந்தாள்.

''பலே! நீங்கள் எப்படி முனைந்து பாடுபடுகிறீர்கள்!'' என்று அவள் அருகே போய்க் கூறினேன்.

அவள் தலையை நிமிர்த்தி, பெருமிதமும் கண்டிப்பும் தோன்ற என்னைப் பார்த்தாள்.

''என்னால் சிரிக்கத்தான் முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்'' என்று கூறி விட்டு அப்பால் செல்லப் போனாள்...

நான் புத்தகத்தின் தலைப்பை நோக்கினேன். அது ஒரு பிரெஞ்சு நவீனம்.

''ஆனால் உங்கள் தேர்வை என்னால் பாராட்ட முடியாது'' என்றேன்.

''எதைத்தான் படிப்பது?'' என்று கூறிப் புத்தகத்தை மேசை மேல் போட்டாள். பின்பு, ''அப்படியானால் கும்மாளம் போடப் போகிறேன்'' என்று சொல்லி விட்டுத் தோட்டத்துக்கு ஓடினாள்.

அன்றே மாலையில் ''ஹெர்மனும் டோரதியும்''* காவியத்தை நான் காகினுக்குப் படித்துக்

---

* ஹெர்மனும் டோரதியும் — ஜெர்மானியக் கவிஞர், சிந்தனையாளர் கியோத்தே இயற்றிய பெருங் காப்பியம் (1797).

காட்டிக் கொண்டிருந்தேன். ஆஸ்யா முதலில் எங்கள் அருகாக வளைய வந்து கொண்டு மட்டும் இருந்தாள். பின்பு திடீரென்று நின்றாள், காது கொடுத்துக் கேட்டாள், சந்தடி செய்யாமல் என் அருகே உட்கார்ந்து நான் படித்ததை முடிவுவரை கேட்டுக் கொண்டிருந்தாள். மறு நாள் என்றால் அவளை மீண்டும் அடையாளம் காண முடியவில்லை. டோரதி போலவே வீட்டுக் காரியங்களை நிர்வகிப்பவளாகவும் ஆழ்ந்த போக்கு உள்ளவளாகவும் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றி விட்டது என அனுமானித்த பிறகுதான் அவளை இனம் கண்டு கொண்டேன். சுருங்கச் சொன்னால் அவள் ஓரளவு மர்மப் பிறவியாக எனக்குத் தோற்றம் அளித்தாள். அளவு கடந்த தன்மானம் உள்ள அவள், எனக்கு அவள்மேல் கோபம் உண்டான போது கூட என் கவனத்தை ஈர்த்தாள். ஒரு விஷயம் மட்டும் எனக்கு மேலும் மேலும் அதிகமாக உறுதிப்பட்டது. அவள் காகினுடைய தங்கை அல்ல என்பது அது. அவன் அவளிடம் அண்ணனாக அல்ல, எல்லையற்ற அன்புடனும் எல்லையற்ற பரிவுடனும் அதே சமயம் ஓரளவு நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டவனாகவும் நடந்து கொண்டான்.

விந்தையான தற்செயல் நிகழ்ச்சி என் சந்தேகங்களை உறுதிப்படுத்தியது போலத் தோன்றியது.

காகின் வசித்த கொடிமுந்திரித் தோட்டத்துக்கு ஒரு நாள் மாலை நான் போன போது திட்டி வாசல் பூட்டியிருந்ததைக் கண்டேன். நெடு நேரம் சிந்திக்காமல், வேலியில் முன்னரே நான் பார்த்திருந்த ஒரு சிதைந்த இடத்துக்குப் போய் அதைத் தாண்டித் தோட்டத்தில் புகுந்தேன். அந்த இடத்துக்கு அருகாமையில், சாலையின்

தரப்பில், சிறிய கருவேல மரப் பந்தர் ஒன்று இருந்தது. நான் அதற்கு நேராக வந்து அதைக் கடந்து செல்லப் போனேன்... ஆஸ்யாவின் குரல் திடீரென்று என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கிற்று. ஆவேசத்துடன், கண்ணீருக்கிடையே பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தாள் அவள்:

''இல்லை, உன்னைத் தவிர வேறு யாரையும் நேசிக்க நான் விரும்பவில்லை. இல்லை, இல்லை, உன் ஒருவனை மட்டுமே நேசிக்க விரும்புகிறேன்—என்றென்றைக்கும்.''

''போதும், ஆஸ்யா, பதற்றத்தை விடு. நான் உன்னை நம்புகிறேன் என்பது உனக்கே தெரியுமே.''

அவர்களுடைய குரல்கள் பந்தரில் ஒலித்தன. கிளைகளின் அடர்த்தியற்ற பின்னலின் ஊடாக அவர்கள் இருவரையும் நான் கண்டேன். அவர்கள் என்னைக் கவனிக்கவில்லை.

''உன்னை, உன் ஒருவனைத்தான்'' என்று திருப்பிச் சொல்லி அவனுடைய கழுத்தைப் பாய்ந்து கட்டிக் கொண்டு, வலிப்பு வந்தவள் போலத் தேம்பியவாறு அவள் அவனை முத்தமிடவும் அவன் மார்போடு ஒன்றிக் கொள்ளவும் தொடங்கினுள்.

அவளுடைய கேசத்தை மென்மையாக வருடியவாறு ''போதும், போதும்'' என்று அவன் திருப்பிச் சொன்னுன்.

சில விஞடிகள் நான் அசைவற்று நின்று கொண்டிருந்தேன்... திடீரென்று திடுக்கிட்டுத் தன்னிலைக்கு வந்தேன். ''அவர்களிடம் போவதா?.. கூடவே கூடாது!'' என்ற எண்ணம் என் மனதில் பளிச்சிட்டது. விடு விடென்று நடந்து வேலிக்குத் திரும்பி, அதைத் தாண்டிச் சாலைக்கு வந்து, ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு

விரைந்தேன். நான் முறுவலித்தேன், கைகளைத் தேய்த்துக் கொண்டேன், எனது ஊகங்களை (அவற்றின் உண்மையை நான் கணமேனும் சந்தேகிக்கவில்லை) எதிர்பாரா விதமாக உறுதிப்படுத்திய தற்செயல் நிகழ்ச்சியை எண்ணி வியந்தேன். அதே சமயம் என் நெஞ்சு ஒரேயடியாகக் கசந்தது. ''ஆனாலும் நடிக்கத் தெரிந்தவர்கள்தாம் இவர்கள்! எதற்காகவோ? என்னை ஏமாற்றுவதில் ஏன் இந்த ஆர்வம்? அவனிடம் நான் இதை எதிர்பார்க்கவில்லை... தவிர உணர்ச்சி பொங்கும் காதல் அறிவிப்பு எதற்காக?''

## 7

நான் மோசமாகத் தூங்கினேன். மறு நாள் அதிகாலையில் எழுந்து, பயணப்பையை முதுகில் மாட்டிக் கொண்டு, இரவில் என்னை எதிர்பார்க்க வேண்டாம் என்று என் வீட்டுக்காரியிடம் சொல்லி விட்டு, ஸி. சிற்றூர் எந்த ஆற்றின் கரையில் அமைந்திருந்ததோ அதன் போக்குக்கு எதிர்த் திசையில், கால் நடையாக மலைகளுக்குப் புறப்பட்டேன். ''நாய் முதுகு'' (Hundsrück) என்னும் தொடரின் கிளையான இந்த மலைகள் புவி இயல் நோக்கில் மிகவும் அக்கறைக்கு உரியவை. சிறப்பாக, தீக்கல் படிவுகளின் சீர்மைக்காகவும் தூய்மைக்காகவும் அவை குறிப்பிடத் தக்கவை. ஆனால் புவி இயல் ஆராய்ச்சிகளில் எனக்கு அறவே நாட்டம் இல்லை. எனக்குள் நிகழ்ந்து கொண்டிருந்ததை நான் தெளிவாக விளங்கிக் கொள்ளவில்லை. காகின் குடும்பத்தாரை மறுபடி பார்க்க விருப்பமின்மை என்ற ஓர் உணர்வுதான் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. அவர்கள் மேல் எனக்குத் திடீ

ரென மனத்தாங்கல் ஏற்பட்டதற்கு ஒரே காரணம் அவர்களுடைய பாசாங்கினுல் உண்டான எரிச்சல்தான் என்று எனக்கே நம்பிக்கையூட்ட முயன்றேன். தாங்கள் உடன் பிறந்தவர்கள் என்று நடிக்கும்படி அவர்களை யார் கட்டாயப்படுத்திஞர்கள்? உண்மையில், அவர்களைப் பற்றி நினைக்காதிருக்க நான் முயன்றேன். மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் அவசரப்படாமல் சுற்றி அலைந்தேன். நாட்டுப்புற உணவு விடுதிகளில் விடுதிக்காரர்களுடனும் விருந்தாளிகளுடனும் அமைதியாக உரையாடியவாறு நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தேன், அல்லது சூடேறிய தட்டைப் பாறையில் படுத்து, மேகங்கள் மிதந்து செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பருவ நிலை வியப்பூட்டும் அளவுக்கு நன்ருய் இருந்தது. இத்தகைய பொழுதுபோக்குகளில் நான் மூன்று நாட்களைக் கழித்தேன். இடையிடையே நெஞ்சில் உறுத்தல் ஏற்பட்டாலும் எனக்கு மகிழ்ச்சி உண்டாகாமல் இருக்கவில்லை. அந்த வட்டாரத்தின் அமைதியான இயற்கைக்குப் பொருத்தமாகவே என் எண்ணங்களின் பாங்கும் இருந்தது.

தற்செயலின் அமைதியான விளையாட்டுக்கு, தாமாக நேர்ந்த அனுபவங்களுக்கு, என்னை முழுமையாக ஒப்புக் கொடுத்து விட்டேன். நிதானமாக ஒன்று மாற்றி ஒன்ருக ஏற்பட்ட இந்த அனுபவங்கள் உள்ளத்தில் பெருகி, முடிவில் ஒரே பொது உணர்வாக அதில் பதிந்தன. இந்த மூன்று நாட்களில் நான் கண்டவை, உணர்ந்தவை, கேட்டவை, யாவும் இந்தப் பொது உணர்வில் கலந்தன, யாவும்—காடுகளில் கீலின் மெல்லிய மணம், மரங்கொத்திகளின் கத்தலும் கொத்தலும், தெளிந்த நீரோடைகளின் ஓயாத மழலை

யொலி, அவற்றின் மணல் பாங்கான அடித்தளத்தில் நீந்தும் புள்ளிகளிட்ட டிரௌட் மீன்கள், மலைகளின் அளவு கடந்து செங்குத்தாய் இல்லாத உருவரைகள், கருங்கும்மென்ற பாறைகள், துப்புரவான கிராமங்கள், அவற்றிலுள்ள மதிப்புக்குரிய பழங்காலச் சர்ச்சுகளும் மரங்களும், புல்வெளிகளில் கொக்குகள், துடியாகச் சுழலும் சக்கரங்கள் கொண்ட வசதியான அரைவை இயந்திரங்கள், நாட்டுப்புற மனிதர்களின் மகிழ்ச்சி ததும்பும் முகங்கள், அவர்களுடைய நீல மார்புச் சட்டைகளும் சாம்பல் நிறக் காலுறைகளும், கொழுத்த குதிரைகளும் சில வேளைகளில் பசுக்களும் பூட்டிக் கிறீச்சொலியுடன் மெதுவாக நகரும் சுமை வண்டிகள், இரு மருங்கிலும் ஆப்பிள், பேரி மரங்கள் நட்டு வளர்க்கப்பட்ட துப்புரவான சாலைகளில் நடக்கும் நீள் முடியினரான இளம் யாத்திரிகர்கள்...

எனது அப்போதைய அனுபவங்களை நினைத்துப் பார்ப்பதில் இப்போதும் கூட எனக்கு இன்பம் உண்டாகிறது. ஜெர்மன் பூமியின் அடக்கமான பகுதியே, சிக்கலற்ற மகிழ்ச்சி ததும்பும் இடமே, முனைந்து பாடுபடும் கரங்களின் தடங்கள், அவசரமற்றதாயினும் பொறுமை உள்ள வேலையின் தடங்கள் எங்கும் பதிந்திருக்கும் பிரதேசமே, உனக்கு வணக்கம்... உனக்கு வணக்கமும் அமைதியும்!

மூன்றும் நாள் முடிவில் நான் வீடு சேர்ந்தேன். காகின் குடும்பத்தார் மேல் உண்டான எரிச்சலால் இரக்கமற்ற விதவையின் உருவை என் நெஞ்சில் மீண்டும் உயிர்ப்பிக்க நான் முயன்றேன், ஆனல் என் முயற்சிகள் பலிக்கவில்லை என்பதைச் சொல்ல மறந்து விட்டேன். எனக்கு நினைவு இருக்கிறது,

அவளைப் பற்றிக் கனவு காண நான் முற்பட்ட போது சுமார் ஐந்து வயதுள்ள குடியானவச் சிறுமியை எதிரே கண்டேன். ஆவல் ததும்பும் சின்ன வட்ட முகமும் பேதைமை தோன்ற உப்பிய அழகு விழிகளும் கொண்டிருந்தாள் அவள். குழந்தைக்கு இயல்பான எளிமை உள்ளத்துடன் அவள் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாள்... அவளுடைய தூய பார்வைக்கு முன் எனக்கு வெட்கமாக இருந்தது. அவள் முன்னிலையில் பொய் சொல்ல நான் விரும்பவில்லை. எனது முந்திய இலக்கை முடிவாகவும் என்றென்றைக்குமாகவும் அக்கணமே வணங்கிப் பிரிந்தேன்.

காகின் எழுதிய கடிதம் எனக்கு வீட்டில் கிடைத்தது. எனது தீர்மானத்தின் எதிர்பாராமை குறித்து அவன் வியப்பு தெரிவித்திருந்தான். தன்னை உடன் அழைத்துச் செல்லாததற்காக என்னைக் குறை கூறியிருந்தான். திரும்பிய உடனேயே தங்கள் வீட்டுக்கு வருமாறு கேட்டுக் கொண்டிருந்தான். இந்தக் கடிதத்தை நான் அதிருப்தியுடன் படித்தேன், ஆனால் மறு நாளே ல. சிற்றூருக்குப் புறப்பட்டேன்.

## 8

காகின் என்னை நட்புடன் வரவேற்றான். அன்பு ததும்பும் கண்டனங்களை என் மேல் பொழிந்தான். ஆனால் ஆஸ்யா, வேண்டுமென்றே போல என்னைக் கண்டதுமே ஒரு காரணமும் இன்றிக் கெக்கலி கொட்டினாள். அதோடு தன் வழக்கப்படி அக்கணமே ஓடிப் போய் விட்டாள். காகின் குழப்பமடைந்து அவள் சிறுக்கு பிடித்தவள் என்று அவளை நோக்கியவாறு முணுமுணுத்தான். அவளை

மன்னிக்கும்படி என்னிடம் கேட்டுக் கொண்டான். எனக்கு ஆஸ்யாமேல் மிகுந்த எரிச்சல் உண்டாயிற்று என்று ஒப்புக் கொள்கிறேன். ஏற்கெனவே நான் சள்ளைப் பட்டுக் கொண்டிருந்தேன். போதாக் குறைக்கு மறுபடி இந்தப் போலிச் சிரிப்பு, இந்த வித்தையான கோரணிகள். ஆனாலும் நான் எதையும் கவனிக்கவில்லை போலக் காட்டிக் கொண்டு, எனது சிறு பயணத்தின் விவரங்களை காகினுக்குத் தெரிவித்தேன். நான் இல்லாத போது என்ன செய்தான் என்று அவன் எனக்கு விவரித்தான். ஆனால் எங்கள் பேச்சு சரியாக ஓடவில்லை. ஆஸ்யா அறைக்குள் வருவதும் மறுபடி ஓடிப் போவதுமாக இருந்தாள். எனக்கு அவசர வேலை இருப்பதாகவும் நான் உடனே வீடு திரும்ப வேண்டும் என்றும் கடைசியில் நான் அறிவித்தேன். காகின் முதலில் என்னைத் தடுத்தான். பின்பு என்னை உற்றுப் பார்த்து விட்டு என்னை வழியனுப்ப வருவதாகச் சொன்னான். முன்னறையில் ஆஸ்யா திடீரென்று என்னை நெருங்கி, என் பக்கம் கையை நீட்டினாள். நான் அவளுடைய விரல்களை லேசாக அழுத்தி அரைகுறையாக வணங்கினேன். காகினும் நானும் ஒன்றாகப் படகில் ரைன் ஆற்றைக் கடந்தோம். என் அன்புக்குரிய அசோக மரத்திற்கும் அதிலிருந்த மரியம்மை சிலைக்கும் அருகாக நடந்து பெஞ்சியில் உட்கார்ந்து, காட்சியை வியந்து நோக்கலானோம். அப்போது எங்களுக்குள் குறிப்பிடத்தக்க உரையாடல் நிகழ்ந்தது.

முதலில் நாங்கள் சில வார்த்தைகளைப் பரிமாறிக் கொண்டோம். பிறகு ஒளி திகழ்ந்த ஆற்றை நோக்கியவாறு பேசாதிருந்தோம்.

''சொல்லுங்கள்'' என்று தன் இயல்பான புன்

னகையுடன் திடீரென்று தொடங்கினுன் காகின். ''ஆஸ்யாவைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர் கள்? அவள் ஓரளவு விசித்திரமானவளாக உங் களுக்குத் தோன்ற வேண்டும். உண்மைதானே?''

''ஆமாம்'' என்று ஓரளவு விளங்காமையுடன் பதிலளித்தேன் நான். அவன் அவளைப் பற்றிப் பேச்சு எடுப்பான் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

''அவளைப் பற்றி முடிவு செய்வதற்கு அவளை நன்ருகத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்ருன் காகின். ''அவளுடைய இதயம் மிகவும் நல்லது, ஆனுல் மூளை குறும்புத்தனம் நிறைந்தது. அவ ளோடு இணங்கிப் போவது சிரமம். அதே சமயம், அவளைக் குற்றம் சொல்ல முடியாது. அதிலும், அவளுடைய கதையை நீங்கள் அறிந்தால்...''

''அவளுடைய கதையையா?..'' என்று நான் குறுக்கிட்டேன். ''அவள் என்ன, உங்கள்...''

காகின் என்னை உற்று நோக்கினுன்.

''அவள் என் தங்கை அல்ல என்று நினைக் கிறீர்களோ?.. இல்லை'' என்று என் குழப்பத்தைப் பொருட்படுத்தாமல் அவன் தொடர்ந்தான். ''அவள் உண்மையாக என் தங்கை, அவள் என் தந்தையின் மகள். நான் சொல்லுவதை முடிவு வரை கேளுங்கள். உங்கள் நேர்மையில் எனக்கு நம்பிக்கை விழுந்து விட்டது. எல்லாக் கதையை யும் உங்களுக்குச் சொல்கிறேன்.

''என் தகப்பனுர் மிகுந்த நல்லியல்பும் அறிவுக் கூர்மையும் உள்ளவர், உயர் கல்வி பெற்ற வர். அதே சமயம், ஆக்கம் கெட்டவர். விதி அவரை வேறு எத்தனையோ பெயர்களை விட மோசமாக நடத்தி விடவில்லை. ஆனுல் அதன் முதல் அடியையே அவரால் தாங்க முடியவில்லை. இளம் வயதிலேயே காதல் மணம் புரிந்து கொண்

டார் அவர். அவருடைய மனேவி, என் தாயார், மிக விரைவில் காலமாகி விட்டாள். அவள் இறந்த போது எனக்கு ஆறு மாதம். தகப்பனுர் என்னேக் கிராமத்துக்கு அழைத்துப் போனவர், முழுதாகப் பன்னிரண்டு ஆண்டுகள் வெளியே எங்கும் போகா திருந்தார். என் பயிற்சி வளர்ப்பை அவர் தாமே ஏற்றுக் கொண்டார். அவருடைய சகோதரர், என் சொந்தச் சிற்றப்பா, எங்கள் கிராமத்துக்கு வந்திராவிட்டால் தகப்பனுர் என்னே விட்டு ஒரு போதும் பிரிந்திருக்க மாட்டார். இந்தச் சிற்றப் பா நிலேயாகப் பீட்டர்ஸ்பர்கில் வசித்தார், கணிச மாகப் பெரிய பதவி வகித்து வந்தார். தகப் பனுர் எக்காரணத்தை முன்னிட்டும் கிராமத்தை விட்டு வெளியேற இசையாததால் என்னேத் தம் பொறுப்பில் விடும்படி சிற்றப்பா தகப்பனுரை இணங்க வைத்தார். முற்றிலும் தனிமையில் வாழ்வது என் வயதுப் பையனுக்குக் கெடுதல் என்றும் என் தகப்பனுர் போன்று ஓயாச் சோர் வும் வாய் மூடித்தனமும் உள்ள போதகரிடம் பயின்ருல் நான் என் வயதுச் சிறுவர்களுக்குக் கட் டாயம் பின் தங்கி விடுவேன் என்றும் அதோடு என் உளப்பாங்கே சுளுவில் கெட்டுப் போகக் கூடும் என்றும் சிற்றப்பா எடுத்துச் சொன்னுர். சகோதரரின் அறிவுரையைத் தகப்பனுர் வெகு நேரம் எதிர்த்தார், ஆனுல் முடிவில் விட்டுக் கொடுத்தார். தகப்பனுரைப் பிரிகையில் நான் அழுதேன். அவருடைய முகத்தில் புன்னகையை நான் ஒரு போதும் காணவில்லே என்ருலும் அவரை நேசித்து வந்தேன்... ஆனுல், பீட்டர்ஸ்பர்க் சேர்ந்ததும் எங்கள் இருண்ட, மகிழ்வற்ற கூட்டை விரைவில் மறந்து விட்டேன். இராணுவ அதிகாரிகள் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தேன்,

பள்ளியிலிருந்து காவற்படை ரெஜிமெண்டுக்குப் போனேன். ஒவ்வோர் ஆண்டும் கிராமத்துக்குப் போய்ச் சில வாரங்கள் தங்கினேன், தகப்பனுர் ஆண்டுக்கு ஆண்டு அதிகம் ஏங்கியும் தமக்குள் ஆழ்ந்தும் கூச்சப்படும் அளவுக்குச் சிந்தனையில் ஈடுபட்டும் வருவதைக் கண்டேன். அவர் நாள் தோறும் சர்ச்சுக்குப் போனுர், பேசும் பழக்கத்தை அனேகமாக இழந்து விட்டார். ஒரு தடவை நான் போன போது (எனக்கு வயது இருபதுக்கு மேல் ஆகி இருந்தது) எங்கள் வீட்டில் ஒடிசல் மேனியும் கரு விழிகளும் உள்ள பத்து வயதுச் சிறுமி ஒருத்தியை முதல் தரம் கண்டேன். அவள் தான் ஆஸ்யா. அவள் அனுதை என்றும் ஊட்டி வளர்ப்பதற்காக — அவர் இப்படியே சொன்னுர் —தாம் அவளே எடுத்துக் கொண்டிருப்பதாகவும் தகப்பனுர் கூறினுர். நான் அவளே அவ்வளவாகக் கவனிக்கவில்லே. விலங்குக் குட்டி போன்று கூச்சமும் விரைவும் வாய்மூடித்தனமும் உள்ளவளாக இருந்தாள் அவள். என் தாயார் காலமான பிரமாண்டமான, இருண்ட அறையில் பகலில் கூட விளக்குகள் ஏற்றப்பட்டன. என் தகப்பனுருக்குப் பிடித்த இந்த அறைக்குள் நான் போனதுமே ஆஸ்யா பெரிய சோபாவுக்குப் பின்னேயோ அல்லது புத்தக அலமாரியின் பின்னேயோ பாய்ந்து மறைந்து கொண்டாள். தற்செயலாக அடுத்த மூன்று, நான்கு ஆண்டுகள் பணித்துறைப் பொறுப்புக்கள் காரணமாக நான் கிராமத்துக்குப் போவது தடைப்பட்டது. மாதந்தோறும் ஒரு சிறு கடிதம் தகப்பனுரிடமிருந்து எனக்குக் கிடைத்து வந்தது. ஆஸ்யாவைப் பற்றி அவர் எப்போதாவதுதான், அதுவும் போகிற போக்கில், குறிப்பிட்டார். அவருக்கு அப்போது ஐம்பது

வயதுக்கு மேல் ஆகி விட்டது. ஆனாலும் அவர் இன்னும் இளைஞராகத் தோற்றம் அளித்தார். இந்த நிலையில், சற்றும் எதிர்பாராத போது, காரியஸ்தனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் கிடைத்தது. தகப்பனார் நோயுற்று மரணத்தறு வாயில் இருப்பதாகவும் அவரிடம் பிரிவு சொல்லிக் கொள்ள நான் விரும்பினால் கூடிய விரைவில் வரும்படியும் அதில் எழுதியிருந்ததைக் கண்டு நான் எப்படி நிலை குலைந்து போனேன் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள். நான் குதிரையேறித் தலை தெறிக்க விரைந்தேன். தகப்பனார் இன்னும் உயிரோடு இருந்தார், ஆனால் இறுதி மூச்சுக்கள் விட்டுக் கொண்டிருந்தார். என்னைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். மெலிந்த கரங்களால் என்னைத் தழுவிக் கொண்டார். சோதித்து ஆராய்வதா, அல்லது இறைஞ்சி வேண்டுவதா என்று தெரியாத ஒருவிதப் பார்வையால் என்னை நெடுநேரம் விழி பொருந்த நோக்கிக் கொண்டிருந்தார். தமது கடைசி வேண்டுகோளை நிறைவேற்றுவதாக என்னிடம் வாக்குறுதி பெற்றுக் கொண்டு ஆஸ்யாவை அழைத்து வரும்படி தம் முதிய அந்தரங்கப் பணியாளிடம் சொன்னார். கிழவன் அவளை அழைத்து வந்தான். அவள் உடம்போடு நடுங்கினாள், நிலை கொள்ளாமல் தவித்தாள்.

'இதோ, என் மகளை—உன் தங்கையை—உன் பொறுப்பில் ஒப்படைக்கிறேன்' என்று சிரமத்துடன் சொன்னார் தகப்பனார். 'எல்லா விவரங்களையும் யாக்கோவிடம் தெரிந்து கொள்வாய்' என்று அந்தரங்கப் பணியாளைக் காட்டினார்.

''ஆஸ்யா வீரிட்டு அழுது கட்டிலில் முகங்குப்

புற விழுந்தாள்... அரை மணி நேரம் பொறுத்துத் தகப்பனாரின் உயிர் பிரிந்து விட்டது.

''நான் தெரிந்து கொண்டது இதுதான். ஆஸ்யா என் தாயாரின் அறைப் பணிப்பெண் தத்யானாவிடம் என் தகப்பனாருக்குப் பிறந்த மகள். இந்தத் தத்யானாவை எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அவளுடைய நெடிய, வடிவமைந்த மேனியையும், செப்பமான, சீரிய, அறிவார்ந்த முகத்தையும், பெரிய கரு விழிகளையும் எனக்கு நினைவு இருக்கிறது. தன்மதிப்பு உள்ள, அணுக முடியாத கன்னி என்று அவள் பெயர் பெற்றிருந்தாள். யாக்கோவின் மரியாதை நிறைந்த அரை குறைப் பேச்சிலிருந்து நான் புரிந்து கொள்ள முடிந்தபடி, தாயாரின் மரணத்துக்குச் சில ஆண்டுகளுக்குப் பிறகு தகப்பனார் தத்யானாவுடன் தொடர்பு வைத்துக் கொண்டார். அப்போது தத்யானா எஜமான் வீட்டில் வசிக்கவில்லை. கால் நடைகளை மேற்பார்த்து வந்த, தன் மணமான சகோதரியின் வீட்டில் தங்கியிருந்தாள். தகப்பனார் அவள் மேல் ஆழ்ந்த நட்பு கொண்டார். நான் கிராமத்திலிருந்து வெளியேறிய பின் அவளை மணந்து கொள்ளக் கூட விரும்பினார். ஆனால் அவர் வேண்டிக் கொண்ட பிறகும் அவள் தான் அவருக்கு மனைவியாக ஒருப்படவில்லை.

'காலஞ்சென்ற தத்யானா வசீலியெவ்னா எல்லாவற்றிலும் விவேகியாய் இருந்தார்கள்' என்று கைகளைப் பின்னே வைத்துக் கொண்டு கதவருகே நின்றபடி என்னிடம் கூறினான் யாக்கோவ். 'உங்கள் தகப்பனாரை எந்த விஷயத்திலும் புண்படுத்த அவர்கள் விரும்பவில்லை. எந்த வகையில் நான் உங்கள் மனைவி? நான் எந்த மாதிரிச் சீமாட்டி?

இப்படி அவர்கள் சொல்லி வந்தார்கள். என் எதிரில் சொன்னார்கள்.'

''தத்யானு எங்கள் வீட்டுக்குக் குடி பெயரக் கூட விரும்பவில்லை. ஆஸ்யாவோடு தன் சகோதரி வீட்டிலேயே இருந்தாள். பிள்ளைப் பருவத்தில் திருநாட்களில் மட்டுந்தான் சர்ச்சில் தத்யானுவை நான் கண்டேன். கறுப்புத் தலைக்குட்டை அணிந்து, மஞ்சள் சால்வையைத் தோள்கள்மேல் போர்த்துக் கொண்டு சன்னல் ஓரமாகக் கூட்டத்தில் நின்றாள். அவளுடைய திருத்தமான பக்கத் தோற்றம் ஒளி புகும் கண்ணாடியில் துலக்கமாகத் தெரிந்தது. பணிவுடனும் ஆழ்ந்த முறையிலும் பிரார்த்தனை செய்தாள், பழங்கால வழக்கப்படி தாழக் குனிந்து வணங்கினாள். சிற்றப்பா என்னைத் தம்மோடு அழைத்துச் சென்றபோது ஆஸ்யாவுக்கு இரண்டு வயதுதான். ஒன்பதாம் வயதில் அவள் தாயை இழந்தாள்.

''தத்யானு காலமானதும் தகப்பனார் ஆஸ்யாவைத் தம் வீட்டில் வைத்துக்கொண்டார். அவளைத் தம்மோடு வைத்து வளர்க்கும் விருப்பத்தை அவர் முன்பும் வெளியிட்டார், ஆனால் தத்யானு அதற்கு மறுத்து விட்டாள். பிரபுவின் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டபோது ஆஸ்யாவின் உள்ளத்தில் என்ன நேர்ந்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள். தனக்குப் பட்டு உடை அணிவித்து, தன் கையை எல்லோரும் முத்தமிட்ட அந்தக் கணத்தை இன்றுவரை அவளால் மறக்க முடியவில்லை. தாயார் உயிரோடு இருந்த வரை அவளை மிகவும் கண்டிப்புடன் வளர்த்து வந்தாள். தகப்பனாரிடமோ அவளுக்கு முழுச் சுயேச்சை கிடைத்தது. அவர் அவளுடைய ஆசிரியராக இருந்தார். அவரைத் தவிர வேறு யாரையும் அவள்

பார்க்கவில்லை. அவர் அவளுக்குச் செல்லம் கொடுக்கவில்லை, அதாவது சீராட்டவில்லை, ஆனால் அவளை ஆர்வத்துடன் நேசித்தார். அவளை ஒரு போதும் எதற்கும் தடை செய்யவில்லை. அவ ளுக்குத் தாம் குற்றம் இழைத்து விட்டதாகத் தமக்குள் அவர் எண்ணி வந்தார். வீட்டில் முக்கிய மான நபர் தான்தான் என்று ஆஸ்யா விரைவில் புரிந்து கொண்டாள். பிரபு தன் தகப்பனார் என அவள் தெரிந்து கொண்டாள், ஆனால் தனது இயல்பற்ற நிலைமையையும் அவ்வளவே விரை வில் அவள் கண்டு கொண்டாள். தன்மானம் அவ ளிடம் வெகுவாக வளர்ந்தது. பிறரை நம்பாமை யும் அவ்வாறே. கெட்ட பழக்கங்கள் வேரூன்றின, எளிமை மறைந்தது. தனது பிறப்பை உலகம் முழுவதும் மறக்கும்படிச் செய்ய அவள் விரும் பினாள் (ஒரு முறை அவளே என்னிடம் இதை ஒப்புக் கொண்டாள்). தன் தாயார் மேல் அவளுக்கு வெட்கம் உண்டாயிற்று, தனது வெட்கத்தைக் குறித்தும் வெட்கம் உண்டாயிற்று, தாயாரை எண்ணிப் பெருமையும் ஏற்பட்டது. அவளுடைய வயதில் அவளுக்குத் தெரியக் கூடாத பல விஷ யங்களை அவள் அறிந்திருந்தாள், அறிந்திருக் கிறாள் என்பதைக் காண்கிறீர்கள்... ஆனால் அவள் குற்றவாளியா? இளமைக்கு உரிய ஆற்றல்கள் அவளுக்குள் கிளர்ந்தன, குருதி பொங்கியது, அவளைச் சரியாக வழி நடத்தக் கூடிய ஒருவர் கூட அருகாமையில் இல்லை. எல்லாவற்றிலும் முழுச் சுதந்திரம்! இதைத் தாங்குவது எளிதா? மற்றப் பிரபு வம்சப் பெண்களுக்குத் தான் குறைந்து போய்விடக் கூடாது என்று அவள் விரும் பினாள். புத்தகங்களில் ஆர்வத்துடன் ஈடுபட் டாள். இதனால் முறையான பயன் என்ன விளைந்

திருக்க முடியும்? சரியற்ற விதத்தில் தொடங்கிய வாழ்க்கை சரியற்ற விதத்திலேயே அமைந்தது. ஆனாலும் அவளுடைய இதயம் கெடவில்லை, மூளை பிழைத்து விட்டது.

''இவ்வாறு, இருபது வயது இளைஞன் ஆகிய நான், பதின்மூன்று வயதுச் சிறுமிக்குப் பொறுப் பாளி ஆனேன்! தகப்பனாரின் மரணத்துக்குப் பிறகு ஆரம்ப நாட்களில் என் குரல் ஒலி ஒன்றைக் கேட்டதும் அவளுக்குக் காய்ச்சல் வந்து விட்டது. என்னுடைய கொஞ்சல்கள் அவளுக்கு ஏக்கம் உண்டாக்கின. கொஞ்சம் கொஞ்சமாகத்தான், நாளடைவில் அவள் எனக்குப் பழகினாள். பிற் பாடு, நான் அவளைத் தங்கையாக உண்மையில் ஏற்றுக் கொள்கிறேன், உடன்பிறப்பாக மதித்து அவளை நேசிக்கிறேன் என்பது அவளுக்கு உறுதிப் பட்டதுமோ, அவள் ஆர்வத்துடன் என்மேல் அன்பு செலுத்தத் தொடங்கினாள். அவளிடம் எந்த ஓர் உணர்வும் அரைகுறையானதாக இருப்ப தில்லை.

''நான் அவளைப் பீட்டர்ஸ்பர்குக்கு அழைத்து வந்தேன். அவளை விட்டுப் பிரிய எனக்கு எவ் வளவுதான் வருத்தமாய் இருந்தாலும் அவளோடு சேர்ந்து வசிப்பது எனக்கு எந்த வகையிலும் இய லாததாக இருந்தது. தங்கவும் சாப்பிடவும் வசதி உள்ள சிறப்பான பள்ளி ஒன்றில் அவளைச் சேர்த் தேன். நாங்கள் பிரிவது இன்றியமையாதது என்பதை ஆஸ்யா புரிந்து கொண்டாள். ஆனால் தொடக்கத்தில் அவள் நோய்வாய்ப்பட்டு அனேகமாகச் சாகத் தெரிந்தாள். பிறகு பழகி விட்டாள். விடுதிப் பள்ளியில் நான்கு ஆண்டுகள் தங்கிப் படித்து முடித்தாள். ஆனால், நான் எதிர் பார்த்ததற்கு மாறாக, முன்பு எப்படி இருந்தாளோ

கிட்டத்தட்ட அப்படியே இருந்தாள். விடுதிப் பள்ளித் தலைவி அவளைப் பற்றி என்னிடம் அடிக் கடி குறை கூறினாள். ''இவளைத் தண்டிக்கவும் முடியவில்லை, அன்புக்கும் இவள் மசிய மாட்டேன் என்கிறாள்'' என என்னிடம் சொன்னாள் அவள். ஆஸ்யா அசாதாரணமான புரியும் திறன் பெற்றிருந்தாள், அருமையாக, எல்லோரையும் விடச் சிறப்பாகப் படித்தாள்.ஆனால் பொது அளவு மானத்துக்குப் பொருத்தமாய் இருக்க அவள் விரும்பவில்லை. முரண்டு பிடித்தாள், உம்மணா மூஞ்சியாக வளையவந்தாள்... அவளை அதிகமாகக் குறை சொல்ல எனக்கு முடியவில்லை. அவளுடைய நிலைமையில் அவள் ஒன்று எல்லோருக்கும் பணி விடை செய்து அவர்களுடைய பிரியத்தைச் சம் பாதிக்க வேண்டும், இல்லாவிட்டால் கூசி விலக வேண்டும். தன் தோழிகள் எல்லோரிலும் அழ கற்றவளும் உழைத்துக் களைத்துப் போனவளும் ஏழையுமான ஒரு பெண்ணுடன் மட்டுந்தான் அவள் நட்பு பாராட்டி வந்தாள். அவள் கூடப் படித்தவர்களும் பெரும்பாலும் நல்ல குடும்பங் களைச் சேர்ந்தவர்களுமான மற்றப் பிரபுவம்ச மகளிர் அவளை நேசிக்கவில்லை, முடிந்த விதத்தில் எல்லாம் புண்படுத்தியும் குத்திக் காட்டியும் வந் தார்கள். ஆஸ்யா அவர்களுக்கு அறவே விட்டுக் கொடுக்கவில்லை. ஒரு நாள் இறை நியமங்கள் பற்றிய வகுப்பில் கெட்ட வழக்கங்களைப் பற்றி ஆசிரியர் பேசலுற்றார். ''இச்சகமும் பேடித்தன மும் எல்லாவற்றிலும் மோசமான கெட்ட வழக் கங்கள்'' என்று உரக்கச் சொன்னாள் ஆஸ்யா. சுருங்கக் கூறினால், அவள் தொடர்ந்து தன் வழி யில் நடந்தாள். அவளுடைய பழகு முறைகள் மட்டுந்தான் திருந்தி இருக்கின்றன. ஆனால்

இந்த நோக்கிலும் அவள் மிகவும் முன்னேறி விடவில்லை என்று தோன்றுகிறது.

''முடிவில் அவளுக்குப் பதினேழு வயது நிறைந்தது. விடுதிப் பள்ளியில் அதற்கு மேல் தங்கி இருப்பது அவளுக்கு முடியவில்லை. நான் கணிசமாகப் பெருத்த இடர்ப்பாட்டில் இருந்தேன். இராணுவப் பணியிலிருந்து ஒய்வு பெற்று வெளி நாடுகளில் ஓரிரண்டு ஆண்டுகள் சுற்றுவது, ஆஸ்யாவை உடன் அழைத்துப் போவது என்ற அருமையான எண்ணம் எனக்கு உதித்தது. எண்ணம் செயல் ஆயிற்று. விளைவாக நாங்கள் ரைன் ஆற்றின் கரையில் இருக்கிறோம். இங்கே நான் ஓவியக் கலையைப் பயில முயன்று கொண்டிருக்கிறேன். அவள்... முன்போலவே குறும்பும் வேடிக்கையும் செய்து கொண்டிருக்கிறாள். இப்போது நீங்கள் அவளை மட்டுமீறிய கண்டிப்புடன் மதிப்பிட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். தனக்கு எதுவும் ஒரு பொருட்டில்லை என்பது போல அவள் நடித்தாலும் ஒவ்வொருவருடைய கருத்தையும்—உங்கள் கருத்தையோ, சிறப்பாக—மதிக்கிறாள்.''

இவ்வாறு கூறி, தன் வழக்கப்படி அமைதியாகப் புன்னகைத்தான் காகின். நான் அவனுடைய கையை உறுதியாகப் பற்றி அழுத்தினேன்.

''எல்லாம் சரி'' என்று மறுபடி பேசத் தொடங்கினான் காகின். ''ஆனால் இவளோடு எனக்குப் படு சங்கடமாய் இருக்கிறது. வெடி மருந்து இவள், மெய்யாக. இதுவரை இவளுக்கு ஒருவர் மீதும் அன்பு ஏற்படவில்லை, ஆனால் இவள் யாரையாவது காதலித்தாளோ, ஆபத்து! இவளோடு எப்படி நடந்து கொள்வது என்று சில வேளைகளில் எனக்குத் தெரியவில்லை. சில நாட்களுக்கு முன்பு இவள் என்ன செய்தாள் தெரியுமோ? இவளிடம்

நான் முன்னைவிடப் பராமுகமாய் இருப்பதாகவும் என் ஒருவனை மட்டுமே இவள் நேசிப்பதாகவும் ஆயுள் முழுவதும் என் ஒருவனையே நேசிக்கப் போவதாகவும் எனக்கு உறுதி கூறினுள்... இப்படிச் சொல்லி, விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்...''

''ஓகோ, அப்படியா சேதி...'' என்று சொல்ல வாய் எடுத்தவன், நாக்கைக் கடித்துக் கொண்டேன்.

''ஒன்று சொல்லுங்கள்'' என்று காகினிடம் கேட்டேன்—நாங்கள் ஒளிவு மறைவு இல்லாமல் பேசிக் கொள்ளத் தொடங்கி இருந்தோம்—''இன்று வரை அவளுக்கு ஒருவர் மேலும் உண்மையாக அன்பு விழவில்லையா என்ன? பீட்டர்ஸ் பர்கில் இளைஞர்களை அவள் பார்க்கத் தானே செய்தாள்?''

''அவர்களைத்தான் அவளுக்கு அறவே பிடிக்க வில்லை. இல்லை, ஆஸ்யாவுக்கு வேண்டியவன் வீரன், அசாதாரண மனிதன்—அல்லது மலைக் கணவாயில் திரியும் கவர்ச்சியான தோற்றமுள்ள மேய்ப்பன். ஆனுல் நான் உங்களோடு வளவளவென்று பேசி உங்களைச் சுணக்கப்படுத்தி விட்டேன்'' என்று கூறி எழுந்தான்.

''கேளுங்கள், உங்கள் இருப்பிடத்துக்குப் போவோம். எனக்கு வீட்டுக்குப் போக விருப்பம் இல்லை'' என்றேன்.

''அப்படியானுல் உங்கள் வேலை?''

நான் பதில் ஒன்றும் பேசவில்லை. காகின் நல்லியல்போடு வாய்க்குள் சிரித்துக் கொண்டான். நாங்கள் ல. சிற்றூர் திரும்பினோம். பழக்கமான கொடி முந்திரித் தோட்டத்தையும் மலை உச்சியில் வெள்ளைக் கட்டிடத்தையும் பார்த்த நான் ஒரு

வகை இனிமையை உணர்ந்தேன். அதுவும் இந்த இனிமை நெஞ்சில் ஏற்பட்டது: யாரோ பேசாமல் அதில் தேனை நிறைத்து விட்டது போல. காகின் சொன்ன கதையைக் கேட்ட பிறகு எனக்கு ஆறுதலாக இருந்தது.

வீட்டு வாயிலில் ஆஸ்யா எங்களை எதிர்கொண்டாள். நான் சிரிப்பை மறுபடி எதிர்பார்த்தேன். ஆனால் அவள் முற்றிலும் வெளிறிய முகமும் தாழ்த்திய விழிகளுமாக ஒன்றும் பேசாமல் எங்களை வரவேற்க வந்தாள்.

''இதோ இவர் மறுபடி வந்திருக்கிறார். ஒன்று தெரிந்து கொள். இவராகவே திரும்ப திரும்பினார்'' என்றான் காகின்.

ஆஸ்யா கேள்விக் குறியுடன் என்னை நோக்கினாள். என் முறைக்கு நான் அவள் பக்கம் கையை நீட்டி, அவளுடைய குளிர்ந்த விரல்களை இந்தத் தடவை உறுதியாகப் பற்றி அழுத்தினேன். அவள் மேல் எனக்கு மிகுந்த இரக்கம் உண்டாயிற்று. முன்பு எனக்கு விளங்காமல் இருந்த அவளுடைய பல தன்மைகளை இப்போது நான் புரிந்து கொண்டேன். அவளுடைய மன அமைதியின்மை, தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமை, பகட்டும் ஆசை—எல்லாம் எனக்குத் தெளிவாயின. இந்த உள்ளத்தை நான் எட்டிப் பார்த்தேன்: மறைமுக வேதனை அதை ஓயாமல் நசுக்கிக் கொண்டிருந்தது. அனுபவம் இல்லாத தன்மானம் கலவரத்துடன் தடுமாறி மோதிக் கொண்டிருந்தது, ஆனால் அவளுடைய இயல்பு அனைத்தும் உண்மையை நாடி விரைந்து கொண்டிருந்தது. இந்த

விந்தைச் சிறுமி என்னை எதனுல் வசீகரித்தாள் என்பதை நான் புரிந்து கொண்டேன். அவளுடைய மெல்லிய மேனி முழுவதிலும் ஊறித் ததும்பிய அரை முரட்டு வனப்பு ஒன்றிஞல் மட்டும் அவள் என்னை ஈர்க்கவில்லை. அவளுடைய உள்ளம் எனக்குப் பிடித்திருந்தது.

காகின் தன் படங்களைப் புரட்டிப் பார்த்து ஒழுங்குபடுத்துவதில் முனைந்தான். முந்திரித் தோட்டத்தில் என்னேடு உலாவ வரும்படி ஆஸ் யாவை நான் அழைத்தேன். குதூகலமும் அனேக மாகக் கீழ்ப்படிவும் உள்ள முழு விருப்புடன் அவள் அக்கணமே இசைந்தாள். நாங்கள் மலையில் பாதி வரை இறங்கி அகலமான கற்பாளத்தின் மேல் உட்கார்ந்தோம்.

''நாங்கள் இல்லாமல் உங்களுக்குச் சலிப் பாய் இருக்கவில்லையா?'' என்று தொடங்கிஞள் ஆஸ்யா.

''உங்களுக்கும் நான் இல்லாமல் சலிப்பாய் இருந்ததோ?'' என்று கேட்டேன் நான்.

ஆஸ்யா பக்கவாட்டில் என்னை நோக்கிஞள்.

''ஆமாம்'' என்று விடையளித்து விட்டு உட னேயே தொடர்ந்தாள்: ''மலைகளில் நன்ருய் இருக்கிறதா?' அவை உயரமானவையோ? மேகங் களை விட உயரமானவையோ? நீங்கள் என்ன பார்த்தீர்கள் என்று எனக்கு விவரமாகச் சொல் லுங்கள். அண்ணனுக்குச் சொல்லிக் கொண்டிருந் தீர்கள், ஆனுல் நான் ஒன்றையும் கேட்கவில்லை.''

''உங்களுக்குத்தான் வெளியே போக விருப் பம் வந்து விட்டதே'' என்றேன்.

''நான் வெளியே போனது... எதனுல் என் ருல்... இனிமேல் அப்படிப் போக மாட்டேன்'' என்று கூறிவிட்டு, குரலில் நம்பிக்கை நிறைந்த

அன்பு தொனிக்க, ''இன்று நீங்கள் கோபம் கொண்டிருந்தீர்கள்'' என்ருள்.

''நான?''

''ஆமாம், நீங்கள்.''

''எதனல், தயை செய்து சொல்லுங்கள்...''

''தெரியாது, ஆனல் நீங்கள் கோபம் கொண்டிருந்தீர்கள், கோபத்தோடு வெளியே போனீர்கள். நீங்கள் அப்படிப் போனது எனக்கு நிரம்ப வருத்தமாய் இருந்தது. நீங்கள் திரும்பி வந்ததில் எனக்கு மகிழ்ச்சி.''

''திரும்பி வந்ததில் எனக்குந்தான் மகிழ்ச்சி'' என்று நான் கூறினேன்.

குழந்தைகள் சந்தோஷப்படும் போது அடிக்கடி செய்வது போலத் தோள்களைக் குலுக்கினாள் ஆஸ்யா.

''ஓ, என்னல் ஊகிக்க முடியுமே!'' என்று பேச்சைத் தொடர்ந்தாள். ''சில சமயங்களில் பக்கத்து அறையில் அப்பாவின் இருமலை மட்டும் கேட்டு அவர் என்னிடம் திருப்தி கொண்டிருக்கிருரா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்வேன்.''

அன்று வரை ஆஸ்யா என்னிடம் தன் தகப்பனரைப் பற்றிச் சொன்னதே இல்லை. இது எனக்கு வியப்பாய் இருந்தது.

''உங்கள் தகப்பனரை நீங்கள் நேசித்தீர்களா?'' என்று கேட்ட நான் என் முகம் சிவப்பதை பெருத்த எரிச்சலுடன் உணர்ந்தேன்.

அவள் பதில் எதுவும் சொல்லாமல் தானும் முகம் சிவந்தாள். நாங்கள் இருவரும் பேசாதிருந்தோம். தூரத்தில் ரைன் ஆற்றில் நீராவிக் கப்பல் புகை உமிழ்ந்தவாறு விரைந்தது. நாங்கள் அதைப் பார்க்க முற்பட்டோம்.

''நீங்கள் ஏன் பயண விவரங்களைச் சொல்ல மாட்டேன் என்கிறீர்கள்?'' என்று கிசுகிசுத்தாள் ஆஸ்யா.

''இன்றைக்கு என்னைக் கண்டதுமே நீங்கள் வாய்விட்டுச் சிரித்தீர்களே, ஏன்?'' என்று கேட்டேன்.

''நானே அறியேன். சில வேளைகளில் எனக்கு அழுகை வருகிறது, ஆனால் நான் சிரிக்கிறேன். நான் செய்வதைக் கொண்டு... நீங்கள் என்னை மதிப்பிடக் கூடாது. ஆமாம், லரேலியா* பற்றிய செவிவழிக் கதை என்ன? அதோ தெரிவது அவளுடைய பாறைதானே? அவள் முதலில் எல்லோரையும் மூழ்கடித்து வந்தாளாம், ஆனால் காதல் கொண்டதும் தானே நீரில் குதித்து விட்டாளாம். இந்தக் கதை எனக்குப் பிடித்திருக்கிறது. பிராவு லுயிஸே எனக்கு எல்லா விதக் கதைகளும் சொல்லுகிறாள். பிராவு லுயிஸேயிடம் பச்சைக் கண்கள் உள்ள கறுப்புப் பூனை ஒன்று இருக்கிறது...''

ஆஸ்யா தலையை நிமிர்த்தி குழல் கற்றைகளை உதறினாள்.

''ஆகா, எனக்குச் சந்தோஷமாய் இருக்கிறது'' என்றாள்.

துணுக்குகளான ஒரு சீரான ஒலிகள் அந்தக் கணத்தில் எங்கள் காதுகளுக்கு எட்டின. பிரார்த்

---

* லரேலியா பற்றிய செவிவழிக் கதை பல காவியங்களுக்கு ஆதாரமாக விளங்குகிறது. இவை யாவன: ஜெர்மன் கவிஞர் க. பிரென்டானோ (1778—1842) இயற்றிய ''கோட்வி'' என்னும் நாவலில் வரும் கதைப் பாட்டு, ஜெர்மன் கவிஞர் ஹைனேயின் ''மீண்டும் தாயகத்தில்'' வரிசையில் இரண்டாவது செய்யுள் (1823) முதலியன. லரேலியா பற்றிய கதை வழிகாட்டி நூல்களில் திருப்பிக் கூறப்பட்டது.

தனைப் பாடலை நூற்றுக் கணக்கான குரல்கள் ஒன்ருக, தாளப்படி திருப்பிப் பாடின. வழிபடு வோரின் கூட்டம் சிலுவைகளும் கொடிச் சின்னங் களும் ஏந்தியவாறு கீழே சாலையில் போய்க் கொண்டிருந்தது...

''இவர்களோடு போனல் நன்ருய் இருக்கும்'' என்று குரல்களின் வர வரத் தணிந்த ஆர்ப்பரிப் பைச் செவி மடுத்தவாறு சொன்னுள் ஆஸ்யா.

''நீங்கள் அவ்வளவு தெய்வ நம்பிக்கை உள்ள வர்களா?''

''எங்கேயாவது தூரத்துக்கு, வழிபாட்டுக் காகவோ கடினமான அருஞ் செயலுக்காகவோ போனல் நல்லது. இல்லாவிட்டால் நாட்கள் கழிந்து கொண்டு போகின்றன, வாழ்க்கை கழி கிறது, நாமோ, என்ன செய்கிருேம்?'' என்ருள் அவள்.

''நீங்கள் புகழ் வேட்கை உள்ளவர்கள்'' என் றேன் நான். ''வீணுக வாழ நீங்கள் விரும்பவில்லை. உங்களுக்குப் பின் தடத்தை விட்டுச் செல்ல விரும்புகிறீர்கள்...''

''இது நடக்கக் கூடாததா என்ன?''

''நடக்கக் கூடாதது'' என்று சொல்ல வாய் எடுத்தேன், ஆனல் அவளுடைய ஒளி சுடர்ந்த விழிகளைக் கண்டதும் இதை மட்டும் சொல்லி நிறுத்தினேன்:

''முயன்று பாருங்கள்.''

ஆஸ்யா சிறிது நேரம் பேசாதிருந்தாள். அதற் குள் வெளிறியிருந்த அவளுடைய முகத்தில் இதற் கிடையே ஒரு வகையான நிழல்கள் படர்ந்தன. ''சொல்லுங்கள்'' என்று பின்னர் பேச்சைத் தொடங்கினுள். ''உங்களுக்கு மிகவும் பிடித்திருந் தாளோ அந்தப் பெண்மணி... நாம் அறிமுகமான

இரண்டாம் நாள், இடிபாடுகளில் அவளுடைய உடல் நலத்துக்காக அண்ணன் பீர் பருகினனே, நினைவு இருக்கிறதா?''

நான் உரக்கச் சிரித்தேன்.

''உங்கள் தமையனர் கேலி செய்தார். எனக்கு எந்த ஒரு பெண்மணியும் பிடித்திருக்கவில்லை, குறைந்த பட்சம் இப்போது எந்த ஒருத்தியும் எனக்குப் பிடிக்கவில்லை.''

களங்கமற்ற ஆவலுடன் தலையைச் சாய்த்து, ''பெண்களிடம் உங்களுக்கு எது பிடிக்கிறது?'' என்று வினவினள் ஆஸ்யா.

''எத்தகைய விந்தையான கேள்வி!'' என்றேன் நான்.

ஆஸ்யா சிறிது குழப்பம் அடைந்தாள்.

''இந்த மாதிரிக் கேள்வியை நான் உங்களிடம் கேட்டிருக்கக் கூடாது, அல்லவா? என்னை மன்னியுங்கள். மனதில் தோன்றுவதை எல்லாம் உளறிக் கொட்டப் பழகி விட்டேன். அதனல்தான் பேசவே அஞ்சுகிறேன்.''

''பேசுங்கள் தாராளமாக, அஞ்சாதீர்கள்'' என்று அவளை உற்சாகப் படுத்தினேன். ''நீங்கள் கூசிக் குறுகுவதைக் கடைசியில் நிறுத்தி இருக்கிறீர்களே, அதனல் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகிறது.''

ஆஸ்யா தலையைத் தாழ்த்தி, மெல்லென, இயல்பான சிரிப்பு சிரித்தாள். அவள் அந்த மாதிரிச் சிரித்து நான் கண்டதில்லை.

உடை விளிம்புகளைச் சீர்படுத்தி, நிரம்ப நேரம் உட்கார்ந்திருக்கப் போகிறவள் போன்று கால்கள் மேல் பரப்பிக் கொண்டு, ''சொல்லுங்களேன்'' என்று பேச்சைத் தொடர்ந்தாள். ''பயண விவரங்களைச் சொல்லுங்கள், அல்லது

எதையாவது உரக்கப் படியுங்கள். 'அனேகின்' காவியத்தின் பகுதிகளை எங்களுக்குப் படித்துக் காட்டினீர்களே, நினைவு இருக்கிறதா, அது போல...''

அவள் திடீரென்று சிந்தனையில் ஆழ்ந்தாள்...

''என்றன் ஏழைத் தாயின் கல்லறை, மேல்
இன்றெங்கே சிலுவையும் கிளை நிழலும்!*''

என்று துணிந்த குரலில் செய்யுள் படித்தாள்.

''பூஷ்கினின் கவிதையில் இப்படி இல்லை' என்றேன்.

''தத்யானுவாய்** இருக்க எனக்கு ஆசை'' என்று அதே சிந்தனையில் ஆழ்ந்த தோரணையில் சொல்லிக் கொண்டு போனாள் ஆஸ்யா. ''சொல்லுங்கள்'' என்று உற்சாகமாகத் தூண்டினாள்.

ஆனால் நான் கதை சொல்லும் மன நிலையில் இருக்கவில்லை. நான் அவளை ஆர்வத்துடன் நோக்கினேன். அவளுடைய மேனி முழுதும் வெயிலொளியில் முழுக்காடிக் கொண்டிருந்தது. அவள் முழு அமைதியும் பணிவும் அடைந்திருந்தாள். எங்களைச் சுற்றிலும், கீழேயும் எங்களுக்கு மேலேயும் எல்லாம்—வானும் தரையும் நீரும்—மகிழ்ச்சியுடன் ஒளி சுடர்ந்தன. காற்று கூட ஒளியால் நிறைந்து ததும்புவது போன்று தோன்றியது.

''எவ்வளவு நன்றாய் இருக்கிறது, பாருங்கள்!''

---

* ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கின் (1799—1837) இயற்றிய ''யெவ்கேனி அனேகின்'' என்னும் காவிய நவீனத்தின் வரிகள் இவை. பூஷ்கினின் சொற்கள் என் ஏழைச் செவிலியின் என்பவை (அத்தியாயம் 8, வரி 16).

** தத்யானா—அ. பூஷ்கினின் ''யெவ்கேனி அனேகின்'' காவிய நவீனத்தினுடைய கதாநாயகி.

என்று என்னை அறியாமலே குரலைத் தாழ்த்திக் கூறினேன்.

''ஆம், நன்றாய் இருக்கிறது!'' என்று என்னைப் பார்க்காமல் அவளும் தணிந்த குரலில் விடையிறுத்தாள். ''நீங்களும் நானும் பறவைகளாய் இருந்தால் எப்படி உயரே கிளம்பி இருப்போம், எப்படிப் பறந்திருப்போம்... இந்த நீலத்தில் அப்படியே மூழ்கி இருப்போம்... ஆனால் நாம் பறவைகள் அல்லவே.''

''நமக்குச் சிறகுகள் முளைக்கக் கூடும்'' என்று மறுத்துரைத்தேன்.

''அது எப்படி?''

''நேரம் வரும்போது தெரிந்து கொள்வீர்கள். நம்மைத் தரையிலிருந்து உயரே தூக்கிச் செல்லும் உணர்ச்சிகள் உள்ளன. கவலைப்படாதீர்கள். நமக்கும் சிறகுகள் முளைக்கும்.''

''உங்களுக்கு முளைத்தனவா?''

''எப்படி உங்களுக்குச் சொல்லுவது?.. இன்றுவரை நான் பறந்தது இல்லை போலும்!''

ஆஸ்யா மறுபடி சிந்தனையில் ஆழ்ந்தாள். நான் அவள் பக்கம் சற்றே சாய்ந்தேன்.

''உங்களுக்கு வால்ட்ஸ் நடனம் ஆட வருமா?'' என்று திடீரெனக் கேட்டாள்.

''வரும் என்று ஓரளவு விளங்காமையுடன் கூறினேன்.

''அப்படியானால் வாருங்கள், போவோம், வாருங்கள்... வால்ட்ஸ் மெட்டை வாசிக்கும்படி அண்ணனைக் கேட்கிறேன்... நாம் பறப்பதாகவும் நமக்கு இறக்கைகள் முளைத்து விட்டதாகவும் கற்பனை செய்து கொள்வோம்.''

அவள் வீட்டுக்கு ஓடினாள். நான் அவள் பின்னே ஓடினேன். சில விநாடிகள் சென்றதும்,

லான்னெரின் இனிய இசை ஒலிகளுக்கு இணங்க நெரிசலான அறையில் நாங்கள் சுற்றியாடிஞேம். ஆஸ்யா அழகாக, உற்சாகத்துடன் நடனம் ஆடிஞள்... அவளது கன்னிமைக்குரிய கண்டிப்பான முக அமைப்பின் ஊடாக மென்மையும் பெண்மையும் திகழ்ந்த ஒரு தோற்றம் தென்பட்டது. அவளுடைய மெல்லிடையின் ஸ்பரிசத்தை என் கரம் அப்புறம் நெடு நேரம் உணர்ந்து கொண்டிருந்தது; அவளுடைய அணித்தான விரைந்த மூச்சு நெடு நேரம் எனக்குக் கேட்டுக் கொண்டிருந்தது; கூந்தல் சுருள்கள் விளையாட்டாகச் சிதறி இருந்த வெளிறிய, ஆனுல் உற்சாகம் ததும்பிய முகத்தில் அனேகமாக மூடியிருந்த அசைவற்ற கரு விழிகள் நெடு நேரம் எனக்குக் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

## 10

அன்றைய நாள் முழுவதும் மிக மிக நன்ருகக் கழிந்தது. நாங்கள் குழந்தைகள் போலக் கும்மாளம் அடித்தோம். ஆஸ்யா மிகுந்த இனிமையும் எளிமையும் கொண்டு திகழ்ந்தாள். அவளைப் பார்த்து மகிழ்ந்தான் காகின். நான் நேரம் தாழ்த்து வீட்டுக்குப் புறப்பட்டேன். ரைன் ஆற்றின் நடுவை அடைந்ததும் படகைப் பெருக்கின் போக்கில் விடும்படி பரிசல்காரனைக் கேட்டுக் கொண்டேன். கிழவன் துடுப்புக்களைத் தூக்கிவிட்டான். பேராறு எங்களை இழுத்துச் சென்றது. சுற்றிலும் கண்ணேட்டி, செவிமடுத்து, நினைவு கூர்ந்த நான் நெஞ்சில் மர்மமான அமைதியின் மையை உணர்ந்தேன்... விழிகளை வானத்தின் பக்கம் உயர்த்தினேன், ஆனுல் வானத்திலும் அமைதி

இல்லை: தாரகைகள் புள்ளியிட்டிருந்த வானம் அசைந்தது, இயங்கியது, அதிர்ந்தது; நான் ஆற்றின் புறம் குனிந்தேன்... ஆனால் அங்கேயும், இருண்டு குளிர்ந்த அந்த ஆழத்திலும், விண்மீன்கள் அசைந்தாடின, நடுங்கின. கலவரம் நிறைந்த உயிர்ப்பு சுற்றிலும் எனக்குப் புலப்பட்டது. எனக்கு உள்ளேயும் கலவரம் மிகுந்தது. நான் படகின் விளிம்பில் முழங்கைகளை ஊன்றிக் கொண்டேன்... காதுகளில் காற்றின் கிசுகிசுப்பும் படகின் பின்னே நீரின் களகளப்பும் எனக்கு நரம்புக் கிளர்ச்சி உண்டாக்கின. அலைகளின் சில்லென்ற மூச்சு என்னைக் குளிர்விக்கவில்லை. கரையில் அன்றில் பறவை இசைக்கத் தொடங்கி, தன் ஒலிகளின் இனிய நஞ்சை எனக்கு ஊட்டியது. என் விழிகளில் கண்ணீர் ஊற்றெடுத்துப் பொங்கியது. ஆனால் இது நோக்கம் அற்ற பேருவகை காரணமாகப் பெருகிய கண்ணீர் அல்ல. நான் உணர்ந்தது அண்மையில் நான் அனுபவித்த, எல்லாவற்றையும் உள்ளடக்கிய, தெளிவற்ற விருப்பம் அல்ல. அத்தகைய விருப்பம் ஏற்படும் போது உள்ளம் விசாலமாகி ஒலிக்கும், தான் எல்லாவற்றையும் புரிந்து கொள்வதாகவும் எல்லாவற்றையும் நேசிப்பதாகவும் அதற்குத் தோன்றும்... இல்லை! எனக்குள் மூண்டது இன்ப வேட்கை. அதற்கு உரிய பெயரால் அதைக் குறிப்பிட நான் இன்னும் துணியவில்லை. ஆனால் இன்பம், தெவிட்டத் தெவிட்ட அனுபவிக்கும் இன்பம்தான் நான் விரும்பியது, இதற்காகத் தான் நான் ஏங்கித் துடித்தேன்... படகோ, மேலே மேலே மிதந்து போய்க் கொண்டிருந்தது. பரிசல்காரக் கிழவன் துடுப்புக்களுக்கு மேலே சாய்ந்தவாறு உட்கார்ந்து உறங்கி வழிந்து கொண்டிருந்தான்.

## 11

மறுநாள் காகின் வீட்டுக்குப் புறப்பட்ட போது ஆஸ்யா மீது காதல் கொண்டிருக்கிறேனு இல்லையா என்று நான் என்னைக் கேட்டுக் கொள்ள வில்லை. ஆனால் அவளைப் பற்றி நிறைய எண்ணமிட் டேன். அவளுடைய வருங்காலத்தில் எனக்கு அக் கறை ஏற்பட்டது. எங்கள் எதிர்பாரா நெருக்கத் தால் நான் மகிழ்ந்தேன். தலைக்குநாள் முதல்தான் நான் அவளைத் தெரிந்து கொண்டேன் என்று உணர்ந்தேன். அது வரை அவள் என்னிடமிருந்து திரும்பிக் கொண்டிருந்தாள். ஆனல், கடைசியாக அவள் தன்னை எனக்குக் காட்டிய போது எத்த கைய உளங்கவரும் ஒளியால் அவளுடைய உருவம் சுடர்ந்தது, அது எனக்கு எவ்வளவு புதியதாக இருந்தது, ஈர்ப்பாற்றலின் எத்தனை மர்மங்கள் அதற்குள் கூச்சத்துடன் மிளிர்ந்தன!..

வெண்மையாகப் பளிச்சிட்ட வீட்டைத் தொலைவிலிருந்து கண்கொட்டாமல் நோக்கிய வாறு பழக்கமான பாதையில் உற்சாகத்துடன் நடந்தேன். வருங்காலத்தைப் பற்றி மட்டும் அல்ல, மறு நாளைப் பற்றியே நான் நினைக்கவில்லை. என் உள்ளத்தில் மகிழ்ச்சி அலை மோதிக் கொண் டிருந்தது.

நான் அறைக்குள் போனதும் ஆஸ்யா முகம் சிவந்தாள். அவள் மறுபடி பகட்டாக உடை அணிந்து சிங்காரித்துக் கொண்டிருந்ததைக் கவ னித்தேன், ஆனல் அவளுடைய முகத்தோற்றம் அவளது அலங்காரத்துக்குப் பொருந்தவில்லை. அதில் ஏக்கம் ததும்பியது. நானோ, எவ்வளவோ மகிழ்ச்சிப் பெருக்குடன் வந்திருந்தேன்! தன் வழக்கப் படி ஓடிப்போய் விட அவள் விரும்பியதாகவும்

கடு முயற்சியுடன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு உட்கார்ந்திருந்ததாகவும் கூட எனக்குத் தோன்றியது. மேம்போக்குக் கலைஞர்களின் சொற்படி ''இயற்கையின் வாலைப் பிடிக்கத்'' தங்களுக்கு வாய்த்து விட்டதாக அவர்கள் எண்ணிக் கொள்ளும் பொழுது நோயின் தாக்குதல் போல அவர்களைத் திடீரென்று ஆட்கொள்ளும் கலை உற்சாகமும் வெறியும் பொங்கும் தனிப்பட்ட மன நிலையில் இருந்தான் காகின். சட்டத்தில் விரைப்பாகப் பொருத்திய கித்தான் திரைக்கு முன்னே ஒரே பம்பையாக, மேலெல்லாம் வண்ணக் கறைகளுடன் நின்று கொண்டிருந்தான் அவன். திரையைத் தூரிகையால் அகலமான வீச்சுடன் சுட்டியவாறு கிட்டத்தட்டக் கொடூரமாகத் தலையசைத்து எனக்குச் சைகை செய்து விட்டு, பின்னே நகர்ந்து, கண்களைச் சுரித்து, தன் படத்தின் மேல் மறுபடி பாய்ந்தான். அவனுக்கு இடைஞ்சல் செய்ய விரும்பாமல் நான் ஆஸ்யாவின் அருகில் உட்கார்ந்தேன். அவளுடைய கரு விழிகள் மெதுவாக என் பக்கம் திரும்பின.

''நீங்கள் நேற்றைக்கு இருந்தது போல இன்றைக்கு இல்லை'' என்று அவள் உதடுகளில் புன்னகையை வருவிக்க வீணாக முயன்ற பிறகு கூறினேன்.

''இல்லை, நேற்றுப் போல இல்லை'' என்று கம்மிய குரலில் நிதானமாகச் சொன்னாள் அவள். ''ஆனால் இது ஒன்றும் இல்லை. நான் மோசமாகத் தூங்கினேன். இரவு முழுவதும் சிந்தனை செய்து கொண்டிருந்தேன்.''

''எதைப் பற்றி?''

''அட நான் எத்தனையோ விஷயங்களைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன். குழந்தைப்

பருவம் முதலே இது என் வழக்கம். அம்மாவோடு இருந்தேனே, அந்தக் காலந்தொட்டே...''

இந்தச் சொல்லை அவள் சிரமத்துடன் உச்சரித்தாள், பின்பு மீண்டும் ஒரு முறை திருப்பிச் சொன்னாள்:

''அம்மாவோடு இருந்தேனே, அப்போது... நான் நினைத்தேன், தனக்கு என்ன நேரும் என்று தெரிந்து கொள்ள ஒருவராலும் முடியவில்லையே, இது ஏன்; சில சந்தர்ப்பங்களில் விபத்தைக் கண்டும் தப்பித்துக் கொள்ள முடிவதில்லை; தவிர, முழு உண்மையையும் சொல்வது ஒருகாலும் முடிகிறதில்லையே, ஏன்?.. அப்புறம் நினைத்தேன், எனக்கு ஒன்றுமே தெரியாது, நான் கற்றுக் கொள்வது தேவை என்று. என்னை மறுபடி போதித்துப் பயிற்ற வேண்டும். நான் மிக மோசமாகப் பயிற்றி வளர்க்கப்பட்டிருக்கிறேன். எனக்குப் பியானோ வாசிக்கத் தெரியாது, படம் வரையவராது, நான் தைப்பது கூட மோசமாகத்தான். என்னிடம் எந்த விதமான திறமையும் இல்லை. என்னோடு இருப்பது மிகவும் சலிப்பாய் இருக்க வேண்டும்.''

''நீங்கள் உங்களுக்கு அநியாயம் செய்கிறீர்கள்' என்று நான் மறுத்துரைத்தேன். 'நீங்கள் நிறையப் படித்திருக்கிறீர்கள், நீங்கள் உயர் கல்வி பெற்றவர், தவிர உங்கள் அறிவுக் கூர்மையுடன்...''

''நான் என்ன, அறிவுக் கூர்மை உள்ளவளா?'' என்று வெகுளித்தனமான ஆவலுடன் அவள் கேட்கவே, நான் என் வசமின்றிச் சிரித்து விட்டேன். அவளோ, புன்னகை கூடச் செய்யவில்லை. ''அண்ணா, நான் அறிவுக் கூர்மை உள்ளவளா?'' என்று காகினிடம் கேட்டாள்.

அவனோ, அவளுக்கு ஒரு பதிலும் சொல்லாமல் தூரிகைகளை ஓயாமல் மாற்றியவாறும் கையை மேலே தூக்கிக் கொண்டும் தொடர்ந்து வேலையில் முனைந்திருந்தான்.

''என் மனத்தில் என்ன இருக்கிறது என்பது சில வேளைகளில் எனக்கே தெரிவதில்லை'' என்று முன்போன்றே சிந்தனையில் ஆழ்ந்த தோற்றத்துடன் தொடர்ந்தாள் ஆஸ்யா. ''சில வேளைகளில் என்னிடமே எனக்குப் பயமாய் இருக்கிறது, கடவுளாணை. ஆகா, என் விருப்பம் நிறைவேறினால்... நிறையப் படிப்பது பெண்களுக்குக் கூடாது என்பது உண்மைதானே?''

''நிறைய வேண்டியதில்லை, ஆனால்...''

''சொல்லுங்கள், நான் என்ன படிக்க வேண்டும்? சொல்லுங்கள், நான் என்ன செய்ய வேண்டும்? நீங்கள் எனக்கு என்ன சொல்கிறீர்களோ அதை எல்லாம் செய்வேன்'' என்று குற்றமற்ற நம்பிக்கையுடன் என்னைப் பார்த்துக் கூறினாள்.

அவளுக்கு என்ன சொல்வது என்று எனக்கு உடனே தோன்றவில்லை.

''என்னோடு உங்களுக்குச் சலிப்பாய்இராதே?''

''அட நீங்கள் என்ன'' என்று ஆரம்பித்தேன்.

''அப்படியானால் நன்றி! உங்களுக்குச் சலிப்பாய் இருக்கும் என்று நினைத்தேன்'' என்றாள் ஆஸ்யா.

அவளுடைய சூடான சிறு கை என்னுடைய கையைப்பற்றி வலிவாக அழுத்தியது.

''என்!'' என்று அந்தக் கணத்தில் கூவினான் காகின். ''இந்தப் பின்னணி இருண்டதோ?''

நான் அவனருகே சென்றேன். ஆஸ்யா எழுந்து வெளியே போய் விட்டாள்.

## 12

ஒரு மணி நேரம் பொறுத்து அவள் திரும்பினாள், கதவருகே நின்று கைச் சைகையால் என்னை அழைத்தாள்.

''கேளுங்கள், நான் இறந்து போனால் உங்களுக்கு என்னைப் பற்றி வருத்தமாய் இருக்குமோ?'' என்று கேட்டாள்.

''இன்றைக்கு உங்களுக்கு என்ன மாதிரி எண்ணங்கள் தோன்றுகின்றன?'' என்று கூவினேன்.

''நான் விரைவில் இறந்து போவேன் என்று எண்ணுகிறேன். என்னைச் சுற்றி உள்ளவை எல்லாம் என்னிடம் விடை பெறுவது போல எனக்குத் தோன்றுகிறது. இந்த மாதிரி வாழ்வதை விட மரிப்பது மேல்... ஐயோ! என்னை இப்படிப் பார்க்காதீர்கள். நான் பாசாங்கு செய்யவில்லை, உண்மையில். இல்லாவிட்டால் உங்களிடம் மறுபடி அஞ்சத் தொடங்கி விடுவேன்.''

''நீங்கள் எனக்குப் பயப்பட்டீர்களா என்ன?''

''நான் இப்படி விசித்திரமானவள் என்றால் அதற்கு நிச்சயமாக நான் பொறுப்பாளி அல்ல, பாருங்கள், இப்போது என்னால் சிரிக்கவும் முடியவில்லை...'' என்றாள் அவள்.

மாலை வரையிலும் அவள் ஏக்கமும் கவலையும் கொண்டவளாகக் காணப்பட்டாள். எனக்குப் புரியாத ஏதோ ஒன்று அவளுக்குள் நிகழ்ந்து கொண்டிருந்தது. அவளுடைய பார்வை அடிக்கடி என் மேல் நிலைத்தது. மர்மமான அந்தப் பார்வையால் என் நெஞ்சு இறுகியது. அவள் அமைதியாகவே காணப்பட்டாள், ஆனால், அவளைப் பார்க்கையில் கவலைப்படாதிருக்கும்படி அவளிடம் சொல்ல எனக்கு ஓயாமல் விருப்பம் உண்டா

யிற்று. அவளை வியந்து நோக்கிய எனக்கு அவளுடைய சற்றே வெளிறிய முக அமைப்புக் கூறுகளிலும் தயக்கமும் நிதானமும் உள்ள அங்க அசைவுகளிலும் நெஞ்சைத் தொடும் கவர்ச்சி தென்பட்டது. அவளோ, நான் மனச் சடைவு அடைந்திருப்பதாக என்ன காரணத்தாலோ எண்ணினாள்.

''கேளுங்கள்'' என்று நான் விடை பெறுவதற்குச் சற்று முன் அவள் என்னிடம் சொன்னாள். ''என்னைப் பொறுப்பற்றவளாக நீங்கள் எண்ணுகிறீர்கள் என்ற நினைப்பு என்னை வாட்டுகிறது... இனிமேல் நான் சொல்லுவதை நீங்கள் எப்போதும் நம்புங்கள். ஆனால் நீங்களும் என்னிடம் எதையும் ஒளிக்காதீர்கள். நான் உங்களிடம் எப்போதும் உண்மையே பேசுவேன், சத்தியமாகச் சொல்லுகிறேன்...''

இந்தச் ''சத்தியமாக'' என்பதைக் கேட்டு நான் மறுபடி உரக்கச் சிரித்தேன்.

''ஐயோ, சிரிக்காதீர்கள்'' என்று உடனே தடுத்தாள் அவள். ''இல்லாவிட்டால் நேற்று நீங்கள் என்னிடம் சொன்னதை நான் இன்று உங்களிடம் சொல்லுவேன்: நீங்கள் எதற்காகச் சிரிக்கிறீர்கள்? என்று.'' பின்பு சற்று நேரம் பேசாதிருந்த பிறகு அவள் கூறினாள்: ''நேற்று நீங்கள் சிறகுகளைப் பற்றிச் சொன்னீர்களே, நினைவு இருக்கிறதா?.. எனக்குச் சிறகுகள் முளைத்து விட்டன. பறப்பதற்குத்தான் இடமில்லை?''

''நன்றாய்ச் சொன்னீர்களே. உங்களுக்கு முன்னே எல்லாப் பாதைகளும் திறந்திருக்கின்றன...'' என்றேன்.

ஆஸ்யா என்னை நேரே விழி பொருந்த நோக்கினாள்.

''இன்றைக்கு நீங்கள் என்னைப் பற்றி மோசமான கருத்து கொண்டிருக்கிறீர்கள்'' என்று புருவங்களை நெறித்தவாறு சொன்னாள்.

''நானா? மோசமான கருத்தா? உங்களைப் பற்றியா?..''

''நீங்கள் என்ன, ஏதோ கவலையில் ஆழ்ந்தவர்கள் போல் இருக்கிறீர்கள்?'' என்று என் பேச்சில் குறுக்கிட்டான் காகின். ''நேற்று மாதிரி வால்ட்ஸ் நடன மெட்டை வாசிக்கட்டுமா?''

''வேண்டாம், வேண்டாம்'' என்று கைகளை நெரித்தாள் ஆஸ்யா. ''இன்றைக்கு வேண்டவே வேண்டாம்!''

''நான் உன்னைக் கட்டாயப்படுத்தவில்லை, பதற்றப்படாதே...''

''வேண்டவே வேண்டாம்'' என்று முகம் வெளிறத் திருப்பிச் சொன்னாள்.

. . . . . . . . . . . . . .

''இவள் என்னைக் காதலிக்கிறாளா என்ன?'' என்று கரிய அலைகளை விரைவாக வீசிச் சென்று கொண்டிருந்த ரைன் ஆற்றை நெருங்குகையில் எண்ணமிட்டேன் நான்.

## 13

''இவள் என்னைக் காதலிக்கிறாளா என்ன?'' என்று மறு நாள் கண் விழித்ததும் என்னைக் கேட்டுக் கொண்டேன். எனக்குள் பார்வை செலுத்த நான் விரும்பவில்லை. அவளுடைய உருவம், ''போலிச் சிரிப்பு சிரிக்கும் பெண்ணின்'' உருவம், என் உள்ளத்தில் ஆழப் புகுந்து கொண்டிருக்கிறது, அதிலிருந்து விடுபடுவது எனக்கு விரைவில் முடியாது என்று நான் உணர்ந்தேன். நான் ல. சிற்றூர்

சென்று பகல் முழுவதும் அங்கே இருந்தேன், ஆனால் ஆஸ்யாவை மேலோட்டமாகத்தான் பார்த் தேன். அவளுக்கு உடம்பு சரியாய் இல்லை. தலை வலி. கட்டுப் போட்ட நெற்றியுடன், வெளிறி, மெலிந்து, அனேகமாக மூடிய விழிகளுடன் நிமிட நேரம் கீழே வந்தாள், பலவீனமாகப் புன்னகை செய்தாள், 'இது போய் விடும், இது ஒன்றுமில்லை, எல்லாம் நேராகி விடும், அல்லவா?' என்று சொல்லி விட்டுப் போய்விட்டாள். எனக்குச் சலிப் பாகவும் ஒரு மாதிரி வருத்தமும் வெறுமையுமாக வும் இருந்தது. ஆனாலும் வெகு நேரம் வரை அங்கிருந்து போக நான் விரும்பவில்லை. மறுபடி அவளைப் பார்க்காமல் வெகு நேரம் பொறுத்து வீடு திரும்பினேன்.

மறு நாள் காலை நேரம் உணர்வின் ஒரு வகை அரைத் தூக்கத்தில் கழிந்தது. வேலையில் ஈடுபட முயன்றேன், முடியவில்லை. ஒன்றும் செய்யாமலும் எண்ணமிடாமலும் இருக்க விரும்பினேன்... இதுவும் இயலவில்லை. ஊரில் சுற்றி அலைந்தேன். வீடு திரும்பினேன். மறுபடி வெளியேறினேன்.

''திருவாளர் என். நீங்கள் தாமே?'' என்று குழந்தைக் குரல் என் பின்னே திடீரென ஒலித் தது. நான் திரும்பிப் பார்த்தேன். என் எதிரே நின்றான் ஒரு சிறுவன். ''பிரெய்லெய்ன்* Annette** உங்களுக்கு இதை அனுப்பி இருக்கிறார்கள்'' என்று கூறி ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத் தான்.

---

* Fräulein—குமாரி என்று பொருள்படும் ஜெர்மன் சொல்.—மொ-ர்.

** ஆன்னெத்தே—ஆன்னா என்ற பெயரின் ஜெர்மன் வடிவம்.—மொ-ர்.

கடிதத்தைப் பிரித்தேன். ஆஸ்யாவின் ஒழுங்கற்ற விரைந்த கையெழுத்தை அடையாளம் கண்டு கொண்டேன். ''நான் உங்களைக் கட்டாயம் பார்க்க வேண்டும்'' என்று அவள் எனக்கு எழுதியிருந்தாள். ''இடிபாடுகளின் பக்கத்தில் சாலையில் உள்ள பிரார்த்தனைக் கூடத்துக்கு இன்று நான்கு மணிக்கு வாருங்கள். நான் இன்று மிகவும் எச்சரிக்கை இல்லாமல் நடந்து கொண்டு விட்டேன்... தயை செய்து வாருங்கள், எல்லாவற்றையும் தெரிந்து கொள்வீர்கள்... கடிதம் கொண்டு வருபவனிடம் ஆமாம் என்று சொல்லுங்கள்.''

''பதில் உண்டா?'' என்று கேட்டான் சிறுவன்.

''ஆமாம் என்று சொல்லு'' என்று பதில் அளித்தேன்.

சிறுவன் ஓடிப் போய்விட்டான்.

## 14

நான் என் அறைக்கு வந்து உட்கார்ந்து எண்ணமிடலானேன். என் நெஞ்சு பலமாக அடித்துக் கொண்டது. ஆஸ்யாவின் கடிதத்தை நான் பல முறை திரும்பப் படித்தேன். மணியைப் பார்த்தேன். பன்னிரண்டு இன்னும் ஆகவில்லை.

கதவு திறந்தது. காகின் அறைக்குள் வந்தான்.

அவனுடைய முகத்தில் துயரம் தேங்கி நின்றது. அவன் என் கையைப் பற்றி வலிவாக இறுக்கினான். பெரிதும் கிளர்ச்சி அடைந்தவன் போலக் காணப்பட்டான்.

''உங்களுக்கு என்ன?'' என்று கேட்டேன்.

காகின் நாற்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு என் எதிரே உட்கார்ந்தான்.

வலிந்து வருவித்துக் கொண்ட புன்னகையுடன் திக்கித் தயங்கியவாறு பேசத் தொடங்கினன்: ''நான்கு நாட்களுக்கு முன் என்னுடைய கதையால் நான் உங்களை வியப்பில் ஆழ்த்தினேன். இன்று இன்னும் அதிக ஆச்சரியத்துக்கு உள்ளாக்கப் போகிறேன். வேறு ஒருவரிடம் சொல்ல ஒரு வேளை நான் தயங்கி இருப்பேன்... இப்படி அப்பட்டமாக... ஆனல் நீங்கள் பண்பாளர், எனக்கு நண்பர், அல்லவா? கேளுங்கள்: என் தங்கை, ஆஸ்யா, உங்கள் மேல் காதல் கொண்டிருக்கிருள்.''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. நான் எழுந்தேன்...

''உங்கள் தங்கை, நீங்கள் சொல்லுகிறீர்கள்...''

''ஆம், ஆம்'' என்று என் பேச்சை இடைமுறித்தான் காகின். ''நான் உங்களுக்குச் சொல்கிறேன், அவள் பைத்தியக்காரி, என்னையும் பைத்தியமாக அடிக்கிருள். ஆனல், நல்ல வேளையாக, அவளால் பொய் பேச முடியாது. அதோடு என்னை நம்புகிருள். ஆகா, இந்தப் பெண்ணுக்குத் தான் எப்பேர்ப்பட்ட இதயம்... ஆனல் இவள் தன்னை மாய்த்துக் கொள்வாள், கட்டாயமாக.''

''அட நீங்கள் தவருக நினைக்கிறீர்கள்'' என்று தொடங்கினேன்.

''இல்லை, தவருக நினைக்கவில்லை. நேற்று என்ன நடந்தது தெரியுமா? அவள் அனேகமாக நாள் முழுவதும் படுக்கையில் கிடந்தாள், ஒன்றும் சாப்பிடவில்லை, ஆனல் குறை சொல்லவில்லை. அவள் ஒருபோதும் குறை சொல்லுவதில்லை. மாலைத்தறுவாயில் அவளுக்கு லேசாகக் காய்ச்சல் அடித்தது, ஆனலும் நான் கவலைப்படவில்லை.

இரவு இரண்டு மணிக்கு எங்கள் வீட்டுக்காரி என்னை எழுப்பினுள்: உங்கள் தங்கையிடம் போங்கள். அவளுக்கு ஏதோ சுகக் கேடு என்றுள். நான் ஆஸ்யாவிடம் ஓடினேன். அவள் உடை மாற்றுமல் இருந்தாள். அவளுக்குக் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது, அவள் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தாள். அவள் தலை கொதித்தது, பற்கள் அடித்துக் கொண்டன. உனக்கு என்ன? உடம்பு சரியாய் இல்லையா? என்று கேட்டேன். அவள் பாய்ந்து என் கழுத்தைக் கட்டிக் கொண்டு, அவள் உயிர் பிழைக்க வேண்டும் என்று நான் விரும்பினுல் முடிந்தவரை விரைவாக இங்கிருந்து அவளை வெளியே அழைத்துப் போய் விடும்படி கெஞ்சிக் கேட்கத் தொடங்கினுள்... எனக்கு ஒன்றும் புரியவில்லை, அவளைச் சமாதானப்படுத்த முயன்றேன்... அவளுடைய தேம்பல்கள் வலுத்தன... இந்தத் தேம்பல்களின் ஊடே எனக்குக் கேட்டது... அட, சுருங்கச் சொன்னுல், அவள் உங்களைக் காதலிக்கிறுள் என்பதை நான் கேட்டேன். ஒன்றை உங்களுக்கு உறுதிப்படுத்தி விடுகிறேன். நீங்களும் நானும் நல்லறிவு படைத்தவர்கள். அவள் எவ்வளவு ஆழமாக உணர்கிறுள், இந்த உணர்ச்சிகள் எத்தகைய நம்ப முடியாத சக்தியுடன் அவளைப் பாதிக்கின்றன என்பதை நம்மால் எண்ணிப் பார்க்க முடியாது. இடிப்புயல் போலவே எதிர்பாரா விதமாகவும் தடுக்க முடியாதபடியும் இந்தக் காதல் அவளைத் தாக்குகிறது. நீங்கள் மிகவும் இனியவர், ஆனுல் அவள் உங்கள் மேல் ஏன் இந்த மாதிரிக் காதல் கொண்டு விட்டாள் என்பது எனக்குப் புரியவில்லை என்று ஒப்புக் கொள்கிறேன். முதல் தடவை உங்களைக் கண்டதுமே காதல் கொண்டு விட்டதாக அவள் சொல்லுகிறுள்.

என்னைத் தவிர வேறு யாரையும் நேசிக்கத் தான் விரும்பவில்லை என்று சில நாட்களுக்கு முன் எனக்கு உறுதி கூறிய போது அவள் அழுததற்குக் காரணம் இதுதான். நீங்கள் அவளை இகழ்வதாகவும் அவள் யார் என்பதை நிச்சயமாக அறிவீர்கள் என்றும் அவள் எண்ணிக் கொண்டிருக்கிருள். அவளுடைய கதையை நான் உங்களுக்குச் சொன்னேனு என்று கேட்டாள். நான் இல்லை என்று சொன்னேன் என்பது தானே விளங்கும். ஆனுல் அவளுடைய நுண் உணர்வு இருக்கிறதே, பயங்கரமானது. போய் விட வேண்டும், உடனே போய் விட வேண்டும் என்பது ஒன்று தான் அவள் விரும்பியது. நான் காலைவரை அவளோடு உட்கார்ந்திருந்தேன். நாளைக்கு நாங்கள் இங்கே இருக்க மாட்டோம் என்று என்னிடமிருந்து உறுதிமொழி கேட்டுப் பெற்றுக் கொண்ட பிறகு தான் அவள் உறங்கினுள். நான் யோசித்து யோசித்துப் பார்த்தபின் உங்களோடு பேச முடிவு செய்தேன். என் கருத்துப்படி, ஆஸ்யா சொல்வது சரியே. நாங்கள் இருவரும் இங்கிருந்து போய் விடுவது தான் எல்லாவற்றிலும் மேலானது. இன்றே அவளை வெளியூருக்கு அழைத்துப் போயிருப்பேன், என் மூளையில் உதித்த ஓர் எண்ணம் என்னைத் தடுத்திரா விட்டால். ஒரு வேளை... யார் கண்டார்கள்? உங்களுக்கு என் தங்கையைப் பிடித்திருக்கிறதா? பிடித்திருக்கிறது என்ருல் அவளை நான் எதற்காக வெளியே அழைத்துப் போக வேண்டும்? அதனுல்தான் வெட்கத்தை எல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டு முடிவு செய்தேன்... அதோடு நானும் சில விஷயங்களைக் கவனித்தேன்... நான் முடிவு செய்தேன்... உங்களிடமிருந்து தெரிந்து கொள்ள...'' பாவம்

காகின் தடுமாறினன். ''தயை செய்து என்னை மன்னியுங்கள். இந்த மாதிரிச் சள்ளை பிடித்த வேலைகளுக்கு நான் பழகவில்லை.''

நான் அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டேன்.

''உங்கள் தங்கையை எனக்குப் பிடித்திருக்கிறதா என்று தெரிந்து கொள்ளத்தானே விரும்புகிறீர்கள்?'' என்று உறுதியான குரலில் கேட்டேன். ''ஆமாம். அவளை எனக்குப் பிடித்திருக்கிறது...''

காகின் என்னை உற்றுப் பார்த்தான்.

''ஆனல்'' என்று திக்கித் தயங்கியவாறு தொடங்கி,'' நீங்கள்தாம் அவளை மணந்து கொள்ள மாட்டீர்களே?'' என்ருன்.

''இந்தக் கேள்விக்கு நான் எப்படிப் பதில் சொல்ல வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்? நீங்களே தீர்மானியுங்கள், முடியுமா என்ஞல் இப்போது...''

''அறிவேன், அறிவேன்'' என்று என் சொற்களை இடை முறித்தான் காகின். ''உங்களிடமிருந்து பதிலைக் கோர எனக்கு எவ்வித உரிமையும் கிடையாது. தவிர, என் கேள்வி அறவே முறையற்றது... ஆனல் என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? நெருப்போடு விளையாடக் கூடாது. உங்களுக்கு ஆஸ்யாவைத் தெரியாது. இந்த நிலையில் அவள் நோய்வாய்ப் படவோ, ஓடிப் போகவோ உங்களோடு சந்திப்புக்கு ஏற்பாடு செய்யவோ கூடும்... வேறு ஒருத்தியால் எல்லாவற்றையும் மறைக்கவும் முடிவுவரை காத்திருக்கவும் முடிந்திருக்கும். ஆனல் அவளால் முடியாது. அவளுக்கு இது நிகழ்ந்திருப்பது முதல்

தடவை—அதுதான் சங்கடம்! இன்று அவள் என் காலில் விழுந்து அழுததை நீங்கள் பார்த்திருந் தால் எனது மனக் கலக்கத்தைப் புரிந்து கொள் வீர்கள்.''

நான் சிந்தனை செய்தேன். ''உங்களோடு சந்திப்புக்கு ஏற்பாடு செய்யவோ'' என்ற காகி னுடைய சொற்கள் என் நெஞ்சில் தைத்தன. அவனுடைய நேர்மை வாய்ந்த ஒளிவு மறைவின் மைக்கு ஒளிவு மறைவின்மையுடன் பதில் சொல் லாமல் இருப்பது வெட்கக் கேடாக எனக்குத் தோன்றியது.

முடிவில் நான் சொன்னேன்: ''ஆமாம். நீங்கள் கூறியது சரிதான். ஒரு மணி நேரத்துக்கு முன் உங்கள் தங்கையிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் கிடைத்தது. இதோ அது.''

காகின் கடிதத்தை எடுத்து விரைவாக அதன் மேல் கண்ணோட்டி விட்டுக் கைகளை முழங்கால் களில் தொய்ய விட்டான். அவனுடைய முகத் தில் காணப்பட்ட திகைப்புக்குறி மிக வேடிக்கை யாக இருந்தது, ஆனாலும் எனக்குச் சிரிக்க மனமில்லை.

''மறுபடி சொல்லுகிறேன், நீங்கள் பண் பாளர்'' என்று கூறினான் அவன். ''ஆனால் இப்போது என்ன தான் செய்வது? எப்படி? அவள் தானே வெளியேற விரும்புகிறாள், உங்களுக்கும் எழுது கிறாள், எச்சரிக்கை இன்றி நடந்து கொண்டதற் காகத் தன்னைக் கடிந்து கொள்ளவும் செய்கிறாள்.... இதை எழுத அவளுக்கு எப்போது நேரம் கிடைத் தது? உங்களிடம் அவள் என்னதான் விரும்பு கிறாள்?''

நான் அவனைச் சமாதானப்படுத்தினேன். நாங் கள் என்ன செய்வது சரியாய் இருக்கும் என்று

முடிந்தவரை உணர்ச்சி வசப்படாமல் விவாதிக்கலானோம்.

கடைசியில் நாங்கள் இந்த மாதிரி முடிவு செய்தோம்: விபத்து நேராமல் தவிர்க்கும் பொருட்டு நான் சந்திப்புக்குப் போய் ஆஸ்யாவிடம் உள்ளதை நேர்மையாக விளக்க வேண்டும். காகின் வீட்டில் இருக்க வேண்டும், கடிதம் பற்றித் தனக்குத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளக் கூடாது. மாலையில் இருவரும் சந்திப்பதாகத் தீர்மானித்துக் கொண்டோம்.

''உங்கள் மேல் உறுதியான நம்பிக்கை வைத்திருக்கிறேன்'' என்று கூறி என் கையைப் பற்றி அழுத்தினான் காகின். ''அவள் மீதும் என் மீதும் இரக்கம் வையுங்கள். என்ன ஆனாலும் நாளைக்கு நாங்கள் இங்கிருந்து போய் விடுவோம்'' என்று எழுந்தான். ''ஏனென்றால் நீங்கள்தாம் ஆஸ்யாவை மணக்க மாட்டீர்களே.''

''மாலை வரையில் எனக்கு நேரம் கொடுங்கள்'' என்றேன்.

''தாராளமாக. ஆனால் நீங்கள் மணக்க மாட்டீர்கள்.''

அவன் போய் விட்டான். நான் சோபாவில் விழுந்து கண்களை மூடிக் கொண்டேன். என் தலை பம்பரமாகக் கிறுகிறுத்தது. மட்டுமீறி நிறைய அனுபவங்கள் அதில் ஒரேயடியாகக் குமைந்தன. காகினுடைய ஒளிவு மறைவின்மையால் நான் எரிச்சல் அடைந்தேன். ஆஸ்யா மேல் எனக்கு எரிச்சல் உண்டாயிற்று. அவளுடைய காதல் எனக்கு மகிழ்ச்சியும் அளித்தது, கூச்சமும் ஏற்படுத்தியது. தமையனிடம் எல்லாவற்றையும் சொல்லும்படி அவளைக் கட்டாயப்படுத்தியது எது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிய

வில்லை. விரைவில், அனேகமாக ஒரே கணத்தில், முடிவு செய்வது தவிர்க்க முடியாதது என்ற எண்ணம் என்னை வதைத்தது...

''இந்த மாதிரி உளப்பாங்கு உள்ள பதினேழு வயதுச் சிறுமியை மணப்பது எப்படி முடியும்?'' என்று கூறி எழுந்தேன்.

## 15

குறித்த நேரத்தில் நான் பரிசலில் ரைன் ஆற்றைக் கடந்தேன். எதிர்க் கரையில் என்னைச் சந்தித்த முதல் நபர், காலையில் என் வீட்டுக்கு வந்த அதே சிறுவன்தான். அவன் எனக்காகக் காத்திருந்தான் என்று தெரிந்தது.

''பிரெய்லெய்ன் Annetteயிடமிருந்து'' என்று கிசுகிசுத்து, இன்னொரு கடிதத்தை என்னிடம் கொடுத்தான்.

எங்கள் சந்திப்பு இடம் மாறி இருப்பதாக ஆஸ்யா எனக்குத் தெரிவித்திருந்தாள். பிரார்த்தனைக் கூடத்துக்கு அல்ல, பிராவு லுயிஸேயின் வீட்டுக்கு ஒன்றரை மணி நேரம் பொறுத்து நான் வர வேண்டும், கீழே கதவைத் தட்ட வேண்டும், மூன்றாவது மாடியில் புக வேண்டும் என்று எழுதியிருந்தாள்.

''மறுபடியும் ஆமாமா?'' என்று கேட்டான் சிறுவன்.

''ஆமாம்'' என்று திருப்பிச் சொல்லி விட்டு ரைன் ஆற்றின் கரையோரமாக நடந்தேன்.

வீடு திரும்ப நேரம் இல்லை. வீதிகளில் சுற்றித் திரிய நான் விரும்பவில்லை. ஊர் மதிலுக்கு வெளியே ஒரு சிறு தோட்டம் இருந்தது. மரப் பந்தாட்டத்துக்காக ஒரு பந்தலும் பீர் பருக

விரும்புபவர்களுக்காக மேசைகளும் அதில் போடப்பட்டிருந்தன. நான் அதற்குள் புகுந்தேன். வயது முதிர்ந்த சில ஜெர்மானியர்கள் மரப் பந் தாட்டம் ஆடிக் கொண்டிருந்தார்கள். மரப் பந்து கள் கடகடப்புடன் உருண்டு கொண்டிருந்தன. ஆமோதிப்பு ஆரவாரங்கள் எப்போதாவது ஒலித்துக் கொண்டிருந்தன. அழகிய பணிப் பெண் அழுத கண்களுடன் எனக்கு பீர்குவளே எடுத்து வந்தாள். நான் அவளுடைய முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். அவள் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு அப்பால் போய் விட்டாள்.

''ஆம், ஆம்'' என்று அங்கே உட்கார்ந்திருந்த பருத்த உடலும் சிவந்த கன்னங்களும் கொண்ட ஒருவர் சொன்ஞர். ''நம் கான்ஹென் இன் றைக்குப் பெருத்த துயரம் கொண்டிருக்கிருள். அவளுடைய மணமகன் படைப் பணிக்குப் போய் விட்டான்.''

நான் அவளே நோக்கினேன். அவள் மூலேயில் ஒண்டியவாறு கன்னத்தைக் கையில் ஊன்றிக் கொண்டிருந்தாள். கண்ணீர் துளித் துளியாக அவளுடைய விரல்கள் வழியே சொட்டிக் கொண் டிருந்தது. ஒருவர் பீர் கேட்டார். அவள் பீர் குவளேயை அவருக்குக் கொண்டு கொடுத்து விட்டு மறுபடி தன் இடத்துக்குத் திரும்பிஞள். அவ ளுடைய துயரம் என்னேப் பாதித்தது. எனக்கு நேர இருந்த சந்திப்பைப் பற்றி நான் எண்ணத் தொடங்கினேன். ஆஞல் என் எண்ணங்கள் கவலே நிறைந்த, மகிழ்வற்ற எண்ணங்களாக இருந்தன. நான் இந்தச் சந்திப்புக்குப் போனது உல்லாச மான நெஞ்சத்துடன் அல்ல. ஒருவர் மேல் ஒருவர் கொண்ட காதலின் இன்பங்களில் ஆழ்வதற்காக நான் போகவில்லே. கொடுத்த வாக்கைக் காப்

பாற்றுவது, கடினமான பொறுப்பை நிறைவேற்று வது, என் கடமையாக இருந்தது. ''அவளோடு விளையாடக் கூடாது''—காகினுடைய இந்தச் சொற்கள் அம்பு போல என் நெஞ்சில் பாய்ந் திருந்தன. நான்கு நாட்களுக்கு முன், அலைகளால் இழுத்துச் செல்லப்பட்ட இந்தப் படகில் உட் கார்ந்து, இன்ப வேட்கையால் நான் ஏங்கித் துடிக்க வில்லையா? இன்பம் சாத்தியம் ஆகி இருந்தது, ஆனால் நான் தயங்கினேன், அதை நெட்டித் தள்ளி னேன், அதை அப்பால் தள்ளுவது எனக்கு அவ சியமாய் இருந்தது... அதன் எதிர்பாராத் தன்மை எனக்குக் குழப்பம் உண்டாக்கிற்று. இந்த மாதிரி அனல் வீசும் மூளையும் கடந்த காலமும் வளர்ப்பும் கொண்ட ஆஸ்யாவே, கவர்ச்சியுள்ள இந்த விந்தைப் பிறவியே, என்னை அச்சுறுத்தினாள் என் பதை ஒப்புக் கொள்கிறேன். உணர்ச்சிகள் என் உள்ளத்தில் நெடுநேரம் போராடின. குறித்த நேரம் நெருங்கியது. அவளை மணக்க என்னால் முடி யாது என்று கடைசியில் தீர்மானித்தேன். ''நானும் அவளைக் காதலித்தேன் என்பதை அவள் தெரிந்து கொள்ள மாட்டாள்.''

நான் எழுந்தேன், தாலெர்* நாணயத்தை அப்பாவி கான்ஹெனின் கையில் வைத்து விட்டு (அவள் எனக்கு நன்றி கூடத் தெரிவிக்கவில்லை) பிராவு லுயிஸேயின் வீட்டுக்குப் புறப்பட்டேன். மாலை நிழல்கள் ஏற்கெனவே காற்றில் பரவிக் கொண்டிருந்தன. இருண்ட சந்துக்கு மேலே குறு கிய வானப் பகுதி அந்திச் செக்கரின் பிரதிபலிப்

---

* Taler என்னும் ஜெர்மன் வெள்ளி நாண யம். மூன்று மார்க்குகள் மதிப்பு உள்ளது (1907 வரை).—மொ-ர்.

பால் செம்மை படர்ந்து திகழ்ந்தது. கதவை லேசாகத் தட்டினேன். அது உடனே திறந்து கொண்டது. நான் வாயிலைத் தாண்டி முழு இருட்டில் புகுந்தேன்.

''இப்படி வாருங்கள்!'' என்றது கிழவியின் குரல். ''உங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்.''

தட்டித் தடவி இரண்டோர் அடிகள் எடுத்து வைத்தேன். எலும்பு துருத்திய கை ஒன்று என் கையைப் பிடித்துக் கொண்டது.

''நீங்களா இது, பிராவு லுயிஸே?'' என்று கேட்டேன்.

''ஆமாம்'' என்றது அதே குரல். ''ஆமாம், என் அருமையான வாலிபனே!''

கிழவி செங்குத்தான படிகள் வழியாக என்னை மறுபடியும் மேலே அழைத்துச் சென்று மூன்றும் மாடிப் படிக்கட்டு மேடையில் நின்றாள். சின்னஞ் சிறு சன்னல் வழியே வந்த மங்கலான வெளிச்சத்தில் புர்கோமிஸ்டருடைய விதவையின் சுருக்கங்கள் விழுந்த முகத்தை நான் கண்டேன். குமட்டச் செய்யும் தந்திரப் புன்னகையால் அவளுடைய பொக்கை வாய் விரிந்தது, மங்கிய விழிகள் இடுங்கின. ஒரு சிறு கதவை அவள் எனக்குக் காட்டினாள். வலிப்பு வந்தது போன்ற கை வீச்சால் அதைத் திறந்து உள்ளே போய்ச் சாத்திக் கொண்டேன்.

## 16

நான் புகுந்த சிறு அறையில் மிகவும் இருட்டாய் இருந்தது, ஆகையால் ஆஸ்யாவை நான் உடனே கண்டு கொள்ளவில்லை. நீண்ட சால்வையைப் போர்த்துக் கொண்டு, மறுபுறம் திரும்பி, பயந்த பறவை போல அனேகமாகத் தலையை

மறைத்தவாறு சன்னல் அருகே நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள் அவள். விரைவாக மூச்சு விட்டாள், ஒரேயடியாக நடுங்கிஞள். அவள் மேல் எனக்குச் சொல்ல முடியாத அளவு இரக்கம் உண்டாயிற்று. நான் அவள் அருகே சென்றேன். அவள் தலையை இன்னும் அதிகமாகத் திருப்பிக் கொண்டாள்...

''ஆன்ஞ நிக்கலாயெவ்ஞ'' என்று ருஷ்ய மரியாதை முறைப்படி அழைத்தேன்.

அவள் சட்டென்று நிமிர்ந்தாள், என்னை ஏறிட்டுப் பார்க்க முயன்ருள், ஆனல் அவளால் முடியவில்லை. நான் அவளுடைய கையைப் பற்றினேன். அது சில்லிட்டிருந்தது, உயிரற்றது போன்று என் கையில் கிடந்தது.

''நான் விரும்பினேன்...'' என்று புன்னகைக்க முயன்றவாறு பேசத் தொடங்கிஞள் ஆஸ்யா, ஆனல் அவளுடைய வெளிறிய உதடுகள் அவளுக்குப் படியவில்லை. ''நான் ஆசைப்பட்டேன்... இல்லை, என்ஞல் முடியவில்லை'' என்று பேச்சை நிறுத்திஞள். மெய்யாகவே அவளுடைய குரல் ஒவ்வொரு சொல்லிலும் தடைப்பட்டது.

நான் அவள் அருகில் அமர்ந்தேன்.

''ஆன்ஞ நிக்கலாயெவ்ஞ'' என்று திரும்பிக் கூறிய என்ஞலும் அதற்கு மேல் ஒன்றும் பேச முடியவில்லை.

மௌனம் குடி கொண்டது. அவளுடைய கையை விடாது பிடித்தவாறு நான் அவள் மேல் கண்ணேட்டினேன். முன்போலவே அவள் மேனி முழுவதும் குறுகி இருந்தது. அவள் சிரமத்துடன் மூச்சு விட்டவாறு, அழாதிருக்கும் பொருட்டு, பொங்கி வந்த கண்ணீரைத் தேக்கி நிறுத்தும் பொருட்டு, கீழ் உதட்டை மெதுவாகக் கடித்துக்

கொண்டிருந்தாள்... நான் அவள் மீது பார்வை செலுத்தினேன் அவளுடைய கூச்சம் நிறைந்த அசையாமையில் நெஞ்சை உருக்கும் புகலின்மை ஒன்று இருந்தது. களைப்பு காரணமாக வெகு சிரமத்துடன் நாற்காலியை நெருங்கி அப்படியே அதில் விழுந்து விட்டவள் போலக் காணப் பட்டாள். என் உள்ளம் உருகிற்று...

''ஆஸ்யா'' என்று அரிதாகவே காதில் படும் விதத்தில் அழைத்தேன்...

அவள் தன் விழிகளை என் பக்கம் மெதுவாக உயர்த்தினாள்... ஓ, காதல் கொண்ட பெண்ணின் பார்வையே, உன்னை யாரால்தான் வருணிக்க முடியும்? அவை, அந்த விழிகள், இறைஞ்சின, நம்பிக்கையை வெளியிட்டன, வினவின, அர்ப் பணித்தன... அவற்றின் கவர்ச்சிக்கு எதிர் நிற்க என்னால் முடியவில்லை. மெல்லிய கனல் பொசுக் கும் ஊசிகளாக என் உடல் முழுவதிலும் பரவி யது. நான் குனிந்து அவளுடைய கையில் என் முகத்தை அழுத்தினேன்...

இடை இடையே தடைப்பட்ட பெருமூச்சு போன்ற நடுங்கும் ஒலி கேட்டது, இலை போலத் துடித்த வலுவற்ற கரத்தின் ஸ்பரிசத்தை என் தலை மயிரில் உணர்ந்தேன். தலையை நிமிர்த்தியவன், அவளுடைய வதனத்தைக் கண்டேன். அது சட் டென்று எப்படி உருமாறி விட்டது! அதில் இருந்த அச்சக் குறி மறைந்து விட்டது, பார்வை எங்கோ தொலைவில் சென்று என்னைத் தன் பின்னே ஈர்த் தது. உதடுகள் சற்றே மலர்ந்தன, நெற்றி சல வைக்கல் போல வெளிறியது, மயிர்ச் சுருள்கள் காற்றினால் தள்ளப்பட்டவை போன்று பின்னே நகர்ந்து விட்டன. நான் எல்லாவற்றையும் மறந் தேன், அவளை என் பக்கம் இழுத்தேன். அவளுடைய

கை பணிவாகக் கீழ்ப்படிந்தது. அவளது மேனி முழுதும் கையைத் தொடர்ந்து வந்தது. சால்வை தோள்களிலிருந்து நழுவிற்று. அவளுடைய தலை என் மார்பின் மேல் கிடந்தது, என் சூடேறிய உதடுகளின் அடியில் கிடந்தது...

''உங்களுடையவள்...'' என்று அரிதாகவே காதுக்கு எட்டும்படி கிசுகிசுத்தாள் அவள்.

இதற்குள் என்னுடைய கைகள் அவளது இடையைச் சுற்றி வழுகிச் சென்றன... ஆனால் காகினைப் பற்றிய நினைவு திடீரென்று மின்னல் போல என்னை ஒளியுறுத்தியது.

''நாம் என்ன செய்கிறோம்?..'' என்று கூவி, வலிப்பு வந்தவன் போலப் பின்னே நகர்ந்தேன். ''உங்கள் அண்ணன்... அவர் எல்லாவற்றையும் அறிவாரே... நான் உங்களைச் சந்திப்பது அவருக்குத் தெரியுமே'' என்றேன்.

ஆஸ்யா நாற்காலியில் சாய்ந்தாள்.

''ஆமாம்'' என்று எழுந்து அறையின் மறு மூலைக்குப் போனேன். ''உங்கள் தமையனுக்கு எல்லாம் தெரியும்... அவருக்கு எல்லாவற்றையும் சொல்லுவது எனக்கு அவசியம் ஆகி விட்டது.''

''அவசியம் ஆகி விட்டதா?'' என்று தெளிவின்றி மொழிந்தாள் அவள். இன்னும் தன்னிலைக்கு வர அவளால் முடியவில்லை போலும், என் சொற்களை அவள் நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை போலும் இருந்தது.

''ஆம், ஆம்'' என்று ஒரு வகைக் கசப்புடன் சொன்னேன். ''இதற்கு நீங்கள் ஒருவர்தாம் பொறுப்பாளி. நீங்கள் ஒருவர்தாம். உங்கள் இரகசியத்தை நீங்களே எதற்காக வெளியிட்டீர்கள்? உங்கள் தமையனுக்கு எல்லாவற்றையும் தெரிவிக்கும்படி உங்களை யார் கட்டாயப்படுத்

கொண்டிருந்தாள்... நான் அவள் மீது பார்வை செலுத்தினேன் அவளுடைய கூச்சம் நிறைந்த அசையாமையில் நெஞ்சை உருக்கும் புகலின்மை ஒன்று இருந்தது. களைப்பு காரணமாக வெகு சிரமத்துடன் நாற்காலியை நெருங்கி அப்படியே அதில் விழுந்து விட்டவள் போலக் காணப் பட்டாள். என் உள்ளம் உருகிற்று...

''ஆஸ்யா'' என்று அரிதாகவே காதில் படும் விதத்தில் அழைத்தேன்...

அவள் தன் விழிகளை என் பக்கம் மெதுவாக உயர்த்தினாள்... ஓ, காதல் கொண்ட பெண்ணின் பார்வையே, உன்னை யாரால்தான் வருணிக்க முடியும்? அவை, அந்த விழிகள், இறைஞ்சின, நம்பிக்கையை வெளியிட்டன, வினவின, அர்ப் பணித்தன... அவற்றின் கவர்ச்சிக்கு எதிர் நிற்க என்னால் முடியவில்லை. மெல்லிய கனல் பொசுக் கும் ஊசிகளாக என் உடல் முழுவதிலும் பரவி யது. நான் குனிந்து அவளுடைய கையில் என் முகத்தை அழுத்தினேன்...

இடை இடையே தடைப்பட்ட பெருமூச்சு போன்ற நடுங்கும் ஒலி கேட்டது, இலை போலத் துடித்த வலுவற்ற கரத்தின் ஸ்பரிசத்தை என் தலை மயிரில் உணர்ந்தேன். தலையை நிமிர்த்தியவன், அவளுடைய வதனத்தைக் கண்டேன். அது சட் டென்று எப்படி உருமாறி விட்டது! அதில் இருந்த அச்சக் குறி மறைந்து விட்டது, பார்வை எங்கோ தொலைவில் சென்று என்னைத் தன் பின்னே ஈர்த் தது. உதடுகள் சற்றே மலர்ந்தன, நெற்றி சல வைக்கல் போல வெளிறியது, மயிர்ச் சுருள்கள் காற்றினால் தள்ளப்பட்டவை போன்று பின்னே நகர்ந்து விட்டன. நான் எல்லாவற்றையும் மறந் தேன், அவளை என் பக்கம் இழுத்தேன். அவளுடைய

கை பணிவாகக் கீழ்ப்படிந்தது. அவளது மேனி முழுதும் கையைத் தொடர்ந்து வந்தது. சால்வை தோள்களிலிருந்து நழுவிற்று. அவளுடைய தலை என் மார்பின் மேல் கிடந்தது, என் சூடேறிய உதடுகளின் அடியில் கிடந்தது...

''உங்களுடையவள்...'' என்று அரிதாகவே காதுக்கு எட்டும்படி கிசுகிசுத்தாள் அவள்.

இதற்குள் என்னுடைய கைகள் அவளது இடையைச் சுற்றி வழுகிச் சென்றன... ஆனல் காகினைப் பற்றிய நினைவு திடீரென்று மின்னல் போல என்னை ஒளியுறுத்தியது.

''நாம் என்ன செய்கிறோம்?..'' என்று கூவி, வலிப்பு வந்தவன் போலப் பின்னே நகர்ந்தேன். ''உங்கள் அண்ணன்... அவர் எல்லாவற்றையும் அறிவாரே... நான் உங்களைச் சந்திப்பது அவருக்குத் தெரியுமே'' என்றேன்.

ஆஸ்யா நாற்காலியில் சாய்ந்தாள்.

''ஆமாம்'' என்று எழுந்து அறையின் மறு மூலைக்குப் போனேன். ''உங்கள் தமையனருக்கு எல்லாம் தெரியும்... அவருக்கு எல்லாவற்றையும் சொல்லுவது எனக்கு அவசியம் ஆகி விட்டது.''

''அவசியம் ஆகி விட்டதா?'' என்று தெளிவின்றி மொழிந்தாள் அவள். இன்னும் தன்னிலைக்கு வர அவளால் முடியவில்லை போலும், என் சொற்களை அவள் நன்ருகப் புரிந்து கொள்ளவில்லை போலும் இருந்தது.

''ஆம், ஆம்'' என்று ஒரு வகைக் கசப்புடன் சொன்னேன். ''இதற்கு நீங்கள் ஒருவர்தாம் பொறுப்பாளி. நீங்கள் ஒருவர்தாம். உங்கள் இரகசியத்தை நீங்களே எதற்காக வெளியிட்டீர்கள்? உங்கள் தமையனருக்கு எல்லாவற்றையும் தெரிவிக்கும்படி உங்களை யார் கட்டாயப்படுத்

தினார்கள்? இன்று அவர் தாமே என் வீட்டுக்கு வந்து தம்முடன் நடந்த உங்கள் உரையாடலை எனக்குத் தெரிவித்தார்.'' நான் ஆஸ்யாவைப் பார்க்காதிருக்க முயன்றவாறு அகல அடிகள் எடுத்து வைத்து அறையில் நடந்தேன். ''இப்போது எல்லாம் பாழாகி விட்டது, எல்லாம், எல்லாம்.''

ஆஸ்யா நாற்காலியிலிருந்து எழுந்திருக்கப் பார்த்தாள்.

''இருங்கள்'' என்று கூவினேன். ''இருங்கள், உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். உங்களோடு பேசுபவன் நேர்மையுள்ளவன்—ஆம், நேர்மையுள்ளவன். ஆனால் தயை செய்து சொல்லுங்கள், உங்களை எது கலவரப்படுத்தியது? என்னிடம் ஏதாவது மாறுதலைக் கண்டீர்களா? உங்கள் தமையனார் இன்று என் வீட்டுக்கு வந்த போது அவரிடம் உண்மையை மறைக்க என்னால் முடியவில்லை.''

''என்ன நான் இப்படிப் பேசிக் கொண்டிருக்கிறேன்?'' என்று என்னைப் பற்றி எண்ணமிட்டேன். நான் ஒழுக்கம் கெட்ட வஞ்சகன், காகின் எங்கள் சந்திப்பு பற்றி அறிவான், எல்லாம் திரிக்கப்பட்டு விட்டது, வெளியாகி விட்டது என்ற எண்ணம் என் மூளையில் இடையறாது ஒலித்துக் கொண்டிருந்தது.

''அண்ணனை நான் அழைக்கவில்லை. அவன் தானே வந்தான்'' என்று ஆஸ்யா அச்சத்துடன் கிசுகிசுத்தாள்.

''நீங்கள் என்ன செய்து விட்டீர்கள், பாருங்களேன்'' என்று தொடர்ந்தேன். ''இப்போது இங்கிருந்து வெளியேற விரும்புகிறீர்கள்...''

''ஆம், நான் வெளியேற வேண்டும்'' என்று முன்போலவே தணிந்த குரலில் சொன்னாள்

அவள். ''நான் உங்களை இங்கே வரச் சொன்னது உங்களிடம் விடை பெறுவதற்காகத்தான்.''

''உங்களைப் பிரிவது எனக்கு எளிதாய் இருக்கும் என்று நினைக்கிறீர்களோ?'' என்றேன்.

''ஆனால் அண்ணனிடம் நீங்கள் எதற்காகத் தான் சொன்னீர்கள்?'' என்று விளங்காமல் மறு படி கேட்டாள் அவள்.

''நான்தான் சொல்லுகிறேன், வேறு விதமாக நடந்து கொள்ள என்னால் முடியவில்லை என்று. நீங்களே உங்களைக் காட்டிக் கொடுத்திரா விட்டால்...''

''நான் என் அறையை உள்ளே பூட்டிக் கொண்டிருந்தேன்'' என்று எளிமையாகக் கூறினாள் அவள். ''என் வீட்டுக்காரியிடம் மறு சாவி இருந்தது எனக்குத் தெரியாது...''

இந்தக் குற்றமற்ற மன்னிப்பு, அவள் வாயில், அந்தக் கணத்தில், எனக்கு அனேகமாகக் கோப மூட்டியது... இப்போதோ உளக்கனிவு இல்லாமல் இதை நினைத்துப் பார்க்க என்னால் முடியவில்லை. பாவம், நேர்மையும் உண்மையும் உள்ள குழந்தை!

''ஆக இப்போது எல்லாம் தீர்ந்தது!'' என்று மீண்டும் தொடங்கினேன். ''எல்லாம். இப்போது நாம் பிரிய வேண்டும்.'' ஆஸ்யாவுக்குத் தெரியாத படி நான் அவள் மேல் கண்ணோட்டினேன்... அவளுடைய முகம் குப்பென்று சிவந்தது. அவளுக்கு வெட்கமும் அச்சமும் ஒருங்கே உண்டாயின, இதை நான் உணர்ந்தேன். நானும் நடந்து கொண்டே காய்ச்சல்காரன் போலப் பேசினேன். ''முதிரத் தொடங்கி இருந்த உணர்ச்சிக்கு நீங்கள் வளர இடம் தரவில்லை. நீங்களே நம் தொடர்பை அறுத்து விட்டீர்கள். என்மேல் உங்களுக்கு

நம்பிக்கை உண்டாகவில்லை, நீங்கள் என்னைச் சந்தேகித்தீர்கள்...''

நான் பேசிக் கொண்டிருந்த போது ஆஸ்யா மேலும் மேலும் அதிகமாக முன்னே சாய்ந்து கொண்டு போனாள். திடீரென்று அவள் விழுந்து முழந்தாள் படியிட்டு, தலையைக் கைகளில் புதைத்துக் கொண்டு தேம்பி அழத் தொடங்கினாள். நான் அவளிடம் ஓடி அவளைத் தூக்க முயன்றேன், ஆனால் அவள் இடங்கொடுக்கவில்லை. பெண்களின் கண்ணீரை என்னால் தாங்க முடிவதில்லை. அதைக் கண்டதும் எனக்கு உடனே நிலை தடுமாறி விடுகிறது.

''ஆன்னா நிக்கலாயெவ்னா, ஆஸ்யா, தயை செய்யுங்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். நிறுத்துங்கள், தயவு செய்து...'' நான் அவள் கையை மறுபடி பிடித்துக் கொண்டேன்...

ஆனால் என்னை ஒரேயடியாகத் திகைப்பில் ஆழ்த்தியவாறு அவள் திடுமெனத் துள்ளி எழுந்து மின் வேகத்தில் கதவை நோக்கிப் பாய்ந்து மறைந்து விட்டாள்...

சில நிமிடங்கள் பொறுத்து பிராவு லுயிஸே அறைக்குள் வந்த போது நான் அறையின் நட்ட நடுவிலேயே இடியால் தாக்குண்டவன் போல் நின்று கொண்டிருந்தேன். இந்தச் சந்திப்பு இவ்வளவு சீக்கிரம், இவ்வளவு அசட்டுத் தனமாக முடிவது எப்படிச் சாத்தியம் ஆயிற்று என்று எனக்குப் புரியவில்லை. அதிலும் சொல்ல விரும்பியதில், நான் கட்டாயம் சொல்லி இருக்க வேண்டியதில், நூறில் ஒரு பகுதி கூடச் சொல்லாத நிலையில், அதன் முடிவு என்ன ஆகும் என்று நானே அறிந்திராத போது...

''பிரெய்லெய்ன் போய்விட்டாளா?'' என்று

தனது மஞ்சள் புருவங்களைப் பொய்த் தலைமுடி வரையில் உயர்த்தி வினவினாள் பிராவு லுயிஸே.

நான் அசடன் போல அவளைப் பார்த்து விட்டு வெளியேறினேன்.

## 17

சிற்றூரிலிருந்து வெளியேறி நேரே திடலுக்கு நடந்தேன். எரிச்சல், வெறி நிறைந்த எரிச்சல் என்னை அரித்துப் பிடுங்கியது. என் மேல் நிந்தைகளைப் பொழிந்து கொண்டேன். எங்கள் சந்திப்பு இடத்தை மாற்றும்படி ஆஸ்யாவைக் கட்டாயப் படுத்திய காரணத்தைப் புரிந்து கொள்ளாதிருக்க என்னால் எப்படி முடிந்தது? இந்தக் கிழவியிடம் வருவது அவளுக்கு எவ்வளவு கடினமாய் இருந்தது என்பதை மதிக்காமல் இருக்க எப்படி முடிந்தது? அவளை நான் எப்படித் தடுத்து நிறுத்தாமல் இருந்தேன்? அந்த அத்துவானமான, அனேகமாக இருண்ட அறையில் அவளை என்னிடமிருந்து நெட்டித் தள்ள, கடிந்து கொள்ளக் கூட, என்னிடம் போதிய வலிமை இருந்தது, போதிய நெஞ்சு உரம் இருந்தது... இப்போதோ, அவளுடைய உருவம் என்னைப் பின் தொடர்ந்தது. நான் அவளிடம் மன்னிப்பு கேட்டேன்; அந்த வெளிறிய முகத்தையும் கண்ணீர் மல்கிய, கூச்சமுள்ள விழிகளையும் வளைந்த பின் கழுத்தில் வளர்ந்த ரோமங்களையும் என் மார்பின் மேல் அவளது தலையின் மெல்லிய ஸ்பரிசத்தையும் நினைத்துப் பார்த்த பொழுது என் உள்ளம் காந்தியது. ''உங்களுடையவள்'' என்ற அவளது கிசுகிசுப்பு எனக்குக் கேட்டது. ''நான் மனச் சான்றுக்கு இணங்க நடந்து கொண்டேன்'' என்று எனக்கு நம்பிக்கை ஊட்ட

முயன்றேன். உண்மை அல்ல! நிச்சயமாக இந்த மாதிரி விளைவை நான் விரும்பினேனு? அவளைப் பிரியும் நிலைமையில் நான் இருக்கிறேனு என்ன? அவளை இழக்க என்னுல் முடியுமா? ''அறிவு கெட்டவனே! அறிவு கெட்டவனே!'' என்று வன்மத்தோடு திருப்பித் திருப்பிச் சொன்னேன்...

இதற்குள் இரவு வந்து விட்டது. ஆஸ்யா வசித்த வீட்டை நோக்கிப் பெரிய எட்டுகள் வைத்து நடந்தேன்.

## 18

காகின் வெளியே வந்து என்னை எதிர் கொண்டான்.

''என் தங்கையைப் பார்த்தீர்களா?'' என்று தொலைவிலிருந்து என்னை நோக்கிக் கத்தினுன்.

''அவள் வீட்டில் இல்லையா என்ன?'' என்று கேட்டேன்.

''இல்லை.''

''அவள் திரும்பவில்லையா?''

''இல்லை. நான் குற்றவாளி'' என்று பேச்சைத் தொடர்ந்தான் காகின். ''பொறுத்திருக்க என்னுல் முடியவில்லை. நாம் பேசிக் கொண்டதற்கு மாருகப் பிரார்த்தனைக் கூடம் போனேன். அங்கே அவள் இல்லை. ஆகவே, அவள் வரவில்லையா?''

''அவள் பிரார்த்தனைக் கூடத்தின் பக்கம் போகவில்லை.''

''நீங்களும் அவளைப் பார்க்கவில்லையா?''

நான் அவளைப் பார்த்ததாக ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

''எங்கே?''

''பிராவு லுயிஸே வீட்டில். ஒரு மணி நேரத்

துக்கு முன்னால் அவளை விட்டுப் பிரிந்தேன். அவள் வீடு திரும்பி இருப்பாள் என்று உறுதியாக எண்ணினேன்.''

''பொறுத்துப் பார்ப்போம்'' என்றான் காகின்.

நாங்கள் வீட்டுக்குள் போய் அக்கம் பக்கமாக உட்கார்ந்தோம். நாங்கள் பேசவில்லை. எங்கள் இருவருக்கும் மிகச் சங்கடமாக இருந்தது. நாங்கள் ஓயாமல் இங்கும் அங்கும் பார்வை செலுத்தினோம், வாயிற் புறம் பார்த்தோம், உற்றுக் கேட்டோம். முடிவில் காகின் எழுந்தான்.

''இது படு மோசம்!'' என்று சள்ளைப்பட்டான். ''எனக்கு மனதை என்னவோ செய்கிறது. இவள் என்னைச் சாக அடித்து விடுவாள், சத்தியமாக... வாருங்கள், போய் அவளைத் தேடுவோம்.''

நாங்கள் கிளம்பினோம். வெளியே அதற்குள் நன்றாக இருட்டி விட்டது.

''நீங்களும் அவளும் எதைப் பற்றிப் பேசினீர்கள்?'' என்று தொப்பியைக் கண்களுக்கு மேல் இழுத்து விட்டுக் கொண்டு என்னிடம் கேட்டான் காகின்.

''நான் அவளோடு ஐந்தே நிமிடங்கள் தான் இருந்தேன். நாம் முடிவு செய்து கொண்டபடியே நான் அவளிடம் பேசினேன்.''

''ஒன்று சொல்லட்டுமா?'' என்றான் காகின். ''நாம் வெவ்வேறு பக்கமாகப் போவது மேல். அப்போது அதிக விரைவில் அவளைச் சந்திக்க நம்மால் முடியும். என்ன ஆனாலும் ஒரு மணி நேரம் பொறுத்து இங்கே வாருங்கள்.''

## 19

கொடிமுந்திரித் தோட்டத்திலிருந்து தடதடவென்று இறங்கி ஊருக்குப் பாய்ந்து சென்

றேன். எல்லா வீதிகளையும் விரைவாகச் சுற்றி வந்தேன், எங்கும் கண்ணோட்டினேன், பிராவு லுயிஸேயின் சாளரத்துக்குள் கூடப் பார்வை செலுத்தினேன். பின்பு ரைன் ஆற்றுக்குத் திரும்பிக் கரையோரமாக ஓடினேன்... பெண் உருவங்கள் எப்போதாவது என் பார்வையில் பட்டன, ஆனால் ஆஸ்யா எங்கும் காணப்படவில்லை. இப்போது என்னை அரித்துப் பிடுங்கியது எரிச்சல் மட்டும் அல்ல. மறைமுக அச்சம் என்னைக் கூறுகளாக வகிர்ந்தது. நான் அச்சத்தை மட்டுமே உணரவில்லை... இல்லை, கழிவிரக்கத்தையும் மிகக் கொடிய வருத்தத்தையும் காதலையும் உணர்ந்தேன்—ஆம்! மிக மிகக் கனிந்த காதலை. கைகளை நெரித்தேன், கவிந்திருந்த இரவின் இருட்டுக்கு நடுவில் ஆஸ்யாவைக் கூவி அழைத்தேன், முதலில் தணிந்த குரலிலும் பின்பு வர வர முன்னிலும் உரக்கவும். நான் அவளைக் காதலிக்கிறேன் என்று நூறு தரம் திருப்பிச் சொன்னேன். ஒருபோதும் அவளைப் பிரிய மாட்டேன் என்று ஆணை இட்டேன். அவளுடைய சில்லிட்ட கரத்தை மீண்டும் பிடித்துக் கொள்வதற்காக, அவளுடைய தணிந்த குரலை மறுபடி கேட்பதற்காக, அவளை மீண்டும் கண் முன் காண்பதற்காக உலகில் உள்ளவை எல்லாவற்றையும் நான் தாராளமாகக் கொடுத்திருப்பேன்... அவள் அவ்வளவு அருகில் இருந்தாள். முழு உறுதியுடன், அறவே மாசற்ற உள்ளத்துடனும் உணர்ச்சிகளுடனும் அவள் என்னிடம் வந்தாள். தீண்டப்படாத தனது இளமையை எனக்குக் கொண்டு வந்தாள்... நானோ, அவளை என் மார்புற அணைத்துக் கொள்ளவில்லை. பேருவகையின் களிப்பாலும் அரவமின்மையாலும் அவளது இனிய முகம் மலர்வதைக் காணும் பேரின்பத்தை

நான் இழந்துவிட்டேன்... இந்த எண்ணம் என்னை வெறி கொள்ளச் செய்தது.

''அவள் எங்கே போயிருக்க முடியும்? அவள் தனக்கு என்ன செய்து கொண்டு விட்டாள்?'' என்று வலுவற்ற ஆத்திரத்தால் உண்டான ஏக்கத்தில் கூவினேன்... ஆற்றின் கரை மேலேயே வெள்ளையாக ஏதோ ஒன்று திடீரெனப் பளிச்சிட்டது. அந்த இடத்தை நான் அறிந்திருந்தேன். சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன் மூழ்கி இறந்த ஒரு மனிதனுடைய கல்லறைக்கு மேலே, பாதி தரையில் புதைந்த கற்சிலுவை நின்றது, பழங்கால வாசகம் அதில் பொறித்திருந்தது. என் நெஞ்சு விழுந்து போயிற்று... நான் சிலுவையின் பக்கம் ஓடினேன். வெள்ளை உருவம் மறைந்து விட்டது. ''ஆஸ்யா!'' என்று கத்தினேன். என்னுடைய காட்டுக் குரல் எனக்கே திகில் ஊட்டியது. ஆனால் ஒருவரும் பதில் குரல் கொடுக்கவில்லை...

காகின் அவளைக் கண்டானா என்று தெரிந்து கொள்ள முடிவு செய்தேன்.

## 20

கொடிமுந்திரித் தோட்டப் பாதையில் விரைவாக ஏறியபோது ஆஸ்யாவின் அறையில் விளக்கு வெளிச்சத்தைக் கண்டேன்... இதனால் எனக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது.

வீட்டை நெருங்கினேன். கீழ்க் கதவு பூட்டி இருந்தது. தட்டினேன். வெளிச்சமற்ற கீழ்மாடி அறையின் சன்னல் எச்சரிக்கையுடன் திறக்கப் பட்டது. காகினுடைய தலை தெரிந்தது.

''கண்டீர்களா?'' என்று கேட்டேன்.

''திரும்பி வந்து விட்டாள்'' என்று அவன்

கிசுகிசுத்தான். ''தன் அறையில் உடை மாற்றிக் கொண்டிருக்கிறாள். எல்லாம் சீர்பட்டு விட்டது.''

''நல்ல வேளை!'' என்று சொல்ல முடியாத மகிழ்ச்சிப் பெருக்குடன் கூவினேன். ''நல்ல வேளை! இப்போது எல்லாம் நல்லபடி முடிந்து விட்டது. ஆனால் ஒன்று கேளுங்கள்: நாம் இன்னும் பேச வேண்டும்.''

''வேறு நேரத்தில்'' என்று சன்னல் கதவை ஓசையின்றி உள்ளே இழுத்தவாறு சொன்னான் அவன். ''வேறு நேரத்தில். இப்போது, விடை பெறுங்கள்.''

''நாளை சந்திப்போம். நாளைக்கு எல்லாம் முடிவாகி விடும்'' என்று கூறினேன்.

''விடை பெறுங்கள்'' என்று திருப்பிச் சொன்னான் காகின். சன்னல் கதவு தாழ்ப்பாள் இடப்பட்டது.

சன்னல் கதவைத் தட்டக் கை எடுத்தேன். உன் தங்கையை மனைவி ஆக்கிக் கொள்ள அனுமதி என்று காகினிடம் அப்போதே கேட்க நினைத்தேன். ஆனால் அந்த மாதிரி நேரத்தில் அந்த மாதிரி மணப் பேச்சு... ''நாளைவரை பொறுப்போம், நாளை நான் இன்பம் பெறுவேன்...'' என்று எண்ணினேன்.

நாளை நான் இன்பம் பெறுவேனும்! இன்பத்துக்கு நாளை கிடையாது; அதற்கு நேற்றும் கிடையாது. கடந்த காலத்தை அது நினைவு கூர்வதில்லை, வருங்காலத்தைப் பற்றிச் சிந்திப்பதில்லை. அதற்கு நிகழ்காலம்தான் உண்டு. அதுவும் நாள் அல்ல, நொடிப் போது.

ஸி. சிற்றூரை எப்படி அடைந்தேன் என்பது எனக்கு நினைவில்லை. என்னை நடத்திச் சென்றவை கால்கள் அல்ல, என்னை அக்கரை சேர்த்தது படகு

அல்ல. என்னைத் தூக்கின அகலமான, வலிய இறக்கைகள். அன்றில் பாடிக் கொண்டிருந்த புதரின் அருகாகச் சென்ற நான் நின்று நெடு நேரம் இசையைச் செவி மடுத்தேன். எனது காதலையும் என்னுடைய இன்பத்தையும் பற்றி அது பாடியதாக எனக்குத் தோன்றியது.

## 21

மறுநாள் காலையில் நான் பழக்கமான வீட்டை நெருங்கிய போது, எல்லாச் சன்னல்களும் வாயிற் கதவும் விரியத் திறந்திருந்தன. நிலைக்கு முன்னே எவையோ காகிதங்கள் கிடந்தன. இந்தச் சூழ்நிலை எனக்கு அதிர்ச்சி அளித்தது. பணிப்பெண் துடைப்பமும் கையுமாக வாயிற்கதவுக்கு மறுபுறம் தென் பட்டாள்.

நான் அவள் அருகே போனேன்...

காகின் வீட்டில் இருக்கிறாளா என்று நான் கேட்பதற்கு முன்பே, ''போய் விட்டார்கள்!'' என்று கண்ணீர்க் குரலில் அறிவித்தாள்.

''போய் விட்டார்களா?.. எப்படிப் போய் விட்டார்கள்? எங்கே?'' என்று கேட்டேன்.

''இன்று காலை ஆறு மணிக்குப் போய் விட்டார்கள். எங்கே என்று சொல்லவில்லை. இருங்கள், நீங்கள் திருவாளர் என். அல்லவா?''

''ஆமாம்.''

''உங்களுக்குக் கடிதம் இருக்கிறது எஜமானியிடம்.'' பணிப்பெண் மேலே போய், கடிதத்துடன் திரும்பினாள். ''இதுதான். இந்தாருங்கள்.''

''இது நடக்க முடியாது... எப்படி இந்த மாதிரி?'' என்று தொடங்கினேன்.

பணிப்பெண் விளங்காமையுடன் என்னை

நோட்டமிட்டுவிட்டுப் பெருக்குவதில் ஈடுபட்டாள்.

நான் கடிதத்தைப் பிரித்தேன். எனக்கு எழுதி இருந்தான் காகின். ஆஸ்யாவிடமிருந்து ஒரு வரி கூட இல்லே. தான் திடீரென்று புறப்பட்டுப் போவதற்காகக் கோபித்துக் கொள்ளாதிருக்கும் படி கேட்டுக் கொண்டு அவன் கடிதத்தைத் தொடங்கி இருந்தான். நிதானமாகச் சிந்தித்துப் பார்த்த பின், நான் அவனுடைய முடிவை ஒப்பு வேன் என்று நம்பிக்கை தெரிவித்திருந்தான். சிக்கலும் ஆபத்தும் உள்ளது ஆகி இருக்கக் கூடிய நிலேமையிலிருந்து மீள்வதற்கு வேறு வழி அவனுக்குத் தெரியவில்லேயாம். அவன் எழுதி இருந்தான்: ''நேற்று மாலேயில் ஆஸ்யாவை எதிர் பார்த்து நாம் காத்துக் கொண்டிருந்த போது, பிரிவின் இன்றியமையாமையை நான் முடிவாகக் கண்டு கொண்டேன். சில காழ்ப்புக்கள் உள்ளன, அவற்றை நான் மதிக்கிறேன். ஆஸ்யாவை மணப் பது உங்களுக்கு முடியாது என்பது எனக்குப் புரி கிறது. எல்லா விவரங்களேயும் அவள் எனக்குச் சொன்னுள். அவள் மறுபடி மறுபடி வற்புறுத்தி வேண்டிக் கொண்டதற்கு இணங்குவது அவ ளுடைய அமைதியின் பொருட்டு எனக்கு அவசியம் ஆகி விட்டது.'' எங்கள் பழக்கம் இப்படி விரை வில் இடைமுறிந்து போனதற்குக் கடிதத்தின் முடிவில் அவன் வருத்தம் தெரிவித்திருந்தான். என் நலத்தை விழைவதாகவும் என் கையை நட்புடன் குலுக்குவதாகவும் கூறித் தங்களேத் தேட முயல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டிருந் தான்.

''எந்த மாதிரிக் காழ்ப்புக்கள்?'' என்று, அவ ஞல் என் சொற்களேக் கேட்க முடியும் போலக்

கூப்பாடு போட்டேன். ''என்ன வெட்கக்கேடு இது! அவளை என்னிடமிருந்து கடத்திச் செல்ல யார் உரிமை கொடுத்தார்கள்...'' நான் தலையைப் பிடித்துக் கொண்டேன்...

பணிப்பெண் வீட்டுக்காரியை உரக்கக் கூவி அழைக்கத் தலைப்பட்டாள். அவளுடைய திகிலைக் கண்டு நான் தன்னிலைக்கு வந்தேன். அவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும், என்ன ஆனாலும் சரி, தேடிக்காணுமல் இருக்கக் கூடாது என்ற ஓர் எண்ணம் என் உள்ளத்தில் தீவிரமாக எழுந்தது. இந்த அடியை ஏற்றுக் கொள்வது, இத்தகைய முடிவுக்கு இணங்குவது இயலாததாக இருந்தது. அவர்கள் காலை ஆறு மணிக்கு நீராவிப் படகில் ஏறி ரைன் ஆற்றுப் பெருக்கின் போக்கில் சென்ற தாக வீட்டுக்காரி தகவல் தெரிவித்தாள். நான் பயண அலுவலகம் சென்றேன். அவர்கள் கியோல்ன் நகரத்துக்கு டிக்கட்டு வாங்கியதாக அங்கே சொன்னார்கள். உடனே சாமான்களை எடுத்துக் கொண்டு அவர்களைப் பின்பற்றும் நோக்கத்துடன் நான் வீட்டுக்குப் போனேன். பிராவு லுயிஸேயின் வீட்டுக்கு அருகாக நான் செல்ல நேர்ந்தது... யாரோ என்னைக் கூவி அழைப்பது திடீரென்று என் காதில் பட்டது. நான் தலையை நிமிர்த்தியவன், தலைக்குநாள் ஆஸ்யாவை நான் சந்தித்த அதே அறையின் சன்னல் அருகே புர்கோமிஸ்டரின் விதவையைக் கண்டேன். தன் அருவருப்பூட்டும் புன்னகையுடன் அவள் என்னை அழைத்தாள். நான் முகத்தைத் திருப்பிக் கொண்டு மேலே நடக்கலானேன், ஆனால் தன்னிடம் எனக்காக ஏதோ இருக்கிறதுஎன்று அவள் கத்தினாள். இந்தச் சொற்கள். என்னைத் தடுத்தன. நான் அவள் வீட்டுக்குள் போனேன். அந்த

நோட்டமிட்டுவிட்டுப் பெருக்குவதில் ஈடுபட்டாள்.

நான் கடிதத்தைப் பிரித்தேன். எனக்கு எழுதி இருந்தான் காகின். ஆஸ்யாவிடமிருந்து ஒரு வரி கூட இல்லை. தான் திடீரென்று புறப்பட்டுப் போவதற்காகக் கோபித்துக் கொள்ளாதிருக்கும்படி கேட்டுக் கொண்டு அவன் கடிதத்தைத் தொடங்கி இருந்தான். நிதானமாகச் சிந்தித்துப் பார்த்த பின், நான் அவனுடைய முடிவை ஒப்புவேன் என்று நம்பிக்கை தெரிவித்திருந்தான். சிக்கலும் ஆபத்தும் உள்ளது ஆகி இருக்கக் கூடிய நிலைமையிலிருந்து மீள்வதற்கு வேறு வழி அவனுக்குத் தெரியவில்லையாம். அவன் எழுதி இருந்தான்: ''நேற்று மாலையில் ஆஸ்யாவை எதிர்பார்த்து நாம் காத்துக் கொண்டிருந்த போது, பிரிவின் இன்றியமையாமையை நான் முடிவாகக் கண்டு கொண்டேன். சில காழ்ப்புக்கள் உள்ளன, அவற்றை நான் மதிக்கிறேன். ஆஸ்யாவை மணப்பது உங்களுக்கு முடியாது என்பது. எனக்குப் புரிகிறது. எல்லா விவரங்களையும் அவள் எனக்குச் சொன்னாள். அவள் மறுபடி மறுபடி வற்புறுத்தி வேண்டிக் கொண்டதற்கு இணங்குவது அவளுடைய அமைதியின் பொருட்டு எனக்கு அவசியம் ஆகி விட்டது.'' எங்கள் பழக்கம் இப்படி விரைவில் இடைமுறிந்து போனதற்குக் கடிதத்தின் முடிவில் அவன் வருத்தம் தெரிவித்திருந்தான். என் நலத்தை விழைவதாகவும் என் கையை நட்புடன் குலுக்குவதாகவும் கூறித் தங்களைத் தேட முயல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

''எந்த மாதிரிக் காழ்ப்புக்கள்?'' என்று, அவனால் என் சொற்களைக் கேட்க முடியும் போலக்

கூப்பாடு போட்டேன். ''என்ன வெட்கக்கேடு இது! அவளை என்னிடமிருந்து கடத்திச் செல்ல யார் உரிமை கொடுத்தார்கள்...'' நான் தலையைப் பிடித்துக் கொண்டேன்...

பணிப்பெண் வீட்டுக்காரியை உரக்கக் கூவி அழைக்கத் தலைப்பட்டாள். அவளுடைய திகிலைக் கண்டு நான் தன்னிலைக்கு வந்தேன். அவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும், என்ன ஆனாலும் சரி, தேடிக்காணுமல் இருக்கக் கூடாது என்ற ஓர் எண்ணம் என் உள்ளத்தில் தீவிரமாக எழுந்தது. இந்த அடியை ஏற்றுக் கொள்வது, இத்தகைய முடிவுக்கு இணங்குவது இயலாததாக இருந்தது. அவர்கள் காலை ஆறு மணிக்கு நீராவிப் படகில் ஏறி ரைன் ஆற்றுப் பெருக்கின் போக்கில் சென்ற தாக வீட்டுக்காரி தகவல் தெரிவித்தாள். நான் பயண அலுவலகம் சென்றேன். அவர்கள் கியோல்ன் நகரத்துக்கு டிக்கட்டு வாங்கியதாக அங்கே சொன்னார்கள். உடனே சாமான்களை எடுத் துக் கொண்டு அவர்களைப் பின்பற்றும் நோக்கத் துடன் நான் வீட்டுக்குப் போனேன். பிராவு லுயி ஸேயின் வீட்டுக்கு அருகாக நான் செல்ல நேர்ந் தது... யாரோ என்னைக் கூவி அழைப்பது திடீ ரென்று என் காதில் பட்டது. நான் தலையை நிமிர்த்தியவன், தலைக்குநாள் ஆஸ்யாவை நான் சந்தித்த அதே அறையின் சன்னல் அருகே புர் கோமிஸ்டரின் விதவையைக் கண்டேன். தன் அருவருப்பூட்டும் புன்னகையுடன் அவள் என்னை அழைத்தாள். நான் முகத்தைத் திருப்பிக் கொண்டு மேலே நடக்கலானேன், ஆனால் தன் னிடம் எனக்காக ஏதோ இருக்கிறதுஎன்று அவள் கத்தினாள். இந்தச் சொற்கள். என்னைத் தடுத்தன. நான் அவள் வீட்டுக்குள் போனேன். அந்த

அறையை மறுபடி கண்ட போது எனக்கு உண்டான உணர்ச்சிகளை எப்படி விவரிப்பது...

கிழவி சிறு கடிதம் ஒன்றை எனக்குக் காட்டி, ''உண்மையில், நீங்களாகவே என் வீட்டுக்கு வந்தால்தான் இந்தக் கடிதத்தை நான் உங்களிடம் கொடுக்க வேண்டும். ஆனால் நீங்கள் நிரம்ப அருமையானவர். இந்தாருங்கள்'' என்றாள்.

நான் கடிதத்தை வாங்கிக் கொண்டேன்.

சிறு காகிதத் துணுக்கில், பென்சிலால் அவசரமாகக் கிறுக்கப்பட்ட பின்வரும் சொற்கள் இருந்தன:

''விடை கொடுங்கள், நாம் இனி ஒருவரை ஒருவர் பார்க்க மாட்டோம். நான் ஊரை விட்டுப் போவது கர்வத்தினால் அல்ல. வேறு விதமாக நடந்து கொள்வது எனக்குக் கூடாது. நேற்று உங்கள் முன் நான் அழுத போது நீங்கள் ஒரு வார்த்தை—ஒரே ஒரு வார்த்தை—சொல்லி இருந்தால் நான் போகாமல் இருந்திருப்பேன். நீங்கள் அதைச் சொல்லவில்லை. இப்படி நடப்பது மேல் என்று தெரிகிறது... கடைசியாக விடை கொடுங்கள்!''

ஒரு வார்த்தை... ஓ, நான் அறிவு கெட்டவன்! இந்த வார்த்தை... நேற்று நான் இதைக் கண்ணீருடன் திரும்பத் திரும்பச் சொன்னேன், நான் இதைக் காற்றில் பறக்க விட்டேன், வெற்றுத் திடல்களின் நடுவில் இதைச் செபித்தேன்... ஆனால் நான் அதை அவளிடம் சொல்லவில்லை, அவளைக் காதலிக்கிறேன் என்று அவளிடம் நான் சொல்லவில்லை... தவிர இந்தச் சொல்லை உச்சரிக்க அப்போது எனக்கு முடிந்தும் இராது. விதியை

முடிவு செய்த அந்த அறையில் அவளைச் சந்தித்த போது எனது காதலைப் பற்றிய தெளிவான உணர்வு எனக்கு இன்னும் ஏற்படவில்லை. அவளுடைய தமையனுடன் அர்த்தமற்ற, துன்பகரமான மௌனத்தில் நான் உட்கார்ந்திருந்த போதுகூட இந்த உணர்வு விழித்துக் கொள்ளவில்லை... சில கணங்களுக்குப் பிறகு, விபத்து நேரும் வாய்ப்பினுல் திகிலடைந்து அவளைத் தேடவும் கூவி அழைக்கவும் நான் தொடங்கிய போதுதான், அடக்க முடியாத ஆற்றலுடன் அது மூண்டெரிந்தது... ஆனுல் அப்போதே நேரம் கடந்து விட்டது. ''அட இப்படி நடந்திருக்க முடியாது!'' என்று சிலர் சொல்லலாம். நடந்திருக்க முடியுமா, இல்லையா என்பதை அறியேன். இது உண்மை என்பதுதான் எனக்குத் தெரியும். ஆஸ்யாவிடம் பசப்பின் சாயலாவது இருந்திருந்தால், அல்லது அவளுடைய நிலைமை இயல்புக்கு மாருக இல்லாதிருந்தால், அவள் போயிருக்க மாட்டாள். வேறு எந்தப் பெண்ணும் தாங்கிக் கொண்டிருக்கக் கூடியதை அவளால் பொறுக்க முடியவில்லை. அவளுடைய இந்த இயல்பை நான் புரிந்து கொள்ளவில்லை. இருண்ட சன்னலுக்கு எதிரே காகினுடன் நிகழ்ந்த இறுதிச் சந்திப்பில் என் காதலைத் தெரிவிக்க நான் வாயெடுத்த போது, சொற்கள் வெளிவராதபடி என் துர்த்தேவதை தடுத்து விட்டது. விளைவாக, நான் இன்னும் பற்றிக் கொண்டிருக்கக் கூடிய கடைசித் தொடர்பும் என் கையிலிருந்து நழுவிப் போய் விட்டது.

அன்றே நான் பெட்டியும் கையுமாக ல. சிற்றூருக்குத் திரும்பிக் கியோல்ன் நகருக்குப் பயணம் செய்தேன். எனக்கு நினைவு இருக்கிறது, நீராவிப் படகு புறப்பட்டதும், இந்த வீதிகளிட

மும், இனி ஒரு போதும் நான் மறக்கக் கூடாத இந்த எல்லா இடங்களிடமும் மானசீகமாக விடை பெற்றேன். அப்போது கான்ஹெனைக் கண்டேன். கரையின் அருகே பெஞ்சியில் உட்கார்ந்திருந் தாள் அவள். அவளுடைய முகம் வெளிறி இருந் தது, ஆனால் அதில் வருத்தம் இல்லை. அழகிய இளைஞன் ஒருவன் அவள் பக்கத்தில் நின்று கொண்டு, சிரித்தவாறு எதையோ அவளுக்குச் சொல்லிக் கொண்டிருந்தான். ரைன் ஆற்றின் மறு கரையில் என் சிறு மரியம்மை பழங்கால அசோக மரத்தின் கரும் பச்சையிலிருந்து முன் போலவே துயரத்துடன் நோக்கிக் கொண்டிருந் தாள்.

## 22

கியோல்னில் காகின் குடும்பத்தாரின் தடத் தைக் கண்டுபிடித்தேன். அவர்கள் லண்டனுக்குப் போனதாக அறிந்தேன். அவர்களைப் பின்பற்றிச் சென்றேன். ஆனால் லண்டனில் என் தேட்டங்கள் பயனற்றுப் போயின. தேட்டத்தைக் கைவிட நான் நெடுங்காலம் வரை விரும்பவில்லை. நீண்ட காலம் விடாப்பிடியாக முயன்றேன், ஆனால் அவர் களை எட்டிப் பிடிக்கும் நம்பிக்கையை முடிவில் நான் கைவிட வேண்டியதாயிற்று.

அவர்களை அப்புறம் நான் பார்க்கவில்லை— ஆஸ்யாவை நான் காணவில்லை. அவளைப் பற்றிய தெளிவற்ற வதந்திகள் எனக்கு எட்டின, ஆனால் என் வரையில் அவள் என்றென்றைக்கும் மறைந்து விட்டாள். அவள் உயிரோடு இருக்கிறாளா என் பது கூட எனக்குத் தெரியாது. சில ஆண்டுகள் கழிந்த பிறகு ஒரு தரம், வெளி நாட்டில், ரயில்

பெட்டி ஒன்றில் ஒரு மாதை நான் மேலோட்ட மாகப் பார்த்தேன். அவளுடைய முகம் மறக்க முடியாத அமைப்புக் கூறுகளை அப்படியே எனக்கு நினைவுபடுத்தியது... ஆனால் ஒருவேளை, தற்செய லான முக ஒற்றுமையால் நான் ஏமாற்றப்பட் டேன் போலும். என் வாழ்க்கையின் மிகச் சிறந்த பருவத்தில் நான் அறிந்த அதே சிறுமியாக, தாழ் வான மர நாற்காலியின் முதுகில் சாய்ந்திருந்த பாங்கில் நான் கடைசித் தடவை பார்த்த அதே பெண்ணாக, ஆஸ்யா என் நினைவில் பதிந்திருக் கிறாள்.

ஆயினும், நான் அவளுக்காக மட்டுமீறி நீண்ட காலம் ஏங்கிக் கொண்டிருக்கவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆஸ்யாவுடன் என்னைப் பிணைக்காமல் விதி எனக்கு நன்மை செய் திருக்கிறது என்று கூட நான் நினைத்தேன். அந்த மாதிரி மனைவியோடு நான் ஒருவேளை இன்பம் பெற்றிருக்க மாட்டேன் என்ற எண்ணத்தால் என் னைத் தேற்றிக் கொண்டேன். அப்போது நான் இளைஞனாய் இருந்தேன். வருங்காலம்—இந்தக் குறுகிய, விரைந்த வருங்காலம்—எல்லையற்ற தாக எனக்குத் தோன்றியது. நடந்தது மறுபடி நிகழ முடியாதா, இன்னும் மேலாக, இன்னும் நேர்த்தியாக?.. மற்ற மாதர்களோடு நான் பழ கினேன். ஆனால் ஆஸ்யா எனக்குள் எழுப்பிய உணர்ச்சி—கனல் வீசிய, மென்மையான, ஆழ்ந்த உணர்ச்சி—அதன் பின் மறுபடி ஏற்படவில்லை. இல்லை! ஒரு காலத்தில் காதலுடன் என்னை நோக் கிய அந்த விழிகளுக்கு எந்த விழிகளும் என் கருத் தில் இணையாகவில்லை, என் மார்போடு ஒன்றிய எந்த இதயத்துக்கும் அத்தகைய களி பொங்கும் இனிய கிளர்ச்சியுடன் என் இதயம் எதிரொலிக்க

வில்லை! மனைவி மக்கள் இல்லாத ஒண்டிக் கட்டை யாகத் தனிமையில் உழல விதிக்கப்பட்டிருக்கும் நான், சலிப்புடன் ஆண்டுகளை ஓட்டிக் கொண் டிருக்கிறேன். ஆனால் அவளுடைய கடிதங்களையும் சருகு ஆகி விட்ட ஜெரேனியம் மலரையும் புனிதப் பொருள்களாகக் காப்பாற்றி வருகிறேன். ஒரு காலத்தில் சன்னலிலிருந்து அவள் எனக்குப் போட்ட அதே மலர் இது. மெல்லிய நறுமணத்தை அது இன்றுவரை வீசுகிறது. ஆனால் அதை எனக்கு அளித்த கரம்—ஒரு தரம் மட்டுமே என் இதழ் களோடு அழுத்திக் கொள்ள எனக்கு வாய்த்த அந்தக் கரம்—ஒருவேளை வெகு காலமாகவே கல் லறையில் மட்கிக் கொண்டிருக்கிறது போலும்... அதோடு நானே கூட—நான் என்ன ஆகி இருக் கிறேன்? என்னிடம் இருந்ததில்—பேரின்பமும் கல வரமும் நிறைந்த அந்த நாட்களில், சிறகடித்துப் பறந்த அந்த நம்பிக்கைகள், விழைவுகளில்— என்ன எஞ்சி இருக்கிறது? இவ்வாறு, அற்பப் புல் லின் மெல்லிய ஆவி மனிதனுடைய எல்லா மகிழ்ச்சிகளையும் எல்லாத் துயரங்களையும் விட அதிகக் காலம் வாழ்ந்திருக்கிறது, மனிதனையே விட அதிகக் காலம் உயிர்த்திருக்கிறது.

*1858*

**பா. வ. ஆன்னென்கோவுக்குச் சமர்ப்பணம்***

விருந்தாளிகள் வெகு நேரத்துக்கு முன்பே தங்கள் தங்கள் வீடுகளுக்குப் போய் விட்டார்கள். மணி ஒன்றரை ஆகி விட்டது. வீட்டுக்காரரும் செர்கேய் நிக்கலாயெவிச்சும் விளதீமிர் பெத்ரோவிச்சும் மட்டும் அறையில் எஞ்சி இருந்தார்கள்.

வீட்டுக்காரர் மணி அடித்து வேலையாளை அழைத்து இரவுச் சாப்பாட்டு மிச்சங்களை அகற்றும்படி உத்தரவிட்டார்.

சாய்வு நாற்காலியில் முன்னிலும் ஆழ்ந்து வசதியாக அமர்ந்து சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, ''ஆக இந்தக் காரியம் ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டு விட்டது'' என்று பேச்சைத் தொடங்கினார். ''நம்மில் ஒவ்வொருவரும் தம் முதல் காதல் பற்றிய கதையைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். முறை உங்களுடையது, செர்கேய் நிக்கலாயெவிச்.''

---

* ''பிபிளியாத்தேக்கா திலியா ச்தேனியா'' (வாசகர் நூலகம்) சஞ்சிகையின் 1860ம் ஆண்டு மார்ச்சு மாத இதழில் வெளியான இந்தக் குறுநாவல் ருஷ்ய இலக்கிய விமர்சகர், நினைவுக் குறிப்பாளர் பாவேல் ஆன்னென்கோவுக்குச் (1813—1887) சமர்ப்பிக்கப்பட்டது.

உப்பிய வெளிர் முகம் கொண்ட உருண்டை மனிதரான செர்கேய் நிக்கலாயெவிச் முதலில் வீட்டுக்காரரைப் பார்த்தார், பின்பு விழிகளை விட்டத்தின் பக்கம் உயர்த்தினுர்.

''எனக்கு முதல் காதல் இருக்கவில்லை'' என்று முடிவில் கூறினுர் அவர். ''நான் நேரே இரண்டாவது காதலிலிருந்து தொடங்கினேன்.''

''அது எப்படியோ?''

''வெகு இயல்பாக. எனக்குப் பதினெட்டு வயது ஆன போது மிகவும் இனிய உயர்குடி மங்கை ஒருத்தியுடன் சரசமாடினேன். ஆனுல் இந்த விவகாரம் எனக்குப் புதியதல்ல போல அவளை உபசரித்து நைச்சியம் பண்ணினேன். பிறகு மற்றவர்களை எப்படி நைச்சியம் பண்ணினேனே அப்படியே. உள்ளதைச் சொன்னுல், சுமார் ஆறு வயதில் என் சொந்தச் செவிலியின் மேல் முதன் முறையும் கடைசி முறையுமாக நான் காதல் கொண்டேன். ஆனுல் இது நடந்து வெகு காலம் ஆகி விட்டது. எங்கள் உறவு பற்றிய விவரங்கள் என் நினைவிலிருந்து அழிந்து போய் விட்டன. அப்படியே அவற்றை நான் நினைவு வைத்திருந்தாலும் யாருக்கு அவற்றில் சுவை ஏற்பட முடியும்?''

''அப்படிச் சொன்னுல் எப்படி?'' என்ருர் வீட்டுக்காரர். ''என்னுடைய முதல் காதலிலும் சுவாரசியமானது குறைவு. என் இப்போதைய மனைவி ஆன்னு இவானவ்னுவை அறிமுகம் செய்து கொள்வதற்கு முன் நான் யார் மேலும் காதல் கொள்ளவில்லை. எங்கள் காரியங்களும் எல்லாம் ஒரு விதத்தடையும் இல்லாமல் நன்ருக நடந்தேறின. எங்கள் தகப்பனுர்கள் மணப் பேச்சு நடத்தினுர்கள், நாங்கள் மிக விரைவில் ஒருவர் மேல் ஒருவர் காதல் கொண்டோம், இழுத்தடிக்காமல்

சட்டென்று மணம் செய்து கொண்டோம். என் கதை இரண்டே சொற்களில் சொல்லப்பட்டு விடும். முதல் காதல் பற்றிய பிரச்சினையை நான் கிளப்பிய போது, மணம் செய்து கொள்ளாத, முதியவர்கள் ஆகா விட்டாலும் இளமையைக் கடந்து விட்ட, உங்களை நம்பி இருந்தேன் என்று ஒப்புக் கொள்கிறேன். விளதீமிர் பெத்ரோவிச், நீங்கள் எங்களுக்கு எதனுலாவது மகிழ்ச்சி ஊட்டுவீர்களா?''

''என்னுடைய முதல் காதல் வழக்கத்துக்கு ஓரளவு மாருனவற்றை உண்மையில் சேர்ந்தது'' என்று தயக்கத்துடன் பதில் அளித்தார் விள தீமிர் பெத்ரோவிச். நரையோடிய கரு முடியரான அவருக்கு நாற்பது வயது இருக்கும்.

''ஆ!'' என்று ஒரே குரலில் கூவினுர்கள் வீட்டுக் காரரும் செர்கேய் நிக்கலாயெவிச்சும். ''அப் படியானுல் இன்னும் நல்லது... சொல்லுங்கள்.''

''நல்லது, கேளுங்கள்... அல்லது, வேண் டாம். நான் கதை சொல்லப் போவதில்லை. கதை சொல்லுவதில் நான் தேர்ந்தவன் அல்ல. ஒன்ரு வறண்டதாகவும் சுருக்கமானதாகவும் இருக்கும், இல்லாவிட்டால் நீண்டு வளர்ந்ததாக, கட்டுக் கதையாகப் போய் விடும். நீங்கள் அனுமதித்தால் நினைவில் இருப்பதை எல்லாம் நோட்டுப் புத் தகத்தில் எழுதி உங்களுக்குப் படித்துக் காட்டு கிறேன்.''

நண்பர்கள் முதலில் இசையவில்லை. ஆனுல் விளதீமிர் பெத்ரோவிச் தம் எண்ணத்தில் உறுதி யாக இருந்தார். இரண்டு வாரங்கள் கழித்து அவர்கள் மறுபடி கூடினுர்கள். விளதீமிர் பெத் ரோவிச் சொன்ன சொல்லை நிறைவேற்றினுர்.

அவருடைய நோட்டுப் புத்தகத்தில் எழுதி யிருந்த கதை இது:

1

அப்பொழுது எனக்குப் பதினறு வயது. இது நடந்தது 1833ம் ஆண்டுக் கோடையில்.

நான் மாஸ்கோவில் என் பெற்ருேருடன் வாழ்ந்து வந்தேன். கலூழ்ஸ்கயா வாயில் அருகே, நிஸ்கூச்னி பூங்காவுக்கு எதிரே அவர்கள் ஒரு கோடைகால நகர்ப்புற விடுதியை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்தார்கள். நான் பல்கலைக் கழகத்தில் சேர்வதற்கு ஆயத்தம் செய்து கொண் டிருந்தேன், ஆனல், அவசரப்படாமல், மிகக் கொஞ்சமாக உழைத்து வந்தேன்.

என்னுடைய சுயேச்சையை ஒருவரும் குறுக்க வில்லை. என் விருப்பப்படி நான் எல்லாம் செய்து வந்தேன்—அதிலும் என் கடைசிப் பயிற்சி ஆசா னக இருந்த பிரெஞ்சுக்காரர் என்னை விட்டுப் போனது முதல். தாம் ''வெடி குண்டு போல'' (comme une bombe) ருஷ்யாவில் விழுந்து விட்டார் என்ற எண்ணத்தால் அவர் ஓயாமல் சள்ளைப்பட் டார். கடுகடுப்பான முகத் தோற்றத்துடன் நாள் முழுதும் படுக்கையில் கிடந்தார். தகப்பனர் என் னிடம் அசட்டையும் அன்புமாக நடந்து கொண் டார். தாயாருக்கு என்னைத் தவிர வேறு குழந் தைகள் கிடையாது என்ருலும் அவள் ஒருபோதும் என் மேல் கவனம் செலுத்தியது இல்லை. வேறு கவலைகளில் ஒரேயடியாக மூழ்கி இருந்தாள். இன்னமும் இளைஞராய் இருந்த என் தகப்பனர் மிகுந்த அழகர். தமக்குப் பத்து வயது மூத்தவளான என் தாயாரை அவர் சொத்துக்காக மணந்து

கொண்டார். என் தாயார் துயர வாழ்க்கை நடத்தி வந்தாள். ஓயாமல் கவலைப்பட்டாள், பொறுமை கொண்டாள், எரிந்து விழுந்தாள்— ஆனால் தகப்பனாரின் முன்னிலையில் அல்ல. அவரிடம் அவள் நிரம்பப் பயந்தாள். அவர் கண்டிப்பாகவும் உணர்ச்சியைக் காட்டாமலும் தனித்து விலகியும் இருந்து வந்தார்... அவரைக் காட்டிலும் நாசூக்கான அமைதியும் தன்னம்பிக்கையும் சர்வாதிகார மனப்பான்மையும் கொண்டவரை நான் கண்டதில்லை.

நகர்ப்புற விடுதியில் கழித்த முதல் வாரங்களை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். பருவநிலை அற்புதமாக இருந்தது. நாங்கள் மே மாதம் ஒன்பதாம் தேதி, தூயர் நிக்கலாயின் திருநாளன்று, நகரத்திலிருந்து கோடை விடுதிக்கு மாறினோம். நான் சுற்றி உலாவினேன்—சில வேளைகளில் எங்கள் விடுதித் தோட்டத்திலும், சில வேளைகளில் நிஸ்கூச்னி பூங்காவிலும், வேறு சமயங்களில் வாயிலுக்கு வெளியேயும். ஏதேனும் புத்தகத்தை—உதாரணமாகக் கைதானவ் பாட நூலை* —எடுத்துப் போனேன், ஆனால் அதை அரிதாக எப்போதாவதுதான் புரட்டினேன். பெரும்பாலும் உரக்கச் செய்யுள்கள் படித்தேன். மிக நிறையச்

---

* இ. கைதானவ் பீட்டர்ஸ்பர்க் நகர்ப் புறத்தில் இருந்த த்ஸார்ஸ்கொயெ ஸிலோ (இந்நாட்களில் பூஷ்கின் என்னும் நகர்) உயர்குடியினர் தனிப் பள்ளியில் 1811—1841ல் பேராசிரியராக இருந்தவர். அவர் இயற்றிய வரலாற்றுப் பாட நூல்களின் மறு பதிப்புக்கள் பல முறை வெளியிடப்பட்டன. இங்கே குறிக்கப்படுவது ''பொது அரசியல் வரலாற்று அறிவுக்கான வழிகாட்டி'' என்னும் அவரது நூல்.

செய்யுள்கள் எனக்கு மனப்பாடம். என் குருதி கொந்தளித்துக் கொண்டிருந்தது, இதயம் மிக இனிமையும் வேடிக்கையுமாக வலித்துக் கொண் டிருந்தது. நான் ஓயாமல் எதையோ எதிர் பார்த்துக் கூச்சப் பட்டுக் கொண்டிருந்தேன். எல்லாவற்றையும் கண்டு வியந்த வண்ணமாக, எப்போதும் ஆயத்த நிலையில் இருந்தேன். கற்பனை துடியாக இயங்கி, புலர்போதில் மாதாகோயில் மணிக்கூண்டைச் சுற்றிப் பறக்கும் மார்ட்லெட் குருவிகள் போல ஓயாமல் ஓரே எண்ணங்களை விரைவாகச் சுற்றி வந்து கொண்டிருந்தது. நான் சிந்தனையில் ஆழ்ந்தேன், துயரப்பட்டேன், அழக் கூடச் செய்தேன். ஆனால், உயிர்க்கத் தொடங்கி இருந்த இளம் வாழ்க்கையின் மகிழ்ச்சி நிறைந்த உணர்வு, சில வேளைகளில் செவிக்கினிய செய்யுள் களாலும் வேறு சமயங்களில் மாலையின் வனப் பாலும் உரமூட்டப் பெற்று, கண்ணீருக்கு ஊடாக வும் துயரத்துக்கு ஊடாகவும் வசந்தகாலப் புல் போன்று முளை விட்டது.

என்னிடம் சவாரிக் குதிரை இருந்தது. அதற்கு நானே சேணங்கட்டி ஏறிக் கொண்டு எங்கேனும் தொலைவுக்குத் தனியே போனேன். குதிரையைப் பாய்ச்சலில் விட்டுக் கொண்டு போகையில் போர்க் களத்தில் பாயும் பிரபுவம்சப் படை வீரனுக என்னைக் கற்பனை செய்து கொண்டேன்—என் காதுகளில் காற்று எவ்வளவு குதூகலமாக வீசிற்று!—அல்லது முகத்தை வானை நோக்கித் திருப்பி, அதன் சுடரும் ஒளியையும் நீல வெளி யையும் திறந்த உள்ளத்தால் பருகினேன்.

எனக்கு நினைவு இருக்கிறது, அந்தக் காலத்தில் பெண்ணின் தோற்றம், பெண் அன்பின் உருவம், திட்டமான வடிவக் கூறுகளில் என் அறிவில்

அனேகமாக ஒரு போதும் காட்சி அளிக்கவில்லை. ஆனால் நான் எண்ணியவை எல்லாவற்றிலும், நான் உணர்ந்தவை எல்லாவற்றிலும், ஏதோ புதுமை யான, சொல்ல முடியாத அளவு இனிமையான, பெண்மை வாய்ந்த ஒன்றின் அரைகுறையாகப் புரிந்த, நாணம் நிறைந்த முன்னுணர்வு மறைந் திருந்தது...

இந்த முன்னுணர்வு, இந்த எதிர்பார்ப்பு, என் உடல், உள்ளம் முழுவதிலும் புகுந்து விட் டது. நான் அதை மூச்சு விட்டேன், எனது ஒவ் வொரு தசை நாரிலும் இரத்தத்தின் ஒவ்வொரு துளியிலும் அது நிறைந்து பெருகிற்று... விரை வில் நடப்புக்கு வர அதற்கு விதிக்கப்பட்டிருந் தது.

எங்களுடைய நகர்ப்புற விடுதி, கட்டைகளால் அமைந்த, தூண்கள் உள்ள பண்ணை வீடும் தாழ் வான இரண்டு பக்கமனைகளும் அடங்கியது. இடப் புறப் பக்கமனையில் மலிவான சுவர்க் காகிதங்கள் தயாரிக்கும் தொழிலகம் இருந்தது... சிக்குப் பிடித்த மேலங்கிகளும் ஒட்டி உலர்ந்த முகங் களும் மெலிந்த உடல்களும் பம்பைத் தலைகளும் உள்ள ஒரு பத்து சிறுவர்கள் அச்சுப் பொறியின் நாற்கோண வெட்டுத் துண்டுகளை அழுத்திய மர நெம்புகோல்களின் மேல் இடைவிடாமல் குதித் துக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு தங்கள் நொய்ந்த உடல்களின் கனத்தால் சுவர்க் காகி தங்களின் பல வண்ணக் கோலங்களைப் பதித்துக் கொண்டிருந்தார்கள். இந்தக் காட்சியைக் காண நான் அங்கே பல தடவைகள் போனேன். வலது பக்கமனை காலியாய் இருந்தது, வாடகைக்கு விடப் பட்டது. ஒரு நாள்—மே ஒன்பதாம் தேதிக்கு மூன்று வாரங்கள் பின்—இந்தப் பக்கமனை

யின் சன்னல் கதவுகள் திறந்தன, பெண் முகங்கள் அவற்றில் தென்பட்டன. ஒரு குடும்பம் அதில் குடி புகுந்திருந்தது. எனக்கு நினைவு இருக்கிறது, அன்றே மதியச் சாப்பாட்டின்போது, எங்கள் புதிய அண்டை வீட்டார் யார் என்று அம்மா பட்லரிடம் விசாரித்தாள். சிற்றரசி ஜஸேகினு என்ற குலப் பெயரைக் கேட்டு முதலில் சற்று மரியாதையுடன் ''அப்படியா! சிற்றரசியா...'' என்று கூறியவள், பிறகு ''ஒருவேளை ஏழையாக இருப்பாள்'' என்றாள்.

''மூன்று வாடகை வண்டிகளில் வந்தார்கள் அம்மா'' என்று உணவை மரியாதையுடன் பரிமாறியவாறு சொன்னான் பட்லர். ''அவர்களுக்குச் சொந்த வண்டி இல்லை, அம்மா; தட்டு முட்டுச் சாமான்களும் ரொம்பச் சொற்பம்'' என்றான்.

''அப்படியா, இருந்தாலும் இவர்கள் மேல்'' என்று கூறினாள் அம்மா.

தகப்பனார் அவளைக் கடுத்து நோக்கினார். அவள் பேச்சை நிறுத்தி விட்டாள்.

மெய்யாகவே, சிற்றரசி ஜஸேகினு பணக்காரியாக இருந்திருக்க முடியாது. அவள் வாடகைக்கு எடுத்திருந்த பக்கமனை ஒரேயடியாக இடிந்து சிதைந்தும் சிறிதாகவும் தாழ்வாகவும் இருந்ததால் கொஞ்சமாவது பண வசதி உள்ளவர்கள் அதில் குடி புக இசைந்திருக்க மாட்டார்கள். ஆனால் அந்த நேரத்தில் இதை எல்லாம் நான் கேட்டும் கேளாதவன் போல் இருந்து விட்டேன். சிற்றரசிப் பட்டம் என்னை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. ஷில்லரின் ''கொள்ளைக்காரர்கள்''* நாடகத்தை அண்மையில்தான் நான் படித்திருந்தேன்.

---

* ''கொள்ளைக்காரர்கள்'' என்பது ஜெர்மன் மகாகவி ஷில்லர் *(1759—1805)* இயற்றிய நாட

2

மாலைதோறும் துப்பாக்கியும் கையுமாக எங்கள் தோட்டத்தில் சுற்றிக் காக்கைகளை விரட்டுவது என் வழக்கமாய் இருந்தது. எச்சரிக்கையும் தந்திரமும் உள்ள இந்தக் கொள்ளைக்காரப் பறவைகள் மேல் நான் வெகு காலமாகவே வெறுப்பு பாராட்டி வந்தேன். குறிப்பிட்ட நாளன்று வழக்கம் போலத் தோட்டத்துக்குப் போனேன். நடைபாதைகள் எல்லாவற்றையும் வீணுகச் சுற்றி வந்த பிறகு (காக்கைகள் என்னைக் கண்டு கொண்டன, எனவே தொலைவிலிருந்து மட்டுமே விட்டு விட்டுக் கத்தின), வலது பக்கமனையின் பின்னே பரவி இருந்ததும் அதற்கு உரியதுமான குறுகிய தோட்டப் பகுதியிலிருந்து எங்கள் தோட்டத்தைப் பிரித்த தாழ்வான வேலியைத் தற்செயலாக நெருங்கினேன். தலையைத் தாழ்த்தியவாறு நடந்தேன். திடீரென்று குரல்கள் எனக்குக் கேட்டன. வேலியின் மறு புறம் பார்வை செலுத்தியவன், மலைத்து நின்றுவிட்டேன்... விந்தையான காட்சி என் முன் விரிந்தது.

கோடிட்ட ரோஜா நிற உடையும் வெள்ளைத் தலைக்குட்டையும் அணிந்த வடிவமைந்த நெடிய மேனியளான மங்கை ஒருத்தி எனக்குச் சில அடிகள் தூரத்தில், பச்சை ராஸ்ப்பெரிச் செடிகளுக்கு இடையே இருந்த திறப்பில் நின்று கொண்டிருந்தாள். நான்கு இளைஞர்கள் அவளை நெருக்கமாகச் சூழ்ந்திருந்தார்கள். சிறிய சாம்பல் நிறப் பூக்களால் அவர்கள் ஒவ்வொருவருடைய நெற்றியி

---

கம். கொடுங்கோன்மைக்கு எதிர்ப்பு தெரிவித்த இந்த நாடகம் 1820—1830ல் ருஷ்ய இளைஞர்கள் மேல் பெருத்த செல்வாக்கு செலுத்தியது.

லும் வரிசையாக இடித்துக் கொண்டிருந்தாள் அவள். இந்தப் பூக்களின் பெயர் எனக்குத் தெரியாது, ஆனல் குழந்தைகளுக்கு இவை நன்ருகத் தெரிந்தவை. பார்வைக்குச் சிறு மூட்டைகள் போலிருக்கும் இந்தப் பூக்கள் கடினமான பொருள் மேல் இடிக்கும் போது வெடிப்பு ஒலியுடன் திறந்து கொள்ளும். இளைஞர்கள் தங்கள் நெற்றிகளை மிக விருப்புடன் முன்னே நீட்டினர்கள். மங்கையின் அங்க அசைவுகளில் (நான் அவளைப் பக்கவாட்டில் பார்த்துக் கொண்டிருந்தேன்) சொக்க வைப்பதும் ஆணை செலுத்துவதும் கொஞ்சலாக வருடுவதும் பரிகசிப்பதும் இனியதுமான ஒரு தன்மை இருந்தது. இதனல் பரவசம் அடைந்த நான் வியப்பினலும் மகிழ்ச்சியினலும் அனேகமாகக் கத்தத் தெரிந்தேன். கவர்ச்சியுள்ள அந்த விரல்கள் எனது நெற்றியிலும் பூவால் இடிக்க வேண்டும் என்பதற்காக உலகில் இருந்தது அனைத்தையும் அக்கணமே வாரி வழங்கி இருப்பேன் என்று தோன்றியது. என் துப்பாக்கி நழுவிப் புல்லில் விழுந்தது. நான் எல்லாவற்றையும் மறந்து விட்டேன். அழகாக அமைந்த அந்த இடையையும் கழுத்தையும் வனப்பு வாய்ந்த கரங்களையும் வெள்ளைத் தலைக் குட்டைக்கு அடியில் சற்றே கலைந்திருந்த சணல் நிறக் கூந்தலையும் பாதி மூடிய அறிவார்ந்த விழியையும் அந்த இமை மயிர்களையும் அவற்றுக்கு அடியில் இருந்த மென்மை வாய்ந்த கன்னத்தையும் பார்வையால் விழுங்கிக் கொண்டிருந்தேன்...

''இளைஞரே, ஐயா இளைஞரே'', என்று என் அருகே திடீரென்று கூறிற்று யாருடையவோ

குரல். ''வேற்றுக் குமரிகளை இந்த மாதிரி உற்றுப் பார்ப்பது தகுமா?''

நான் ஒரேயடியாகத் திடுக்கிட்டுத் திகைத்துப் போனேன்... ஒட்டக் கத்தரித்த கரு முடியும் தானுமாக வேலியின் மறுபுறம் நின்ற ஒருவன் என்னை ஏளனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அதே கணத்தில் அந்த மங்கையும் என் பக்கம் திரும்பினாள்... உணர்ச்சிகளுக்கு இசைய விரைவாக மாறவல்ல, உற்சாகம் பொங்கிய வதனத்தில் பெரிய சாம்பல் நிற விழிகளை நான் கண்டேன். இந்த முகம் முழுதும் திடீரென்று துடித்தது, கலீரென்று நகைத்தது. வெண் பற்கள் அதில் பளிச்சிட்டன. புருவங்கள் ஒரு மாதிரி வேடிக்கையாக உயர்ந்தன... என் முகத்தில் குப்பென்று குருதி பாய்ந்தது. தரையில் கிடந்த துப்பாக்கியை எடுத்துக் கொண்டு, கலகலவென்ற, ஆனால் தீங்கற்ற சிரிப்பொலி பின்தொடர என் அறைக்கு ஓடிப் படுக்கையில் விழுந்து கைகளால் முகத்தை மூடிக் கொண்டேன். என் இதயம் ஒரே துள்ளாய்த் துள்ளியது, எனக்கு மிகுந்த வெட்கமாகவும் குதூகலமாகவும் இருந்தது. முன் அறியாத உள்ளக் கிளர்ச்சியை உணர்ந்தேன்.

இளைப்பாறிய பிறகு நான் தலை வாரித் துப்புரவு செய்து கொண்டு தேநீர் பருகக் கீழே போனேன். இள மங்கையின் உருவம் என் முன்னே காட்சி தந்தது. இதயம் துள்ளலை நிறுத்தி விட்டது, ஆனால் ஒரு மாதிரி இனிமையாக இறுகியது.

''உனக்கு என்ன நேர்ந்தது?'' என்று திடீரென்று கேட்டார் தகப்பனார். ''காக்கையைக் கொன்று விட்டாயா?''

அவருக்கு எல்லாவற்றையும் விவரிக்க

வாயெடுத்தேன், ஆனால் ஆசையை அடக்கிக் கொண்டு எனக்குள் முறுவலித்தேன். தூங்குவதற் காகப் படுக்கப் போன போது, எதற்காகவோ நானே அறியேன், இரண்டு மூன்று தரம் குதி காலில் வட்டமிட்டு தலை முடிக்கு மணச் சாந்து பூசிக் கொண்டு படுத்தவன், அடித்துப் போட்டது போல் உறங்கினேன். விடிவதற்கு முன் கண நேரம் விழித்துக் கொண்டு தலையைச் சற்று உயர்த்தி, பெரு மகிழ்வுடன் சுற்றிலும் கண்ணோட்டி விட்டு மறுபடி தூக்கத்தில் ஆழ்ந்தேன்.

3

காலையில் கண் விழித்ததும் என் முதலாவது எண்ணம் ''இவர்களோடு எப்படி அறிமுகம் செய்து கொள்வது?'' என்பதாக இருந்தது. தேநீர் பருகுவதற்கு முன்பு நான் தோட்டத் துக்குப் போனேன். ஆனால் வேலிக்கு மிக அருகே போகவில்லை, யாரையும் பார்க்கவும் இல்லை. தேநீர் பருகிய பிறகு கோடை விடுதிக்கு எதிரே வீதியில் பல தடவைகள் குறுக்கும் நெடுக்குமாக நடந்தேன், தொலைவிலிருந்து சன்னலுக்குள் பார் வை செலுத்தினேன்... திரைக்கு மறு புறம் அவ ளுடைய முகம் தெரிந்தது போல எனக்குத் தோன்றியது. நான் மிரண்டு போய் விரைவாக அப்பால் சென்று விட்டேன். ''ஆனாலும் அறி முகம் செய்து கொள்ள வேண்டுமே'' என்று நிஸ் கூச்னி பூங்காவுக்கு எதிரே பரந்திருந்த மணல் வெளியில் ஒழுங்கின்றி நடமாடியவாறு எண்ண மிட்டேன். ''எப்படி? அதுதான் கேள்வி.'' முந்திய நாள் நடந்த சந்திப்பின் மிகச் சிறு விவரங்களைக் கூட நினைவு கூர்ந்தேன். என்னைக் கேலி செய்து

அவள் சிரித்தது எதனுலோ சிறப்பான தெளி வுடன் எனக்குத் தென்பட்டது... ஆனுல் நான் பரபரப்பு அடைந்து விதம் விதமான திட் டங்கள் போடுவதற்குள் எனக்காக அக்கறை எடுத்துக் கொண்டது விதி.

நான் வீட்டில் இல்லாத போது, புதிய அண்டை வீட்டுக்காரியிடமிருந்து அம்மாவுக்கு ஒரு கடிதம் கிடைத்தது. சாம்பல் நிற உறை யில் பழுப்பு அரக்கு முத்திரை குத்தி அனுப்பப் பட்டிருந்தது இந்தக் கடிதம். அஞ்சலக உறை களிலும் மலிவான மதுப் புட்டியின் அடைப்பான் களிலும் காணப்படும் வகையான அரக்கு அது. பிழைகள் நிறைந்த நடையில், பாங்கற்றகை யெழுத்தில் வரையப்பட்ட இந்தக் கடிதத்தில் சிற்றரசி தனக்கு ஆதரவு அளிக்கும்படி அம்மா விடம் கேட்டுக் கொண்டிருந்தாள். தன்னிடம் மிகவும் முக்கியமான வழக்குகள் இருப்பதாக வும், எனவே தன் விதியும் தன் குழந்தைகளின் விதியும் சில முக்கியஸ்தர்களைச் சார்ந்து இருப்ப தாகவும், இந்த முக்கியஸ்தர்களோடு என் தாயார் நல்ல தொடர்பு கொண்டிருப்பதாகவும் சிற்றரசி குறிப்பிட்டிருந்தாள். தப்புந் தவறுமான ருஷ்ய மொழி நடையில் அவள் எழுதி இருந்தாள்: ''ஓர் உயர்குடிச் சீமாட்டிக்கு உயர்குடிச் சீமாட்டி என்ற வகையில் நான் இதை எழுதுகிறேன். அதோடு இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் எனக்கு மகிழ்ச்சி உண்டாகிறது.'' எங்கள் வீட்டுக்கு வரத் தன்னை அனுமதிக்கும்படி அம்மாவைக் கேட்டுக்கொண்டு கடிதத்தை முடித் திருந்தாள் சிற்றரசி. நான் வீடு திரும்பிய போது அம்மா சங்கடப்பட்டுக் கொண்டிருந்ததைக் கண் டேன். தகப்பனுர் வீட்டில் இல்லாததால் யோசனை

கேட்க அவளுக்கு யாரும் இல்லை. ''உயர்குடிச் சீமாட்டிக்கு'', அதிலும் சிற்றரசிக்கு, விடை அளிக்காமல் இருப்பது நடக்கக் கூடாததாக இருந்தது. ஆனால் எப்படி விடை அளிப்பது என்று அம்மாவுக்கு விளங்கவில்லை. பிரெஞ்சு மொழியில் பதில் எழுதுவது பொருத்தம் அற்றதாக அவளுக்குத் தோன்றியது, ருஷ்ய எழுத்து இலக்கணத்திலோ, அம்மாவுக்கே பயிற்சி பற்றாது. அவள் இதை அறிந்திருந்தாள், எனவே தன் பெயரைக் கெடுத்துக் கொள்ள விரும்பவில்லை. நான் வந்ததில் அவள் பெரு மகிழ்ச்சி அடைந்தாள். சிற்றரசியிடம் போய், சிற்றரசியாருக்குத் தன்னால் இயன்ற அளவு தொண்டு புரியத் தாயார் எப்போதும் ஆயத்தமாய் இருப்பதாகவும், பன்னிரண்டு மணிக்கு மேல் தன் வீட்டுக்கு எழுந்தருள வேண்டுவதாகவும் தெரிவிக்கும்படி அக்கணமே எனக்குக் கட்டளை இட்டாள். என் மறைமுக விருப்பங்கள் எதிர்பாராத விரைவுடன் நிறைவேறியதால் எனக்கு மகிழ்ச்சியும் அச்சமும் ஒருங்கே உண்டாயின. ஆனாலும் என்னை ஆட்கொண்டிருந்த மனக் கலக்கத்தை நான் காட்டிக்கொள்ளவில்லை. முதலில் என் அறைக்குப் போய், புதிய டை கட்டி பிராக் கோட்டை மாட்டிக் கொண்டேன். வீட்டில் நான் இன்னமும் சிறுவனுக்கு ஏற்றபடி குட்டைக் கோட்டும் திறந்த கழுத்துப் பட்டையுமாக வளைய வந்துகொண்டிருந்தேன், ஆனால் அதனால் எனக்குச் சள்ளையாய் இருந்தது.

4

பக்கமனையின் குறுகிய, பாங்கற்ற முன்னறையில் அடி வைத்த போது என் மேனி முழுவதும்

என் வசமின்றி நடுங்கிக் கொண்டிருந்தது. அங்கே என்னை எதிர் கொண்டான் முதிய, நரைத்த பணியாள். தாமிர நிறமான முகமும் ஏங்கிய பன்றிக் கண்களும் நெற்றியிலும் பொட்டிலும் வாழ் நாளில் நான் அதுவரை கண்டிராத அளவு ஆழ்ந்த சுருக்கங்களுமாக இருந்தான் அவன். சதைப் பகுதி கறுவப்பட்ட ஹெர்ரிங் மீனை ஒரு தட்டில் எடுத்துப் போய்க் கொண்டிருந்தான். அடுத்த அறைக்குப் போவதற்கான கதவைக் காலால் திறந்தவாறு,

''என்ன வேண்டும் உங்களுக்கு''? என வெடுக்கென்று கேட்டான்.

''சிற்றரசி ஜஸேகிஞ வீட்டில் இருக்கிறுர்களா?'' என்று வினவினேன்.

''வணிபாத்தி!'' என்று கதவுக்குப் பின்னிருந்து கத்தியது ஒரு மாதின் கணீர்க் குரல்.

வேலையாள் பேசாமல் எனக்கு முதுகைக் காட்டித் திரும்பினுன். அவனுடைய பணியுடையின் மிக நைந்த முதுகுப் பகுதி அப்போது என் பார்வையில் பட்டது. இலச்சினை பொறித்த ஒரே ஒரு துருப்பிடித்த பொத்தான் உடையில் எஞ்சி இருந்தது. தட்டைத் தரையில் வைத்து விட்டுப் போனுன் அவன்.

''போலீஸ் நிலையத்துக்குப் போயிருந்தாயா?'' என்று கேட்டது அதே பெண் குரல். வேலையாள் என்னவோ முணுமுணுத்தான். ''ஆ?.. யாரோ வந்திருக்கிறுர்களா? அண்டைவீட்டுப் பிரபுவின் மகனு? சரி, வரச் சொல்லு'' என்றது அந்தக் குரல்.

வேலையாள் மறுபடி எனக்கு முன்னே வந்து தட்டைத் தரையிலிருந்து எடுத்துக் கொண்டு, ''தயை செய்து விருந்தறைக்குப் போங்கள்'' என்றுன்.

நான் உடையைச் சீர்படுத்திக் கொண்டு ''விருந்தறைக்குப்'' போனேன்.

அளவில் சிறியதும் அவ்வளவாகப் பாங்கற்றதுமான ஓர் அறைக்குள் புகுந்தேன். அங்கிருந்த அற்பத் தட்டுமுட்டுச் சாமான்கள் அவசரத்தில் கைக்கு வந்த இடத்தில் வைக்கப்பட்டவை போலக் காணப்பட்டன. சன்னல் அருகே கை முறிந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள் ஒரு மாது. அவளுக்கு ஐம்பது வயது இருக்கும். தலைக்குட்டையின்றித் திறந்த கூந்தலுடன் இருந்தாள். அழகற்றவள். பச்சை நிறமான பழைய உடையும் பலநிற மணிக் கம்பளிக் கழுத்துக் குட்டையும் அணிந்திருந்தாள். அவளுடைய சிறிய கரு விழிகள் என்னை ஊடுருவி நோக்கின.

நான் அவள் அருகே போய் வணங்கினேன்.

''எனக்குப் பேசும் பேறு கிடைத்திருப்பது சிற்றரசி ஐஸேகிளுவுடனா?'' என்று உயர்குடி மரபுப்படி வினவினேன்.

''நான்தான் சிற்றரசி ஐஸேகிளு. நீங்கள் திருவாளர் வ.வின் புதல்வரா?''

''ஆமாம் அம்மா. என் தாயாரின் ஆணைப்படி நான் உங்களிடம் வந்திருக்கிறேன்.''

''தயை செய்து உட்காருங்கள். வனிபாத்தி! என் சாவிகள் எங்கே, நீ பார்க்கவில்லையா?''

திருமதி ஐஸேகிளுவின் கடிதத்துக்கு என் தாயார் அளித்த பதிலை அவளுக்குத் தெரிவித்தேன். பருத்துச் சிவந்த விரல்களால் சன்னல் குறட்டில் தாளம் போட்டவாறு முடிவுவரை என் பேச்சைக் கேட்டாள். நான் முடித்ததும் என்னை மீண்டும் உறுத்துப் பார்த்தாள்.

''நிரம்ப நல்லது. கட்டாயம் வருகிறேன்'' என்று கடைசியில் கூறினாள். ''நீங்கள்தாம் எவ்

வளவு இளைஞர்! உங்களுக்கு வயது என்ன என்று கேட்கலாமா?''

''பதினாறு'' என்று என் வசமற்ற திக்கலுடன் சொன்னேன்.

முழுதும் எழுதப்பட்டு எண்ணெய்க் கறை பட்டிருந்த எவையோ காகிதங்களைப் பையிலிருந்து எடுத்து நேரே மூக்கின் அருகில் கொண்டு போய் வரிசைப்படுத்துவதில் முனைந்தாள் சிற்றரசி.

நாற்காலியில் திரும்பி, வளைந்து நெளிந்தவாறு, ''நல்ல வயது. ஆனால் நீங்கள் தயவு செய்து சடங்கு பாராட்டாதீர்கள். என் வீட்டில் எல்லாம் சாதாரணம்'' என்று திடீரெனக் கூறினாள்.

''மட்டுமீறிச் சாதாரணம்'' என்று அவளுடைய பாங்கற்ற உருவம் முழுவதையும் என் வசமில்லாத அருவருப்புடன் பார்வையிட்டவாறு நினைத்துக் கொண்டேன்.

அந்தக் கணத்தில் விருந்தறையின் இன்னொரு கதவு சட்டெனத் திறந்தது. தலைக்குநாள் நான் தோட்டத்தில் கண்ட பெண் நிலையில் தென்பட்டாள். அவள் தனது கையை உயர்த்தினாள். அவளது இதழ்களில் புன்சிரிப்பு மின்னிடியது.

''இவள்தான் என் மகள்'' என்று முழங்கையால் அவளைச் சுட்டிக் காட்டினாள் சிற்றரசி. ''ஜீனா, இவர்தான் நம் பக்கத்து வீட்டுக்காரர் திருவாளர் வ.வின் புதல்வர். உங்கள் பெயர் என்ன, தெரிந்து கொள்ளலாமா?''

நான் கிளர்ச்சி மிகுதியால் எழுந்து கிசுகிசுத்த குரலில், ''விளதீமிர்'' என்றேன்.

''தகப்பனார் பெயரைச் சேர்த்தால்?''

''பெத்ரோவிச்.''

''அப்படியா? எனக்குத் தெரிந்த நகரப்

போலீஸ் தலைமை அதிகாரி ஒருவர் பெயரும் விளதீமிர் பெத்ரோவிச். வனிபாத்தி! சாவிகளைத் தேடாதே. அவை என் பையில் இருக்கின்றன.''

இள மங்கை சற்றே கண்களைச் சுரித்து, தலையைக் கொஞ்சம் பக்கவாட்டில் சாய்த்தவாறு முந்திய கேலிச் சிரிப்புடன் என்னைத் தொடர்ந்து நோட்டமிட்டாள்.

''மிஸியே வோல்தெமாரை நான் முன்பே பார்த்து விட்டேன்'' என்று தொடங்கினாள். (அவளுடைய குரலின் வெள்ளி மணியொலியால் என் மேனி முழுவதிலும் இனிய சிலிர்ப்பு உண்டாயிற்று). ''உங்களை இப்படிக் கூப்பிட என்னை அனுமதிப்பீர்களா?''

''தாராளமாகக் கூப்பிடுங்கள்'' என்று குழறினேன்.

''எங்கே பார்த்தாய்?'' என்று கேட்டாள் சிற்றரசி.

இளவரசி தன் தாயாருக்குப் பதில் சொல்லவில்லை.

''நீங்கள் இப்போது காரியமாய் இருக்கிறீர்களா?'' என்று என் மேல் வைத்த பார்வையை அகற்றாமல் கேட்டாள்.

''இல்லவே இல்லை.''

''கம்பளி நூலைக் கட்டுப் பிரிக்க எனக்கு உதவ விரும்புகிறீர்களா? இப்படி வாருங்கள் என் அறைக்கு.''

தலையசைப்பால் எனக்குச் சைகை செய்து விட்டு விருந்தறையிலிருந்து வெளியேறினாள். நான் அவளைப் பின் தொடர்ந்தேன்.

நாங்கள் புகுந்த அறையில் தட்டுமுட்டுச் சாமான்கள் கொஞ்சம் மேலானவையாக இருந்தன, பெருத்த கலைநயத்துடன் சோடிக்கப்பட்

டிருந்தன. ஆனால் அந்தக் கணத்தில் அனேகமாக எதையும் கவனிக்க என்னால் முடியவில்லை. கன வில் இயங்குபவன் போல இயங்கினேன். அசட்டுத் தனத்தின் எல்லைவரை இறுக்கம் அடைந்த ஒரு வித நல உணர்வை உளத்திலும் மேனி முழுதிலும் அனுபவித்தேன்.

இளவரசி உட்கார்ந்து சிவப்புக் கம்பளி நூல் கட்டை எடுத்து, தன் எதிரில் இருந்த நாற்காலி யில் என்னை உட்காரச் சொல்லிவிட்டு, கட்டைப் பதபாகமாகப் பிரித்து என் கைகளில் மாட்டினாள். வேடிக்கையான ஒரு நிதானத்துடனும் சற்றே திறந்த இதழ்களில் பளிச்சிட்ட அதே தந்திரக் கேலிச் சிரிப்புடனும் மௌனமாக இதை எல்லாம் அவள் செய்தாள். வளைத்த அட்டையில் கம்பளி நூலைச் சுற்றத் தொடங்கியவள், விரைவான தெளிந்த பார்வையால் திடீரென்று என்னை நோக் கினாள். அந்தப் பார்வையின் ஒளியைத் தாங்க மாட்டாமல் நான் என் வசமின்றித் தலையைத் தாழ்த்திக் கொண்டேன். பெரும்பாலும் பாதி மூடியிலிருந்த அவளுடைய விழிகள் முழு அளவில் திறந்த போது அவளுடைய முகம் முற்றிலும் மாறி விட்டது. ஒளி அதில் பொங்கிப் பெருகியது போலத் தோன்றியது.

''நேற்று என்னைப் பற்றி நீங்கள் என்ன நினைத் தீர்கள், மிஸியே வோல்தெமார்?'' என்று சற்றுப் பொறுத்து வினவினாள் அவள். ''நீங்கள் என்னைக் கண்டனம் செய்திருப்பீர்கள், கட்டாயம், அப் படித்தானே?''

''நான்... இளவரசியாரே... நான் ஒன்றுமே நினைக்கவில்லை... என்னால் எப்படி முடியும்...'' என்று குழப்பத்துடன் மறுமொழி பகர்ந்தேன்.

''கேளுங்கள், உங்களுக்கு என்னை இன்னும்

தெரியாது. நான் மிகவும் விசித்திரமானவள். எல்லோரும் என்னிடம் எப்போதும் உண்மை பேச வேண்டும் என்று நான் விரும்புகிறேன். உங்களுக்கு வயது பதினாறு என்று கேள்விப்பட்டேன். எனக்கு இருபத்தொன்று. நான் உங்களுக்கு எவ்வளவோ மூத்தவள் என்பதைப் பார்க்கிறீர்கள். ஆகையால் நீங்கள் என்னிடம் எப்போதும் உண்மை பேச வேண்டும்... என் சொல்லுக்குக் கீழ்ப்படிய வேண்டும்'' என்று கூறி விட்டு, ''என்னைப் பாருங்கள்—என்னை ஏன் பார்க்க மாட்டேன் என்கிறீர்கள்?'' என்ருள்.

நான் முன்னிலும் அதிகக் குழப்பம் அடைந்தாலும் அவளை நிமிர்ந்து பார்த்தேன். அவள் புன்னகை செய்தாள், ஆனல் இது முந்தியதற்கு மாருன, ஒப்புதலைக் காட்டும் புன்னகை.

கொஞ்சலாகக் குரலைத் தாழ்த்தி, ''என்னைப் பாருங்கள்'' என்ருள். ''எனக்கு இது பிடிக்கும்... எனக்கு உங்கள் முகம் பிடித்திருக்கிறது. நாம் நண்பர்களாய் இருப்போம் என்று முன்னுணர்கிறேன். உங்களுக்கு என்னைப் பிடித்திருக்கிறதா?'' என்று தந்திரமாக வினவிஞள்.

''இளவரசியாரே...'' என்று பேச வாயெடுத்தேன்.

''முதலாவதாக, என்னை ஜினயீதா அலெக்சாந்திரவ்ஞ என்று அழையுங்கள். இரண்டாவதாக, தாங்கள் உணர்வதை அப்பட்டமாகச் சொல்லாமல் மழுப்பும் இந்த வழக்கம் குழந்தைகளுக்கு'' (அவள் திருத்திக் கொண்டாள்) ''இளைஞர்களுக்கு எங்கிருந்து வந்தது' பெரியவர்களுக்கு இது நல்லது. உங்களுக்கு என்னைப் பிடிக்கிறது, அல்லவா?''

அவள் அப்படி மனந்திறந்து என்ஞேடு பேசி

யது எனக்கு மிகவும் உவப்பாய் இருந்தது, என்றாலும் நான் சிறிது மனத்தாங்கல் கொண்டேன். அவளுடன் பேசுபவன் சிறுவன் அல்ல என்று அவளுக்குக் காட்ட விரும்பினேன். முடிந்த அளவு கட்டற்ற, ஆழ்ந்த தோற்றத்தை வருவித்துக் கொண்டு கூறினேன்.

''சந்தேகம் இல்லாமல் உங்களை எனக்கு நிரம்பப் பிடித்திருக்கிறது, ஜினயீதா அலெக்சாந்திரவ்னு. நான் இதை மறைக்க விரும்பவில்லை,''

அவள் நிதானமாகத் தலையை ஆட்டினாள்.

''உங்களுக்குப் பயிற்சி ஆசான் இருக்கிறாரா?'' என்று திடீரெனக் கேட்டாள்.

''இல்லை. வெகு காலமாகவே எனக்குப் பயிற்சி ஆசான் இல்லை.''

நான் சொன்னது பொய். என் பிரெஞ்சுக்கார ஆசிரியரை நான் பிரிந்து இன்னும் ஒரு மாதம் கூடக் கழியவில்லை.

''ஓ! அதுதான் பார்க்கிறேன்—நீங்கள் நிரம்பப் பெரியவர்.''

என் விரல்களை லேசாகத் தட்டினாள்.

''கைகளை நேரே வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறி நூல் பந்து சுருட்டுவதில் மும்முரமாக முனைந்தாள்.

அவள் விழியை நிமிர்த்தாமல் இருந்ததைப் பயன்படுத்திக் கொண்டு, முதலில் ஒளிவு மறைவாகவும் பின்பு வர வர அதிகத் துணிவுடனும் அவளைக் கூர்ந்து நோக்கலானேன். அவளுடைய முகம் தலைக்குநாள் இருந்ததைக் காட்டிலும் அதிகக் கவர்ச்சி உள்ளதாக எனக்குத் தோன்றியது. அதில் எல்லாம் அவ்வளவு நுண்மையும் அறிவுக் கூர்மையும் இனிமையும் கொண்டு திகழ்ந்தன. வெள்ளைத் திரை இட்டிருந்த சன்னலுக்கு

முதுகைக் காட்டிக் கொண்டு அவள் உட்கார்ந் திருந்தாள். இந்தத் திரையின் ஊடாக வந்த வெயி லொளி அவளுடைய அடர்ந்த பொன்னிறக் கூந் தலையும் கன்னிக் கழுத்தையும் சரிவான தோள் களையும் மென்மையும் அமைதியும் வாய்ந்த மார் பகத்தையும் தண்ணிய வெளிச்சத்தால் முழுக் காட்டியது. நான் அவளைப் பார்வையிட்டேன். அவள் எனக்கு எவ்வளவு இனியவள், நெருங்கிய வள் ஆகி விட்டாள்! நான் அவளை வெகு காலமாக அறிந்திருப்பதாகவும் அவளைத் தெரிந்து கொள் வதற்கு முன்னால் நான் ஒன்றுமே அறிந்திருக்க வில்லை, வாழவும் இல்லை என்றும் எனக்குப் பிரமை உண்டாயிற்று... பழையதாகி விட்ட கறுப்பு உடையும் முன்றாங்கியும் அணிந்திருந்தாள் அவள். இந்த உடையிலும் முன்றாங்கியிலும் இருந்த ஒவ் வொரு மடிப்பையும் நான் விருப்புடன் வருடி இருப்பேன். அவளுடைய பூட்சு நுனிகள் உடைக்கு அடியில் வெளித் தெரிந்தன. அந்த பூட்சுகளை நான் வழிபட்டு வணங்கி இருப்பேன்... ''இதோ நான் இவளுக்கு முன்னால் உட்கார்ந்திருக்கிறேன். இவளோடு அறிமுகம் செய்து கொண்டு விட் டேன்... எப்பேர்ப்பட்ட இன்பம், என் கடவுளே!'' என்று எண்ணமிட்டேன். உவகைப் பெருக்கால் நாற்காலியிலிருந்து துள்ளிக் குதிக்கப் பார்த்தேன். ஆனால், தின்பண்டத்தைச் சுவைக்கும் சிறுவன் போலக் கால்களை மட்டும் கொஞ்சம் ஆட்டினேன்.

மீனுக்குத் தண்ணீரில் இன்பமாய் இருப்பது போல எனக்கு இன்பமாய் இருந்தது. ஆயுள் முழு வதும் வேண்டுமானாலும் அந்த அறையிலிருந்து போகாமல் இருந்திருப்பேன், அந்த இடத்தை விட்டு அகலாமல் இருந்திருப்பேன்.

அவளுடைய இமைகள் மெல்ல உயர்ந்தன.

அவளுடைய ஒளியுள்ள கண்கள் எனக்கு முன் மீண்டும் இதமாகப் பளிச்சிட்டன. அவள் மறுபடியும் கேலிப் புன்னகை செய்தாள்.

''நீங்கள்தாம் என்னை எப்படிப் பார்க்கிறீர்கள்'' என்று நிதானமாகக் கூறி, விரலால் என்னை அச்சுறுத்தினுள்.

நான் முகஞ் சிவந்தேன்... ''இவள் எல்லாவற்றையும் புரிந்து கொள்கிருள், எல்லாவற்றையும் காண்கிருள்'' என்ற எண்ணம் என் மனதில் எழுந்தது. ''ஆனுல் எல்லாவற்றையும் புரிந்து கொள்ளாமலும் பார்க்காமலும் இவளால் எப்படி இருக்க முடியும்?''

பக்கத்து அறையில் திடீரென்று ஏதோ இரைச்சல் கேட்டது. உடைவாள் கிணுகிணுத்தது.

''ஜீனு! பெலவ்ஸோரவ் உனக்குப் பூனைக்குட்டி கொண்டுவந்திருக்கிருர்'' என்று விருந்தறையில் கத்தினுள் சிற்றரசி.

''பூனைக்குட்டியா!'' என்று கூவிய ஜினயீதா சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து, நூல் பந்தை என் மடியில் போட்டுவிட்டு வெளியே பாய்ந்தோடினுள்.

நானும் எழுந்து, கம்பளி நூல் கட்டையும் பந்தையும் சன்னல் குறட்டில் வைத்து விட்டு விருந்தறைக்குப் போனவன், விளங்காமல் நின்று விட்டேன். வரிகளிட்ட பூனைக்குட்டி ஒன்று கால்களைக் கோணல் மாணலாகப் பரத்தியவாறு அறை நடுவில் கிடந்தது. ஜினயீதா அதன் முன் மண்டியிட்டு, அதன் முகத்தைப் பதபாகமாகத் தூக்கினுள். சிற்றரசியின் பக்கத்தில் சன்னல்களுக்கு நடுவில் இருந்த இடைச்சுவர் முழுவதையும் மறைத்தவாறு நின்ருன் சணல் நிறச் சுருட்டை முடியுள்ள ஓர் இளைஞன். சிவந்த முகமும் முண்டக்

கண்களும் உள்ள அவன் குதிரைப்படையினன்.

''எவ்வளவு வேடிக்கையானது!'' என்று மறுபடி மறுபடி சொன்னாள் ஜினயீதா. ''இதன் விழிகள் சாம்பல் நிறமல்ல, பச்சை. காதுகள்தாம் எவ்வளவு பெரியவை! உங்களுக்கு நன்றி, வீக்தர் யெகோரிச்! நீங்கள் நிரம்ப இனியவர்.''

குதிரைப்படையினன் முந்திய நாள் நான் பார்த்த இளைஞர்களில் ஒருவன் என்று கண்டு கொண்டேன். அவன் புன்னகை செய்து வணக்கம் தெரிவித்தான். அப்போது அவனுடைய குதிமுட்கள் கிளிக்கிட்டன, வாள் வளையங்கள் கிலுங்கின.

''பெரிய காதுகள் உள்ள வரிப் பூனைக்குட்டி வேண்டும் என்று நேற்று நீங்கள் விருப்பம் தெரிவித்தீர்கள்... அதுதான், எடுத்து வந்தேன். உங்கள் சொல் எனக்குச் சட்டம்.'' இவ்வாறு கூறி மீண்டும் வணங்கினான்.

பூனைக்குட்டி பலவீனமாகக் கீச்சொலி செய்து தரையை முகரத் தொடங்கிற்று.

''இதற்குப் பசிக்கிறது!'' என்று கூவினாள் ஜினயீதா. ''வனிபாத்தி! ஸோனியா! பால் கொண்டு வாருங்கள்.''

பழைய மஞ்சள் உடையும் சாயம்போன கழுத்துக் குட்டையும் அணிந்த பணிப்பெண் சிறு தட்டில் பால் எடுத்து வந்து பூனைக்குட்டிக்கு முன்னால் வைத்தாள். பூனைக்குட்டி திடுக்கிட்டது, கண்களைச் சுருக்கிக் கொண்டது, பின்பு பாலை நக்கிக் குடிக்கத் தொடங்கியது.

''இதற்கு எப்பேர்ப்பட்ட ரோஜா நிற நாக்கு'' என்று தலையை அனேகமாகத் தரையில் படும்படி தாழ்த்தி, பூனைக்குட்டியின் மூக்கிற்குக் கீழே பக்க வாட்டில் கூர்ந்து பார்த்தவாறு கூறினாள் ஜின யீதா.

வயிறு நிறைந்ததும் பூனைக்குட்டி கால்களை ஒயிலாக மடக்கிக் கொண்டு திருப்தியாக முறு முறுத்தது. ஜினயீதா எழுந்து, பணிப்பெண்ணைப் பார்த்து, ''இதை எடுத்துக் கொண்டு போ'' என்று அசட்டையாகச் சொன்னாள்.

குதிரைப்படையினன் பற்கள் தெரியும்படிக் குறுநகை செய்து, புதிய சீருடை அணிந்த தன் வலிய, பெரிய உடல் முழுவதையும் விரைப்பாக நிமிர்த்தி, ''பூனைக்குட்டிக்காக, அன்புக் கரம்'' என்றான்.

''இரண்டும்'' என்று சொல்லிக் கைகளை அவன் பக்கம் நீட்டினாள் ஜினயீதா. அவன் அவற்றை முத்தமிட்டுக் கொண்டிருந்த போது அவள் தோளுக்கு மேலாக என்னை நோக்கினாள்.

நான் ஒரே இடத்தில் அசையாமல் நின்றேன். வாய்விட்டுச் சிரிப்பதா, ஏதேனும் சொல்லுவதா, அல்லது இப்படியே பேசாதிருப்பதா என்று எனக் குத் தெரியவில்லை. திடீரென்று முன்னறையின் திறந்த கதவின் ஊடாக எனக்குத் தென்பட்டது எங்கள் பணியாள் ஃபியோதரின் உருவம். அவன் எனக்குச் சைகைகள் செய்தான். இயந்திர கதியில் நான் அவனிடம் போனேன்.

''என்ன வேண்டும்?'' என்று கேட்டேன்.

''அம்மா உங்களை அழைத்து வரச் சொன்னார் கள். நீங்கள் பதிலுடன் திரும்பாததால் கோ பித்துக் கொண்டிருக்கிறார்கள்.'' என்று கிசுகிசுத் தான்.

''நான் என்ன, வெகு நேரமாகவா இங்கே இருக்கிறேன்?''.

''ஒரு மணிக்கு மேல்.''

''ஒரு மணிக்கு மேலா?'' என்று என்னை அறியாமலே திருப்பிச் சொல்லி விருந்தறைக்குத்

திரும்பி, வணங்கி விடை பெறவும் மரியாதை முறைப்படி பூட்சுகளை இடித்துக் கால்களைத் தேய்க்கவும் தொடங்கினேன்.

இளவரசி குதிரைப்படையினன் பின்னிருந்து எட்டிப் பார்த்து, ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''நான் வீட்டுக்குப் போக வேண்டும்'' என்று கூறிவிட்டு முதியவளைப் பார்த்து, ''அப்படியானால் ஒரு மணிக்குப் பிறகு நீங்கள் எங்கள் வீட்டுக்கு வருவீர்கள் என்று சொல்லுகிறேன்'' என்றேன்.

''அப்படியே சொல்லுங்கள், அப்பனே.''

சிற்றரசி பொடி டப்பியை அவசரமாக எடுத்துப் பெருத்த ஓசையுடன் பொடியை உறிஞ்சவே நான் திடுக்கிட்டுக் கூடப் போய் விட்டேன்.

கண்ணீருடன் இமைகளைக் கொட்டிக் கொண்டும் கமறிக் கொண்டும், ''அப்படியே சொல்லுங்கள்'' என்றாள்.

நான் இன்னொரு தரம் வணங்கி விட்டுத் திரும்பி, மற்றவர்கள் தான் போவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்த சிறுவனுக்கு ஏற்படும் கூச்சத்தை முதுகில் உணர்ந்தவனாக அறையிலிருந்து வெளியேறினேன்.

''இதோ பாருங்கள், மிஸியே வோல்தெமார், எங்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருங்கள்'' என்று கத்திவிட்டு மறுபடி கலீரென நகைத்தாள் ஜினயீதா.

''இவள் என்ன ஓயாமல் சிரித்துக் கொண்டிருக்கிறாள்?'' என்று ஃபியோதரோடு வீடு திரும்புகையில் எண்ணிக் கொண்டேன். ஃபியோதர் என்னிடம் ஒன்றும் சொல்லா விட்டாலும் ஆமோதிக்காததைக் காட்டியவாறு என் பின்னே வந்தான்.

அம்மா என்னைத் திட்டினாள். ''இந்தச் சிற்றரசி வீட்டில் இவ்வளவு நேரம் நீ என்ன செய்திருக்க முடியும்?'' என்று வியந்தாள். அவளுக்கு ஒரு பதிலும் சொல்லாமல் நான் என் அறைக்குச் சென்றேன். எனக்குத் திடீரென்று மிகுந்த துயரம் பொங்கிற்று... கடு முயற்சி செய்து அழுகையை அடக்கிக் கொண்டேன்... குதிரைப்படையினன் மேல் எனக்குப் பொறாமை உண்டாயிற்று.

5

சொன்னபடியே சிற்றரசி அம்மாவை வந்து கண்டாள். அம்மாவுக்கு அவளைப் பிடிக்கவில்லை. அவர்கள் சந்தித்த போது நான் உடன் இருக்கவில்லை. ஆனால், இந்தச் சிற்றரசி ஜஸேகினா une femme très vulgaire* என்று தனக்குப் பட்டதாக அம்மா சாப்பாட்டு வேளையில் அப்பாவிடம் சொன்னாள். சிற்றரசர் செர்கியஸிடம் தனக்காகப் பரிந்து பேசும்படி மன்றாடி அவள் தன்னை வெகுவாக நச்சரித்ததாகவும் அவளிடம் எல்லாம் ஒரே வழக்குகளும் விவகாரங்களும் — des vilaines affaires d'argent** என்றும் அவள் படு அற்ப வழக்குக்காரியாக இருக்க வேண்டும் என்றும் கூறியதோடு, மறு நாள் மதியச் சாப்பாட்டுக்கு மகளோடு வரும்படி (''மகளோடு'' என்ற சொல்லைக் கேட்டதும் நான் மூக்கைத் தட்டில் மறைத்துக் கொண்டேன்) அவளை அழைத்திருப்பதாகவும்

---

* மிகவும் கொச்சைத்தனம் உள்ள பெண் பிள்ளை (பிரெஞ்சு).

** ஆபாசம் பிடித்த பண விவகாரங்கள் (பிரெஞ்சு).

ஏனென்ருல் என்ன இருந்தாலும் அவள் அண்டை வீட்டுக்காரி, பெயர் பெற்றவள் என்றும் தெரிவித்தாள். இதைக் கேட்ட தகப்பனுர் இந்தச் சீமாட்டி யார் என்பது தமக்கு இப்போது நினைவு வந்து விட்டது என்று சொன்னுர். காலஞ்சென்ற சிற்றரசர் ஜஸேகினைத் தாம் இளமையில் அறிந்திருந்ததாகவும், அவர் நன்கு பயிற்றி வளர்க்கப் பெற்றவர், ஆனுல் வெறுமையானவர், வெட்டி மனிதர் என்றும், பாரிஸ் நகரில் நெடுங்காலம் வசித்த காரணத்தால் அவர் "le Parisien"* என்றுஅழைக்கப்பட்டதாகவும்,பெரும் செல்வராக இருந்ததாகவும், சொத்து முழுவதையும் சூதாடித் தோற்று விட்டதாகவும், எவனே அரசாங்க அதிகாரியின் மகளை என்ன காரணத்தாலோ தெரியவில்லை—ஒருவேளை பணத்திற்காகவும் இருக்கலாம்—மணந்து கொண்டதாகவும். (மேலான பெண்ணை அவர் தெரிந்தெடுத்திருக்கலாம் என்று வறண்ட புன்னகையுடன் இடையில் சேர்த்தார் அப்பா), மணம் செய்து கொண்ட பின் கள்ள வியாபாரத்தில் ஈடுபட்டு ஒரேயடியாக நொடித்துப் போனதாகவும் விவரித்தார்.

''அவள் எங்கேனும் பணம் கடனுகக் கேட்காமல் இருக்க வேண்டுமே'' என்ருள் அம்மா.

''இது நடக்கக் கூடியதுதான்'' என்று அமைதியாகக் கூறினுர் அப்பா. ''அவள் பிரெஞ்சு பேசுகிருளா?''

''படு மோசமாக.''

''ஹ்ம். ஆனுல், நமக்கு எல்லாம் ஒன்று தான். அவளுடைய மகளையும் அழைத்திருப்பதாக நீ சொன்னுய் போலிருக்கிறது. அவள் நிரம்ப இனிய

* பாரிஸ்காரர் (பிரெஞ்சு).

வள், உயர் கல்வி பெற்றவள் என்று என்னிடம் யாரோ சொன்னார்கள்.''

''அப்படியா! அவள் தாயாரைக் கொள்ள வில்லை என்று ஆகிறது.''

''தகப்பனாரையுந்தான்'' என்றார் அப்பா. ''அந்த மனிதரும் உயர் கல்வி பெற்றவர்தாம், ஆனால் அசடர்.''

அம்மா பெருமூச்செறிந்து சிந்தனையில் ஆழ்ந் தாள். அப்பா பேச்சை நிறுத்தி விட்டார். இந்த உரையாடலின் போது எனக்கு ஒரே சங்கடமாக இருந்தது.

சாப்பிட்ட பிறகு நான் தோட்டத்துக்குப் போனேன், ஆனால் துப்பாக்கி இல்லாமல். ''ஜஸே கின் வீட்டுத் தோட்டத்தை'' நெருங்குவதில்லை என்று உறுதி பூண்டிருந்தேன், ஆனால் தடுக்க முடி யாத ஆற்றல் என்னை அந்தப் பக்கம் ஈர்த்தது. அதற்குப் பயனும் கிடைத்தது. வேலியின் அருகில் போவதற்குள் நான் ஜினயீதாவைக் கண்டேன். இந்தத் தடவை அவள் தனியாக இருந்தாள். புத் தகமும் கையுமாக ஒற்றையடிப் பாதையில் அவள் மெதுவாக நடந்து கொண்டிருந்தாள். என்னை அவள் கவனிக்கவில்லை.

நான் அவளை அனேகமாக நழுவ விடத் தெரிந் தேன். திடீரென்று நிதானத்துக்கு வந்து இரு மினேன்.

அவள் தலையைத் திருப்பினளே தவிர நிற்க வில்லை. வட்ட வைக்கோல் தொப்பியின் அகல மான இளநீல நாடாவைக் கையால் ஒதுக்கி என் னைப் பார்த்து மெல்லிய புன்னகை செய்து விட்டு, பார்வையை மீண்டும் புத்தகத்தில் நாட்டினாள்.

நான் மரியாதைக்காகத் தொப்பியைக் கழற்றி, சற்று நேரம் தயங்கி நின்று கொண்

டிருந்து விட்டு ஏங்கிய உள்ளத்துடன் அப்பால் போனேன். "Que suis—je pour elle?"* என்று (எதனுலோ, கடவுளுக்கே வெளிச்சம்) பிரெஞ்சு மொழியில் நினைத்துக் கொண்டேன்.

பழக்கமான காலடியோசை என் பின்னே கேட்டது. திரும்பிப் பார்த்தேன். தமக்கு இயல் பான விரைந்த நடையுடன் என்னை நோக்கி வந்து கொண்டிருந்தார் அப்பா.

''இவள்தான் இளவரசியா?'' என்று என் னிடம் கேட்டார்.

''ஆமாம்.''

''உனக்கு இவளைத் தெரியுமா என்ன?''

''இன்று காலை சிற்றரசியின் வீட்டில் இவளைக் கண்டேன்.''

அப்பா நின்று, குதிகால்களை அழுத்தி முழுத் திருப்பம் திரும்பி நடந்தார். ஜினயீதாவுக்கு நேராக வந்ததும் மரியாதையாக அவளை வணங் கினுர். அவளும் ஓரளவு வியப்புக் குறியுடன் அவ ருக்கு வணக்கம் தெரிவித்து விட்டு, புத்தகத்தைத் தாழ்த்திஞள். அவர் போவதை அவள் எப்படிப் பார்த்துக் கொண்டிருந்தாள் என்பதை நான் கவனித்தேன். என் தகப்பனுர் எப்போதுமே மிகப் பாங்காகவும் தமக்கே உரிய முறையிலும் பகட்டு இல்லாமலும் உடை அணிந்தார். ஆனல் அவருடைய மேனி இதை விட வடிவமைந்ததாக எனக்கு ஒருபோதும் காணப்பட்டதில்லை. அவ ருடைய சாம்பல் நிறத் தொப்பி இன்னும் அனேகமாக அடர்த்தி குறையாத அவருடைய முடிமேல் இதை விட ஆழமாக ஒருபோதும் பொருந்தி இருந்ததில்லை.

---

* ''இவளுக்கு நான் யார்?'' (பிரெஞ்சு).

நான் ஜினயீதாவிடம் போக நினைத்தேன். ஆனால் அவளோ, என்னை ஏறெடுத்தும் பார்க்க வில்லை. மறுபடி புத்தகத்தை உயர்த்தியவாறு அப்பால் போய் விட்டாள்.

6

அன்று மாலை முழுவதையும் மறுநாள் காலை யையும் ஒரு வகையான சோர்வுடன், உணர்வு மரத்துப் போன நிலையில் கழித்தேன். எனக்கு நினைவு இருக்கிறது, நான் வேலை செய்ய முயன் றேன். கைதானவின் வரலாற்றுப் பாட நூலைப் படிக்க முற்பட்டேன். ஆனால் அந்தப் புகழ் பெற்ற பாடப் புத்தகத்தின் நிறைய இடை வெளி விட்டவரிகளும் பக்கங்களும் வீணாக என் முன் தோன்றித் தோன்றி மறைந்தன. ''ஜூலியஸ் சீஸர் படைவீரனுக்கு உரிய துணிவில் சிறந்து விளங் கினான்'' என்ற சொற்களை அடுத்தடுத்துப் பத்து தரம் படித்தேன், ஒன்றும் புரிந்து கொள்ளாமல் புத்தகத்தை எறிந்து விட்டேன். மதியச் சாப்பாட் டுக்கு முன் முடிக்கு மறுபடி நறுமணச் சாந்து பூசிக் கொண்டேன், பிராக் கோட் அணிந்து டை கட்டிக் கொண்டேன்.

''இது எதற்காக?'' என்று கேட்டாள் அம்மா. ''நீ இன்னும் கல்லூரி மாணவன் அல்ல. நுழைவுத் தேர்வில் வெற்றி பெறுவாயா இல்லையா என்பது ஆண்டவனுக்கே வெளிச்சம். தவிர, உனக்குக் குட்டைக் கோட்டு தைத்து நிரம்ப நாட்கள் ஆகி விட்டனவா என்ன? அதை எறிந்து விடச் சொல்கிறாயா?''

''விருந்தாளிகள் வருவார்களே'' என்று அனேகமாகப் புகலின்றிக் கிசுகிசுத்தேன்.

''இது வெட்டிப் பேச்சு! எந்த மாதிரி விருந்தாளிகள் இவர்கள்!''

பணிந்து போக வேண்டியதாயிற்று. பிராக் கோட்டின் இடத்தில் குட்டைக் கோட்டை மாட்டிக் கொண்டேன். ஆனால் டையைக் கழற்றவில்லை. சிற்றரசி தன் புதல்வியோடு மதியச் சாப்பாட்டுக்கு அரை மணி முன்னர் வந்து சேர்ந்தாள். முதியவள் எனக்கு ஏற்கெனவே தெரிந்த பச்சை உடைக்கு மேல் மஞ்சள் சால்வையைப் போர்த்தி, நெருப்பு நிற நாடாக்கள் தைத்த பழைய மோஸ்தர் தொப்பியை அணிந்திருந்தாள். வந்ததுமே தன் உண்டியல்களைப் பற்றிப் பேசத் தொடங்கினாள், பெருமூச்செறிந்தாள், தனது ஏழ்மையைப் பற்றிக் குறை சொன்னாள், ஓயாமல் முறையிட்டாள், ஆனால் கொஞ்சங்கூடக் கூசிக் குலையவில்லை. வழக்கம் போலவே பொடியை ஓசையுடன் உறிஞ்சினாள், எப்போதும் போலவே நாற்காலியில் தாராளமாக வளைந்து நெளிந்தாள். தான் சிற்றரசி என்ற எண்ணமே அவள் மூளையில் படவில்லை போல் இருந்தது. மாறாக, ஜினயீதா மிகக் கண்டிப்புடன், கிட்டத்தட்ட அகந்தையுடன், உண்மையான இளவரசியாக நடந்து கொண்டாள். உணர்ச்சிகளைக் காட்டாத அசைவின்மையும் பெருமிதமும் அவளுடைய முகத்தில் தோன்றின. எனக்கு அவளை அடையாளம் தெரியவில்லை, அவளுடைய பார்வைகளையும் முறுவலையும் அடையாளம் தெரியவில்லை. ஆனாலும், இந்தப் புதிய தோற்றத்திலும் அவள் அழகியாக எனக்குக் காணப்பட்டாள். வெளிர் நீலச் சித்திரக் கோலங்கள் கொண்ட மெல்லிய கம்பளி உடை அணிந்திருந்தாள். அவளுடைய கூந்தல் ஆங்கில தோரணையில் நீண்ட புரிகளாகக் கழுத்தின் மேல் படர்ந்

திருந்தது. அவளுடைய முகத்தின் கண்டிப்புள்ள தோற்றத்துக்கு இந்தக் கூந்தல் ஒப்பனை பொருந்தியது. சாப்பாட்டின் போது என் தகப்பனுர் அவள் அருகே அமர்ந்து, தமக்கு இயல்பான நயப்பாங்கும் அமைதியும் உள்ள மரியாதையுடன் அவளை உபசரித்துக் கொண்டிருந்தார். எப்போதாவது அவர் அவளைப் பார்த்தார். அவளும் எப்போதாவது அவர் மேல் பார்வை செலுத்தினுள், அதுவும் மிக விந்தையாக, கிட்டத்தட்டப் பகைமையுடன். அவர்களுடைய உரையாடல் பிரெஞ்சு மொழியில் நடந்தது. எனக்கு நினைவிருக்கிறது, ஜினயீதாவின் உச்சரிப்புத் தூய்மை என்னை வியப்பில் ஆழ்த்தியது. சாப்பாட்டின் போது சிற்றரசி முன் போலவே எதற்கும் கூச்சப்படவில்லை, நிறையச் சாப்பிட்டாள், உணவு வகைகளைப் பாராட்டினுள். அம்மா அவள் மேல் சலிப்பு அடைந்தாள் போல் இருந்தது. ஏக்கம் நிறைந்த ஒரு வித அசட்டையுடன் அவளுக்கு மறுமொழி கூறிக் கொண்டிருந்தாள். தகப்பனுர் புருவங்களை எப்போதாவது லேசாக நெறித்தார். ஜினயீதாவையும் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை.

''இவள் என்னவோ ஆணவம் பிடித்தவள்'' என்று அவள் மறுநாள் கூறினுள். ''இவள் இருக்கிற இருப்புக்கு ஆணவம் ஒரு கேடா—avec sa mine de grisette!"*

''ஒழுக்கக் கட்டில்லாத தொழிலாளிப் பெண்களை நீ பார்த்ததில்லை போலிருக்கிறது'' என்று அவளிடம் சொன்னுர் அப்பா.

''நல்ல வேளைதான்!''

---

* பார்ப்பதற்கு ஒழுக்கக் கட்டற்ற தொழிலாளிப் பெண் போல இருந்து கொண்டு (பிரெஞ்சு).

''சொல்ல வேண்டுமா, நல்ல வேளைதான்... ஆனால் அவர்களைப் பற்றி நீ எப்படித் தீர்ப்புக் கூறலாம்?''

என் மேல் ஜினயீதா அறவே கவனம் செலுத்த வில்லை. சாப்பாடு முடிந்ததுமே சிற்றரசி விடை பெற முற்பட்டாள்.

''மாரியா நிக்கலாயெவ்னு, பியோத்தர் வசீலிச்'' என்று அம்மாவையும் அப்பாவையும் நீட்டிய குரலில் அழைத்து, ''உங்கள் ஆதரவை நம்பிக் கொண்டிருப்பேன். என்ன செய்வது? ஒரு காலம் இருந்தது, இப்போது போய் விட்டது. இதோ இருக்கிறேன் நான், சிற்றரசி என்று பெயர் சொல்லிக் கொண்டு! கஞ்சிக்கு வக்கு இல்லாத போது மானமாவது மரியாதையாவது!'' என்று கடூரமாகச் சிரித்தாள்.

அப்பா அவளுக்குச் சிரம் தாழ்த்து வணக்கம் தெரிவித்து முன்னறை வாயில் வரை சென்று அவளை வழியனுப்பினர். நானே, குட்டைக் கோட்டும் தானுமாக அங்கேயே நின்று மரண தண்டனை விதிக்கப் பெற்றவன் போலத் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஜினயீதா என்னிடம் நடந்து கொண்ட விதம் என்னை ஒரேயடியாக மாய்த்து விட்டது. ஆனல், என் அருகாகச் செல் கையில், கண்களில் முன் போன்ற அன்பு சுடர் விட அவள் அவசர அவசரமாகப் பின் வருமாறு கிசுகிசுத்த போது எனக்கு உண்டான வியப்புக்கு அளவு இல்லை:

''எட்டு மணிக்கு எங்கள் வீட்டுக்கு வாருங் கள், கேட்டீர்களா, கட்டாயம்...''

நான் வெறுமே கைகளை விரித்தேன், ஆனல் அதற்குள் அவள் தலையில் வெள்ளை மப்ளரைப் போட்டுக் கொண்டு அப்பால் போய் விட்டாள்.

## 7

பிராக் கோட்டும் தலையில் துருத்தி நின்ற முன்னுச்சி மயிருமாகச் சரியாய் எட்டு மணிக்கு, சிற்றரசி தங்கி இருந்த பக்கமனையின் முன்னறையில் புகுந்தேன். கிழப் பணியாள் என்னை முறைத்துப் பார்த்து வேண்டா வெறுப்பாகப் பெஞ்சியிலிருந்து எழுந்தான். விருந்தறையில் குதூகலக் குரல்கள் கேட்டன. நான் கதவைத் திறந்தவன் வியப்பினால் பின்னே விலகினேன். இளவரசி அறை நடுவில் ஒரு நாற்காலி மேல் நின்று ஆண்கள் அணியும் தொப்பியைத் தன் முன் பிடித்திருந்தாள். ஐந்து ஆடவர்கள் நாற்காலியைச் சுற்றி மொய்த்திருந்தார்கள். தொப்பியில் கை விட அவர்கள் முயன்று கொண்டிருந்தார்கள். அவளோ அதை உயரே தூக்கிப் பலமாகக் குலுக்கிக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவள் ஆரவாரித்தாள்:

''இருங்கள், பொறுங்கள்! புதிய விருந்தாளி, இவருக்கும் டிக்கட்டு கொடுக்க வேண்டும்.'' இவ்வாறு சொல்லி, நாற்காலியிலிருந்து அனாயாசமாகக் குதித்து என் கோட்டுக் கையைப் பற்றினாள். ''போவோம் வாருங்கள், என்ன நிற்கிறீர்கள்?'' என்றாள். "Messieurs*, உங்களுக்கு அறிமுகப்படுத்த அனுமதியுங்கள்: இவர்தாம் மிஸியே வோல்தெமார், எங்கள் அண்டை வீட்டாரின் புதல்வர்'' என்று என்னைப் பார்த்து, ''இவர்கள்'' என்று விருந்தாளிகளை ஒவ்வொருவராகச் சுட்டிக் காட்டிக் கூறினாள்: ''மலேவ்ஸ்கி பிரபு, டாக்டர் லூஷின், கவி மைதானவ், ஓய்வு பெற்ற காப்டன்

---

* கனவான்களே (பிரெஞ்சு).

நிர்மாத்ஸ்கி, குதிரைப்படையினர் பெலவ்ஸோரவ், இவரை நீங்கள் முன்பே பார்த்து விட்டீர்கள். அன்பும் அருளும் காட்டும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.''

ஒரே குழப்பம் அடைந்திருந்த நான் ஒருவருக்கும் வணக்கம் தெரிவிக்கக் கூட இல்லை. என்னைத் தோட்டத்தில் இரக்கமின்றி வெட்கப்படச் செய்த பழுப்பு மேனிக் கனவான்தான் டாக்டர் லூஷின் என்று தெரிந்து கொண்டேன். மற்றவர்கள் எனக்குத் தெரியாதவர்கள்.

''பிரபு! மிஸியே வோல்தெமாருக்கு ஒரு டிக்கட்டு எழுதுங்கள்!'' என்று தொடர்ந்தாள் ஜினயீதா.

''இது நியாயம் அல்ல'' என்று சிறிது போலிஷ் ஒலி அழுத்தத்துடன் மறுத்தான் பிரபு. கரு முடியும் உணர்ச்சிகளை நன்ருக வெளியிடும் பழுப்பு விழிகளும் குறுகிய சிறு வெண் மூக்கும் சின்ன வாய்க்கு மேலே மெல்லிய மீசையும் கொண்ட அவன் நிரம்ப அழகியவன், பகட்டாக உடை அணிந்திருந்தான். ''இவர் நம்மோடு பறிமுதல் ஆட்டம் விளையாடவில்லையே'' என்ருன்.

''நியாயம் அல்ல'' என்று திருப்பிச் சொன்ஞர்கள் பெலவ்ஸோரவும் ஓய்வு பெற்ற காப்டன் எனப்பட்ட கனவானும். நாற்பது வயதான இந்த மனிதன் அம்மைத் தழும்புகளால் அலங்கோலத் தோற்றம் அளித்தான், அரேபியன் போலச் சுருட்டைத் தலையனாய் இருந்தான், கூனலும் கவட்டுக் கால்களும் கொண்டிருந்தான், பதவிச் சின்னம் இல்லாத இராணுவக் கோட்டைப் பொத்தான் போடாமல் அணிந்திருந்தான்.

''டிக்கட்டு எழுதுங்கள் என்கிறேன்'' என்று திருப்பிச் சொன்ஞள் இளவரசி. ''இது என்ன

கலகம்? மிஸியே வோல்தெமார் நம்மோடு முதல் தடவை விளையாடுகிறார், ஆகையால் நம் சட்டம் இன்று அவருக்குச் செல்லாது. முணுமுணுக்க வேண்டாம், எழுதுங்கள், இது என் விருப்பம்'' என்றாள்.

பிரபு தோள்களைக் குலுக்கினான், ஆனால் பணிவாகக் குனிந்து, மோதிரங்களால் அலங்கரிக்கப் பட்ட வெண்மையான கையில் பேனாவைப் பிடித்து, காகிதத்தில் ஒரு துண்டு கிழித்து, அதில் எழுதத் தலைப்பட்டான்.

''திருவாளர் வோல்தெமாருக்கு விஷயம் என்ன என்று விளக்கவாவது அனுமதியுங்கள், இல்லாவிட்டால் அவர் ஒரேயடியாகக் குழம்பிப் போயிருக்கிறார்'' என்று கேலிக் குரலில் தொடங்கினான் லூஷின். ''இதோ பாருங்கள், இளைஞரே, நாங்கள் பறிமுதல் ஆட்டம் விளையாடினோம். இளவரசி அபராதம் செலுத்த வேண்டியதாயிற்று. அதிர்ஷ்டச் சீட்டு யாருக்குக் கிடைக்கிறதோ, அவர் இளவரசியின் கையை முத்தமிட உரிமை பெறுவார். நான் சொன்னது உங்களுக்குப் புரிந்ததா?''

நான் அவனை வெறித்துப் பார்த்தவாறு மூளை குழம்பியவன் போலத் தொடர்ந்து நின்று கொண்டிருந்தேன். இளவரசி மறுபடி நாற்காலியில் துள்ளி ஏறித் தொப்பியை மறுபடி குலுக்கலானாள். எல்லோரும் அவள் அருகே நெருங்கினார்கள். நானும் மற்றவர்கள் பின்னே போனேன்.

மெலிந்த முகமும் சிறு குருட்டுக் கண்களும் அளவு கடந்து நீளமான கரிய முடியும் கொண்ட நெட்டையான இளைஞனை ''மைதானவ்'' என்று அழைத்தாள் இளவரசி. ''நீங்கள் கவிஞர் என்ற முறையில் தாராள புத்தியைக் காட்டி உங்கள்

டிக்கட்டை மிஸியே வோல்தெமாருக்குக் கொடுக்க வேண்டும்—அவருக்கு ஒன்றின் இடத்தில் இரண்டு வாய்ப்புகள் கிடைக்கும்படி'' என்ருள்.

ஆனுல் மைதானவ் மாட்டேன் என்று தலையை அசைத்துக் கூந்தல் கற்றைகளை ஆட்டினுன். எல்லோருக்கும் பிறகு நான் தொப்பியில் கை விட்டு, டிக்கட்டை எடுத்துப் பிரித்தேன்... ஆண்டவனே! ''முத்தமிடு!'' என்ற சொல்லை அதில் கண்டதும் எனக்கு மகிழ்ச்சியில் தலைகால் புரியவில்லை.

''முத்தமிடு!'' என்று என் வசமின்றி ஆர்ப்பரித்தேன்.

''பலே! இவர் வென்று விட்டார்'' என்று உற்சாகப்படுத்தினுள் இளவரசி. ''எனக்கு நிரம்ப மகிழ்ச்சி!'' அவள் நாற்காலியிலிருந்து இறங்கி, தெளிந்த விழிகளால் என் விழிகளில் இனிமையாகப் பார்வை செலுத்தினுள். என் இதயம் துள்ளியது. ''உங்களுக்கு மகிழ்ச்சியாய் இருக்கிறதா?'' என்று என்னிடம் கேட்டாள்.

''எனக்கா?..'' என்று குழறினேன்.

''உங்கள் டிக்கட்டை எனக்கு விலைக்குக் கொடுங்கள், நூறு ரூபிள் தருகிறேன்'' என்று என் காதுக்கு மேலே கணீர்க் குரலில் முழங்கினுன் பெலவ்ஸோரவ்.

நான் சீற்றம் பொங்கும் பார்வையால் குதிரைப்படையினனுக்குப் பதில் அளித்தேன். இதைப் பார்த்து ஜினயீதா கைகளைக் கொட்டினுள். லூஷின் ''சபாஷ்!'' என்று மெச்சினுன்.

''ஆனுல், சடங்குத் தலைவன் என்ற முறையில் எல்லா விதிகளும் நிறைவேற்றப் படுமாறு பார்த்துக்கொள்வது என் கடமை. மிஸியே வோல்

தெமார், ஒரு முழங்காலை மடித்து அமருங்கள். எங்கள் விதி முறை அப்படி'' என்றான்.

ஜினயீதா என் எதிரே நின்று, என்னை நன்றாகப் பார்ப்பதற்காகப் போலத் தலையை ஒரு பக்கம் சாய்த்து, கையைப் பெருமிதத்துடன் என்னிடம் நீட்டினாள். என் விழிகள் நீர் மல்கி மங்கின. ஒரு முழங்காலை மடிக்க நினைத்தவன் இரண்டு கால்களையும் மடக்கிப் படியிட்டேன். ஜினயீதாவின் விரல்களை உதடுகளால் இசை கேடாகத் தொடப் போய் அவளுடைய நகத்தால் என் மூக்கு நுனியை லேசாகப் பறண்டிக் கொண்டேன்.

''போதும்!'' என்று கத்தி, எழுந்து நிற்க எனக்கு உதவினான் லூஷின்.

பறிமுதல் விளையாட்டு தொடர்ந்தது. ஜினயீதா என்னைத் தன் பக்கத்தில் உட்கார்த்திக் கொண்டாள். அவள்தான் என்னென்ன விதமான அபராதங்களைக் கற்பனை செய்தாள்! ஒரு தரம் அவள் ''சிலையாக'' நடிக்க நேர்ந்தது. தன் பாத பீடமாகப் பாவம் நிர்மாத்ஸ்கியை அவள் தெரிந்தெடுத்தாள். குப்புறப் படுக்கும்படியும் முகத்தை மார்பில் புதைத்துக் கொள்ளும்படியும் அவனுக்கு உத்தரவிட்டாள். கோலாகலச் சிரிப்பு ஒரு நொடி கூட அடங்கவில்லை. தனிமையில், நிதானப் போக்கில் பயிற்றிப் போதிக்கப்பட்டு, உயர்குடிச் சீமானின் ஒழுங்குக் கண்டிப்புள்ள வீட்டில் வளர்ந்த எனக்கு இந்தக் கூச்சலும் கும்மாளமும், சடங்கு பாராட்டாத, அனேகமாக வெறியுள்ள களிக் கொண்டாட்டமும், அறிமுகமற்ற ஆட்களுடன் ஒருபோதும் இல்லாத வகையான இந்த உறவாடல்களும் நேரே தலைக்கேறி விட்டன. மது அருந்தியவன் போல நான் வெறி கொண்டேன். மற்றவர்களைக் காட்டிலும் உரக்கக் கெக்கலி கொட்டவும்

உளறவும் தலைப்பட்டேன். இவேர்ஸ்கி வாயிலிலிருந்து ஆலோசனைக்காக அழைக்கப்பட்டு வந்த எவனோ அலுவலனோடு* பக்கத்து அறையில் உட்கார்ந்திருந்த சிற்றரசி கூட என்னைப் பார்ப்பதற்காக வெளியே வந்தாள். ஆனால் இன்பத்தின் உச்சியை எட்டிவிட்டதாக உணர்ந்து கொண்டிருந்த நான் யாருடைய ஏளனத்தையும் துளிக்கூடப் பொருட்படுத்தவில்லை, எவருடைய முறைப்பையும் கால் காசுக்கு மதிக்கவில்லை. ஜினையீதா எனக்குத் தொடர்ந்து முதன்மை கொடுத்தாள், தன்னிடமிருந்து என்னை விடவில்லை. ஓர் அபராதத்தில், அவளும் நானும் ஒரே பட்டுக் கைக்குட்டையால் தலைகளைப் போர்த்துக் கொண்டு அக்கம் பக்கத்தில் உட்கார வேண்டியிருந்தது. நான் என்னுடைய இரகசியத்தை அவளிடம் சொல்ல வேண்டும் என்பது நிபந்தனை. எனக்கு நினைவு இருக்கிறது, எங்கள் இருவருடைய தலைகளும் இறுக்கம் நிறைந்த, அரை ஒளிபுகும், நறுமண மங்கலில் திடீரென்று நெருங்கி இருந்தன, அவளுடைய விழிகள் இந்த மங்கலின் அருகேயும் மென்மையாக ஒளிர்ந்தன, திறந்த உதடுகள் வெப்ப மூச்சு விட்டன, பற்கள் தென்பட்டன, அவளுடைய கூந்தலின் நுனிகள் எனக்குக் கிச்சுக் கிச்சு மூட்டின, பொசுக்கின. நான் பேசாதிருந்தேன். அவள் மர்மமும் தந்திரமும் தோன்ற முறுவலித்து, ''ஊம்,

---

* பழங்கால மாஸ்கோவில் (செஞ்சதுக்கத்தின் பக்கத்தில்), இவேர்ஸ்கி வாயிலின் அருகே, வழக்கு விவகாரங்கள் சம்பந்தமான விண்ணப்பதாரர்களும் ஆவணங்கள் எழுதவும் வழக்குகள் நடத்தவும் சம்பளத்துக்கு அமர்த்தப்பட்ட ஓய்வு பெற்ற அலுவலர்களும் கூடினார்கள். இங்கு குறிக்கப்படுபவன் இத்தகைய அலுவலன்.

என்ன சேதி?'' என்று முடிவில் என் காதில் கிசு கிசுத்தாள். நானோ, முகம் சிவந்து சிரித்தேன், முகத்தைத் திருப்பிக் கொண்டேன், அனேகமாக மூச்சு விடாதிருந்தேன். பறிமுதல் விளையாட்டு எங்களுக்கு அலுத்துப் போயிற்று. நாங்கள் கயிறு ஆட்டம் விளையாடத் தொடங்கினோம். அட என் ஆண்டவனே! பராக்குப் பார்த்த எனக்கு அவளிட மிருந்து விரல்களில் திடீரெனச் சுளீரென்ற அடி கிடைத்ததும் நான் எத்தகைய பேருவகையில் திளைத்தேன்! பிற்பாடு, பராக்குப் பார்ப்பது போல நடிக்க நான் வேண்டுமென்றே எப்படி முயன்றேன், ஆனால் அவள் என் நீட்டிய கரத்தைத் தொடாமல் என்னை எப்படி ஏளனம் செய்தாள்!

அன்று, அந்த மாலையில் நாங்கள் என்னவெல் லாம் செய்தோம்! பியானோ வாசித்தோம், பாடி னோம், ஆடினோம், ஜிப்சி முகாமாக நடித்தோம். நிர்மாத்ஸ்கிக்குக் கரடி வேஷம் போட்டு உப்பு கலந்த நீரைப் பருகக் கொடுத்தோம். மலேவ்ஸ்கி பிரபு பல வகைச் சீட்டு வித்தைகளை எங்களுக்குக் காட்டினான். முடிவில் அவன் சீட்டுக் கட்டைக் கலைத்து, விஸ்டு ஆட்டத்திற்கான எல்லாத் துருப்புச் சீட்டுகளும் தனக்கு விழும்படி போடவே, லூஷின் ''அவனை வாழ்த்தும் பேறு பெற்றான்.'' மைதானவ் ''கொலைகாரர்கள்'' என்ற தன் காவி யத்தின் பகுதிகளை ஒப்பித்தான் (ரொமாண்டிசி ஸம்* முழு மலர்ச்சி அடைந்திருந்த காலம் அது).

---

* ரொமாண்டிசிஸம் என்பது ஐரோப்பிய இலக்கியப் போக்குகளில் ஒன்று. 19ம் நூற்றாண் டின் தொடக்கத்தில் ஜெர்மனியிலும் பின்னர் பிரான்சிலும் பிற நாடுகளிலும் இது முறையாக உருவாயிற்று. கடந்த காலத்தை, சிறப்பாக இடைக்காலத்தை, ஆதர்சமாகப் போற்றுவதும்

கறுப்புக் காகித மேலுறையில் இரத்தச் சிவப்பான கொட்டை எழுத்துக்களில் இதைப் பதிப்பிக்க அவன் திட்டம் இட்டிருந்தான். இவேர்ஸ்கி வாயிலிலிருந்து வந்த அலுவலனுடைய தொப்பியை இளைஞர்கள் மாட்டலிலிருந்து திருடிக் கொண்டு, அதைப் பெறுவதற்காக அவனைக் கஸாக்கிய நடனம் ஆடவைத்தார்கள். கிழவன் வனிபாத்திக்கு மாதர் தொப்பியை மாட்டினார்கள்,இளவரசியோ ஆடவர் ஹாட்டைப் போட்டுக் கொண்டாள்... அவர்கள் செய்தவற்றை எல்லாம் விவரித்து மாளாது. பெலவ்ஸோரவ் ஒருவன் மட்டும் சுளித்த முகமும் சிடுசிடுப்புமாக மூலையில் பெரும்பாலும் நின்று கொண்டிருந்தான்... சில வேளைகளில் அவனுடைய கண்களில் குருதி கொப்பளித்தது, அவன் முகமெல்லாம் குப்பென்று கன்றிச் சிவந்தது. இதோ அவன் எங்கள் எல்லோர் மேலும் பாய்ந்து எங்களைச் சிம்புகள் போல நாலா புறங்களிலும் சிதற அடித்து விடுவான் என்று தோன்றியது. ஆனால் இளவரசி அவனை உற்றுப் பார்த்து அச்சுறுத்தும் பாவனையில் விரலை ஆட்டினாள். உடனே அவன் தன் மூலையில் பதுங்கி விட்டான்.

முடிவில் எங்களுக்குத் தாவு தீர்ந்து விட்டது. சிற்றரசி வலுவானவள், அவளே சொன்னது போல, ''விகுவுள்ளவள்''—எந்தக் கத்தலும் கூச்சலும் அவளுக்குத் தொந்தரவாயில்லை. ஆனால் அவள் கூடக் களைத்துப் போய் இளைப்பாற விரும்பினாள். இரவு பதினொரு மணிக்கு மேல் உணவு பரிமாறப்பட்டது. பழைய, உலர்ந்த பாலடைக்

---

வீர வழிபாடும் படிமங்களிலும் கருப் பொருள்களிலும் தனித்தன்மையும் நடப்பியலின் புறக்கணிப்பும் இதன் இயல்புகள்.—மொ-ர்.

கட்டித் துண்டுகளும் குளிர்வித்த இறைச்சிப் பணியாரங்களும் அடங்கியது அது. உயர்தரக் கறி வகைகளை விடச் சுவையுள்ளவையாக இவை எனக்குத் தோன்றின. மது ஒரு புட்டிதான் இருந்தது. அதுவும் விசித்திரமானது, உப்பிய கழுத்துள்ள கறுப்புப் புட்டி. அதிலிருந்த மது ரோஜா நிறம். ஆனால் ஒருவரும் அதைக் குடிக்கவில்லை. களைப்பினாலும் களிப்பினாலும் சோர்ந்து போய், பக்கமனையிலிருந்து வெளியேறினேன். நான் விடை பெறுகையில் ஜினயீதா என் கையை உறுதியாகப் பற்றிக் குலுக்கி மீண்டும் மர்மப் புன்னகை புரிந்தாள்.

என் சூடேறிய முகத்தில் இரவு ஆவி நிறைந்த ஈர மூச்சு விட்டது. இடிப் புயல் அடிப்பதற்கான அறி குறிகள் தென்பட்டன. கரு முகில்கள் அடர்ந்து தங்கள் புகை நிற வடிவமைப்புக்களை மாற்றுபவை போல வானில் ஊர்ந்தன. இருண்ட மரங்களில் காற்று அமைதியின்றி நடுங்கியது. வான விளிம்புக்கு அப்பால் எங்கோ தொலைவில் இடி தனக்குத் தானே போலக் கோபத்துடனும் தெளிவின்றியும் கறுமுறுத்தது.

பின் வாசல் வழியாக நான் என் அறையை அடைந்தேன். பணியாள் ஃபியோதர் மாமா தரையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். நான் அவனைத் தாண்டிப் போக வேண்டியதாயிற்று. அவன் விழித்துக் கொண்டு என்னைப் பார்த்து, அம்மா என் மேல் மறுபடி கோபப்பட்டதாகவும் என்னை அழைத்தனுப்ப மறுபடி விரும்பியதாகவும் அப்பா அவளைத் தடுத்து விட்டதாகவும் தெரிவித்தான். (அம்மாவுக்கு வணக்கம் சொல்லாமலும் அவளிடம் ஆசி பெறாமலும் நான் ஒரு

போதும் தூங்கப் போனதில்லை.) ஒன்றும் செய் வதற்கில்லை!

உடை களைந்து விட்டு நானே படுத்துக் கொள் கிறேன் என்று ஃபியோதர் மாமாவிடம் சொல்லி விளக்கை அணைத்தேன். ஆனால் நான் உடை களை யவும் இல்லை, படுக்கவும் இல்லை.

நாற்காலியில் அமர்ந்து, மந்திரத்தால் வசியம் செய்யப்பட்டவன் போல வெகுநேரம் உட்கார்ந் திருந்தேன். நான் உணர்ந்தது முற்றிலும் புதிய தாகவும் மிக மிக இனியதாகவும் இருந்தது... கொஞ்சம் சுற்று முற்றும் கண்ணோட்டிய வாறு அசையாமல் உட்கார்ந்து மெதுவாக மூச்சு விட்டேன். இருந்தாற்போலிருந்து எதையாவது நினைவுகூர்ந்து ஓசையில்லாமல் சிரித்தேன். நான் காதல் கொண்டிருப்பதாகவும் இதுதான், இது வேதான் அந்தக் காதல் என்றும் எண்ணி உள்ளுக் குள் சில்லிட்டுப் போனேன். ஜினயீதாவின் முகம் எனக்கு முன் இருளில் ஓசையின்றி நீந்தியது, ஆனால் நீந்திப் போய்விடவில்லை. அவளுடைய உதடுகள் முன்போலவே ஓயாமல் மர்மப் புன்னகை புரிந் தன, விழிகள் சற்றுப் பக்க வாட்டிலிருந்து, கேள் விக் குறியுடனும் சிந்தனையுடனும் கனிவுடனும் என்னை நோக்கின... அவளை நான் பிரிந்த கணத் தில் எப்படி நோக்கினவோ அப்படி. கடைசியில் நான் எழுந்து, நுனிக் காலால் நடந்து கட்டி லுக்குப்போய், உடை களையாமல் தலையணை மேல் பதபாகமாகத் தலையை வைத்தேன்—என்னுள் நிறைந்து ததும்பியதைத் திடீர் அசைவால் கல வரப்படுத்த அஞ்சியவன் போல...

நான் படுத்தேன், ஆனால் கண்ணைக் கூட மூட வில்லை. ஏதோ ஒளியின் மெல்லிய பிரதிபலிப்பு கள் என் அறையில் இடையறுமல் பளிச்சிடத்

தொடங்கியதை விரைவில் கவனித்தேன். சற்றே தலையை உயர்த்தி வெளியே பார்வை செலுத்தினேன். சன்னல் சட்டம் மர்மமாகவும் மங்கலாகவும் வெளிறியிருந்த கண்ணாடிகளிலிருந்து துலக்கமாகப் பிரிந்து தெரிந்தது. ''இடிமின் புயல்'' என்று நினைத்துக் கொண்டேன். சரிதான், இடிமின் புயல்தான். ஆனால் அது மிகத் தொலைவில் அடித்துக் கொண்டிருந்ததால் இடிச் சத்தம் கேட்கவில்லை. பல கிளைகள் கொண்டவை போன்ற நீண்ட, ஒளி குன்றிய மின்னல்கள்தாம் வானில் இடையறாது வெட்டி அடித்துக்கொண்டிருந்தன. அவை வெட்டி அடித்துக் கொண்டிருந்தன என்பதை விட செத்துக் கொண்டிருக்கும் பறவையின் இறக்கை போலத் துடிதுடித்து வெட்டி வெட்டி இழுத்துக் கொண்டிருந்தன என்பது அதிகப் பொருத்தமாய் இருக்கும். நான் எழுந்து சன்னல் அருகே போய், விடியும் வரையில் அங்கே நின்று கொண்டிருந்தேன்... மின்னல்கள் ஒரு கணமேனும் நிற்கவில்லை. ருஷ்ய மக்களின் பேச்சில் **வரபீனயா நோச்***[*] என்று வழங்கும் வகையான இரவு அது. சந்தடியற்ற மணல் வெளியையும் நிஸ்கூச்னிப் பூங்காவின் இருண்ட செறிவையும் தொலைவில் இருந்த கட்டிடங்களின் மஞ்சள் பாரித்த முகப்புக்களையும் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். இந்தக் கட்டிடங்கள் ஒவ்வொரு மங்கிய மின்

---

* குருவி இரவு என்று பொருள்படும் ருஷ்யச் சொற்றொடர். ''இடியும் மின்னலும் மழையும் காற்றுமான பயங்கர இரவுகள் உண்டு. மக்கள் பேச்சில் அவை 'குருவி இரவுகள்' என வழங்குகின்றன'' என்று ''சலிப்பூட்டும் கதை''யின் ஐந்தாம் அத்தியாயத் தொடக்கத்தில் சேகவ் எழுதுகிறார்.

வெட்டின் போதும் வெட்டி இழுப்பவை போலக் காணப்பட்டன... பார்த்துக் கொண்டிருந்த என்னுல் பார்வையை அகற்ற முடியவில்லை. இடியோசை இல்லாத அந்த மின்னல்களும் அடங்கிய ஒளிர்வுகளும் எனக்குள் பீரிட்டுக் கொண்டிருந்த ஒலியற்ற உற்சாகப் பெருக்குக்கு இசைவாய் இருந்தன. விடியத் தொடங்கியது. சிவப்புக் கறைகளுடன் தோற்றம் அளித்தது புலர்போது. சூரியன் நெருங்க நெருங்க மின்னல்கள் மேலும் மேலும் வெளிறிக் குறுகிக் கொண்டு போயின. அவை வரவர அரிதாகத் துடிதுடித்தன. அறிவைத் தெளிவிப்பதும் ஐயத்துக்கு இடமற்றதுமான உதயத்தின் ஒளியில் மூழ்கி முடிவில் மறைந்து விட்டன...

எனக்கு உள்ளேயும் என்னுடைய மின்னல்கள் மறைந்து விட்டன. பெருத்த களைப்பையும் நிசப்தத்தையும் நான் உணர்ந்தேன்... ஆனால் ஜினயீதாவின் உருவம் வெற்றிக் களிப்புடன் என் உள்ளத்திற்கு மேலே முன் போலவே மிதந்து கொண்டிருந்தது. எனினும், இந்த உருவம் கூட அமைதி அடைந்து விட்டது போலக் காணப்பட்டது. சதுப்பு நிலப் புற்களிலிருந்து பறந்து உயரே எழும் அரச அன்னம் போன்று, தன்னைச் சூழ்ந்திருந்த அழகற்ற மற்ற உருவங்களிலிருந்து பிரிந்து விட்டது அது. பிரிவு பெறுகையில் நான் கடைசித் தடவையாக அந்தரங்க வழிபாட்டுடன் அதனோடு ஒண்டிக் கொண்டேன்...

ஓ, உருகிய உள்ளத்தின் நய உணர்வுகளே, மெல் ஒலிகளே, நல்லியல்பும் ஆறுதலுமே, காதலின் முதல் இன்ப உணர்ச்சிகளில் மறைந்துள்ள களிப்பே,—எங்கே நீங்கள், எங்கே நீங்கள்?

8

மறுநாள் காலையில் நான் தேநீர் பருகச் சென்ற போது அம்மா—நான் எதிர்பார்த்ததற்குக் குறைவாகவே—என்னைக் கடிந்து கொண்டாள், முன்னிரவை எப்படிக் கழித்தேன் என்று சொல்லும்படிக் கட்டாயப்படுத்தினாள். நான் பல விவரங்களை விட்டு விட்டு, எல்லாம் குற்றமற்ற விளையாட்டு என்று காட்ட முயன்றவாறு சில சொற்களில் அவளுக்கு விடை பகர்ந்தேன்.

''என்ன ஆனாலும் அவர்கள் comme il faut* அல்ல. பரீட்சைக்குத் தயாரிப்பதையும் படிப்பதையும் விட்டு விட்டு அவர்கள் வீட்டுக்குப் போய்க் கொண்டிருப்பது உனக்குத் தகாது'' என்றாள் அம்மா.

என் கல்விப் பயிற்சி பற்றிய அம்மாவின் கவலை இந்தச் சில சொற்களுக்குள் அடங்கியிருந்ததை நான் அறிந்திருந்தபடியால் அவளுக்கு மறுப்பு கூறுவது அவசியம் என்று எண்ணவில்லை. ஆனால் தேநீர் பருகிய பின் அப்பா என்னைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு தோட்டத்துக்குப் போய், ஜஸேகினா சிற்றரசி வீட்டில் நான் கண்டவற்றை எல்லாம் விவரிக்கும்படி கூறினார்.

அப்பா என் மேல் விந்தையான செல்வாக்கு செலுத்தி வந்தார். எங்கள் உறவுகளும் விசித்திரமாய் இருந்தன. அவர் என்னைப் பயிற்றி வளர்ப்பதில் ஈடுபடவில்லை. ஆனால் என்னை ஒருபோதும் அவமதிக்கவில்லை. என் விடுதலையை அவர் மதித்தார். என்னிடம் அவர்—அப்படிச் சொல்லலாம்

* முறையானவர்கள் (பிரெஞ்சு).

என்ருல் — மரியாதையாகக் கூட இருந்தார்... ஆனுல், தம்மை நெருங்க மட்டும் அவர் என்னை விடவில்லை. நான் அவர் மேல் அன்பு கொண்டிருந் தேன், அவரை வியந்து பாராட்டினேன். ஆடவர் களின் ஆதர்சமாக அவர் எனக்குத் தோன்றினுர். அவருடைய மறுக்கும் கரத்தை இடையருமல் உணராவிட்டால், அட என் கடவுளே, நான் எத் தகைய ஆர்வத்துடன் அவரோடு ஒட்டிக் கொண் டிருப்பேன்! மாருக, விரும்பிய போது, ஒரு சொல் லின் மூலம், ஓர் அங்க அசைவால், தம் மேல் எல்லை யற்ற நம்பிக்கையைக் கணப் போதில் எனக்குள் தூண்டிவிட அவரால் முடிந்தது. என் உள்ளம் மலர்ந்தது. அறிவார்ந்த நண்பனேடு, பெருந் தன்மை உள்ள ஆசானேடு உரையாடுவது போல நான் அவரோடு அரட்டை அடித்தேன்... பின்பு அவர் வழக்கம் போலவே திடீரென என்னை விட்டு விலகினுர். அவருடைய கரம் என்னை நிராகரித் தது—அன்புடனும் மென்மையாகவுந்தான் என் ருலும், நிராகரித்தது.

சில வேளைகளில் குதூகலம் அவரை ஆட் கொண்டது. அப்போது சிறுவன் போலக் கும் மாளம் போடவும் குறும்புகள் செய்யவும் அவர் தயாராய் இருந்தார் (வலிவான உடல் இயக்கம் எதையும் அவர் விரும்பினுர்); ஒரு தரம்—ஒரே ஒரு தரம் மட்டும்!—அவர் மிகுந்த கனிவுடன் என்னைக் கொஞ்சிச் சீராட்டவே, எனக்கு அனே கமாக அழுகை வந்து விட்டது... ஆனுல் அவ ருடைய களிப்பும் மென்மையும் சுவடு தெரியாமல் மறைந்து விட்டன. எங்களுக்குள் நிகழ்ந்தது எனக்கு வருங்கால நம்பிக்கை எதையும் ஊட்ட வில்லை. எல்லாவற்றையும் நான் கனவில் கண்டது போல் இருந்தது. சில வேளைகளில், அறிவும்

அழகும் ஒளியும் திகழ்ந்த அவருடைய முகத்தை நான் பார்வையிடத் தொடங்கினேன்... என் இதயம் துடிதுடித்தது, என் உள்ளமும் உடலும் அவரை நெருங்க விழைந்தன... என் மனதுக்குள் நிகழ்ந்ததை அவர் உணர்ந்து கொண்டார் போலிருந்தது. போகிற போக்கில் என் கன்னத்தை லேசாகத் தட்டிவிட்டு ஒன்று அப்பால் சென்றார், இல்லாவிட்டால் ஏதேனும் வேலையில் ஈடுபட்டார், அல்லது ஒரேயடியாக ஆறி உறைந்து போனார்—அந்த மாதிரி உறைந்து போக அவரால் மட்டுமே முடிந்தது. என் உள்ளமும் அக்கணமே இறுகிமரத்துப் போயிற்று. என் மீது அவருக்கு அரிதாக ஏற்பட்ட பரிவும் பாசமும் எனது பேச்சற்ற, ஆனால் புரிந்து கொள்ளக் கூடிய வேண்டுகோள்களின் விளைவாக ஒருபோதும் உண்டாகவில்லை. அவை எப்போதும் திடீரென உண்டாயின. என் தகப்பனாருடைய சுபாவத்தைப் பற்றிப் பிற்காலத்தில் எண்ணமிட்ட போது, அவருக்கு என் மீதோ குடும்ப வாழ்க்கை மீதோ பற்று விழவே இல்லை என்ற முடிவுக்கு நான் வந்தேன். அவர் வேறு ஒன்றை விரும்பினார், அதை முழுமையாக அனுபவித்தார். ''முடிந்ததை நீயே எடுத்துக் கொள், ஆனால் பிறர் கையில் மாட்டிக் கொண்டு விடாதே. தனக்கு மட்டுமே சொந்தமாய் இருப்பதில் தான் வாழ்க்கையின் மர்மம் அடங்கி இருக்கிறது'' என்று ஒரு முறை அவர் என்னிடம் கூறினார். இன்னொரு தடவை நான் இளம் ஜனநாயகவாதி என்ற முறையில் விடுதலையைப் பற்றிஅவர் முன் கருத்துத் தெரிவித்தேன் (அன்று அவர், நான் வழக்கமாகச் சொல்லுவது போல, ''நல்லியல்பு உள்ளவராக'' இருந்தார்; அப்போது அவரிடம் எதைப் பற்றி வேண்டுமானாலும் பேச முடிந்தது).

''விடுதலை'' என்று திருப்பிச் சொன்னார் அவர்.''ஆனால், மனிதனுக்கு விடுதலை தரக் கூடியது எது என்பது உனக்குத் தெரியுமா?''

''எது?''

''சங்கற்பம், சொந்த சங்கற்பம். விடுதலையைக் காட்டிலும் மேலான ஆட்சி அதிகாரத்தை அது தரும். விரும்பத் திறன் பெறு, விடுதலையும் அடைவாய், ஆட்சி செலுத்தவும் செய்வாய்.''

என் தகப்பனார் எல்லாவற்றுக்கும் முன்னதாகவும் எல்லாவற்றையும் விட அதிகமாகவும் விரும்பியது வாழ்வதை. அவர் வாழவும் செய்தார்... வாழ்க்கையின் ''மர்மத்தை'' நெடுங்காலம் பயன்படுத்தத் தமக்கு வாய்க்காது என்று அவர் ஒருகால் முன்னுணர்ந்தார் போலும். நாற்பத்திரண்டு வயதில் அவர் காலமாகி விட்டார்.

ஜஸேகினா சிற்றரசி வீட்டுக்கு நான் போனதை அப்பாவுக்கு விவரமாகச் சொன்னேன். பெஞ்சியில் உட்கார்ந்து சாட்டை நுனியால் மணலில் வரைந்தவாறு, பாதி கவனமாகவும் பாதி எங்கோ நினைவாகவும் அவர் நான் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தார். நடுவில் எப்போதாவது சிரித்தார், பளிச்சிடும் விழிகளுடன் வேடிக்கையாக என்னை நோக்கினார், சிறு கேள்விகளாலும் மறுப்புக்களாலும் என்னை உற்சாகப்படுத்தினார். ஜினயீதாவின் பெயரைச் சொல்லக் கூட முதலில் நான் தயங்கினேன். ஆனால் என்னால் தாங்க முடியாது போகவே அவளை மெச்சிப் பாராட்டத் தொடங்கினேன். அப்பா விடாமல் சிரித்துக் கொண்டிருந்தார். பின்பு அவர் எண்ணத்தில் ஆழ்ந்தார், சோம்பல் முறித்தார், எழுந்தார்.

வீட்டை விட்டுப் புறப்பட்ட போது தன் குதிரையைச் சேணம் பூட்டி வைக்கும்படி அவர்

சொன்னதை நான் நினைவு கூர்ந்தேன். அவர் அற்புத மாகக் குதிரைச் சவாரி செய்தார். படுமுரட்டுக் குதிரைகளைக் கூட வசக்குவதில் திருவாளர் ரேரிக்கு* வெகு காலம் முன்பே அவர் தேர்ச்சி பெற்றிருந்தார்.

''நானும் உன்னோடு வரட்டுமா, அப்பா?'' என்று கேட்டேன்.

''வேண்டாம்'' என்று சொன்ன அவருடைய முகம் வழக்கமான அசட்டையும் பரிவும் கலந்த தோற்றத்தை மேற்கொண்டது. ''விரும்பினால் தனியே போ. நான் சவாரி செய்யப் போவதில்லை என்று குதிரைக்காரனிடம் சொல்லி விடு.''

அவர் எனக்கு முதுகைக் காட்டித் திரும்பி விரைவாக அப்பால் போய் விட்டார். அவர் போவதையே பார்த்துக் கொண்டிருந்தேன் நான். வாயிலுக்கு வெளியே அவர் மறைந்து விட்டார். அவருடைய தொப்பி வேலி ஓரமாக இயங்கியதை நான் கண்டேன். அவர் சிற்றரசி வீட்டுக்குள் புகுந் தார்.

அந்த வீட்டில் அவர் ஒரு மணி நேரத்துக்கு மேல் தங்கவில்லை, ஆனால் அப்போதே நகரத் துக்குப் புறப்பட்டுப் போய் மாலைத் தறுவாயில் தான் வீடு திரும்பினார்.

மதியச் சாப்பாட்டுக்குப் பிறகு நானே சிற்றரசி வீட்டுக்குப் போனேன். விருந்தறையில் முதிய சிற்றரசி மட்டுமே இருக்கக் கண்டேன்.

---

* திருவாளர் ரேரி. ''முரட்டுக் குதிரைகளைப் பழக்கும் நவீனக்கலை'' — "The Modern Art of Training Wild Horses" *(1858)*—என்ற நூலை எழுதியவர், அமெரிக்கர். ''வெறி பிடித்த குதிரைகளை வசக்கும் அரிய கலை'' கைவரப் பெற்றவர்.

என்னைப் பார்த்ததும் அவள் பின்னல் ஊசி நுனியால் தொப்பிக்கு அடியில் தலையைச் சொறிந்து கொண்டு, ஒரு மனுவைத் தனக்காகப் பெயர்த்து எழுதித் தர என்னால் முடியுமா என்று திடீரெனக் கேட்டாள்.

''தாராளமாக'' என்று சொல்லி நாற்காலி விளிம்பில் அமர்ந்தேன்.

''ஒன்று மாத்திரம் கேட்டுக் கொள்கிறேன், எழுத்துக்கள் பெரியவையாக இருக்கட்டும்'' என்று ஒரேயடியாகக் கறைகள் பட்ட காகிதம் ஒன்றை என்னிடம் கொடுத்தாள். ''இன்றைக்கே எழுதித் தர முடியாதா, அப்பனே?'' என்று கேட்டாள்.

''இன்றைக்கே பெயர்த்து எழுதித் தருகிறேன், அம்மா.''

பக்கத்து அறைக் கதவு சற்றுத் திறந்தது. இடுக்கில் தெரிந்தது ஜினயீதாவின் முகம்—வெளிறி, சிந்தனையில் ஆழ்ந்து, அசட்டையாகப் பின்னே போட்ட கூந்தலுடன். உணர்ச்சியை வெளிக் காட்டாத பெரிய விழிகளால் என்னைப் பார்த்து விட்டு ஓசையின்றிக் கதவைச் சாத்தினாள் அவள்.

''ஜீனா, ஜீனா!'' என்று அழைத்தாள் கிழவி.

ஜினயீதா ஏனென்று கேட்கவில்லை. நான் கிழவியின் மனுவை எடுத்துப் போய், அதைப் பெயர்த்து எழுதுவதில் மாலை நேரம் முழுவதும் முனைந்திருந்தேன்.

## 9

என்னுடைய ''ஆர்வம்'' அன்று முதல் தொடங்கியது. அரசாங்க வேலையில் சேர்பவன்

அனுபவிக்க வேண்டியதற்கு ஒப்பான ஓர் உணர்வை அப்போது நான் உணர்ந்தது என் நினைவுக்கு வருகிறது. இளம் சிறுவனாக இருப்பதை நான் ஏற்கெனவே நிறுத்தி விட்டேன். நான் காதல் கொண்டிருந்தேன். என்னுடைய ஆர்வம் அன்று முதல் தொடங்கியதாகச் சொன்னேன்; எனது துன்பங்களும் அன்று முதலே தொடங்கின என்றும் நான் சேர்த்துச் சொல்லி இருக்கலாம். ஜினயீதா எதிரில் இல்லாதபோது நான் தவித்தேன், எதுவும் என் மூளையில் ஏறவில்லை, ஒரு காரியமும் ஓடவில்லை. நாள் முழுதும் அவள் நினைவாகவே இருந்தேன்... தவித்தேன்... ஆனால் அவள் எதிரில் என் நிலைமை சீர்படவில்லை. நான் பொறாமை கொண்டேன், நான் அற்பன் என்பதை உணர்ந்தேன். அசட்டுத்தனமாகப் பிணங்கினேன், அசட்டுத்தனமாகக் குழைந்தேன். ஆனாலும் தடுக்க முடியாத ஆற்றல் என்னை அவள்பால் ஈர்த்தது. ஒவ்வொரு தடவையும் என் வசமற்ற இன்பத் துடிப்புடன் அவளுடைய அறைவாயிலுக்குள் அடி வைத்தேன். தன்மேல் நான் காதல் கொண்டிருப்பதை ஜினயீதா முதல் நொடியிலேயே கண்டு கொண்டாள். நானும் அதை மறைப்பதாக நினைக்கக் கூட இல்லை. எனது ஆர்வத்தை அவள் நகையாடினாள். அசடாக்குவதும் சலுகை காட்டுவதுமாக என்னைச் சித்திரவதை செய்தாள். மற்றவனுடைய பெரு மகிழ்ச்சிக்கும் ஆழ்ந்த துயரத்துக்கும் ஒரே தலையூற்றாக, எதேச்சாதிகாரமுள்ள, மறுக்க முடியாத காரணமாக இருப்பது இனியது. நானோ, ஜினயீதாவின் கைகளில் மென்மையான மெழுகு போல் இருந்தேன். ஆனால், அவள் மேல் காதல் கொண்டிருந்தவன் நான் ஒருவன் மட்டும் அல்ல. அவளுடைய வீட்டிற்கு வந்த எல்லா ஆடவர்

களும் அவள் மேல் அடங்கா மையல் கொண்டிருந் தார்கள். அவளோ, அவர்கள் எல்லோரையும் பாவைகளாகக் கட்டி வைத்திருந்தாள், தன் காலடியில். சில வேளைகளில் நம்பிக்கையையும் வேறு சில வேளைகளில் அச்சத்தையும் அவர்கள் மனங்களில் தூண்டி விடுவது, தன் சபலத்துக்கு ஏற்ப அவர்களை ஆட்டி வைப்பது அவளுக்கு வேடிக்கையான பொழுதுபோக்காக இருந்தது (மனிதர்களை ஒருவர் மேல் ஒருவர் மோத விடுவது என்று இதை அவள் குறித்தாள்). அவளை எதிர்ப்பதாக அவர்கள் நினைக்கக்கூட இல்லை. சந்தோஷமாக அவளுக்குக் கீழ்ப்படிந்தார்கள். உயிரோட்டமும் எழிலும் வாய்ந்த அவளுடைய தன்மை முழுவதிலும் தந்திரமும் அசட்டைப் போக்கும் செயற்கையும் எளிமையும் அமைதியும் விரைவும் சேர்ந்த, சிறப்பான கவர்ச்சி உள்ள ஒரு கலவை இருந்தது. அவள் செய்தவை, சொன்னவை எல்லாவற்றிலும், அவளுடைய ஒவ்வோர் அங்க அசைவிலும், மெல்லிய, லேசான கவர்ச்சி திகழ்ந்தது. அவளுக்கே உரிய தனி வகை நடிப்பு ஆற்றல் எல்லாவற்றிலும் வெளிப்பட்டது. அவளுடைய முகமும் இடைவிடாமல் மாறியவாறு தானும் நடித்தது. கேலியையும் ஆழ்ந்த சிந்தனையையும் ஆர்வத்தையும் அனேகமாக ஒரே நேரத்தில் அது வெளியிட்டது. காற்று வீசும் வெயில் நாளில் இயங்கும் மேகங்களின் நிழல்கள் போல லேசும் விரைவும் உள்ள வெவ்வேறு வித உணர்ச்சிகள் அவளுடைய விழிகளிலும் உதடுகளிலும் இடையறாது ஓடிய வண்ணமாய் இருந்தன.

தன்னை வழிபட்டவர்களில் ஒவ்வொருவனும் அவளுக்குத் தேவையாய் இருந்தான். பெலவ்ஸோரவை அவள் சில வேளைகளில் ''என் விலங்கே''

என்று அழைத்தாள். வேறு சில வேளைகளிலோ வெறுமே ''என்னவரே'' என்று கூப்பிட்டாள். அவளுக்காக அவன் சந்தோஷமாக நெருப்பில் பாய்ந்திருப்பான். தனது அறிவுத் திறமைகளிலும் பிற தகுதிகளிலும் நம்பிக்கை இல்லாததால் அவன் தனக்கு வாழ்க்கைப்படும்படி அவளை ஓயாமல் வேண்டிக் கொண்டிருந்தான். மற்றவர்கள் வெறுமே வாய் வீச்சோடு நின்று விடுவார்கள் என்று இதன் மூலம் குறிப்பால் உணர்த்தினன். மைதானவ் அவளுடைய உள்ளத்தின் கவிதை நரம்புகளை மீட்டினன். அனேகமாகச் செய்யுள் கோப்பவர்கள் எல்லோரையும் போல் உணர்ச்சிகளைக் காட்டாதவனுன அவன் அவளை வழிபடுவதாக அவளுக்கு, ஒருவேளை தனக்கும் கூட, ஓயாமல் உறுதி கூறி வந்தான், முடிவில்லாத செய்யுட்களில் அவள் புகழைப் பாடினன். இயல்பற்றதும் அதே சமயம் உளமார்ந்ததுமான பேருவகையுடன் அவற்றைப் படித்தான். அவள் அவன் மேல் பரிவும் காட்டினுள், சற்று நகையாடவும் செய்தாள். அவனை அவள் குறைவாகவே நம்பினுள். அவனுடைய உணர்ச்சிப் பெருக்கைக் காதாரக் கேட்ட பின்பு பூஷ்கினின் கவிதைகளைப் படிக்கும்படி கட்டாயப்படுத்தினுள், காற்றைத் துப்புரவு ஆக்குவதற்கு அவை அவசியம் என்ருள். சொற்களில் கிண்டலும் இகழ்ச்சியும் கொண்ட மருத்துவன் லூஷின் எல்லோரையும் விட நன்ருக அவளை அறிந்திருந்தான், எல்லோரையும் விட அதிகமாக அவளைக் காதலித்தான், ஆனல் மறைவிலும் கண் எதிரிலும் அவளைக் கடிந்து கொண்டான். அவள் அவனை மதித்தாள், ஆயினும் அவனுக்கு இடம் கொடுக்கவில்லை. சில வேளைகளில், அவனும் தன் கைப் பாவைதான் என்பதை, தனி வகை வன்மக்

களிப்புள்ள திருப்தியுடன் அவனுக்கு உணர்த்தினாள். ''நான் சரசக்காரி, இருதயம் இல்லாதவள், நடிப்புத் தன்மை உள்ளவள்'' என்று ஒரு தடவை என் எதிரில் அவனிடம் சொன்னாள். ''ஆ, நல்லது! எங்கே, உங்கள் கையை நீட்டுங்கள், அதில் குண்டூசியைச் செருகுகிறேன். இந்த வாலிபருக்கு முன் உங்களுக்கு வெட்கமாய் இருக்கும், உங்களுக்கு வலிக்கும், ஆனாலும், திருவாளர் உண்மையாளரே, நீங்கள் சிரிப்பீர்கள்.'' லூஷின் முகம் சிவந்தான், வேறு புறம் திரும்பிக் கொண்டான், உதடுகளைக் கடித்தான், ஆனாலும் கடைசியில் கையை நீட்டினான். அவள் ஊசியால் அவனைக் குத்தினாள், அவன் மெய்யாகவே சிரிக்கத் தொடங்கினான்... அவளும் குண்டூசியைக் கணிசமாக ஆழச் செருகி அவனுடைய விழிகளை உற்று நோக்கியவாறு சிரித்தாள். விழிகளை இரு மருங்கிலும் செலுத்த அவன் வீணே முயன்றான்...

ஜினயீதாவுக்கும் மலேவ்ஸ்கி பிரபுவுக்கும் இருந்த உறவை எல்லாவற்றிலும் மோசமாக நான் புரிந்து கொண்டேன். அவன் பார்வைக்கு நன்றாய் இருந்தான், திறமையும் அறிவுக் கூர்மையும் பெற்றிருந்தான், ஆனால் அவனிடம் சந்தேகத்துக்கு இடமான, பொய்யான ஒன்று இருப்பதாகப் பதினாறு வயதுப் பையனான எனக்குக் கூடத் தோன்றியது. ஜினயீதா இதைக் கவனிக்காதது எனக்கு வியப்புஅளித்தது. ஒருவேளை அவள் இந்தப் பொய்மையைக் கண்டும் அதனால் அருவருப்பு அடையவில்லை போலும். சரியற்ற வளர்ப்பு, விந்தையான அறிமுகங்களும் வழக்கங்களும், தாயார் எப்போதும் எதிரே இருந்தது, வீட்டில் ஏழ்மையும் ஒழுங்கீனமும் ஆகிய எல்லாம், இள மங்கை அனுபவித்த சுதந்திரத்திலிருந்து, தன்னைச் சுற்றி

யுள்ளவர்களுக்குத் தான் மேலானவள் என்ற உணர்விலிருந்து தொடங்கி எல்லாமே, அரை இகழ்ச்சி உள்ள மரியாதையின்மையையும் கண்டிப் பின்மையையும் அவளிடம் வளர்த்திருந்தன. வணிபாத்தி வந்து வீட்டில் சர்க்கரை இல்லை என்று சொன்னாலும் சரி, ஏதேனும் கடை கெட்ட பொய் வதந்தி கிளம்பினாலும் சரி, விருந்தாளிகள் சச்சர விட்டுக் கொண்டாலும் சரி, எது நடந்தாலும் அவள் கூந்தல் சுருள்களைக் குலுக்கி, ''அற்ப விஷயம்!'' என்பாள். அதற்கு மேல் கவலை அவளை அண்டுவதில்லை.

ஆனால் எனக்கோ, மலேவ்ஸ்கி அவளை நெருங் கிய போதெல்லாம் இரத்தம் கொதிக்கத் தொடங் கியது. சில வேளைகளில் அவன் நரி போலத் தந்திரமாக அசைந்தாடியவாறு அவளை அணுகி, அவளுடைய நாற்காலி முதுகின் மேல் கைகளை ஒய்யாரமாக ஊன்றிக் கொண்டு, சுயதிருப்தியும் அடிவருடித்தனமும் ததும்பும் புன்னகையுடன் அவளுடைய காதில் எதையோ கிசுகிசுக்கத் தலைப் பட்டான். அவள் மார்பின் மேல் கைகளைக் கட்டிக் கொண்டு அவனைக் கூர்ந்து நோக்கியவாறு குறு நகை செய்து தலையை ஆட்டினாள்.

''திருவாளர் மலேவ்ஸ்கியை வரவேற்பதில் உங்களுக்கு என்னதான் விருப்பமோ?'' என்று ஒரு தடவை நான் அவளிடம் கேட்டேன்.

''அவருடைய மீசை நிரம்ப அழகானது. தவிர, இது உங்களுக்குத் தொடர்பு உள்ளது அல்ல'' என்றாள்.

''நான் அவரைக் காதலிப்பதாக எண்ணுகிறீர் களோ?'' என்று இன்னொரு சந்தர்ப்பத்தில் அவள் என்னிடம் சொன்னாள். ''இல்லை. நான் மேல் நிலை யிலிருந்து கீழ் நோக்காகப் பார்க்க வேண்டி இருப்

பவர்களைக் காதலிக்க என்னால் முடியாது. என்னை அடக்கி ஒடுக்க வல்லவன்தான் எனக்கு வேண்டும்... ஆனால் அந்த மாதிரி ஒருவனை நான் எதிர்ப்பட மாட்டேன், ஆண்டவன் அருள் புரிவான்! எவனுடைய கையிலும் அகப்பட மாட்டேன், ஒருபோதும் மாட்டேன்!''

''ஆகையால் நீங்கள் ஒருபோதும் காதலிக்க மாட்டீர்களாக்கும்?''

''உங்களையோ? நான் உங்களைக் காதலிக்கவில்லையா என்ன?'' என்று சொல்லி, கையுறை நுனியால் என் மூக்கில் தட்டினாள்.

ஆம், ஜினயீதா என்னை நிரம்பக் கேலி செய்து வந்தாள். மூன்று வார காலம் ஒவ்வொரு நாளும் நான் அவளைக் கண்டேன். அவள் என்னோடு என்னென்னவெல்லாம் வேடிக்கைகள் செய்தாள்! எங்கள் வீட்டுக்கு அவள் எப்போதாவதுதான் வந்தாள். நான் அதற்காக வருந்தவில்லை. எங்கள் வீட்டில் அவள் சீமான் மகளாக, இளவரசியாக மாறிவிட்டாள். நான் அவளிடம் கூசி விலகினேன். அம்மாவுக்கு முன் என்னைக் காட்டிக் கொள்ள அஞ்சினேன். அவள் ஜினயீதாவை மிக அருவருத்தாள், எங்களை மறைமுகப் பகைமையுடன் கண்காணித்தாள். தகப்பனாரிடம் நான் அவ்வளவு பயப்படவில்லை. அவர் என்னைக் கவனிக்கவே இல்லை போல நடந்து கொண்டார். ஜினயீதாவிடம் கொஞ்சந்தான் எனினும் சிறப்பான புத்தி சாதுரியத்துடனும் பொருள் பொதிந்த முறையிலும் பேசினார். நான் வேலை செய்வதை, படிப்பதை நிறுத்திவிட்டேன். சுற்று வட்டாரங்களில் உலாவுவதையும் குதிரைச் சவாரி செய்வதையுங்கூட நான் நிறுத்திவிட்டேன். கால் கட்டப்பட்ட வண்டு போல அன்புக்குரிய பக்கமனையை இடையறாது சுற்றிக் கொண்

டிருந்தேன். அங்கேயே நிலையாகத் தங்கி விட லாம் என்று தோன்றியது... ஆனால் அது நடக்கக் கூடியதாக இல்லை. அம்மா என்னைக் கடிந்து முணு முணுத்த வண்ணமாய் இருந்தாள். சில வேளை களில் ஜினயீதாவே என்னை விரட்டினாள். அப் போது நான் ஒன்று பூட்டிய அறைக்குள் அடை பட்டுக் கிடந்தேன், அல்லது தோட்டத்தின் கோடிக்குப் போய், வெப்பத் தோட்டத்தின் உயரமான இடிந்த கற்சுவர் மேல் ஏறி சாலைப் புறம் இருந்த சுவற்றிலிருந்து கால்களைத் தொங்க விட்டவாறு மணிக் கணக்காக உட்கார்ந்து எதை யும் காணாமல் வெறுமே பார்த்துக் கொண்டிருந் தேன். என் அருகே, புழுதி படிந்த காஞ்சொறிச் செடியின் மேல் சோம்பலுடன் சிறகுகளை அடித்துக் கொண்டிருந்தன வெள்ளை வண்ணத்திப் பூச்சி கள். சண்டைக்காரக் குருவி சற்று தூரத்தில் பாதி உடைந்த செங்கல் மேல் அமர்ந்து, உடல் முழுவதையும் இடையறாது இங்கும் அங்கும் திருப்புவதும் வாலைத் தொங்க விடுவதுமாக எரிச்ச லுடன் கீச்சிட்டுக் கொண்டிருந்தது. இன்னமும் நம்பிக்கை அற்றவையாக இருந்த காகங்கள் மிக மிக உயரத்தில், பிர்ச் மரத்தின் இலைகளற்ற முடி மேல் உட்கார்ந்து எப்போதாவது காவென்று கத்திக் கொண்டிருந்தன. மரத்தின் அடர்த்தி இல் லாத கிளைகளில் வெயிலும் காற்றும் மெல்லென விளையாடிக் கொண்டிருந்தன. தொன்ஸ்கோய் மடத்தின் மணியோசை அமைதியும் சோர்வும் தொனிக்க அவ்வப்போது கேட்டுக் கொண்டிருந் தது. நானோ உட்கார்ந்து, பார்த்து, கேட்டுக் கொண்டிருந்தேன். பெயர் சொல்ல முடியாத ஓர் உணர்ச்சி என்னுள் நிறைந்தது. துயரமும் மகிழ்ச்சியும் வருங்காலம் பற்றிய முன்னுணர்வும்

வாழ்க்கை விருப்பமும் வாழ்க்கை பற்றிய அச்சமும் எல்லாம் இந்த உணர்ச்சியில் இருந்தன. ஆனால் இது எதையும் நான் அப்போது புரிந்து கொள்ளவில்லை. எனக்குள் குமிழி இட்டுக் கொண்டிருந்தவற்றில் எதையும் பெயர் குறிக்க என்னால் முடிந்திராது. அல்லது இவற்றை எல்லாம் ஒரே பெயரால்—ஜினயீதாவின் பெயரால்—குறித்திருப்பேன்.

ஆனால் ஜினயீதாவோ, பூனை சுண்டெலியோடு விளையாடுவது போல என்னோடு விளையாடிய வண்ணமாய் இருந்தாள். சில வேளைகளில் என்னோடு சரசமாடினாள். அப்போது நான் கிளர்ச்சி அடைந்தேன், இளகினேன். வேறு வேளைகளில் அவள் என்னைத் திடீரென்று அப்பால் தள்ளினாள். அவளை நெருங்க அப்போது நான் துணியவில்லை. அவளை ஏறிட்டுப் பார்க்க எனக்குத் துணிவு வரவில்லை.

எனக்கு நினைவு இருக்கிறது, அவள் தொடர்ச்சியாகப் பல நாட்கள் என்னிடம் மிகவும் பராமுகமாய் இருந்தாள். நான் ஒரேயடியாகக் கூசிக் குலைந்து போனேன். அச்சத்துடன் அவர்களுடைய பக்கமனைக்குச் சென்று முதிய சிற்றரசியின் அருகிலேயே குந்தி இருக்க முயன்றேன். இந்தச் சமயம் பார்த்துச் சிற்றரசி வெகுவாகத் திட்டியதையும் கத்தியதையும் நான் பொருட்படுத்தவில்லை. அவளுடைய உண்டியல் விவகாரங்கள் மோசமாக நடந்து கொண்டிருந்தன, போலீஸ் அதிகாரிக்கு அவள் இரண்டு தரம் விளக்கம் கூற வேண்டி வந்தது.

ஒரு தடவை நன்கறிந்த வேலியின் ஓரமாகத் தோட்டத்தில் நடக்கையில் நான் ஜினயீதாவைக் கண்டேன். இரு கைகளையும் ஊன்றியவாறு புல்லில் உட்கார்ந்து அசையாதிருந்தாள் அவள்.

நான் சந்தடி செய்யாமல் அப்பால் போகப் பார்த்தேன், ஆனுல் அவள் திடீரென்று தலையை உயர்த்தி எனக்குச் சைகையால் ஏதோ ஆணை இட்டாள். நான் அசையாது நின்று விட்டேன். அவளுடைய சைகையை நான் முதல் முறை புரிந்து கொள்ளவில்லை. அவள் மீண்டும் அதே சைகையைச் செய்தாள். நான் தாமதிக்காமல் வேலியைத் தாண்டி மகிழ்ச்சியுடன் அவளிடம் ஓடினேன். ஆனுல் அவள் என்னைப் பார்வையால் நிறுத்தி, தனக்கு இரண்டு எட்டில் இருந்த பாதையைச் சுட்டினுள். என்ன செய்வது என்று தெரியாமல், பாதை ஓரத்தில் நான் முழந்தாள் படியிட்டேன். அவள் ஒரேயடியாக வெளிறிப் போயிருந்தாள். அளவு கடந்த கடுந் துயரம், ஆழ்ந்த சோர்வு அவளுடைய ஒவ்வோர் அமைப்புக் கூறிலும் நிறைந்து ததும்பியதைக் கண்டு என் உள்ளம் சாம்பிப் போயிற்று.

''உங்களுக்கு என்ன?'' என்று என் வசமின்றியே முணுமுணுத்தேன்.

ஜினயீதா கையை நீட்டி ஒரு புல்லைப் பிய்த்துக் கடித்து விட்டுத் தொலைவில் எறிந்தாள்.

''நீங்கள் என்னை நிரம்பக் காதலிக்கிறீர்களோ? ஊம்?'' என்று முடிவில் கேட்டாள்.

நான் பதிலே சொல்லவில்லை. தவிர, நான் எதற்காகப் பதில் சொல்ல வேண்டும்?

''ஆமாம்'' என்று முன் போலவே என்னை நோக்கியவாறு கூறினுள். ''இது மெய்தான். அவையே போன்ற கண்கள்'' என்று சொல்லி, சற்றுச் சிந்தனை செய்து முகத்தைக் கைகளால் பொத்திக் கொண்டாள். ''எல்லாம் எனக்கு வெறுத்துப் போய் விட்டது'' என்று கிசுகிசுத்தாள். ''உலகின் மறு கோடிக்குப் போய் விட நான் தயார். இதை என்னுல் தாங்க முடியாது,

இதற்கு இணங்கிப் போக முடியாது... முன்னே எனக்கு எதிர்ப்படப் போவது என்ன?.. என் கடவுளே, எவ்வளவு கடுந் துயர்!''

''எதனுல்?'' என்று கூச்சத்துடன் கேட்டேன்.

ஜினயீதா எனக்கு மறுமொழி கூறவில்லே, தோள்களே மட்டுமே குலுக்கிஞள். நான் முன் போன்றே முழந்தாள் படியிட்டவாறு ஆழ்ந்த துக்கத்துடன் அவளேப் பார்த்துக் கொண்டிருந் தேன். அவளுடைய ஒவ்வொரு சொல்லும் என் நெஞ்சில் வடுவாகப் பதிந்தது. அவள் துயரப் படாமல் மட்டும் இருப்பதற்காக அந்தக் கணத்தில் என் உயிரை மகிழ்ச்சியுடன் வழங்கி இருப்பேன். நான் அவள் மேல் பார்வை செலுத்தினேன். அவளுக்கு எதனுல் துயரமாய் இருந்தது என்று புரிந்து கொள்ளாமல் துடியாகக் கற்பனே செய்யலானேன். தாங்க முடியாத துயரத்தால் திடீரென ஆட்கொள்ளப்பட்டு அவள் தோட்டத்துக்குப் போய் வெட்டுண்ட மரம் போலப் புல்லில் விழுந்து விட்டதாக எண்ணிக் கொண்டேன். சுற்றிலும் வெளிச்சமும் பசுமையுமாக இருந்தது. காற்று மரங்களின் இலேகளேச் சலசலக்கச் செய்தது. ராஸ்ப்பெரிச் செடியின் நீண்ட கிளேயை ஜினயீதாவின் தலேக்கு மேலே எப்போதாவது அது ஆட்டியது. எங்கோ புருக்கள் அகவின. அடர்த்தி அற்ற புற்களே ஒட்டித் தாழப் பறந்தவாறு தேனீக்கள் முரன்றன. உயரே அன்பார்ந்த நீல ஒளி வீசியது வானம், ஆனுல் எனக்கோ ஒரே ஏக்கமாய் இருந்தது...

''எனக்காக ஏதாவது கவிதை படியுங்கள்'' என்று தணிந்த குரலில் சொல்லி முழங்கைகளே ஊன்றிக் கொண்டாள் ஜினயீதா. ''நீங்கள் செய்யுள் படிப்பது எனக்குப் பிடித்திருக்கிறது. நீங்கள்

ராகம் போடுகிறீர்கள், ஆனால் அது பரவாயில்லை, இளம் பருவத்துக்கு ஏற்றது. 'ஜார்ஜிய மலைகள் மேல்'* என்ற செய்யுளைப் படியுங்கள். முதலில் உட்காருங்கள்.''

நான் உட்கார்ந்து ''ஜார்ஜிய மலைகள் மேல்'' என்ற கவிதையைப் படித்தேன்.

''காதலிக்காதிருக்க முடியாது அதனால்''** என்று திருப்பிச் சொன்னாள் ஜினயீதா. ''கவிதை இதனால் தான் நல்லது. எது இல்லையோ, எது இருப்பதை விட மேலானது மட்டும் இன்றி, உண்மையை அதிகமாக ஒத்திருக்கிறதோ, அதை நமக்குச் சொல்லுகிறது கவிதை... இதயத்தால் 'காதலிக்காதிருக்க முடியாது, — விரும்பிக்கூட இருக்கும், ஆனால் அதனால் முடியாது!'' அவள் மறுபடி பேச்சை நிறுத்தியவள், திடீரென்று திடுக்கிட்டு எழுந்தாள். ''போவோம் வாருங்கள். அம்மா அறையில் மைதானவ் உட்கார்ந்திருக்கிறார். அவர் தம் காவியத்தை எனக்காகக் கொண்டு வந்தார். நான் அவரைக் காக்க வைத்து விட்டேன். அவரும் இப்போது வருத்தம் கொண்டிருக்கிறார்... என்ன செய்வது? நீங்கள் எப்போதாவது தெரிந்து கொள்வீர்கள்... என் மேல் கோபம் மட்டும் படாதீர்கள்!''

ஜினயீதா அவசரமாக என் கையைக் குலுக்கி விட்டு முன்னே ஓடினாள். நாங்கள் பக்கமனைக்குத் திரும்பினோம். அப்போது தான் அச்சான ''கொலைகாரன்'' என்ற தன் காவியத்தை எங்களுக்குப்

---

* **''ஜார்ஜிய மலைகள் மேல் இரவு மூடுபனி அடர்ந்துளது...''** — மேதை வாய்ந்த ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினின் கவிதை (1829).

** **''காதலிக்காதிருக்க முடியாது அதனால்.''** கவிதையின் கடைசி வரி.

படித்துக் காட்டத் தொடங்கிஞன் மைதானவ். ஆனுல் நான் அதைச் செவியேற்கவில்லே. தன் நாலடி ஈரசைச் செய்யுள்களே அவன் ராகம் போட்டு உரக்கப் படித்தான். எதுகைகள் ஒன்றை அடுத்து ஒன்ருக வந்து சலங்கைகள் போல வெற்ருகவும் உரக்கவும் ஒலித்தன. நாஞே, ஜினயீதா வையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டும் அவளுடைய கடைசிச் சொற்களின் உட்பொருளேப் புரிந்து கொள்ள முயன்றவாறும் இருந்தேன்.

> ''இன்றேல் எதிர்பாராமல் உனேயே
> வென்ருஞே என் மறைமுக எதிரி?''

என்று திடீரென மூக்கால் கூவிஞன் மைதானவ். என் விழிகளும் ஜினயீதாவின் விழிகளும் சந்தித்தன. அவள் அவற்றைத் தாழ்த்தி, சற்றே முகம் சிவந்தாள். அவள் முகம் சிவந்ததைக் கண்ட நான் அச்சத்தால் உழைந்து போனேன். இதற்கு முன்பும் அவள் காரணமாக நான் பொருமை கொண்டிருந்தேன். அவள் யாரையோ காதலிக்கிருள் என்ற எண்ணம் இந்தக் கணத்தில் தான் என் மூளேயில் பளிச்சிட்டது. ''அட என் ஆண்டவனே! இவள் காதல் கொண்டு விட்டாள்!''

## 10

என்னுடைய உண்மையான சித்திரவதை அந்தக் கணம் முதல் தொடங்கியது. ஜினயீதா யார் மேல் காதல் கொண்டிருக்கிருள் என்று ஊகித்து மண்டையை உடைத்துக் கொண்டேன். எண்ணியதைத் தவறு என்று நிராகரித்தேன், மாற்றிக்

கொண்டேன். இடை விடாமல், ஆனால் முடிந்த வரை இரகசியமாக ஜினயீதாவைக் கண்காணித் தேன். அவளிடம் மாறுதல் ஏற்பட்டிருந்தது கண் கூடாகத் தெரிந்தது. அவள் தனியாக உலாவச் சென்றாள், நீண்ட நேரம் உலாவினாள். சில வேளை களில் அவள் விருந்தினர் கண்களில் படவில்லை. மணிக் கணக்காகத் தன் அறையில் உட்கார்ந் திருந்தாள். முன்பு அவள் இப்படி நடந்து கொண் டது கிடையாது. நான் திடீரென்று அளவு கடந்த கூர் நோக்கு உள்ளவன் ஆகி விட்டேன்—அல் லது, ஆகி விட்டதாக எனக்குத் தோன்றியது, ''இவனோ? அல்லது இவனோ?'' என்று அவளை வழிபட்டவர்களில் ஒருவனிடமிருந்து மற்றொரு வனுக்கு மனதுக்குள் கலவரத்துடன் தாவியவாறு என்னையே கேட்டுக் கொண்டேன். மலேவ்ஸ்கி பிரபு (இதை ஒப்புக் கொள்வதற்கு ஜினயீதாவின் சார்பில் நான் வெட்கினேன் என்றாலும்) மற்றவர் களை விட அபாயம் உள்ளவனாக மறைவில் எனக்குத் தோன்றினான்.

என்னுடைய கூர்நோக்கு என் அக்கம் பக்கத் துக்கு மேல் போகவில்லை. எனது மறைமுகப் போக்கோ, யாரையும் ஏமாற்றவில்லை போலும். குறைந்த பட்சம் டாக்டர் லூஷின் விரைவில் என்னைக் கண்டு கொண்டான். ஆனால், கடந்த சில நாட்களில் அவனும் மாறியிருந்தான். அவன் மெலிந்து போனான். முன் போலவே அடிக்கடி சிரித்தான் என்றாலும் ஒரு மாதிரிக் கம்மலாகவும் அதிக வன்மத்துடனும் சுருக்கமாகவும் சிரித்தான். அவனுடைய சிரிப்பில் முன்பு இருந்த லேசான முரண்நகை, நடிப்பு வெட்கமின்மை ஆகியவற் றின் இடத்தில் வசமற்ற நரம்பு நோய்த் தன்மை கொண்ட சிடுசிடுப்பு இப்போது தொனித்தது.

''இளைஞரே, நீர் என்ன இடை விடாமல் இங்கே வந்து கொண்டிருக்கிறீர்?'' என்று ஒரு முறை சிற்றரசியின் விருந்தறையில் என்னோடு இருந்த போது அவன் சொன்னான். (இளவரசி உலாவப் போனவள் இன்னும் திரும்பவில்லை, சிற்றரசியின் காட்டுக் கத்தல் முகட்டறை யிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தது. அவள் தன் பணிப் பெண்ணை அதட்டிக் கொண்டிருந்தாள்.) ''நீர் படிக்க வேண்டும், உழைக்க வேண்டும்— இளைஞராய் இருக்கும் போதே—ஆனால் நீர் என்ன செய்கிறீர்?''

''நான் வீட்டில் உழைக்கிறேனா இல்லையா என்று உங்களுக்குத் தெரிந்திருக்க முடியாது'' என்று ஓரளவு செருக்குடன், ஆனால் சற்றுக் குழப் பத்துடன் கூறினேன்.

''என்ன பிரமாத உழைப்பு? உம் மூளையில் இருப்பது வேறு அல்லவா? நான் மறுக்கவில்லை... உம் வயதில் இது சகஜந்தான். ஆனால் உம் தேர்வு கொஞ்சங்கூடச் சரியானதல்ல. இது எந்த மாதிரி யான வீடு என்பது உம் கண்ணில் படவில்லையோ?''

''நீங்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லை'' என்றேன்.

''புரியவில்லையோ உமக்கு? அத்தனைக்கு அத் தனை உமக்குத்தான் கெடுதல். உம்மை எச்சரிப் பது என் கடமை என்று எண்ணுகிறேன். என் போன்றவர்கள், வயது வந்தும் மணம் செய்து கொள்ளாத தனிக் கட்டைகள், இங்கே வரலாம். எங்களுக்கு என்ன நேர்ந்து விடும்? நாங்கள் பட்டுத் தேறியவர்கள். எங்களை எதனாலும் துளைக்க முடியாது. உமக்கோ, தோல் இன்னமும் மென்மை யானது. இங்கே உள்ள காற்று உமக்குக் கேடு

செய்வது. நான் சொல்வதை நம்பும், நீர் நோய்த் தொற்றுக்கு உள்ளாகக் கூடும்.''

''அது எப்படி?''

''அப்படித்தான். நீர் இப்போது ஆரோக்கிய சாலியா என்ன? நீர் ஒழுங்கான நிலைமையிலா இருக்கிறீர்? நீர் உணர்வது உமக்குப் பய னுள்ளதா, நல்லதா?''

''ஆனல் நான் என்ன உணர்கிறேன்?'' என் றேன், டாக்டர் சொல்வது சரி என்று நானே மன துக்குள் புரிந்து கொண்ட போதிலும்.

''அட இளைஞரே, இளைஞரே'' என்று தொடர்ந்தான் டாக்டர். இந்தச் சொல்லில் எனக் குப் பெரிதும் மனத்தாங்கல் அளிக்கும் அர்த்தம் அடங்கியிருந்தது போன்று இருந்தது அவன் சொன்ன விதம். ''உம்மால் பசப்பவும் முடிய வில்லையே. நல்ல வேளையாக, இப்போதும் உம் மனத்தில் இருப்பதை முகம் காட்டி விடுகிறதே. ஆனல், பேசிப் பயன் என்ன? நானும் இங்கே வரமாட்டேன், நான் மட்டும்'' (டாக்டர் பற்களைக் கடித்துக் கொண்டான்)... ''நான் மட்டும் உம் மையே போன்ற விசித்திரப் பேர்வழியாக இல்லா விட்டால். ஆனல் எனக்கு வியப்பு எல்லாம் இது தான்: இவ்வளவு அறிவு உள்ள நீர் உம்மைச் சுற்றி லும் நடப்பதைப் பாராதிருப்பது எப்படி?''

''அப்படி என்னதான் நடக்கிறது?'' என்று கேட்டு, காதுகளைக் கூராக்கிக் கொண்டேன்.

ஏளனம் ததும்பிய பரிவுடன் என்னை நோக் கினன் டாக்டர்.

''நானும் நல்ல ஆள்தான்'' என்று தனக்குத் தானே போலச் சொல்லிக் கொண்டான். ''இவ ருக்கு இதைச் சொல்லுவது ரொம்பத்தான் வேண் டுமாக்கும். சுருக்கமாக'' என்று குரலை உயர்த்தி,

''மறுபடி சொல்லுகிறேன் உமக்கு. இங்குள்ள சூழ்நிலை உமக்கு ஏற்றதல்ல. உமக்கு இங்கே இன்பமாய் இருக்கிறது, எது இல்லா விட்டால் என்ன? மூடு தோட்டத்திலும்தான் இனிய மணம் வீசுகிறது. ஆனால் அதில் வசிப்பது கூடாது. இதோ பாரும்! என் பேச்சைக் கேளும், மறுபடி கைதானவ் பாட நூல்களில் நாட்டம் செலுத்தும்!''

சிற்றரசி அறைக்குள் வந்து பல் வலிப்பதாக டாக்டரிடம் முறையிடத் தொடங்கினாள். அப்புறம் வந்தாள் ஜினயீதா.

''இந்தாருங்கள், திருவாளர் டாக்டர்'' என்று தொடர்ந்தாள் சிற்றரசி. ''இவளைக் கண்டியுங்களேன். நாள் பூராவும் ஐஸ் போட்ட தண்ணீர் குடிக்கிறாள். இவளுக்கு அது உடம்புக்கு ஆகுமா, இவளுடைய நெஞ்சு பலவீனமாய் இருக்கும் போது?''

''எதற்காக நீங்கள் இப்படிச் செய்கிறீர்கள்?'' என்று கேட்டான் லூஷின்.

''இதனால் என்ன ஆகும்?''

''என்னவா? தடிமல் பிடித்து நீங்கள் இறந்து போகக் கூடும்.''

''மெய்யாகவா? இறந்து போவேனா? அதனால் என்ன—நன்றாக வேண்டும் எனக்கு!''

''அப்படியா?'' என்று வாய்க்குள் முணுமுணுத்தான் டாக்டர்.

சிற்றரசி போய் விட்டாள்.

''அப்படித்தான்'' என்றாள் ஜினயீதா. ''இப்படி வாழ்வதில் மகிழ்ச்சி உண்டா? சுற்றுமுற்றும் கண்ணோட்டுங்களேன்... என்ன—நன்றாகவா இருக்கிறது? அல்லது இதை நான் புரிந்து கொள்ளவில்லை, உணரவில்லை என்று நினைக்கிறீர்களோ? ஐஸ் போட்டுத் தண்ணீர் குடிப்பது எனக்கு

மகிழ்ச்சி அளிக்கிறது. இந்த வாழ்க்கை ஏதோ மதிப்பு உள்ளது போலவும் கண நேர மகிழ்ச்சிக்காக—இன்பத்தைப் பற்றி நான் பேசவில்லை—அதை ஆபத்துக்கு உள்ளாக்குவது தகாது போலவும் நீங்கள் ஆழ்ந்த முறையில் எனக்கு நம்பிக்கை ஊட்டலாம்.''

''ஆமாம், ஆமாம்'' என்று நொடித்தான் லூரஷின். ''சபல புத்தியும் கட்டின்மையும்... இந்த இரண்டு சொற்களில் உங்கள் தன்மை முழுவதும் அடங்கி விடுகிறது. உங்களுடைய இயல்பு பூராவும் இந்த இரண்டு சொற்களில் இருக்கிறது.''

ஜினயீதா நரம்பு நோயாளி போல வாய் விட்டுச் சிரித்தாள்.

''நேரம் தாழ்த்து விட்டீர்கள், கருணையுள்ள டாக்டரே. மோசமாக நோக்குகிறீர்கள், பின் தங்குகிறீர்கள். கண்ணுடி மாட்டிக் கொள்ளுங்கள். சபல புத்திக்கு இப்போது இடமில்லை என்னிடம். உங்களை அசடாக்குவது, என்னை அசடாக்கிக் கொள்வது... அது எவ்வளவோ குதூகலமானது! பின்பு கட்டின்மையைப் பொறுத்த வரையில்... மிஸியே வோல்தெமார்,'' என்று என்னைப் பார்த்துத் திடீரெனக் கூறிக் காலைத் தொப்பென்று அடித்தாள் ஜினயீதா. ''முகத்தை ஏக்கமாக வைத்துக் கொள்ளாதீர்கள். என் மேல் மற்றவர்கள் இரக்கப்படுவதை என்னுல் சகிக்கவே முடியாது.'' அவள் சட்டென வெளியே போய் விட்டாள்.

''கேடானது, கேடானது உமக்கு இங்குள்ள சூழ்நிலை, இளைஞரே'' என்று பின்னெரு முறை என்னிடம் சொன்னுன் லூரஷின்.

## 11

அதே நாள் மாலையில் வழக்கமான விருந்தினர்கள் சிற்றரசியின் வீட்டில் குழுமினார்கள். நானும் அவர்களில் ஒருவன்.

பேச்சு மைதானவின் காவியத்தைப் பற்றி நடந்தது. ஜினயீதா அதை உளமாரப் பாராட்டினாள்.

''ஆனால், ஒன்று சொல்லட்டுமா?'' என்று அவனிடம் கூறினாள். ''நான் கவியாக இருந்தால் என் கவிதைக்கு வேறு கருப் பொருள்களை எடுத்துக் கொண்டிருப்பேன். ஒருவேளை இதெல்லாம் வெட்டிப் பேச்சாய் இருக்கலாம், ஆனால் சில வேளைகளில் விந்தையான எண்ணங்கள் என் மூளையில் உதிக்கின்றன. சிறப்பாக விடியும் தறுவாயில் நான் தூங்காமல் இருக்கும் போது, வானம் ரோஜா நிறமும் சாம்பல் நிறமும் ஆகத் தொடங்கி இருக்கும் போது. உதாரணமாக நான்... நீங்கள் என்னைக் கேலி செய்ய மாட்டீர்களே?''

''மாட்டோம், மாட்டோம்!'' என்று நாங்கள் எல்லோரும் ஒரே குரலில் கூவினோம்.

கைகளை மார்பில் கட்டிக் கொண்டு பார்வையைப் பக்க வாட்டில் செலுத்தியவாறு, ''நான் என்ன கற்பனை செய்திருப்பேன் தெரியுமா?'' என்று தொடங்கினாள் ஜினயீதா. ''இளம் கன்னியரின் பெருங் கூட்டம் நள்ளிரவில், பெரிய படகில், அமைதியான ஆற்றில் செல்லுகிறது. நிலவு வீசுகிறது. அவர்கள் எல்லோரும் வெண்ணிற ஆடைகள் அணிந்து, வெண் மலர் வளையங்களைத் தலைகளில் புனைந்து கொண்டிருக்கிறார்கள். அதோடு, துதிப்பாடல் போன்ற ஒன்றைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.''

''புரிந்து கொண்டேன், புரிந்து கொண்டேன், மேலே சொல்லுங்கள்'' என்று பொருள் பொதிந்த தொனியில் கனவு காணும் பாங்கில் சொன்னான் மைதானவ்.

''திடீரென்று கரையில் ஆரவாரம், கெக்கலி, தீவட்டிகள், கஞ்சிராக்கள்... மதுக் கடவுள் பாக் கஸை வழிபடும் பூசாரிப் பெண்களின் கூட்டம் அது. பாட்டுக்களும் கூச்சலுமாக ஓடி வந்து கொண்டிருக்கிறது. இந்தக் காட்சியைச் சித்திரிப் பது உங்கள் வேலை, திருவாளர் கவிஞரே... என் னுடைய விருப்பம் என்ன என்றால், தீவட்டிகள் சிவப்பாக இருக்க வேண்டும், நிறையப் புகைய வேண்டும். மதுக் கடவுளின் பூசாரிப் பெண்களு டைய விழிகள் பூவளையங்களுக்கு அடியில் பளிச் சிட வேண்டும், பூவளையங்கள் ஆழ்நிறம் உள்ள வையாக இருக்க வேண்டும். புலித் தோல்களை யும் மதுக் கிண்ணங்களையும் அவற்றோடு தங்கத் தையும் — நிறையத் தங்கத்தையும் — மறந்து விடாதீர்கள்.''

''தங்கம் எங்கே இருக்க வேண்டுமோ?'' என்று தன் நேரான கூந்தலைப் பின்னே தள்ளி மூக்கை விடைத்தவாறு கேட்டான் மைதானவ்.

''எங்கேயா? தோள்கள் மேலும் கைகள் மேலும் கால்கள் மேலும், எங்கும். பண்டைக் காலத்தில் பெண்கள் கணுக்கால்களில் தங்கக் காப்புகள் அணிந்தார்களாம். பூசாரிப் பெண்கள் படகிலுள்ள கன்னிகளைத் தங்களிடம் வரும்படி அழைக்கிறார்கள். மங்கையர் துதிப் பாடல் பாடு வதை நிறுத்தி விட்டார்கள். தொடர்ந்து பாட அவர்களால் முடியவில்லை. ஆனால் அவர்கள் அசையவில்லை. ஆறு அவர்களைக் கரைக்கு இட்டுச் செல்கிறது. திடீரென்று ஒரு மங்கை மெதுவாக

*எழுந்திருக்கிருள்... இதை நன்ருக வருணிக்க வேண்டும். நிலவொளியில் அவள் மெதுவாக எழுந்திருப்பதையும் அவளுடைய தோழிகள் அஞ்சுவதையும்... அவள் படகின் விளிம்பைத் தாண்டி விட்டாள், பூசாரிப் பெண்கள் அவளைச் சூழ்ந்து கொண்டார்கள், இரவில், இருட்டில், அவளைத் தூக்கிச் சென்று விட்டார்கள்... இங்கே புகை படலங்களாகக் கிளம்புவதாகவும் எல்லாம் கலந்து குழம்பூவதாகவும் கற்பனை செய்யுங்கள். அவர்களுடைய கீச்சொலி மட்டும் கேட்கிறது, அவளுடைய மலர்வளையம் கரையில் எஞ்சி இருக்கிறது.''*

*ஜினயீதா பேச்சை நிறுத்தினுள் (''ஓ! இவள் காதல் கொண்டு விட்டாள்!'' என்று நான் மறுபடி நினைத்தேன்.)*

*''இவ்வளவுதாளு?'' என்று கேட்டான் மைதானவ்.*

*''இவ்வளவுதான்'' என்று பதில் அளித்தாள் அவள்.*

*''முழுக் காவியத்துக்குக் கருப் பொருளாக இது இருக்க முடியாது'' என்று பெருமிதம் தோன்றக் கூறினுன் மைதானவ். ''ஆளுல் இசைக் கவிதைக்கு உங்கள் எண்ணத்தைப் பயன்படுத்திக் கொள்கிறேன்.''*

*''ரொமாண்டிக் பாணியிலா?'' என்று கேட்டான் மலேவ்ஸ்கி.*

*''சந்தேகம் இல்லாமல் ரொமாண்டிக் பாணியில்—பைரன்* பாணியில்.*

---

* ஜார்ஜ் நோயேல் கார்டன் பைரன் *(1788-1824)—பிரபல ஆங்கிலக் கவிஞர். புரட்சிகர ரொமாண்டிசிஸத்தின் பிரதிநிதி.*

''ஆனால் என் கருத்துப்படி ஹியூகோ* பைரனை விட மேல். அதிக சுவாரசியமானவர்'' என்று அசட்டையாகக் கூறினான் இளம் பிரபு.

''ஹியூகோ முதல் தர எழுத்தாளர்'' என்றான் மைதானவ். ''என் நண்பர் தன்கஷேயெவ்''** 'எல் துரோவதோர்' என்னும் தமது ஸ்பானிய நாவலில்...''

''ஆ, தலைகீழ்க் கேள்விக் குறிகள் உள்ள புத்தகம்தானே?'' என்று இடையில் கூறினாள் ஜினயீதா.

''ஆமாம். ஸ்பானிய மொழியில் கேள்விக் குறிகள் அப்படி எழுதப்படுகின்றன. நான் சொல்ல வந்தது என்ன என்றால், தன்கஷேயெவ்...''

''ஊம், தொன்மைக் கிரேக்க ரோமானிய மரபு வாதத்தையும் ரொமாண்டிசிஸத்தையும் பற்றி நீங்கள் மறுபடி சச்சரவிடத் தொடங்குவீர்கள்'' என்று இரண்டாவது தடவை குறுக்கிட்டாள் ஜினயீதா. ''வாருங்கள் விளையாடுவோம்...''

''பறிமுதல் ஆட்டமா?'' என்று கேட்டான் லூஷின்.

''இல்லை. பறிமுதல் ஆட்டம் அலுத்துப் போயிற்று. ஒப்பீடு ஆட்டம்.'' (இந்த ஆட்டத்தை ஜினயீதா தானே கற்பனை செய்திருந்தாள். ஒரு பொருள் குறிக்கப்படும். அதை எதற்காவது

* விக்டர் மரீ ஹியூகோ (1802-1885)—பிரெஞ்சு எழுத்தாளர், முற்போக்கு ரொமாண்டிக் படைப்பாளர்.

** ஆக்கியோர் பெயர் இல்லாத, எல் துரோவதோர், அல்லது பழிக்குப் பழி. 1826ம் ஆண்டின் ஸ்பானிய நிகழ்ச்சிக் கதை. ருஷ்யப் பதிப்பு (1833) என்ற நாவலை இயற்றிய தன்கசேயெவின் குலப் பெயரைத் துர்கேனிவ் சிறிது மாற்றியுள்ளார்.

ஒப்பிட ஒவ்வொருவனும் முயல்வான். சிறந்த உவமை கூறியவனுக்குப் பரிசு கிடைக்கும்).

அவள் சன்னல் அருகே போனுள். சூரியன் அப்போதுதான் மறைந்திருந்தது. வானில் உயரே படர்ந்திருந்தன நீண்ட, சிவப்பு மேகங்கள்.

''இந்த மேகங்கள் எதைப் போல் இருக்கின்றன?'' என்று கேட்ட ஜினயீதா எங்கள் பதிலுக்குக் காத்திராமல் சொன்னுள்:''எனக்குத் தோன்றுகிறபடி, கிளியோபாத்ரா அந்தோனியை எதிர்கொள்ளச் சென்ற தங்கக் கப்பலில் விரித்திருந்த சிவப்புப் பாய்களே* இவை ஒத்திருக்கின்றன. மைதானவ், இந்தக் கதையை நீங்கள் எனக்குச் சொன்னீர்களே, நினைவிருக்கிறதா?''

மேகங்கள் அந்தப் பாய்களையே ஒத்திருப்பதாகவும் இதைவிடச் சிறந்த உவமையை எங்களில் யாராலும் கண்டுபிடிக்க முடியாது என்றும் நாங்கள் எல்லோரும் ''ஹாம்லட்''டில் வரும் பொலோனியஸ் போல** முடிவு செய்தோம்.

---

* கிரேக்க எழுத்தாளர், வரலாற்ருளர், தத்துவவாதி புளுடார்க் (சுமார் கி.பி. 46-127) எழுதிய வாழ்க்கை வரலாறு இங்கே குறிக்கப்படுகிறது. மார்க் அந்தோனி—ரோமானிய அரசியல் தலைவன், படைத் தலைவன் (சுமார் கி.மு. 83-30). கிளியோபாத்ரா—தாலமி வம்ச அரசி (கி.மு. 63-30) மார்க் அந்தோனியின் கூட்டாளியும் காதலியுமாக இருந்தாள். (கி.மு. 37ல் அவன் கிளியோபாத்ராவை மணந்து கொண்டான்.)

** இங்கு குறிக்கப்படுவது ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பியர் இயற்றிய ஹாம்லட் என்னும் துன்பியல் நாடகத்தில் ஹாம்லட்டுக்கும் பொலோனியசுக்கும் நடக்கும் உரையாடல். ஒரே மேகத்தை ஹாம்லட் ஒட்டகத்துக்கும் மரநாய்க்கும் திமிங்கிலத்துக்கும் மாறி மாறி ஒப்பிடுகிருன். பொலோனியஸ் மூன்று முறையும் அவனுடைய உவமையை ஒப்புக் கொள்கிருன்.

''அந்தோனிக்கு அப்போது என்ன வயது?'' என்று கேட்டாள் ஜினயீதா.

''அவன் இளைஞனுகத்தான் இருந்திருப்பான்'' என்றுன் மலேவ்ஸ்கி.

''ஆம், இளைஞன்'' என்று நம்பிக்கையுடன் உறுதிப்படுத்திஞன் மைதானவ்.

''மன்னியுங்கள். அவனுக்கு வயது நாற்பதுக்கு மேல் ஆகி விட்டது'' என்று கூறிஞன் லூஷின்.

''நாற்பதுக்கு மேல்'' என்று விரைந்த பார்வையை அவன் மேல் செலுத்தியவாறு திருப்பிச் சொன்ஞள் ஜினயீதா.

நான் விரைவில் வீடு சென்றேன். ''இவள் காதல் கொண்டு விட்டாள்'' என்று என்னை அறியாமலே கிசுகிசுத்தன என் உதடுகள். ''ஆஞல் யார் மேல்?''

## 12

நாட்கள் கழிந்தன. ஜினயீதாவின் போக்கு நாளுக்கு நாள் அதிக விசித்திரமும் புரியக் கூடாததும் ஆகிக் கொண்டு போயிற்று. ஒரு தடவை நான் அவளுடைய அறைக்குள் போனபோது அவள் நாற்காலியில் உட்கார்ந்து மேசையின் கூரிய விளிம்பில் தலையை அழுத்திக் கொண்டிருந்தாள். நிமிர்ந்தாள்... அவள் முகம் முழுவதும் கண்ணீரால் நனைந்திருந்தது.

''ஆ! நீங்களா!'' என்று கடுமையான இளநகையுடன் கூறிஞள். ''எங்கே, கிட்டே வாருங்கள் சற்று.''

நான் அவள் அருகே சென்றேன். அவள் என் தலை மேல் கையை வைத்து, திடீரென்று என் கூந்தலைப் பற்றி முறுக்கத் தலைப்பட்டாள்,

''வலிக்கிறது...'' என்று முடிவில் சொன்னேன்.

''ஆ! வலிக்கிறதா? எனக்கு மட்டும் வலிக்கவில்லையோ? வலிக்கவில்லையோ?'' என்று திருப்பிக் கூறினாள்.

என்னுடைய சிறு மயிர்ச் சுருளைத் தான் பிய்த்து எடுத்து விட்டதைக் கண்டு ''ஐயோ!'' என்று வீரிட்டாள். ''நான் என்ன செய்து விட்டேன்! பாவம் மிஸியே வோல்தெமார்!''

பிய்ந்த மயிர்களை அவள் பதபாகமாக நேராக்கி, விரலில் சுற்றிச் சிறு வளையம் ஆக்கினாள்.

''உங்கள் மயிரைப் பதக்கத்தில் வைத்து அணிந்து கொள்வேன்'' என்று கூறும் போதே அவள் விழிகளில் கண்ணீர் பளிச்சிட்டது. ''இது உங்களுக்கு ஒருவேளை ஆறுதல் அளிக்கும்... இப்போது போங்கள்.''

நான் வீடு திரும்பியவன் அங்கே இன்பமற்ற நிகழ்ச்சியை எதிர்ப்பட்டேன். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் வாய்ச் சண்டை நடந்தது. அவள் எதற்காகவோ அவரைக் கடிந்து கொண்டாள். அவரோ, தம் வழக்கப்படி அசட்டையாகவும் மரியாதையை விட்டுக் கொடுக்காமலும் மௌனம் சாதித்தார். விரைவில் வெளியே போய் விட்டார். அம்மா என்ன சொன்னாள் என்பது என் காதில் படவில்லை அதில் எனக்கு அக்கறையும் உண்டாகவில்லை. எனக்கு நினைவிருப்பது இதுதான்: தகராறுக்குப் பிறகு அம்மா என்னைத் தன் அறைக்கு அழைத்து, நான் சிற்றரசி வீட்டுக்கு அடிக்கடி போய் வருவது குறித்துப் பெருத்த அதிருப்தி தெரிவித்தாள். சிற்றரசி une femme capable

de tout* என்றுள். நான் அவளுடைய கையை முத்தமிட்டு விட்டு (உரையாடலை நிறுத்த விரும்பிய போதெல்லாம் நான் இவ்வாறு செய்தேன்) என் அறைக்குப் போனேன். ஜினயீதாவின் கண்ணீர் என்னை ஒரேயடியாக நிலைகுலையச் செய்து விட்டது. எந்த எண்ணத்தில் நிலைப்பது என்று எனக்குத் தெரியவே இல்லை. நானே அழும் நிலையில் இருந்தேன். பதினறு வயது ஆகி விட்ட போதிலும் நான் இன்னும் சிறுவனுகவே இருந்தேன். பெலவ்ஸோரவ் நாளுக்கு நாள் அதிகப் பயங்கரம் ஆகிக் கொண்டு போனுன், ஓநாய் ஆட்டைப் பார்ப்பது போலப் பாசாங்குக்காரப் பிரபுவைப் பார்த்தான், என்றுலும் நான் மலேவ்ஸ்கியைப் பற்றி மேற்கொண்டு எண்ணமிடவே இல்லை. உண்மையில் நான் எதைப் பற்றியும் யாரைப் பற்றியும் எண்ணமிடவில்லை. என் எண்ணங்கள் குழம்பின. நான் தனி இடங்களை நாடினேன். மூடுதோட்டத்தின் இடிபாடுகள் எனக்குச் சிறப்பாகப் பிடித்திருந்தன. சில வேளைகளில், உயரமான சுவர் மேல் ஏறி அமர்ந்து, இன்பமற்ற, தனித்த, ஏங்கிய இளைஞுக அங்கே உட்கார்ந்து கொண்டிருப்பேன். அப்போது எனக்கே என்மேல் இரக்கம் உண்டாகும் இந்தத் துயர உணர்ச்சிகள் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தன, நான் அவற்றைச் சுவைத்துச் சுவைத்து அனுபவித்தேன்!..

ஒரு முறை இப்படித்தான் நான் சுவர் மேல் உட்கார்ந்து தொலைவில் பார்வை செலுத்தியவாறு கண்டாமணி ஓசையைச் செவிமடுத்துக் கொண்டிருந்தேன்... திடீரென்று என் மேல் எதுவோ வீசியது—அது காற்று வீச்சு அல்ல,

---

* எது வேண்டுமாஞலும் செய்யக் கூடியவள் (பிரெஞ்சு).

மேனி நடுக்கமும் அல்ல. யாரோ ஊதியது போல் இருந்தது. யாரோ அருகில் இருக்கும் உணர்ச்சி போல் இருந்தது... நான் கண்களைத் தாழ்த்தினேன். கீழே, பாதையில், மெல்லிய சாம்பல் நிற உடை அணிந்து, ரோஜா நிறக் குடையைத் தோள் மேல் சாய்த்தவாறு விரைவாக நடந்து கொண்டிருந்தாள் ஜினயீதா. அவள் என்னைக் கண்டு, நின்று, வைக்கோல் தொப்பி விளிம்பை நகர்த்தி, தன் வெல்வெட் விழிகளை என் பக்கம் உயர்த்தினாள்.

''என்ன செய்கிறீர்கள் நீங்கள் அங்கே, அவ்வளவு உயரத்தில்?'' என்று விந்தையான புன்னகையோடு என்னிடம் கேட்டாள். ''நல்லது. என்னைக் காதலிப்பதாக நீங்கள் எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே, நீங்கள் என்னை உண்மையாகக் காதலித்தால் என் பக்கம் பாதையில் குதியுங்கள், பார்ப்போம்'' என்றாள்.

ஜினயீதா இந்தச் சொற்களைக் கூறி முடிக்கு முன், யாரோ என்னை முதுகுப் புறமிருந்து தள்ளியது போல நான் கீழே பாய்ந்தேன். சுவர் கிட்டத்தட்ட நாலரை மீட்டர் உயரம் இருந்தது. நான் தரையில் கால்களை ஊன்றிக் கொண்டேன், ஆயினும் அதிர்ச்சி கடுமையாய் இருந்ததால் என்னால் நிலைத்து நிற்க முடியவில்லை. விழுந்து ஒரு கணம் நினைவை இழந்தேன். நினைவுக்கு வந்ததும் என் அருகே ஜினயீதா இருப்பதை உணர்ந்தேன்.

''என் அருமைப் பையா'' என்று என் மேல் குனிந்தவாறு சொன்னாள். கலவரமும் கனிவும் அவளுடைய குரலில் தொனித்தன. ''எப்படி உன்னால் இதைச் செய்ய முடிந்தது, எப்படி என் சொல்லுக்குக் கீழ்ப்படிய முடிந்தது... நான் தான் உன்னைக் காதலிக்கிறேனே... எழுந்திரு.''

அவளுடைய மார்பு என் மார்பருகே மூச்சு விட்டது. அவளுடைய கைகள் என் தலையை வருடின. திடீரென்று—அப்போது எனக்கு நேர்ந்ததை என் சொல்வேன்!—அவளுடைய மென்மையான, குளிர்ந்த உதடுகள் என் முகம் முழுவதிலும் முத்த மழை பொழியலாயின... அவை என் உதடுகளையும் தொட்டன... ஆனால், நான் கண்களைத் திறக்கவில்லை என்றாலும், அப்போது ஜினயீதா என் முகத் தோற்றத்தைக் கொண்டு போலும், நான் உணர்வு பெற்று விட்டேன் என்பதை ஊகித்து, சட்டென எழுந்து, ''ஊம் எழுந்திருங்கள், மதி இழந்த குறும்புக்காரரே. என்ன இப்படிப் புழுதியில் விழுந்து கிடக்கிறீர்கள்?'' என்றாள்.

நான் எழுந்தேன்.

''என் குடையை என்னிடம் கொடுங்கள்'' என்று கூறினாள் ஜினயீதா. ''நான் அதை எங்கே எறிந்து விட்டேன் பாருங்கள். என்னை இந்த மாதிரிப் பார்க்காதீர்கள்... என்ன அசட்டுத்தனம்! உங்களுக்கு அடி பட்டு விட்டதோ? ஒரு வேளை காஞ்சொறிகள் பட்டுத் தோல் காந்துகிறதோ? அட என்னை இப்படிப் பார்க்காதீர்கள் என்கிறேனே... இவர் ஒன்றையும் புரிந்து கொள்ளவில்லை, பதிலும் சொல்ல மாட்டேன் என்கிறார்'' என்று தனக்குத் தானே போலச் சொல்லிக் கொண்டாள். ''வீட்டுக்குப் போங்கள், மிஸியே வோல்தெமார், துப்புரவு செய்து கொள்ளுங்கள். என் பின்னே வரத் துணியாதீர்கள். இல்லாவிட்டால் நான் கோபம் கொண்டு விடுவேன், அப்புறம் ஒருபோதும்...''

அவள் தன் பேச்சை முடிக்காமலே விரைவாகப் போய் விட்டாள். நானோ, வழியில் சற்று

நேரம் குந்தினேன்... என் கால்கள் துவண்டன. காஞ்சொறி பட்டு என் கை காந்தியது, முதுகு வலித்தது, தலை சுற்றியது. ஆனால் அப்போது நான் அனுபவித்த பேரின்ப உணர்வு என் வாழ்வில் மறுபடி ஏற்படவே இல்லை. என்னுடைய எல்லா அங்கங்களிலும் இனிய வலியாக அது பரவி இருந்தது. முடிவில் பேருவகை பொங்கிய துள்ளல்களாகவும் கூவல்களாகவும் அது வெளிப்பட்டது. உண்மைதான்: நான் இன்னும் குழந்தைப் பையனாகவே இருந்தேன்.

13

அன்று முழுவதும் நான் பெரு மகிழ்ச்சியும் பெருமையும் அனுபவித்துக் கொண்டிருந்தேன். ஜினயீதாவின் முத்தங்களை என் முகத்தில் உயிர்த் துடிப்புடன் இடையறாது உணர்ந்தேன். அவளுடைய ஒவ்வொரு சொல்லையும் பொங்கும் களிப்புடன் நினைவு கூர்ந்தேன். எனக்கு எதிர்பாராமல் கிடைத்த இன்பத்தை அருநிதியமாகப் போற்றினேன். இந்தக் காரணங்களால் எனக்கு அச்சமாகக் கூட இருந்தது. இந்தப் புதிய உணர்ச்சிகளுக்குப் பொறுப்பாளியான அவளைக் காணக் கூட விருப்பம் உண்டாகவில்லை. விதியினிடம் மேற்கொண்டு எதையும் கோரலாகாது, இப்போது செய்ய வேண்டியது எல்லாம், ''அமைதியாக, கடைசித் தடவை நன்றாக மூச்சு இழுத்துவிட்டு இறப்பதுதான்'' என்று எனக்குத் தோன்றியது. ஆனால் மறுநாள் பக்கமனைக்குப் போனபோது எனக்கு ஒரே கூச்சமாக இருந்தது. அடக்கமுள்ள அந்தரங்க நட்பின் போர்வையில் இந்தக் கூச்சத்தை மறைக்க முயன்றேன். தன்னால் இரக

சியத்தைக் காப்பாற்ற முடியும் என்று காட்ட விரும்பும் மனிதனுக்கு. இயல்பான இந்த நடிப்பு எனக்குப் பயன்படவில்லை. ஜினயீதா எவ்விதக் கிளர்ச்சியும் இல்லாமல், வெகு சகஜமாக என்னை வரவேற்ருள். வெறுமே விரலால் என்னை அச்சுறுத்தி, என் உடம்பில் நீலத் தழும்புகள் இல்லையா என்று கேட்டாள். என் அடக்கமுள்ள அந்தரங்க நட்பும் இரகசியப் போக்கும் எல்லாம் ஒரு நொடியில் மறைந்து விட்டன. அவற்ருேடு கூடவே என் கூச்சமும் போய் விட்டது. சிறப்பாக எதையும் நான் எதிர்பார்க்கவில்லைதான், ஆனுல் ஜினயீதாவின் அமைதி குளிர்ந்த தண்ணீரை என் தலையில் கொட்டியது போல் இருந்தது. அவளுடைய கண்களுக்கு நான் குழந்தைதான் என்பதை நான் புரிந்து கொண்டேன். இதனுல் எனக்கு மிகுந்த துயரம் உண்டாயிற்று! ஜினயீதா அறையில் முன்னும் பின்னுமாகக் குறு நடை நடந்து கொண்டிருந்தாள். ஒவ்வொரு தரமும் என்னைக் கண்டதும் சட்டென முறுவலித்தாள். ஆனுல் அவளுடைய எண்ணங்கள் தொலைவில் இருந்தன என்பதை நான் தெளிவாகக் கண்டேன்... ‘‘நேற்றைய விவகாரம் பற்றி நானே பேச்சு தொடங்குகிறேன். எங்கே அவ்வளவு அவசரமாகப் போனுள் என்று இவளிடம் கேட்டு முடிவாக விஷயத்தைத் தெரிந்து கொள்கிறேன்...’’ என்று நினைத்தேனே தவிர, கிடக்கிறது என்று விட்டு விட்டு மூலையில் குந்தினேன்.

பெலவ்ஸோரவ் வந்தான். அவன் வரவால் நான் மகிழ்ந்தேன்.

‘‘உங்களுக்கு வேண்டிய அமைதியான சவாரிக் குதிரை எனக்குக் கிடைக்கவில்லை. ஒன்று அமைதி

யுள்ளது என்று ஃபிரெய்தாக்* எனக்கு உறுதி கூறுகிறான், ஆனால் எனக்கு நம்பிக்கை ஏற்பட வில்லை, பயமாய் இருக்கிறது'' என்று கண்டிப்பான குரலில் சொன்னான் பெலவ்ஸோரவ்.

''எதனால் பயமாய் இருக்கிறது உங்களுக்கு என்று கேட்கலாமா?'' என வினவினாள் ஜினயீதா.

''எதனாலா? உங்களுக்குத்தான் குதிரையேற் றத்தில் தேர்ச்சி கிடையாதே. ஆண்டவன் தவிர்ப் பாராக, ஆனால் ஏதேனும் நேர்ந்து விட்டால்? திடீரென்று இது என்ன கற்பனை உங்கள் மூளையில் உதித்திருக்கிறது?''

''ஊம், இது என் காரியம், மிஸியே என் விலங்கே. அப்படியானால் நான் பியோத்தர் வசீலி யெவிச்சைக் கேட்கிறேன்...'' (என் தகப்பனாரின் பெயர் பியோத்தர் வசீலியெவிச். அவர் தனக்குப் பணிவிடை செய்ய ஆயத்தமாய் இருப்பதாக நம்புபவள் போல எளிதாகவும் சுதந்திரமாகவும் அவருடைய பெயரை அவள் குறித்தது என்னை வியப்பில் ஆழ்த்தியது).

''அப்படியா? அவருடனா குதிரைச் சவாரி செய்ய விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான் பெலவ்ஸோரவ்.

''அவருடனோ மற்றவருடனோ — இது உங் களுக்கு ஒன்றுதான். ஆனால் உங்களோடு அல்ல.''

''என்னுடன் இல்லையா?'' என்றான் பெலவ் ஸோரவ். ''உங்கள் இஷ்டம். அதனால் என்ன? நான் உங்களுக்குக் குதிரை வாங்கித் தருகிறேன்.''

''ஆனால் ஒன்று மட்டும் தெரிந்து கொள்ளுங்

---

* பிரெய்தாக் 1830க்களில் மாஸ்கோவில் பிர பலமாய் இருந்த விரைந்த சவாரிக் குதிரை களின் சொந்தக்காரர்.

கள். ஏதேனும் பசு மாட்டைப் பிடித்து வந்து விடாதீர்கள். நான் குதிரையைப் பாய்ச்சலில் விரட்ட விரும்புகிறேன் என்று உங்களுக்கு முன் கூட்டித் தகவல் கொடுக்கிறேன்.''

''சொல்லுங்கள், ஒருவேளை... யாரோடு, மலேவ்ஸ்கியோடா குதிரைச் சவாரி செய்யப் போகிறீர்கள்?''

''அவரோடு ஏன் போகக் கூடாது, படையினரே? சரி, ஆறுதல் அடையுங்கள். கண்களால் ஒளி வீசாதீர்கள். உங்களையும் நான் அழைத்துப் போகிறேன். மலேவ்ஸ்கி இப்போது எனக்கு ஒரு பொருட்டே இல்லை, தெரியுமா!'' என்று தலையைக் குலுக்கினாள்.

''என்னைத் தேற்றுவதற்காக இப்படிச் சொல்லுகிறீர்கள்'' என்று முணுமுணுத்தான் பெலவ்ஸோரவ்.

ஜினயீதா கண்களைச் சுரித்தாள்.

''இது உங்களைத் தேற்றுகிறதா?'' ஓ... ஓ... ஓ... படையினரே!'' என்று வேறு சொல் கிடைக்காததனால் போல முடிவில் கூறினாள் அவள். ''அப்புறம் நீங்கள், மிஸியே வோல்தெமார், நீங்கள் வருவீர்களா எங்களோடு?''

''எனக்குப் பிடிக்காது... பெரிய கூட்டத்தில்...'' என்று விழிகளை உயர்த்தாமல் முணுமுணுத்தேன்.

''உங்களுக்கு tête-à-tête* மேலாகப் படுகிறதோ?.. அதற்கென்ன, உங்கள் இஷ்டம்'' என்று கூறிப் பெருமூச்சு விட்டாள். ''போங்களேன், பெலவ்ஸோரவ், முயற்சி செய்யுங்கள். எனக்கு நாளை பகலுக்குள் குதிரை வேண்டும்.''

---

* அந்தரங்க உரையாடல் (பிரெஞ்சு).

''ஆமாம், ஆனால் பணம் எங்கிருந்து எடுப்பது?'' என்று குறுக்கிட்டாள் சிற்றரசி.

ஜினயீதா புருவங்களை நெறித்தாள்.

''நான் உங்களிடம் பணம் கேட்கவில்லை. பெலவ்ஸோரவ் என்னை நம்புவார்.''

''நம்புவார், நம்புவார்...'' என்று சிடுசிடுத்தாள் சிற்றரசி. பின்பு திடீரெனத் தொண்டையைப் பிய்த்துக் கொண்டு, ''துன்யாஷ்கா!'' என்று கத்தினாள்.

''அம்மா, நான் உங்களுக்கு அழைப்பு மணி பரிசளித்தேனே'' என்றாள் ஜினயீதா.

''துன்யாஷ்கா!'' என்று மறுபடி கத்தினாள் கிழவி.

பெலவ்ஸோரவ் வணங்கி விடை பெற்றான். நான் அவனோடு வெளியேறினேன். ஜினயீதா என்னைத் தடுக்கவில்லை.

## 14

மறு நாள் காலையில் நான் வெள்ளென எழுந்து, ஒரு கைத்தடி சீவித் தயாரித்துக் கொண்டு நகர எல்லைக்கு வெளியே போகப் புறப்பட்டேன். நடந்து துயரத்தைப் போக்கிக் கொள்ளலாம் என்று நினைத்தேன். பகல் ஒளி நிறைந்தும் அதிக வெக்கை இல்லாமலும் நேர்த்தியாக இருந்தது. குதூகலமான குளிர் காற்று தரைக்கு மேலே வீசி, அளவாக இரைந்து, எல்லாவற்றையும் அசைத்தும் எதையும் கலவரப் படுத்தாமலும் விளையாடிக் கொண்டிருந்தது. நான் மலைகளிலும் காடுகளிலும் வெகு நேரம் நடந்து திரிந்து கொண்டிருந்தேன். நான் இன்பம் உள்ளவன் என்று எண்ணிக் கொள்ளவில்லை. ஏக்கத்தில் ஆழ்ந்து

விடும் நோக்கத்தோடு நான் வீட்டிலிருந்து கிளம்பி இருந்தேன். ஆனால் இளமை, அருமையான பருவ நிலை, தூய குளிர் காற்று, விரைந்த நடையால் உண்டான மனநிறைவு, அடர் புல்லில் தனித்துப் படுத்திருந்ததில் ஏற்பட்ட பெரு மகிழ்ச்சி ஆகிய வை என்னைப் பாதிக்காமல் விடவில்லை. மறக்க முடியாத அந்தச் சொற்கள், அந்த முத்தங்கள் ஆகியவற்றின் நினைவு என் உள்ளத்தில் மீண்டும் நிறைந்தது. எனது உறுதிக்கும் என் வீரத்துக்கும் உரிய நியாயம் செலுத்தாமல் இருக்க ஜினயீதா வால் முடியாது என்று எண்ண எனக்கு உவப்பாக இருந்தது... ''மற்றவர்கள் அவளுக்கு என்னை விட மேலானவர்கள்'' என்று எண்ணமிட்டேன். ''இருக்கட்டுமே! ஆனால் மற்றவர்கள் செய்வதாக வெறும் பேச்சு பேசுகிறார்கள், நானோ செய்து காட்டினேன்! அவளுக்காக இன்னும் என்னவெல் லாம் செய்ய என்னால் முடியும்!..'' எனது கற்பனை துடியாக இயங்கியது. ஜினயீதாவைப் பகைவர் கள் கைகளிலிருந்து நான் காப்பாற்றுவது போல வும், மேலெல்லாம் குருதி பெருகச் சிறையிலிருந்து அவளை மீட்பது போலவும், அவளுடைய காலடியில் உயிரை விடுவது போலவும் எண்ணிக் கொள்ளத் தொடங்கினேன். எங்கள் வீட்டு விருந்தறையில் தொங்கிய ஓவியம் என் நினைவுக்கு வந்தது. மாலிக் அதேல் மத்தில்டாவைத் தூக்கிச் செல்லும் காட்சி* அதில் தீட்டப்பட்டிருந்தது. அதை நான்

---

* இவர்கள் பிரெஞ்சு எழுத்தாளர் எஸ். காட்டென் (மாரீஸோபி ரிஸ்டோ) இயற்றிய **மத்தில்டா அல்லது நினைவுக் குறிப்புகள்** (சிலுவைப் போர்களின் வரலாற்றிலிருந்து எடுக்கப்பட்ட வை) என்னும் நாவலின் (S. Cottin. Mathilde, ou Mémoires tirès de l'histoire de croisades, *1805)*

நினைத்துக் கொண்டிருந்த போது புள்ளிகளிட்ட பெரிய மரங்கொத்தி ஒன்று வரவே என் கவனம் அதன்பால் சென்றது. பிர்ச் மரத்தின் மெல்லிய தண்டின் மேல் சிரமப்பட்டு ஏறி, அதன் பின்னிருந்து வலப் புறமும் இடப் புறமுமாகப் பரபரப்புடன் எட்டிப் பார்க்கலாயிற்று மரங்கொத்தி. காண்ட்ராபாஸ் வாத்தியம் இசைப்பவன் அதன் கழுத்தின் பின்னிருந்து எட்டிப் பார்ப்பது போல் இருந்தது அந்தக் காட்சி:

அப்புறம் நான் பாடத் தொடங்கினேன்: ''வெண்மையாய் இல்லை பனி'' என்று. பின்பு அந்தக் காலத்தில் பிரபலமாய் இருந்த ''எதிர் பார்ப்பேன் உன்னையே இளங்காற்று வீசுகையில்''* என்ற பாடலைப் பாடினேன். பிறகு, ஹொமியக் கோவ் இயற்றிய துன்பியல் நாடகத்தில் விண்மீன் களிடம் யெர்மாக்கின் வேண்டுகோளை** உரக்கப் படிக்கலானேன். உருக்கமான பாணியில் ஏதேனும் நானே இட்டுக்கட்ட முயன்றேன். செய்யுள் முழுவதும் எதோடு முடிய வேண்டுமோ, அந்தக் கடைசி வரியைக் கூடக் கவனம் செய்து விட்டேன்: ''ஓ ஜினயீதா! ஜினயீதா!'' என்று. ஆனால் செய்யுள் தான் அமையவில்லை. இதற்குள் மதியச் சாப்பாட்டு நேரம் வந்து விட்டது. நான் பள்ளத்தாக்

---

பாத்திரங்கள். இந்த நாவல் 1806ல் ருஷ்ய மொழியில் பெயர்க்கப்பட்டுப் பல முறை மீண்டும் பதிப்பிக்கப் பெற்றது.

* கவிஞரும் விமர்சகருமான **பியோத்தர் வியாஸெம்ஸ்கியின் எதிர்பார்ப்பேன் உன்னையே** *(1816)* என்ற கவிதையின் சொற்களுக்கு இசை அமைத்து உருவாக்கிய பாடல்.

** **யெர்மாக்** *(1832)* துன்பியல் கவிதை நாடகம். இயற்றியவர் **அலெக்சேய் ஹொமியக்கோவ்** *(1804—1860)*.

கில் இறங்கினேன். அதில் வளைந்து சென்ற குறு கிய மணல் பாதை நகரத்துக்கு இட்டுப் போயிற்று. நான் இந்தப் பாதையில் நடந்தேன்... குதிரைக் குளம்புகளின் மந்தமான ஒலி என் பின்னே கேட் டது. நான் பின்புறம் பார்த்து, என்னை அறி யாமலே நின்று தொப்பியைக் கழற்றினேன்: என் தகப்பனாரையும் ஜினயீதாவையும் கண்டேன். அவர்கள் அருகருகாகக் குதிரைகள் மேல் சென்றார் கள். தகப்பனார் மேனி முழுவதையும் அவள் பக் கம் சாய்த்து, குதிரையின் கழுத்தின் மேல் கையை ஊன்றியவாறு அவளிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அவர் புன்னகை செய்தார். ஜினயீதா கண்களைக் கண்டிப்பாகத் தாழ்த்தி, உதடுகளை இறுக்கியவாறு மௌனமாக அவருடைய சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்தாள். முதலில் நான் அவர்கள் இருவரையும் மட்டும் கண்டேன். சில வினாடிகளுக்குப் பிறகுதான், பள்ளத்தாக்கின் திருப்பத்துக்குப் பின்னாலிருந்து வெளிப்பட்டான் பெலவ்ஸோரவ். குதிரைப்படைச் சீருடையும் மேலங்கியும் அணிந்து நுரைத்த கரும் புரவி மேல் ஏறி வந்து கொண்டிருந்தான். சாதிப் புரவி தலையை ஆட்டியது, செருமிற்று, குதித்தாடியது. சவாரிக்காரன் அதை இழுத்துப் பிடித்தான், குதி முள்ளாலும் குத்தினான். நான் ஒரு புறம் ஒதுங்கி னேன். தகப்பனார் கடிவாள வாரை எடுத்துக் கொண்டு ஜினயீதாவிடமிருந்து விலகினார். அவள் விழிகளை மெதுவாக அவர் பக்கம் உயர்த்தினாள். இருவரும் குதிரைகளை விரட்டிக் கொண்டு போய் விட்டார்கள்... பெலவ்ஸோரவ் உடைவாள் கண கணக்க அவர்கள் பின்னே பாய்ந்து சென்றான். "அவர் கன்றிச் சிவந்திருக்கிறார் ஆனால் அவளோ... எதனால் அவள் இப்படி வெளிறி இருக்கிறாள்?..

காலை முழுவதும் குதிரைச் சவாரி செய்தவள் வெளிறி இருக்கிறுளே?'' என்று நான் எண்ண மிட்டேன்.

நடையை விரைவுபடுத்தி மதியச் சாப்பாட்டு வேளைக்கு முன் சரியாக வீடு போய்ச் சேர்ந்தேன். தகப்பனுர் உடல் கழுவிக் குளித்து உடை மாற்றிக் கொண்டு கச்சிதமாகத் 'தோற்றம் அளித்தார். அம்மாவின் நாற்காலி அருகே அமர்ந்து "Journal des Dèbats"ன் நையாண்டிக் கட்டுரையைத் தம் சீரான கணீர்க் குரலில் அவளுக்குப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தார். ஆனுல் அம்மா அவர் படித்ததைக் கவனம் இல்லாமல் கேட்டுக் கொண் டிருந்தாள். என்னைக் கண்டதும், பகல் முழுவதும் எங்கே தொலைந்து போனேன் என்று கேட்டதோடு, கடவுளுக்கே வெளிச்சம் எங்கேயோ, கடவுளுக்கே வெளிச்சம் யாருடனே அலைந்து திரிவது தனக்குப் பிடிக்கவில்லை என்றும் சொன்னுள். ''அட நான் தனியே உலாவினேன்'' என்று சொல்ல வாய் எடுத்தேன், ஆனுல் தகப்பனுரைப் பார்த்தவன் எதனுலோ பேசாமல் இருந்து விட்டேன்.

## 15

அடுத்த ஐந்து, ஆறு நாட்களில் நான் ஜினயீதாவை அனேகமாகப் பார்க்கவில்லை. அவள் உடம்பு சரியாய் இல்லை என்று சொல்லப்பட்டது. ஆனுல் பக்கமனைக்கு வழக்கமாக வருபவர்களை, அவர்கள் சொல்லிக் கொண்டபடி,முறை வேலைக்கு வருவதிலிருந்து இது தடை செய்யவில்லை. இதற்கு விலக்கு மைதானவ் ஒருவன்தான். களி கொண்டாடும் வாய்ப்பை இழந்ததுமே அவன் உளம் சோர்ந்து சலிப்படையத் தொடங்

கிஞன். பெலவ்ஸோரவ் சீருடைப் பொத்தான் கள் அனைத்தையும் போட்டுக் கொண்டு, சிவந்த மேனியுடன் ஒரு மூலையில் கருங்கும்மென்று உட் கார்ந்திருந்தான். மலேவ்ஸ்கி பிரபுவின் மெல்லிய முகத்தில் நலமற்ற ஒரு புன்னகை எப்போதும் தவழ்ந்தது. அவன் ஜினயீதாவின் அருளை மெய் யாகவே இழந்து விட்டான். முதிய சிற்றரசிக்குத் தனிப்பட்ட ஈடுபாட்டுடன் தொண்டாற்றி வந் தான். அவளோடு வாடகை வண்டியில் கவர்னர் ஜெனரலிடம் போய் வந்தான். ஆனல் இந்தப் பயணம் வெற்றி அற்றதாக முடிந்தது. மலேவ்ஸ் கிக்கு உவப்பற்ற நிகழ்ச்சி ஒன்றும் நடந்தது. யாரோ ரெயில்வே அதிகாரிகளோடு நடந்த எதுவோ விவகாரம் அவனுக்கு நினைவூட்டப்பட் டது. அப்போது தான் அனுபவம் அற்றவனுய் இருந்ததாக அவன் தன் விளக்கத்தில் எழுத நேர்ந்தது. லூஷின் நாள்தோறும் இரண்டொரு தடவைகள் வந்தான், ஆனல் சிறிது நேரமே தங் கிஞன். எங்கள் கடைசி உரையாடலுக்குப் பிறகு நான் அவனிடம் கொஞ்சம் பயந்தேன், அதே சமயம் அவன்பால் உளமார ஈர்க்கப்படுவதையும் உணர்ந்தேன். ஒரு தடவை அவன் என்னேடு நிஸ் கூச்னிப் பூங்காவிற்கு உலாவ வந்தான். மிகுந்த நல்லியல்பும் பரிவும் காட்டிஞன், வெவ்வேறு புற் களுடையவும் மலர்ச் செடிகளுடையவும் பெயர் களையும் பண்புகளையும் எனக்குத் தெரிவித்தான். ''ஆனல் நான் மடையன், அவள் சரசக்காரி என்று எண்ணிக் கொண்டிருந்தேன்! தன்னைப் பலி கொடுப்பது சிலருக்கு இனிக்கிறது என்பது இப் போது தெரிகிறது'' என்று நெற்றியில் அடித்துக் கொண்டு சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் திடீ ரென்று கூறிஞன்.

''இதனுல் நீங்கள் சொல்ல விரும்புவது என்ன?'' என்று கேட்டேன்.

''உங்களிடம் நான் ஒன்றுமே சொல்ல விரும்ப வில்லே'' என்று வெடுக்கெனக் கூறிஞன் லூரஷின்.

ஜினயீதா என்னேத் தவிர்த்து வந்தாள். நான் எதிர்ப்பட்டது அவளுக்கு உவப்பற்றதாக இருந் ததை என்ஞல் கவனிக்காமல் இருக்க முடியவில்லே. அவள் தன் வசம் இன்றியே என்னிடமிருந்து முகத் தைத் திருப்பிக் கொண்டாள்... தன் வசம் இன்றி, அது தான் கசப்பாக இருந்தது. அதுதான் என்னே நொறுக்கி விட்டது! ஆனுல் செய்வதற்கு ஒன்றும் இல்லே, எனவே நான் அவள் கண்ணில் படா திருக்க முயன்றேன். தொலேவிலிருந்து மட்டுமே அவளேக் கண்காணித்து வந்தேன். இது எனக்கு எப்போதும் வாய்க்கவில்லே. முன்போலவே ஏதோ புரியாத விஷயம் அவளுக்கு நேர்ந்து கொண் டிருந்தது. அவளுடைய முகம் மாறிவிட்டது. அவளே வேறு ஆளாக மாறி விட்டாள். வெது வெதுப்பும் அமைதியுமான ஒரு மாலேயில் அவ ளுக்கு நேர்ந்த மாறுதல் எனக்குச் சிறப்பாக அதிர்ச்சி அளித்தது. அகன்று படர்ந்த எல்டர் செடியின் அடியில் இருந்த தாழ்வான பெஞ்சியில் நான் உட்கார்ந்திருந்தேன். இந்த இடம் எனக்குப் பிடித்திருந்தது. ஜினயீதாவின் அறை சன்னல் அங்கிருந்து தெரிந்தது. நான் உட்கார்ந்திருந் தேன். என் தலேக்கு மேலே கருமையாகிக் கொண் டிருந்த இலேயில் பாடுபட்டுத் தத்திக் கொண் டிருந்தது சின்னப் பறவை. சாம்பல் நிறப் பூனே முதுகை விரைப்பாக்கிக் கொண்டு தோட்டத்தில் எச்சரிக்கையுடன் பதி போட்டுக் கொண்டிருந்தது. வெளிச்சமாய் இல்லா விட்டாலும் ஒளி ஊடுருவக் கூடியதாய் இருந்த காற்றில் முதல் வண்டுகள்

சிரமத்துடன் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. நான் உட்கார்ந்து சன்னலை நோக்கியவாறு அது திறக்காதா என்று எதிர்பார்த்துக் காத்திருந் தேன். மெய்யாகவே அது திறந்தது. ஜினயீதா அதில் தென்பட்டாள். வெள்ளை உடை அணிந் திருந்தாள். அவளுடைய முகம், தோள்கள், கைகள் முதலியன வெள்ளை வெளேர் என்று வெளிறி இருந்தன. அவள் நெடு நேரம் அசையாமல் இருந் தாள். இணைந்த புருவங்களின் அடி வழியே நீண்ட நேரம் அசையாமல் நேரே பார்த்துக் கொண் டிருந்தாள். அவளுடைய அந்த மாதிரிப் பார் வையை நான் முன்பு கண்டதில்லை. பின்பு அவள் கைகளை முட்டி பிடித்து மிக மிக உறுதியாக இறுக்கி, அவற்றை உதடுகளுக்கும் நெற்றிக்கும் அருகே கொண்டு போனாள். திடீரென்று விரல் களை விரித்து நீட்டி, கூந்தலைக் காதுகளுக்குப் பின்னே நகர்த்திக் குலுக்கினாள். பிறகு ஏதோ தீர்மானத்துடன் தலையை மேலும் கீழுமாக ஆட்டி, சன்னல் கதவைச் சாத்தினாள்.

மூன்று நாட்களுக்குப் பின்னர் அவள் என்னைத் தோட்டத்தில் சந்தித்தாள். நான் ஒரு புறம் விலகப் பார்த்தேன், ஆனால் அவள் தானே என்னை நிறுத்தினாள்.

''எனக்குக் கை கொடுங்கள்'' என்று முந்திய அன்புடன் சொன்னாள். ''நாம் பேசிக் கொண்டு வெகு நாட்கள் ஆகி விட்டன.''

நான் அவளை உற்று நோக்கினேன். அவ ளுடைய கண்கள் அடக்கமாக ஒளிர்ந்தன. முகம் புகையின் ஊடாகப் போல முறுவல் செய்தது.

''உங்களுக்கு உடம்பு இன்னும் சரியாக வில்லையா?'' என்று கேட்டேன்.

''இப்போது சரியாகி விட்டது'' என்று

சொல்லி, சிறு சிவப்பு ரோஜா மலரைக் கொய்தாள். ''நான் கொஞ்சம் களைத்துப் போனேன். ஆனால் இதுவும் சரியாகி விடும்.''

''நீங்கள் மறுபடியும் முன் போல ஆகி விடுவீர்களா?'' என்று வினவினேன்.

ஜினயீதா ரோஜா மலரை முகத்தருகே கொண்டு போனாள். ஆழ் வண்ண இதழ்கள் அவளுடைய கன்னத்தில் பிரதிபலித்தது போன்று எனக்குத் தோன்றியது.

''நான் மாறி விட்டேனா என்ன?'' என்று என்னிடம் கேட்டாள் அவள்.

''ஆமாம், மாறி விட்டீர்கள்'' என்று தணிந்த குரலில் விடை அளித்தேன்.

''நான் உங்களிடம் பராமுகமாய் இருந்தேன் என்பதை அறிவேன்'' என்று தொடங்கினாள் ஜினயீதா. ''ஆனால் நீங்கள் இதைப் பொருட்படுத்தக் கூடாது... என்னால் வேறு விதமாக இருக்க முடியவில்லை... ஊம், தவிர, இதைப் பற்றிப் பேசிப் பயனில்லை!''

''நான் உங்களைக் காதலிப்பதை நீங்கள் விரும்பவில்லை, அதுதான் விஷயம்!'' என்று என்னை மீறிய கிளர்ச்சியுடன் துயரக் குரலில் சொன்னேன்.

''இல்லை, என்னைக் காதலியுங்கள், ஆனால் முன்போல அல்ல.''

''வேறு எப்படியாம்?''

''நாம் நண்பர்களாய் இருப்போம், அப்படியாக்கும்!'' ஜினயீதா ரோஜா மலரை முகர என்னை அனுமதித்தாள். ''கேளுங்கள், நான் உங்களுக்கு நிரம்ப மூத்தவள் ஆயிற்றே—நான் உங்கள் சித்தியாகலாமே. அட சித்தி இல்லாவிட்டாலும் தமக்கை ஆகலாம். நீங்கள் என்னடா என்றால்...''

''உங்கள் கண்களுக்கு நான் குழந்தை'' என்று அவள் பேச்சில் குறுக்கிட்டேன்.

''ஆமாம், குழந்தைதான். ஆனால் இனிய, நல்ல, புத்திசாலிக் குழந்தை, நான் நிரம்ப நேசிக்கும் குழந்தை. ஒன்று சொல்லட்டுமா? இன்று முதல் உங்களை என் இளந்தகையாக நியமிக்கிறேன். இளந்தகைகள் தங்கள் பெருமாட்டிகளிடமிருந்து பிரியக் கூடாது என்பதை மறந்து விடாதீர்கள். உங்கள் புதிய கௌரவத்துக்கான அடையாளம் இதோ'' என்று என் குட்டைக் கோட்டுப் பொத்தான் துளையில் ரோஜாவைச் செருகினாள். ''உங்கள் மேல் நான் காட்டும் அருளின் அடையாளம் இது'' என்றாள்.

''உங்களிடமிருந்து வேறு வகை அருள் முன்பு பெற்றேன்'' என்று முணுமுணுத்தேன்.

''ஆ!'' என்று பக்கவாட்டில் என் மேல் பார்வை செலுத்தினாள் ஜினயீதா. ''இவருக்கு எப்பேர்ப்பட்ட நினைவாற்றல்! அதற்கென்ன! இப்போதும் அருள் புரிய நான் தயார்...''

இவ்வாறு சொல்லி என் பக்கம் குனிந்து தூய, கிளர்ச்சி அற்ற முத்தத்தை என் நெற்றியில் பதித்தாள்.

நான் அவளை வெறுமே நிமிர்ந்து பார்த்தேன், அவளோ முகத்தைத் திருப்பிக் கொண்டு, ''என் பின்னே வாருங்கள், என் இளந்தகையே'' என்று சொல்லி விட்டுப் பக்கமனைக்குப் போனாள். நான் அவளைப் பின் தொடர்ந்தேன். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ''பணிவும் தர்க்க புத்தியும் உள்ள இந்த மங்கை நான் அறிந்திருந்த அதே ஜினயீதா தானா?'' என்று எண்ணமிட்டேன். அவளுடைய நடையும் அதிக அமைதி உள்ளதாக எனக்குப் பட்டது. அவளுடைய மேனி முழுவதும் அதிக

மாட்சியும் அதிகப் பாங்கான வடிவமைப்பும் வாய்ந்ததாகத் தோன்றியது...

அதோடு, என் கடவுளே! என் உள்ளத்தில் எத்தகைய புதிய ஆற்றலுடன் அனல் வீசியது காதல்!

## 16

மதியச் சாப்பாட்டுக்குப் பின் விருந்தாளிகள் மறுபடி பக்கமனையில் குழுமினார்கள். இளவரசி தன் அறையிலிருந்து வெளிவந்து அவர்களோடு சேர்ந்து கொண்டாள். வழக்கமான நண்பர் குழாம், என்னால் மறக்க முடியாத அந்த முதல் மாலையில் போல, ஒருவர் பாக்கி இல்லாமல் கூடி இருந்தனர். நிர்மாத்ஸ்கி கூட ஆடி அசைந்து வந்திருந்தான். இந்தத் தடவை மைதானவ் எல்லோருக்கும் முன்னால் வந்தான். அவன் புதுக் கவிதைகளைக் கொண்டு வந்திருந்தான். விளையாட்டுக்களும் பறிமுதல்களும் தொடங்கின, ஆனால் முன் போன்ற விந்தைக் குறும்புகளும் முட்டாளாக்குவதும் கூச்சலும் இல்லாமல் நடந்தன. ஜிப்சித் தன்மை மறைந்து விட்டது. ஜினயீதா கூட்டத்துக்குப் புதிய மனப் பாங்கை அளித்திருந்தாள். இளந்தகைக்கு உள்ள உரிமைப்படி நான் அவள் அருகில் வீற்றிருந்தேன். பறிமுதலுக்கு உள்ளாகுபவன் தன் கனவை விவரிக்க வேண்டும் என்ற யோசனையை அவள் சொன்னாள். ஆனால் இது வாய்க்கவில்லை. கனவுகள் ஒன்று சுவாரசியம் அற்றவையாக இருந்தன (தன் குதிரைக்குக் குரூஷியன் மீன்களை இரையாகக் கொடுத்ததாகவும் குதிரையின் தலை மரத்தால் ஆனதாக இருந்தது போலவும் பெலவ்ஸோரவ் கனவு கண்டானும்),

அல்லது உண்மை அற்றவையாக, இட்டுக் கட்டியவையாக இருந்தன. மைதானவ் ஒரு குறு நாவலே புனைந்து உரைத்தான். புதை குழிகளும், யாழ்கள் இசைத்த தேவதூதர்களும், பேசும் மலர்களும், தொலைவிலிருந்து வந்த ஒலிகளும் எல்லாம் அதில் இருந்தன. அவன் கதையை முடிப்பதற்கு ஜினயீதா விடவில்லை.

''இட்டுக்கட்டுவது தொடங்கி விட்டது என்றால், ஒவ்வொருவரும் கட்டாயமாகக் கற்பனை செய்யப்பட்ட ஏதேனும் கதையைச் சொல்லட்டும்'' என்றாள்.

முதலில் கதை சொல்லும் வாய்ப்பு அதே பெலவ்ஸோரவுக்குக் கிடைத்தது. இளம் குதிரைப் படையினன் குழப்பம் அடைந்தான்.

''என்னால் எதையும் கற்பனை செய்ய முடியாது!'' என்று கூவினான்.

''இதென்ன வெட்டிப் பேச்சு!'' என்றாள் ஜினயீதா. ''ஊம், உதாரணமாக, நீங்கள் மணமானவர் என்று கற்பனை செய்து கொள்ளுங்கள். உங்கள் மனைவியோடு நீங்கள் எப்படிப் பொழுது போக்குவீர்கள் என்று எங்களுக்குச் சொல்லுங்கள். நீங்கள் அவளை அறையில் பூட்டி வைப்பீர்களா?''

''பூட்டி வைப்பேன்.''

''நீங்களும் அவளோடு உட்கார்ந்திருப்பீர்களா?''

''நானும் கட்டாயமாக அவளோடு உட்கார்ந்திருப்பேன்.''

''அருமை. ஆனால் அவளுக்கு இது அலுத்துப் போய் அவள் உங்களுக்குத் துரோகம் செய்தாலோ?''

''நான் அவளைக் கொன்று விடுவேன்.''

''அவள் ஓடிப் போய் விட்டால்?''

''நான் அவளை எட்டிப் பிடித்து எப்படியும் கொன்று விடுவேன்.''

''அப்படியா. நான் உங்கள் மனைவியாய் இருப் பதாக வைத்துக் கொள்வோம். அப்போது நீங் கள் என்ன செய்வீர்கள்?''

பெலவ்ஸோரவ் சற்று பேசாதிருந்தான்.

''நான் தற்கொலை செய்து கொள்வேன்...''

ஜினயீதா கலீரென நகைத்தாள்.

''உங்கள் பாட்டு சுருக்கமானது என்பதைக் காண்கிறேன்.''

இரண்டாவது முறை ஜினயீதாவுக்கு வாய்த் தது. அவள் விட்டத்தைப் பார்த்தவாறு சிந்தனை யில் ஆழ்ந்தாள்.

''நல்லது, கேளுங்கள்'' என்று கடைசியில் சொல்லத் தொடங்கினாள். ''என் கற்பனை இது... சிறந்த மாளிகையின் ஆடல் கூடத்தை மனத்தில் உருவாக்கிக் கொள்ளுங்கள். கோடை இரவு, வியப்பூட்டும் இணை நடனம். நடனத்துக்கு ஏற் பாடு செய்திருப்பவள் இளம் அரசி. எங்கும் தங் கமும் சலவைக்கல்லும் படிகமும் பட்டும் விளக்கு களும் வைரங்களும் மலர்களும் நறுமண ஊது வத்திகளும் எல்லா வகை ஆடம்பர சாதனங் களும்.''

''நீங்கள் ஆடம்பரத்தை விரும்புகிறீர்களா?'' என்று குறுக்கிட்டான் லூஷின்.

''ஆடம்பரம் அழகானது. அழகானவை எல்லா வற்றையும் நான் விரும்புகிறேன்'' என்றாள் அவள்.

''நேர்த்தியானதை விடவா?'' என்று வின வினான் லூஷின்.

''இது ஏதோ தந்திரப் பேச்சு. எனக்கு

விளங்கவில்லை. என் பேச்சில் குறுக்கிடாதீர்கள். ஆயிற்று. நடனம் சிறப்பாக நடந்தது. விருந்தாளி கள் நிறையப் பேர். எல்லோரும் இளைஞர்கள், நேர்த்தியானவர்கள், வீரர்கள். எல்லோரும் அரசி மேல் கண்தலை தெரியாத மோகம் கொண் டிருந்தார்கள்.''

''விருந்தாளிகளில் பெண்கள் இருக்கவில்லை யோ?'' என்று கேட்டான் மலேவ்ஸ்கி.

''இருக்கவில்லை — அல்லது பொறுங்கள் — இருந்தார்கள்.''

''எல்லோரும் அழகற்றவர்களா?''

''வசீகரமானவர்கள். ஆனாலும் எல்லா ஆட வர்களும் அரசி மேல் மையல் கொண்டிருந்தார் கள். அவள் நெடிய, வடிமைந்த மேனியினள். அவளுடைய கருங் கூந்தல் மீது சிறு தங்க மணி முடி இலங்கியது.''

நான் ஜினயீதா மேல் கண்ணோட்டினேன். அந்தக் கணத்தில் அவள் எங்கள் எல்லோரையும் விட எவ்வளவோ உயர்ந்தவளாக எனக்குக் காட்சி அளித்தாள். அவளுடைய வெண் நுதலிலும் அசை வற்ற புருவங்களிலும் தூய அறிவும் ஆட்சித் திறனும் சுடர்ந்து பரவின. எனவே, ''நீயேதான் இந்த அரசி!'' என்று நான் எண்ணிக் கொண் டேன்.

''எல்லோரும் அரசியைச் சூழ்ந்து மொய்த் தார்கள்'' என்று தொடர்ந்தாள் ஜினயீதா. ''எல்லோரும் அவளை வானளாவப் புகழ்ந்து இச் சகச் சொல் மழை பொழிந்தார்கள்.''

''அவளுக்கு இச்சகம் பிடித்ததா?'' என்று கேட்டான் லூஷின்.

''எவ்வளவு பொறுமையற்றவர்! எல்லாவற்

றிலும் குறுக்கிடுகிறுர்... இச்சகம் யாருக்குத் தான் பிடிக்காது?''

''இன்னும் ஒரு, கடைசிக் கேள்வி'' என்ருன் மலேவ்ஸ்கி. ''அரசிக்குக் கணவன் இருந்தாஞ?''

''நான் இதைப் பற்றி நினேக்கக் கூட இல்லே. இருக்கவில்லே. கணவன் எதற்காக?''

''அதுதானே. எதற்காகக் கணவன்?'' என்று ஒத்துப் பாடிஞன் மலேவ்ஸ்கி.

"Silence!"* என்று கூவிஞன் மைதானவ். பிரெஞ்சு மொழி அவனுக்குச் சரியாகப் பேச வரவில்லே.

"Merci"** என்று அவனிடம் கூறிஞள் ஜினயீதா. ''ஆயிற்ரு. அரசி இந்தப் பேச்சுக்களேக் கேட்டாள், இசையைக் கேட்டாள், ஆனுல் விருந்தாளிகளில் எவரையும் ஏறிட்டுப் பார்க்கவில்லே. ஆறு சாளரங்கள் மேலிருந்து கீழ்வரை, விட்டத்திலிருந்து தரை வரை திறந்திருந்தன. அவற்றுக்கு வெளியே தெரிந்தன பெரிய விண்மீன்கள் சுடர்ந்த கரிய வானமும் பெரிய மரங்கள் அடர்ந்த இருண்ட தோட்டமும். அரசி தோட்டத்தில் பார்வை செலுத்திஞள். அங்கே, மரங்களின் அருகே இருந்தது நீரூற்று. அது மாயத் தோற்றம் போல மிக மிக நீளமாக இருளில் வெண்மைக் கோலம் காட்டியது. உரையாடல்களுக்கும் இசைக்கும் நடுவே நீரின் மெல்லிய அலேயொலியை அரசி செவி மடுத்தாள். அவள் பார்த்தாள், எண்ணமிட்டாள்: திருவாளர்களே, நீங்கள் எல்லோரும் உயர் குடியினர், அறிவாளிகள், செல்வர்கள். நீங்கள் என்னேச் சூழ்ந்திருக்கிறீர்கள், என் ஒவ்வொரு

---

* ''சத்தம் போடாதீர்கள்!'' (பிரெஞ்சு).
** ''நன்றி'' (பிரெஞ்சு).

சொல்லையும் பொன்னே போல் போற்றுகிறீர்கள், என் காலடியில் உயிர் துறக்க நீங்கள் அனைவரும் ஆயத்தமாய் இருக்கிறீர்கள், நான் உங்கள் மீது ஆணை செலுத்துகிறேன்... ஆனால், அங்கே, ஊற்றின் அருகில், அலையடிக்கும் இந்த நீருக்குப் பக்கத்தில் நின்று எனக்காகக் காத்திருக்கிறான் நான் காதலிக்கும் ஆண்மகன், என்மேல் ஆணை செலுத்துபவன். அவன் விலை மிக்க உடையோ நன் மணிகளோ அணிந்திருக்கவில்லை. யாரும் அவனை அறியார். ஆனால் அவன் எனக்காகக் காத்திருக்கிறான், நான் வருவேன் என்று நம்புகிறான். அவனிடம் போகவும் அவனோடு இருந்து விடவும் அங்கே, தோட்டத்தின் இருட்டில், மரங்களின் சலசலப்புக்கும் நீரூற்றின் அலையொலிக்கும் இடையே அவனோடு கூட மறைந்து விடவும் நான் விரும்பும் போது என்னைத் தடுத்து நிறுத்தக் கூடிய சக்தி எதுவும் இல்லை...''

ஜினயீதா பேச்சை நிறுத்தினாள்.

''இது கற்பனையா?'' என்று தந்திரமாகக் கேட்டான் மலேவ்ஸ்கி.

ஜினயீதா அவனைப் பார்க்க கூட இல்லை.

''கனவான்களே, நாம் விருந்தினராய் இருந்து நீரூற்றின் அருகே இருந்த அந்த அதிர்ஷ்டசாலியைப் பற்றி அறிந்திருந்தால் நாம் என்ன செய்திருப்போம்?'' என்று திடீரெனக் கூறினான் லூஷின்.

''பொறுங்கள், பொறுங்கள்'' என்று குறுக்கிட்டாள் ஜினயீதா. ''உங்களில் ஒவ்வொருவரும் என்ன செய்திருப்பீர்கள் என்று நானே உங்களுக்குச் சொல்கிறேன். பெலவ்ஸோரவ், நீங்கள் அவனை இருவர் போருக்கு அறைகூவி அழைத்திருப்பீர்கள். மைதானவ், நீங்கள் அவனைப் பற்றி

அங்கதச் செய்யுள் எழுதி இருப்பீர்கள்... ஆனால், இல்லை, அங்கதச் செய்யுள் எழுத உங்களால் முடியாது. பர்பியே* போல நீண்ட கண்டனப்பா இயற்றி அதை ''டெலெகிராப்''** சஞ்சிகையில் வெளியிட்டிருப்பீர்கள். நிர்மாத்ஸ்கி, நீங்கள் அவனிடம் கடன் வாங்கி இருப்பீர்கள்... இல்லை, அவனுக்கு வட்டிக்குக் கடன் கொடுத்திருப்பீர்கள். டாக்டர், நீங்கள்...'' அவள் பேச்சை இடை நிறுத்தினாள். ''நீங்கள் என்ன செய்திருப்பீர்கள் என்பதை அறியேன்'' என்றாள்.

''அரசிக்கு விருந்தினரைப் பிடிக்காத போது அவள் நடன விருந்துகள் கொடுக்கக் கூடாது என்று அரசவை மருத்துவன் என்ற முறையில் யோசனை கூறி இருப்பேன்'' என்றான் லூஷின்.

''ஒருவேளை உங்கள் கருத்து சரியாய் இருக்கலாம். அப்புறம் பிரபு, நீங்கள்...''

''நானா?'' என்று தன் நலமற்ற புன்னகையுடன் கேட்டான் மலேவ்ஸ்கி.

''நீங்கள் நஞ்சு கலந்த மிட்டாயை அவனுக்குக் கொடுத்திருப்பீர்கள்.''

மலேவ்ஸ்கியின் முகம் சற்று கோணி கணப்

---

* ஓகியூஸ்ட் பர்பியே (1803—1882) பிரெஞ்சுப் புரட்சிக் கவிஞர். ''இயாம்ப்'' என்னும் பெயர் பெற்ற செய்யுள் தொகுப்பின் ஆசிரியர். பாரிசில் 1832ல் வெளியான இந்தத் தொகுப்பு ருஷ்யாவில் தணிக்கை அதிகாரிகளால் உடனே தடை செய்யப்பட்டது. ஈரசைச் செய்யுள் என்று பொருள்படும் இயாம்ப் கிரேக்க மூலப் பாவகையில் நையாண்டிப் பாடல்களைக் குறித்தது. ஆனால் பர்பியே கண்டனத்தையும் வாதத்தையும் வெளியிட அதைப் பயன்படுத்தினார்.

** மாஸ்கோ டெலெகிராப் பிற்போக்கு இலக்கிய-விமர்சனச் சஞ்சிகை (1825—1834).

போது வஞ்சகத் தோற்றத்தை மேற்கொண்டது. ஆனால் அவன் உடனேயே உரக்க நகைத்தான்.

''வோல்தெமார், உங்களைப் பொறுத்த வரையில்...'' என்று தொடர்ந்த ஜினயீதா, ''ஆனால் போதும். வாருங்கள் வேறு விளையாட்டு ஆடலாம்'' என்றாள்.

''அரசி தோட்டத்துக்கு ஓடியபோது மிஸியே வோல்தெமார் அரசியின் இளந்தகை என்ற முறையில் அவளுடைய ஆடைப் பின் தொங்கலைப் பிடித்துக் கொண்டிருந்திருப்பார்'' என்று நஞ்சு தோய்ந்த பாங்கில் சொன்னான் மலேவ்ஸ்கி.

நான் சீறி எழுந்தேன், ஆனால் ஜினயீதா சட்டென்று என் தோளில் கையை வைத்து, சற்று எழுந்து, லேசாக நடுங்கிய குரலில் கூறினாள்:

''மேதகு பிரபுவுக்குத் துடுக்காகப் பேசும் உரிமையை நான் ஒருபோதும் அளிக்கவில்லை ஆதலால் இங்கிருந்து வெளியேறும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.'' அவள் அவனுக்குக் கதவைச் சுட்டிக் காட்டினாள்.

''கருணை கூருங்கள், இளவரசியாரே'' என்று முணுமுணுத்த மலேவ்ஸ்கி ஒரேயடியாக வெளிறிப் போனான்.

''இளவரசி சொல்வது சரி'' என்று கூவித் தானும் எழுந்தான் பெலவ்ஸோரவ்.

''கடவுளாணை, நான் எதிர்பார்க்கவே இல்லை'' என்று தொடர்ந்தான் மலேவ்ஸ்கி. ''என் சொற்களில் அப்படி எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை... உங்களை அவமதிக்கும் எண்ணமே எனக்கு இருக்கவில்லை... என்னை மன்னித்து விடுங்கள்.''

ஜினயீதா அவன் மேல் கடுகடுத்த பார்வையை வீசினாள், பின்பு வறண்ட சிரிப்பு சிரித்தாள்.

''சரி, இருந்து கொள்ளுங்கள்'' என்று அசட்டையான கையசைப்புடன் சொன்னாள். ''மிஸியே வோல்தெமாரும் நானும் வீணுகக் கோபித்துக் கொண்டோம். கொட்டுவதில் உங்களுக்கு மகிழ்ச்சி உண்டாகிறது... நன்ருகக் கொட்டுங்கள்.''

''என்னை மன்னித்து விடுங்கள்'' என்று இன்னொரு தரம் திருப்பிச் சொன்னான் மலேவ்ஸ்கி. நானோ, ஜினயீதாவின் அங்க அசைவுகளை நினைவு கூர்ந்து, உண்மையான அரசி துடுக்காகப் பேசியவனுக்கு வெளியேறும்படி இதை விடக் கண்ணியத்துடன் கட்டளை இட்டிருக்க முடியாது என்று மீண்டும் எண்ணிக் கொண்டேன்.

பறிமுதல் விளையாட்டு இந்தச் சிறு நிகழ்ச்சிக்குப் பிறகு சிறிது நேரம் தொடர்ந்தது. எல்லோருக்கும் ஓரளவு சங்கடமாய் இருந்தது, இந்த நிகழ்ச்சியால் அவ்வளவு இல்லை, முற்றிலும் நிச்சயப்படாத, ஆனாலும் துயர் நிறைந்த வேறு உணர்வினால். அதைப் பற்றி ஒருவரும் பேசவில்லை ஆனால் தனக்கும் தன் அருகில் இருந்தவனுக்கும் இந்த உணர்வு ஏற்பட்டதை ஒவ்வொருவனும் புரிந்து கொண்டான். மைதானவ் தன் கவிதைகளை எங்களுக்குப் படித்துக் காட்டினான். மலேவ்ஸ்கி மிகையான உற்சாகத்துடன் அவற்றைப் பாராட்டினான். ''நல்லவனுகக் காட்டிக் கொள்ள இவனுக்கு இப்போது எவ்வளவு ஆசையாய் இருக்கிறது'' என்று என் காதில் கிசுகிசுத்தான் லூஷின். நாங்கள் விரைவில் கலைந்தோம். ஜினயீதா திடீரென்று எண்ணங்களில் ஆழ்ந்தாள். சிற்றரசி தனக்குத் தலை வலிப்பதாகச் சொல்லி அனுப்பினாள். நிர்மாத்ஸ்கி தன் கீல்வாதத்தைப் பற்றி முறையிடலானான்...

எனக்கு வெகு நேரம்வரை தூக்கம் வரவில்லை.

ஜினயீதாவின் கதை என்னை அதிர்ச்சிக்கு உள்ளாக்கிற்று.

''அதில் குறிப்பு அடங்கி இருந்ததா என்ன?'' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். ''யாரை, எதை அவள் குறிப்பால் உணர்த்தினாள்? குறிப்பால் சுட்டுவதற்கு விஷயம் நிச்சயமாக இருக்கிறதா என்பதை எப்படி உறுதிப்படுத்திக் கொள்வது?.. இல்லை, இல்லை, இருக்க முடியாது'' என்று சூடேறிய ஒரு கன்னத்தைத் திருப்பி மறு கன்னத்தைத் தலையணையில் வைத்தவாறு கிசுகிசுத்தேன்... ஆனால் கதை சொன்ன போது ஜினயீதாவின் முகத்தில் இருந்த தோற்றத்தை நான் நினைவு கூர்ந்தேன்... நிஸ்கூச்னியில் லூஷினிடமிருந்து வெடித்துக் கிளம்பிய வியப்புச் சொற்களையும் என்னோடு பழகுவதில் ஜினயீதா காட்டிய திடீர் மாறுதல்களையும் நினைவு படுத்திக் கொண்டேன். பல வகை ஊகங்களில் குழம்பினேன். ''யார் அவன்?'' இந்த இரு சொற்களும் இருட்டில் வரையப்பட்டு என் கண்களுக்கு முன்னே நிற்பவை போல் தோன்றின. தாழ்வான மிகக் கொடிய மேகம் என்மேல் கவிந்தது போல் இருந்தது. அதன் அழுத்தத்தை நான் உணர்ந்தேன். இதோ, இதோ அது பெரு மழையாய்க் கொட்டப் போகிறது என்று எதிர்பார்த்தேன். அண்மைக் காலத்தில் நான் பல விஷயங்களுக்குப் பழகி இருந்தேன், சிற்றரசி வீட்டில் பலவற்றைக் கண்ணாரக் கண்டு விட்டேன். அங்கிருந்த ஒழுங்கீனம், எரிந்த மெழுகுவத்தித் துண்டுகள், முறிந்த கத்திகளும் முள் கரண்டிகளும், ஏங்கிய வனிபாத்தி, கந்தல் உடுத்திய பணிப் பெண்கள், சிற்றரசியின் பழகு முறைகள்—விந்தையான இந்த வாழ்க்கை அனைத்துமே இப்போது எனக்கு வியப்பூட்டவில்லை... ஆனால் ஜினயீதாவிடம் இப்

போது எனக்கு மங்கலாகத் தென்பட்ட தன்மைக் குப் பழக்கப்பட என்னால் முடியவில்லை... ''முரட் டுத் துணிச்சல்காரி'' என்று அவளைப் பற்றி ஒரு தரம் என் தாயார் சொன்னாள். அவள், என் ஆதர்ச பிம்பம், என் தேவதை, முரட்டுத் துணிச்சல் காரியா?இந்தப் பெயர் என்னைப் பொசுக்கியது.தலை யணையில் புதைந்து அதிலிருந்து தப்ப முயன்றேன், கடும் சீற்றம் கொண்டேன். ஆனால் அதே சமயம், நீரூற்றின் அருகே நின்ற அந்த அதிர்ஷ்டக்காரனாக இருப்பதற்கு நான் என்னதான் செய்ய இசைந் திருக்க மாட்டேன், என்னதான் கொடுத்திருக்க மாட்டேன்!..

என் இரத்தம் கொதித்துப் பொங்கியது. ''தோட்டம்... நீரூற்று...'' என்று எண்ணமிட் டேன். ''தோட்டத்துக்குப் போகிறேனே'' என்று முடிவு செய்தேன். மளமளவென்று மாற்றுடை அணிந்து வீட்டிலிருந்து நழுவினேன். இரவு இருண்டிருந்தது. மரங்கள் லேசாகக் கிசுகிசுத் தன. வானத்திலிருந்து இதமான குளிர் விழுந்து கொண்டிருந்தது. காய்கறித் தோட்டத்திலிருந்து சதகுப்பையின் நறு மணம் வீசியது. தோட்டத் தின் எல்லா நடைபாதைகளையும் நான் சுற்றி வந் தேன். என் காலடிகளின் மெல்லிய ஒலி என்னைக் கலக்கத்துக்கு உள்ளாக்கிற்று, உற்சாகமும் படுத் திற்று. நான் நின்று, எதிர்பார்த்துவிட்டு, என் நெஞ்சு எப்படி அடித்துக் கொண்டது—வலிவாக வும் விரைவாகவும்—என்பதைக் கேட்டேன். முடி வில் நான் வேலியை நெருங்கி மெல்லிய கழியை ஊன்றிக் கொண்டேன். திடீரென்று—அல்லது எனக்கு பிரமை உண்டாயிற்றோ?—எனக்குச் சில அடிகள் தள்ளி ஒரு பெண்ணின் உருவம் பளிச் சிட்டது... நான் இருளில் பார்வையை வலிந்து

செலுத்தினேன், மூச்சை அடக்கிக் கொண்டேன். இது என்ன? காலடிகளா எனக்குக் கேட்கின்றன— அல்லது மீண்டும் என் நெஞ்சுதான் அடித்துக் கொள்ளுகிறதோ? ''யார் அங்கே?'' என்று தெளிவின்றிக் குழறினேன். என்ன அது மறுபடி? அடக்கப்பட்ட சிரிப்பா? அல்லது இலைகளின் சரசரப்பா?... அல்லது காதுக்கு நேர்மேலே பெருமூச்சா? எனக்கு அச்சம் உண்டாயிற்று... ''யார் அங்கே?'' என்று இன்னும் தணிவான குர லில் மறுபடி கேட்டேன்.

கணப்போது காற்று தாரையாய்ப் பெரு கிற்று. வானில் ஒளிப் பட்டை மினுமினுத்தது. விண்மீன்கள் உருண்டோடின. ''ஜினயீதாவா?'' என்று கேட்க வாய் எடுத்தேன். ஆனால் ஒலி என் உதடுகளின் அருகே நின்று விட்டது. நள்ளிரவில் அடிக்கடி ஏற்படுவது போலத் திடீரென்று சுற்று முற்றும் எல்லாம் முழு நிசப்தத்தில் ஆழ்ந்தன... வெட்டுக்கிளிகள் கூட மரங்களில் கிரீச்சிடுவதை நிறுத்தி விட்டன. எங்கோ ஒரு சன்னல் மட்டும் கிணுகிணுத்தது. நான் நெடு நேரம் நின்று கொண் டிருந்து விட்டு என் அறைக்கு, குளிர்த்து போன படுக்கைக்குத் திரும்பினேன். விந்தையான கிளர்ச் சிக்கு உள்ளாகி இருந்தேன்: நான் காதலியைச் சந்திக்கச் சென்றது போலவும், தனியன் ஆகி விட்டது போலவும் வேறு ஒருவருடைய இன்பத் தின் அருகாகப் போனது போலவும் எனக்குத் தோன்றியது.

## 17

மறு நாள் ஜினயீதாவை நான் மேலோட்ட மாகத்தான் பார்த்தேன்: சிற்றரசியுடன் வாடகை

வண்டியில் அவள் எங்கோ போனுள். ஆனல் லூஷினேயும் மலேவ்ஸ்கியையும் நான் கண்டேன். லூஷின் எனக்கு அரை குறையாகவே முகமன் கூறினுன். இளம் பிரபு மலேவ்ஸ்கி பல்லிளித்து என்னேடு நட்புடன். பேசத் தலேப்பட்டான். பக்க மனேக்கு வந்தவர்கள் எல்லோரிலும் அவன் ஒரு வன்தான் எங்கள் வீட்டுக்குள் நெருக்கிப் புகுந்து அம்மாவின் பிரியத்தைச் சம்பாதிப்பதில் வெற்றி பெற்றிருந்தான். அப்பா அவனே மதிக்கவில்லே. அவமதிக்கும் அளவுக்குச் சம்பிரதாய மரியாதை யை அவனிடம் கடைப்பிடித்தார்.

"Ah, monsieur le page!* உங்களேப் பார்த் ததில் எனக்கு நிரம்ப மகிழ்ச்சி. உங்கள் வனப்பு வாய்ந்த அரசி என்ன செய்து கொண்டிருக் கிருள்?'' என்று பேச்சைத் தொடங்கினுன் மலேவ்ஸ்கி.

அவனுடைய புதுமைப் பொலிவுள்ள அழகிய முகம் அந்தக் கணத்தில் எனக்கு ஒரே அருவருப்பு ஊட்டியது. அவன் என்னே இகழ்ச்சி ததும்பும் கேலியுடன் பார்த்துக் கொண்டிருந்தான். எனவே நான் அவனுக்குப் பதிலே சொல்லவில்லே.

''நீங்கள் இன்னும் கோபமாய் இருக்கிறீர்களா என்ன?'' என்று தொடர்ந்தான் அவன். உங்களே இளந்தகை என்று அழைத்தது நான் அல்லவே. இளந்தகைகள் பெரும்பாலும் அரசிகளுக்குத் தான் உண்டு. ஆனல் ஒன்று சொல்ல அனுமதியுங் கள். உங்கள் கடமையை நீங்கள் சரியாக நிறை வேற்றவில்லே.''

''அது எப்படி?''

---

* ''ஆ, திருவாளர் இளந்தகையாரே!'' (பிரெஞ்சு).

''இளந்தைகள் தங்கள் பெருமாட்டிகளிட மிருந்து பிரியக் கூடாது. அவர்கள் செய்வதை எல்லாம் இளந்தைகள் அறிந்திருக்க வேண்டும்'' என்று கூறி விட்டுக் குரலைத் தாழ்த்தி, ''இளந்த கைகள் அவர்களைக் கண்காணிக்கக்கூட வேண்டும்—பகலிலும் இரவிலும்'' என்முன்.

''நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''

''நான் என்ன சொல்ல விரும்புகிறேனு? நான் தெளிவாகவே சொல்லுவதாக நினைக்கிறேன். பகலிலும் இரவிலும். பகலிலாவது ஏதோ தானே என்று இருக்கலாம். பகலில் வெளிச்சமும் ஆள் நடமாட்டமும் இருக்கும். ஆனல் இரவிலோ— அப்போதுதான் ஆபத்தை எதிர்பார்க்க வேண்டும். இரவு வேளைகளில் தூங்காமல் கண்காணிக்கும்படி, முடிந்த வகையிலெல்லாம் கண்காணிக்கும்படி, உங்களுக்கு யோசனை சொல்லுகிறேன். நினைவு வைத்துக் கொள்ளுங்கள்—தோட்டத்தில், இரவில், நீரூற்றின் பக்கத்தில் — அங்கேதான் காவல் இருக்க வேண்டும். எனக்கு நன்றி சொல்லுவீர்கள்.''

மலேவ்ஸ்கி வாய்விட்டுச் சிரித்து எனக்கு முதுகைக் காட்டித் திரும்பிக் கொண்டான். என்னிடம் தான் சொன்னதற்கு அவன் தனிப்பட்ட முக்கியத்துவம் அளிக்கவில்லை போலும். தேர்ந்த புரட்டன் என்று அவன் பெயர் வாங்கி இருந்தான். வேடக் கூத்துக்களில் மனிதர்களை முட்டாளாக்குவதில் தனக்கு இருந்த திறமைக்காக அவன் புகழ் பெற்றிருந்தான். அவனுடைய தன்மை முழுவதிலும் ஊடுருவி இருந்த அனேகமாகத் தன்னுணர்வற்ற பொய்மை இதில் அவனுக்குப் பெருத்த உதவி செய்தது... என்னை ஏளனம் செய்யவே அவன் விரும்பினன். ஆனல் அவனுடைய

ஒவ்வொரு சொல்லும் எனது எல்லா இரத்தக் குழாய்களிலும் நஞ்சைப் பெருக்கியது. குருதி என் தலைக்குக் குப்பென்று ஏறியது. ''ஓகோ! அப்படியா சேதி!'' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். ''நல்லது! தோட்டத்துக்குப் போகும்படி நான் ஈர்க்கப்பட்டது வெறுமே அல்ல என்று தெரிகிறது! இது நடக்கக் கூடாதே இனி!'' என்று உரக்கக் கூறி முட்டியால் நெஞ்சில் அடித்துக் கொண்டேன். ஆனால் எது நடக்கக் கூடாது என்பதை நானே அறிந்திருக்கவில்லை. ''இந்த மலேவ்ஸ்கியே தோட்டத்திற்குப் போகிறானோ?'' என்று எண்ணினேன் (அவன் ஒருவேளை வாய் தவறிச் சொல்லி இருக்கலாம். இதற்கு வேண்டிய துடுக்கு அவனிடம் போதுமான அளவு இருந்தது), ''அல்லது வேறு யாரேனுமோ?'' (எங்கள் தோட்டத்து வேலி மிகவும் தாழ்வாய் இருந்தது, அதைத் தாண்டுவது கடினமே அல்ல) ஆனால் என் கையில் அகப்பட்டால் அவனுக்குச் செம்மையாகக் கிடைக்கும்! எனக்கு எதிர்ப்படும்படி ஒருவனுக்கும் சொல்ல மாட்டேன்! என்னால் பழிவாங்க முடியும் என்பதை உலகம் பூராவுக்கும் இந்தத் துரோகிப் பெண்ணுக்கும் (எப்படியும் அவளைத் துரோகி என்று குறித்தே விட்டேன்) காட்டி விடுகிறேன்!''

என் அறைக்குத் திரும்பி, அண்மையில் வாங்கிய ஆங்கிலக் கத்தியை எழுது மேசையிலிருந்து எடுத்து, அதன் அலகின் கூரைத் தொட்டுப் பார்த்து விட்டு, புருவங்களை நெறித்து இந்த மாதிரிக் காரியங்கள் செய்வது எனக்கு வியப்பளிக்கவும் இல்லை, முதல் தடவையும் இல்லை என்பது போல நிதானமான, ஒரு முனைப்புள்ள தீர்மானத்துடன் அதை என் பையில் நுழைத்துக்

கொண்டேன். என் இதயம் சீற்றத்தால் விம்மிக் கல்லாக இறுகியது. நள்ளிரவு வரை நான் நெறித்த புருங்களைப் பிரிக்கவோ உதடுகளைத் திறக்கவோ இல்லை. பைக்குள் கையைத் திணித்து, சூடேறியிருந்த கத்தியை அழுத்தி, ஏதோ பயங்கரச் செயலுக்கு முன்கூட்டி ஆயத்தம் செய்தவாறு அடிக்கடி முன்னும் பின்னுமாக நடந்து கொண்டிருந்தேன். முன் அனுபவித்திராத இந்தப் புதிய உணர்ச்சிகள் என்னை ஒரேயடியாக ஆட்கொண்டு குதூகலப்படுத்தக்கூடச் செய்ததால், உண்மையில் ஜினயீதாவைப் பற்றி நான் அனேகமாக எண்ணவில்லை. ஜிப்சி இளைஞன் அலேக்கோ* எனக்கு ஓயாமல் காட்சி அளித்துக் கொண்டிருந்தான். ''எங்கே பரிகிறுய் அழகா, படு...'' பின்பு: ''உன் மேலெல்லாம் குருதித் துளிகள்!.. ஐயோ, நீ என்ன செய்தாய்?..'' ''ஒன்றுமில்லை!'' எத்தகைய கொடூரமான முறுவலுடன் ''ஒன்றுமில்லை!'' என்ற இந்தச் சொல்லை நான் திரும்பச் சொன்னேன். தகப்பனுர் வீட்டில் இல்லை. ஆனுல், கொஞ்ச காலமாகவே ஓயாமல் உள்ளுக்குள் எரிச்சல் பட்டுக் கொண்டிருந்த அம்மா என்னுடைய பழிவாங்கும் முகத் தோற்றத்தைக் கண்டு ''என்ன ஒரே முறைப்பாக முறைக்கிருய், தானியத்தைப் பார்த்து முறைக்கும் சுண்டெலி போல?'' என்று இரவுச் சாப்பாட்டின் போது கூறிஞள். நான் பெரிய மனிதப் பாங்கில் அவளைப் பார்த்து வெறுமே குறுநகை செய்தேன். ''இவர்களுக்கு மட்டும் தெரிந்தால்!'' என்று

---

* அலேக்கோ—ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினுடைய ரொமாண்டிக் காவியத்தின் நாயகன்.

நினைத்துக் கொண்டேன். மணி பதினொன்று அடித்தது, நான் என் அறைக்குப் போனேன், ஆனால் உடை மாற்றாமல் நள்ளிரவை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். கடைசியில் பன்னிரண்டு மணியும் அடித்தது. ''நேரம் வந்து விட்டது!'' என்று பற்களைக் கடித்தவாறு கிசுகிசுத்தேன். பொத்தான்களை மேல் வரையில் போட்டுக் கொண்டு, சட்டைக் கைகளைக் கூட மடக்கி விட்டுக் கொண்டு தோட்டத்துக்குப் போனேன்.

காவல் காக்க வேண்டிய இடத்தை முன் கூட்டித் தெரிந்தெடுத்திருந்தேன். தோட்டத்தின் கோடியில் எங்கள் நிலத்தையும் சிற்றரசியின் நிலத்தையும் பிரித்த வேலி பொதுச் சுவரோடு பொருந்தி இருந்த இடத்தில் தன்னந்தனி பிர் மரம் வளர்ந்திருந்தது. அதன் தாழ்வான, அடர்ந்த கிளைகளின் அடியில் நின்றவாறு சுற்றும் நடப்பவற்றை இரவின் இருட்டு இடம் கொடுத்த அளவுக்கு நன்றாகப் பார்க்க என்னால் முடிந்தது. எனக்கு எப்போதும் மர்மமானதாகத் தோற்றம் அளித்த பாதையும் இங்குதான் வளைந்து சென்றது. இந்த இடத்தில் தாண்டிக் குதித்த கால்களின் தடங்கள் பதிந்திருந்த வேலிக்கு அடியே அது பாம்பு போல ஊர்ந்து கடந்து கருவேல மரங்கள் அடர்ந்த வட்டப் பந்தருக்கு இட்டுப் போயிற்று. நான் பிர் மரத்தை அடைந்து அதன் தண்டின் மேல் சாய்ந்து கொண்டு கண்காணிக்கத் தொடங்கினேன்.

தலைக்கு நாளில் போலவே இரவு சந்தடி அற்று இருந்தது. ஆனால் வானில் மேகங்கள் குறைவாய் இருந்தன. புதர்களின் வரையுருக்கள், உயரமான மலர்ச் செடிகளின் வரை வடிவங்கள் கூட, துலக்கமாகத் தென்பட்டன. எதிர்பார்ப்பின் முதல்

கணங்கள் சோர்வளிப்பவையாக, அனேகமாய்ப் பயங்கரமாக இருந்தன. நான் எல்லாவற்றுக்கும் துணிந்து விட்டேன். எப்படிச் செயல்படுவது, என்று தான் எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன்: ''எங்கே போகிறாய்? நில்! உள்ளதை ஒப்புக் கொள்—இல்லாவிட்டால் சாவு!'' என்று இடி முழக்கம் செய்வதா? அல்லது வெறுமே தாக்கு வதா?.. ஒவ்வோர் ஒலியும், ஒவ்வொரு சரசரப் பும் சலசலப்பும் பொருள் உள்ளதாகவும் அசா தாரணமாகவும் எனக்குத் தோன்றியது... நான் தயாராய் இருந்தேன்... முன்னே சாய்ந்தேன்... ஆனால் அரை மணி கழிந்தது, ஒரு மணி கழிந்தது. என் இரத்தம் ஆறிக் குளிர்ந்து போயிற்று, இதை எல்லாம் நான் வீணாகச் செய்கிறேன், நான் ஓரளவு நகைப்புக்கு ஆளாகக் கூடியவன், மலேவ்ஸ்கி என்னைக் கேலி செய்து விட்டான் என்ற எண்ணம் என் உள்ளத்தில் மெதுவாகப் புகத் தொடங் கிற்று. நான் என் பதுங்கிடத்தை விட்டுக் கிளம்பித் தோட்டம் முழுவதையும் சுற்றி வந்தேன். வேண்டுமென்றே போல ஓரிடத்திலாவது சிறு ஓசை கூடக் கேட்கவில்லை. எல்லாம் அமைதியில் ஆழ்ந்திருந்தன. எங்கள் நாய் கூடத் திட்டி வாச லின் அருகே பந்தாய்ச் சுருண்டு உறங்கிக் கொண் டிருந்தது. நான் மூடு தோட்டத்தின் இடிந்த சுவர் மேல் ஏறி, தொலைவிலிருந்த திடலை முன்னே கண் டேன், ஜினயீதாவுடன் நடந்த சந்திப்பை நினைவு கூர்ந்து சிந்தனையில் ஆழ்ந்தேன்...

நான் திடுக்கிட்டேன்... திறக்கப்பட்ட கத வின் கிறீச் சொலியும் பின்பு முறிந்த சுள்ளியின் லேசான மடமடப்பும் கேட்டது போல எனக்குத் தோன்றியது. இரண்டு தாவல்களில் சுவற்றிலி ருந்து இறங்கி அசையாது நின்றேன். விரைந்த,

அனுயாசமான, ஆனால் எச்சரிப்புள்ள காலடிக்ள் தோட்டத்தில் தெளிவாகக் கேட்டன. அவை என்னை நெருங்கின. ''இதோ அவன்... இதோ அவன், கடைசியில்!'' என்ற எண்ணம் என் உள் ளத்தில் பாய்ந்தது. நான் பையிலிருந்து கத்தியை வெடுக்கென எடுத்து அதை வெடுக்கென விரித் தேன். என் கண்களில் சிவப்புப் பொறிகள் பறந் தன, அச்சத்தாலும் கோபத்தாலும் தலை மயிர் சிலிர்த்தது... காலடிகள் நேரே என் பக்கம் வந் தன. நான் வளைந்து அவற்றை நோக்கி நகர்ந்தேன்... ஓர் ஆள் தென்பட்டான்... அட கடவுளே! அது என் தகப்பனார்!

அவர் கறுப்பு மழைக் கோட்டால் உடம்பு முழுவதையும் மூடிக் கொண்டு தொப்பியை முகத்தின் மேல் இழுத்து விட்டுக் கொண்டிருந் தார் என்றாலும் நான் அவரை உடனே அடையாளம் தெரிந்து கொண்டேன். நுனிக்காலால் நடந்து என்னைக் கடந்து சென்றார் அவர். என்னை எதுவும் மறைக்கவில்லை ஆயினும் அவர் என்னைக் கண்டு கொள்ளவில்லை. நான் ஒரேயடியாக நெளிந்து குறுகிய படியால் தரையோடு தரையாக ஒன்றி விட்டேன் போலும். பொறாமை பிடித்த, கொலை செய்யத் தயாராய் இருந்த ஒதெல்லோ* திடீ ரென்று பள்ளிச் சிறுவனாக மாறி விட்டான்... அப்பாவின் எதிர்பாராத வரவால் ஒரேயடியாக மிரண்டு போன நான், அவர் எங்கிருந்து வந்தார், எங்கே மறைந்தார் என்பதை முதலில் கவனிக்கக்

---

* ஒதெல்லோ—ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பியரின் துன்பியல் நாடகத்தின் கதாநாயகன். பொறாமை காரணமாகத் தன் ஆசை மனைவி டெஸ்டெமோ னாவைக் கொலை செய்தவன்.

கூட இல்லை. மீண்டும் எங்கும் ஓசை அடங்கிய பின்புதான் நான் நிமிர்ந்து நின்று எண்ணமிட்டேன்: ''அப்பா எதற்காக இரவில் தோட்டத்தில் நடமாடுகிருர்'' என்று. அச்சத்திஞல் நான் கத்தியைப் புல்லில் நழுவ விட்டு விட்டேன், ஆஞல் அதைத் தேடக் கூட முயலவில்லை. எனக்கு ஒரே வெட்கமாய் இருந்தது. நொடிப்போதில் நான் அறிவு நிதானத்துக்கு வந்து விட்டேன். ஆஞல் வீடு திரும்புகையில் எல்டர் செடிக்கு அடியில் இருந்த என் பெஞ்சியின் அருகே போய் ஜினயீதா வின் படுக்கையறை சன்னலை உற்று நோக்கினேன். சன்னலின் கொஞ்சம் உப்பிய சிறு கண்ணுடிகள் இரவு வானிலிருந்து வந்த லேசான வெளிச்சத்தில் மங்கிய நீலமாகத் தெரிந்தன. திடீரென்று அவற்றின் நிறம் மாறலுற்றது... அவற்றுக்குப் பின்ஞல்—நான் இதைக் கண்டேன், தெளிவாகப் பார்த்தேன்—எச்சரிக்கையுடனும் ஓசை இன்றியும் தொங்க விடப்பட்டது வெள்ளைத் திரை. அது சன்னல் குறடு வரை தொங்கி, அப்படியே அசையாமல் இருந்தது.

மறுபடி என் அறை சேர்ந்ததும், ''இது என்ன இது? கனவா, தற்செயல் நிகழ்ச்சியா, அல்லது...'' என்று அனேகமாக என்னை அறியாமல் வாய் விட்டுக் கூறினேன். என் மூளையில் திடீரென உதித்த அனுமானங்கள் புதியவையும் விந்தையானவையுமாக இருந்தபடியால் அவற்றை நம்பக்கூட நான் துணியவில்லை.

## 18

காலையில் தலைவலியுடன் எழுந்திருந்தேன். முந்திய நாள் இருந்த உள்ளக் கிளர்ச்சி மறைந்து

விட்டது. துயர் நிறைந்த விளங்காமையும் முன் ஒருபோதும் இல்லாத ஏக்கமும் அதன் இடத்தில் வந்து விட்டன—எனக்குள் எதுவோ மரித்து விட்டது போல.

''என்ன நீங்கள் பாதி மூளை அறுத்து அகற்றப் பட்டு விட்ட குழிமுயல் போல விழிக்கிறீர்கள்?'' என்று என்னைச் சந்தித்த லூஷின் என்னிடம் சொன்னான்.

காலைச் சிற்றுண்டியின் போது அப்பாவையும் அம்மாவையும் இரகசியமாக மாறி மாறிப் பார்த்தேன். அவர் வழக்கம் போல அமைதியாய் இருந்தார். அவள் வழக்கம் போல உள்ளுக்குள் எரிச்சல் பட்டுக் கொண்டிருந்தாள். சில வேளைகளில் செய்வது போல அப்பா என்னோடு நட்பார்ந்த உரையாடல் தொடங்குவார் என்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்... அவரோ, நாள்தோறும் செய்வது போன்று அசட்டையான தோரணையில் கூட என்னைக் கொஞ்சவில்லை. ''ஜினயீதாவிடம் எல்லாவற்றையும் சொல்லுவோமா? இனி எல்லாம் ஒன்றுதானே—எங்களுக்குள் எல்லாம் முடிந்து விட்டதே'' என்று நினைத்தேன். அவள் வீட்டுக்குப் போனேன். அவளிடம் ஒன்றும் சொல்லாதது மட்டும் இன்றி அவளோடு உரையாடக் கூட எனக்கு வாய்க்கவில்லை. சிற்றரசியின் மகன் பீட்டர்ஸ்பர்கிலிருந்து விடுமுறைக்கு வந்திருந்தான். அவன் இராணுவப் பள்ளி மாணவன், பன்னிரண்டு வயதுப் பையன். ஜினயீதா தன் தம்பியை அக்கணமே என் பொறுப்பில் ஒப்படைத்தாள்.

''என் அருமை வலோத்யா (இந்த ருஷ்யப் பெயரால் முதல் தடவையாக அவள் என்னை அழைத்தாள்), இதோ உங்களுக்குத் தோழன்.

இவன் பெயரும் வலோத்யா. தயை செய்து இவனிடம் அன்பு காட்டுங்கள். இவன் இன்னும் கூச்சப்படுகிருன், ஆனுல் இவனுடைய இதயம் நல்லது. இவனுக்கு நிஸ்கூச்னியைக் காட்டுங்கள். இவனேடு உலாவுங்கள், உங்கள் மேற்பார்வையில் இவனை வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் இதைச் செய்வீர்கள் அல்லவா? நீங்களும் நிரம்பப் பெருந்தன்மை உள்ளவர்!''

அவள் இரண்டு கைகளையும் அன்புடன் என் தோள்கள் மேல் வைத்தாள்—நான் ஒரேயடியாகக் குழம்பிப் போனேன். இந்தச் சிறுவனின் வரவு என்னையும் சிறுவனுக மாற்றிவிட்டது. இராணுவப் பள்ளி மாணவனை நான் மௌனமாக உற்றுப் பார்த்தேன். அவனும் பேசாமல் என் மேல் பார்வையைப் பதித்தான். ஜினயீதா கலகலவென நகைத்து எங்களை ஒருவர் மேல் ஒருவராகத் தள்ளினுள்.

''அட தழுவிக் கொள்ளுங்களேன், குழந்தைகளே!''

நாங்கள் தழுவிக் கொண்டோம்.

''உங்களைத் தோட்டத்துக்கு அழைத்துப் போகட்டுமா?'' என்று இராணுவப் பள்ளி மாணவனிடம் கேட்டேன்.

''தயை செய்யுங்கள்'' என்று இராணுவப் பள்ளிக்கு ஏற்ற கரகரத்த குரலில் பதில் அளித்தான்.

ஜினயீதா மறுபடி வாய் விட்டுச் சிரித்தாள்... அவளுடைய முகத்தில் இவ்வளவு கவர்ச்சியான வண்ணங்கள் முன் ஒருபோதும் இருந்ததில்லை என்பதைக் கவனித்தேன். இராணுவப் பள்ளி மாணவனும் நானும் புறப்பட்டோம். எங்கள் தோட்டத்தில் பழங்கால ஊஞ்சல் இருந்தது.

அவனை மெல்லிய பலகை மேல் உட்கார வைத்து ஆட்டத் தொடங்கினேன். தடித்த கம்பளித் துணியில் தைத்து அகலமான தங்கச் சரிகைப் பட்டை வைத்த சீருடையை அணிந்து அசை யாமல் உட்கார்ந்து ஊஞ்சல் கயிறுகளை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தான் அவன்.

''கழுத்துப் பட்டைப் பொத்தானைக் கழற்றி விடுங்களேன்'' என்று நான் அவனிடம் சொன் னேன்.

''பரவாயில்லை, நாங்கள் பழகி விட்டோம்'' என்று சொல்லி விட்டுத் தொண்டையைச் சரிப் படுத்திக் கொண்டான் அவன்.

அவன் தோற்றத்தில் தன் தமக்கையைப் போல இருந்தான். சிறப்பாகக் கண்கள் அவ ளுடையவற்றை நினைவுபடுத்தின. அவனுக்கு உப சாரம் செய்வது எனக்கு உவப்பாய் இருந்தது. அதே சமயம், சிறுவனுக்கு இயல்பான அதே துயரம் என் உள்ளத்தை மெதுவாக அரிக்கலா யிற்று. ''இப்போது நான் நிச்சயமாகச் சிறுவன், ஆனால் நேற்றோ...'' என்று எண்ணமிட்டேன். தலைக்குநாள் கத்தியை எங்கே நழுவ விட்டேன் என்று நினைவுபடுத்திக் கொண்டு அதைத் தேடி எடுத்தேன். இராணுவப் பள்ளி மாணவன் அதை என்னிடம் கேட்டு வாங்கி, காட்டுச் செடிக் கொம் பைச் சீவி ஊதல் செய்து ஊதத் தொடங்கினான். ஒதெல்லோவும் ஊதலைக் கொஞ்ச நேரம் ஊதி னான்.

ஆனால் மாலையில், ஜினயீதா அவனைத் தோட் டத்து மூலையில் தேடிப் பிடித்து அவன் எதனால் இப்படி ஏங்கிப்போய் இருக்கிறான் என்று கேட்ட போது, இதே ஒதெல்லோ அவளுடைய கைகளில்

எப்படி அழுதான்! என்னுடைய கண்ணீர் பீரிட்ட வேகத்தைக் கண்டு அவள் பயந்து போனாள்.

''என்ன உங்களுக்கு? வலோத்யா, உங்களுக்கு என்ன?'' என்று மறுபடி கேட்டாள். நான் பதில் சொல்லாமலும் அழுகையை நிறுத்தாமலும் இருந்ததைக் கண்டு என் நனைந்த கன்னத்தில் முத்தமிட வந்தாள்.

ஆனால் நான் அவளிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டு விம்மல்களின் ஊடே சொன்னேன்:

''எனக்கு எல்லாம் தெரியும்! எதற்காக என்னோடு விளையாடினீர்கள்?.. என்னுடைய காதல் உங்களுக்கு எதற்காக வேண்டி இருந்தது?''

''உங்களுக்கு நான் குற்றம் இழைத்து விட்டேன், வலோத்யா...'' என்றாள் ஜினயீதா. ''ஐயோ, நான் பெருங் குற்றவாளி...'' என்று கைகளைப் பிசைந்தாள். ''கெட்டது, இருண்டது, பாவம் நிறைந்தது எவ்வளவோ இருக்கிறது எனக்குள்... ஆனால் இப்போது நான் உங்களோடு விளையாடவில்லை. நான் உங்கள் மேல் அன்பு பாராட்டுகிறேன்—எதனால், எப்படி என்று உங்களால் ஊகிக்கவே முடியாது... ஆனால் உங்களுக்கு என்ன தெரியும்?''

நான் அவளுக்கு என்ன சொல்லி இருக்க முடியும்? அவள் என் முன்னே நின்று என் மேல் பார்வை செலுத்தினாள். அவள் என்னைப் பார்த்ததுமே தலைமுதல் கால்வரை நான் முழுவதும் அவளுக்கு உரியவன் ஆகி விட்டேன்... கால் மணி நேரத்துக்குப் பின் இராணுவப் பள்ளி மாணவனுடனும் ஜினயீதாவுடனும் நான் ஓடிப் பிடித்து விளையாடினேன். நான் சிரித்தேன், ஆனால் வீங்கிய இமைகள் சிரிப்பினால், கண்ணீர் சொரிந்தன. என்னுடைய

கழுத்தில் டைக்கு பதிலாக ஜினயீதாவின் ரிப்பன் கட்டப்பட்டிருந்தது. ஒரு முறை அவள் இடையைப் பிடிக்க எனக்கு வாய்த்த போது நான் மகிழ்ச்சியால் ஆரவாரித்தேன். விரும்பிய விதத்தில் எல்லாம் அவள் என்னை ஆட்டி வைத்தாள்.

## 19

எனது பயனற்ற இரவுத் தேட்டத்துக்குப் பிந்திய வாரங்களில் எனக்கு நேர்ந்தவற்றை விவரமாகச் சொல்லும்படி என்னை யாராவது கட்டாயப் படுத்திஞல் நான் பெருத்த சங்கடத்தில் மாட்டிக் கொண்டிருப்பேன். விந்தையான, சுர வேகத்தில் காரியங்கள் நடந்த நேரம் அது. ஒரு வகையான குழப்பம். முற்றிலும் எதிரெதிரான உணர்ச்சிகளும் எண்ணங்களும் சந்தேகங்களும் மகிழ்ச்சிகளும் துன்பங்களும் சூறைக் காற்ருகச் சுழன்றன. பதினுறு வயதுச் சிறுவனுல் தனக்குள் பார்வை செலுத்த முடியும் என்ருல் நான் எனக்குள் பார்வை செலுத்த அஞ்சினேன். எதற்கும் எனக்கே விளக்கம் தர அஞ்சினேன். மாலை வரையில் நாளை வாழ்ந்து கழிக்க நான் வெறுமே அவசரப் பட்டேன். ஆனுல் இரவில் உறங்கினேன்... குழந்தைக்குரிய பொறுப்பின்மை எனக்குத் துணை செய்தது. மற்றவர்கள் என் மேல் அன்பு காட்டுகிருர்களா என்று அறிய நான் விரும்பவில்லை, என் மேல் பிறர் அன்பு காட்டவில்லை என்று என்னிடமே ஒப்புக்கொள்ள எனக்கு விருப்பம் இல்லை. அப்பாவை நான் தவிர்த்து வந்தேன். ஆனுல் ஜினயீதாவைத் தவிர்க்க என்னுல் முடியவில்லை... அவள் முன்னிலையில் என் உள்ளம் நெருப்பில்

போலப் பொசுங்கியது... ஆனால் நான் எரிந்தும் உருகியும் கொண்டிருந்தது எதனாலோ, அந்த நெருப்பு எம்மாதிரியானது என்று தெரிந்து கொள்வது எனக்கு எதற்காக வேண்டி இருந்தது—உருகுவதும் எரிவதும் எனக்கு எவ்வளவோ இனிமையாக இருந்தனவே. என்னுடைய எல்லா உளப் பதிவுகளுக்கும் நான் இணங்கிப் போனேன். என்னிடமே பசப்பினேன். நினைவுகளிலிருந்து பார்வையைத் திருப்பிக் கொண்டேன். எதிர்காலத்தில் நடக்கக் கூடும் என்று எதை முன்னுணர்ந்தேனோ, அதன் முன் கண்களை மூடிக் கொண்டேன்... இந்தச் சித்திரவதை நெடுங்காலம் நீடித்திருக்க முடியாது... இடித் தாக்கு ஒரேயடியாக எல்லாவற்றுக்கும் முற்றப்புள்ளி வைத்து என்னைப் புதிய தடத்தில் செலுத்தி விட்டது.

ஒரு நாள் கணிசமாக நீண்ட உலாவுதலுக்குப் பிறகு மதியச் சாப்பாட்டு வேளையில் வீடு திரும்பிய நான், தனியாகச் சாப்பிடப் போவதாக அறிந்து வியப்புற்றேன். அப்பா வெளியே போயிருக்கிறார், அம்மாவுக்கு உடம்பு சரியாய் இல்லை, அவள் சாப்பிட விரும்பவில்லை, படுக்கையறைக்குப் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டிருக்கிறாள் என்று தெரிய வந்தது. ஏதோ வழக்கத்துக்கு மாறானது நிகழ்ந்திருக்கிறது என்று பணியாட்களின் முகத் தோற்றத்தைக் கொண்டு ஊகித்தேன்... அவர்களை விசாரிக்க எனக்குத் துணிவு வரவில்லை. ஆனால் எனக்கு ஒரு நண்பன் இருந்தான். அவன்தான் இளம் சிற்றுண்டிப் பணியாள் பிலிப். கவிதைகளில் அளவற்ற ஆர்வம் உள்ளவன். கிதார் வாத்தியம் இசைப்பதில் கலைஞன். அவனிடம் நான் கேட்டேன். அப்பாவுக்கும் அம்மாவுக்கும்இடையே பயங்கரத் தகராறு மூண்ட

தாம் (பணிப் பெண் அறையில் ஒரு சொல் விடாமல் எல்லாம் கேட்டதாம், பல விஷயங்கள் பிரெஞ்சு மொழியில் சொல்லப்பட்டனவாம், ஆனால் பாரிஸ் தையல்காரி ஒருத்தியின் வீட்டில் ஐந்து ஆண்டுகள் இருந்த பணிப் பெண் மாஷா எல்லாவற்றையும் புரிந்து கொண்டாளாம்); தனக் குத் துரோகம் செய்வதாகவும் அண்டை வீட்டு இளஞ் சீமாட்டியோடு தொடர்பு வைத்திருப்பதாக வும் அப்பாவை அம்மா கடிந்து கொண்டாளாம், தாம் தவறு செய்யவில்லை என்று அப்பா முதலில் நியாயம் கற்பித்தாராம், பிறகு கோபத்தால் சீறி ஏதோ கொடிய வார்த்தை ''எசமானியின் வயதைப் பற்றிப் போலிருக்கிறது'' சொன்னாராம். இதைக் கேட்டு அம்மா வாய் விட்டு அழுதாளாம். முதிய சிற்றரசிக்குக் கொடுக்கப்பட்டதாக ஏதோ உண்டியலைப் பற்றியும் அம்மா குறிப்பிட்டாளாம், அவளைப் பற்றியும் இளஞ் சீமாட்டியைப் பற்றி யும் நிரம்ப மோசமான கருத்து தெரிவித்தாளாம், அப்போது அப்பா அவளை அச்சுறுத்தினாராம்.

''எல்லா விபத்தும் நேர்ந்தது ஒரு அநா மதேயக் கடிதத்திலிருந்து'' என்று பேச்சைத் தொடர்ந்தான் பிலிப். ''அதை எழுதியது யார் என்பது தெரியவில்லை. இல்லாவிட்டால் இந்த விவகாரம் வெளிப்படுவதற்கு ஒரு காரணமும் இல்லை.''

''ஏதேனும் விவகாரம் இருந்ததா என்ன?'' என்று சிரமத்துடன் கேட்டேன். இதற்குள் என் கைகால்கள் குளிர்ந்து விரைத்துப் போயின, நெஞ் சின் ஆழத்தில் எதுவோ நடுங்கத் தொடங்கியது.

பிலிப் பொருளாழத்துடன் கண் சிமிட்டினான்.

''இருந்தது. இந்த விவகாரங்களை மறைக்க முடியாது. உங்கள் தகப்பனார் இந்தத் தடவை

எவ்வளவோ எச்சரிக்கையாக இருந்தார். ஆனு லும், உதாரணமாக, வண்டியை வாடகைக்கு அமர்த்த வேண்டும், அல்லது வேறு ஏதாவது செய்ய வேண்டும்... ஆட்கள் இல்லாமல் கொண்டு செலுத்த முடியாதுதானே.''

பிலிப்பைப் போகச் சொல்லி விட்டு நான் படுக்கையில் விழுந்தேன். நான் கதறி அழவில்லை, புகலின்மைக்கு ஆளாகவில்லை. எப்போது, எப்படி இதெல்லாம் நேர்ந்தது என்று என்னையே நான் கேட்டுக் கொள்ளவில்லை. முன்னுல், வெகு நாட் களுக்கு முன்பே, எப்படி இதை ஊகிக்காமல் இருந்தேன் என்று நான் ஆச்சரியப் படவில்லை. அப் பாவைக் குறை சொல்லி நான் முனகக் கூட இல்லை... நான் தெரிந்து கொண்டது என் சக்திக்கு மீறிய தாக இருந்தது. இந்தத் திடீர்க் கண்டுபிடிப்பு என்னை நசுக்கி விட்டது... எல்லாம் முடிந்து விட் டது. என்னுடைய எல்லாப் பூக்களும் ஒரேயடி யாகப் பறித்து எறியப்பட்டு என்னைச் சுற்றிலும் மிதிபட்டுக் கொண்டு கிடந்தன.

## 20

நகரத்துக்குத் திரும்புவதாக அம்மா மறு நாள் அறிவித்தாள். அப்பா காலையில் அவளுடைய படுக்கையறைக்குப் போய் நெடு நேரம் அவளோடு தனியாக உட்கார்ந்திருந்தார். அவளிடம் அவர் சொன்னது யார் காதிலும் படவில்லை. ஆனுல் அப் புறம் அம்மா அழுவதை நிறுத்தி விட்டாள், அமைதி அடைந்து சாப்பாடு கொண்டு வரும் படிக் கேட்டாள். ஆனுல் அவள் வெளியே வர வில்லை, தன் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளவும் இல்லை. எனக்கு நினைவு இருக்கிறது, நான் பகல்

முழுதும் அலேந்து திரிந்து கொண்டிருந்தேன், ஆனால் தோட்டத்துக்குப் போகவில்லை, பக்கமனையை ஒரு தரங்கூட எட்டிப் பார்க்கவில்லை. மாலையிலோ, வியப்பூட்டிய ஒரு நிகழ்ச்சியைக் கண்ணுரக் காண எனக்கு வாய்த்தது: மலேவ்ஸ்கி பிரபுவை அப்பா கையைப் பிடித்துக் கூடத்தின் வழியே முன்னறைக்கு இழுத்து வந்து, பணியாட்கள் முன்னிலையில் அவனிடம் கடுப்புடன் சொன்னார்: ''சில நாட்களுக்கு முன் ஒரு வீட்டில் மேதகையாருக்கு வெளியேறும் வாயில் சுட்டிக் காட்டப்பட்டது. இப்போது நான் உங்களுக்கு விளக்கம் கூறிக் கொண்டிருக்கப் போவதில்லை. ஆனால், இன்னொரு தடவை நீங்கள் என் வீட்டுக்கு வந்தால், சன்னல் வழியாக உங்களை வெளியே தள்ளி விடுவேன் என்று கூறி விடுகிறேன். எனக்கு உங்கள் கையெழுத்து பிடிக்கவில்லை.'' பிரபு சிரம் தாழ்த்து வணங்கி, பற்களை நெறுநெறுத்து, வளைந்து குறுகி அப்பால் போய் விட்டான்.

நகரத்தில், அர்பாத் பகுதியில் இருந்த எங்கள் வீட்டுக்குக் குடி மாறுவதற்கான ஏற்பாடுகள் தொடங்கின. நகர்ப்புற விடுதியில் மேற்கொண்டு தங்கி இருக்க அப்பாவுக்கே பிடிக்கவில்லை போலும். ஆனால் சச்சரவு தொடங்காமல் இருக்கும்படி அம்மாவை அவர் வேண்டி இணங்க வைத்து விட்டார் என்று தெரிந்தது. எல்லாம் அவசரம் இல்லாமல் அமைதியாகச் செய்யப்பட்டது. சிற்றரசிக்கு வணக்கம் சொல்லி, உடல்நிலை சரியாய் இல்லாததால் போகு முன் அவளைப் பார்க்க முடியாததற்கு வருத்தம் தெரிவிக்கும்படி அம்மா ஆளனுப்பினாள். நான் கிறுக்கன் போலச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். இதெல்லாம் விரைவில் முடிய வேண்டும் என்ற

ஒரு விருப்பந்தான் எனக்கு இருந்தது. ஓர் எண்ணம் என் மனத்தை விட்டு அகல மறுத்தது: இளமங்கை, அதோடு, என்ன இருந்தாலும் இளவரசி —என் தகப்பனுர் சுதந்திரம் அற்றவர் என்று தெரிந்தும், வேறு யாருக்கும் இல்லாவிட்டாலும் பெலவ்ஸோரவுக்காவது வாழ்க்கைப்படுவதற்கான வாய்ப்பு இருந்தும், இந்த மாதிரிச் செயல் புரிய எப்படித் துணிந்தாள்? இது எப்படி முடிந்தது அவளுக்கு? எதன் மேல் அவள் நம்பிக்கை வைத்தாள்? தன் வருங்கால வாழ்வு முழுதையும் கெடுத்துக் கொள்ள அவள் அஞ்சாதது எப்படி? ஆம், இதுதான் காதல், இதுதான் மோகம், இதுதான் சமர்ப்பணம் என்று எண்ணிக் கொண்டேன்... லூஷினுடைய சொற்கள் எனக்கு நினைவு வந்தன: ''தங்களையே பலி கொடுப்பது சிலருக்கு இனிக்கிறது.'' ஒரு தரம் பக்கமனையின் சன்னலில் வெளிறிய கறை ஒன்று எனக்குத் தென்பட்டது... ''ஜினயீதாவின் முகமா இது?'' என்று நினைத்துக் கொண்டேன்... மெய்யாக அது அவள் முகம் தான். என்னுல் தாங்க முடியவில்லை. கடைசியாக அவளிடம் விடை பெருமல் அவளை விட்டுப் பிரிய எனக்கு இயலவில்லை. தக்க தருணம் பார்த்துப் பக்கமனைக்குப் போனேன்.

விருந்தறையில் சிற்றரசி தன் வழக்கப்படி நேர்த்தியோ மரியாதையோ இன்றி என்னை வரவேற்ருள்.

''என்ன இது அப்பனே, உங்களவர்கள் இவ்வளவு சீக்கிரம் அரண்டு போய் விட்டார்கள்?'' என்று இரண்டு மூக்குத் துளைகளிலும் பொடியைத் திணித்துக் கொண்டு கூறிஞள்.

அவள் மேல் கண்ணேட்டிய எனக்கு நெஞ்சுச் சுமை இறங்கியது போல் இருந்தது. பிலிப்

சொன்ன உண்டியல் என்ற வார்த்தை என்னைத் தொல்லைப்படுத்திக் கொண்டிருந்தது. இவள் எதையும் சந்தேகிக்கவில்லை... குறைந்த பட்சம் அப்போது எனக்கு அப்படித் தோன்றியது. ஜினயீதா பக்கத்து அறையிலிருந்து வந்தாள். கறுப்பு உடை அணிந்திருந்தாள், வெளிறியிருந்தாள். அவளுடைய கூந்தல் அவிழ்ந்து தொங்கியது. அவள் பேசாமல் என் கையைப் பிடித்துத் தன்னோடு இட்டுச் சென்றாள்.

''உங்கள் குரலைக் கேட்டேன், உடனே வெளியே வந்தேன்'' என்றாள் அவள். ''எங்களைக் கைவிடுவது உங்களுக்கும் எளிதாக இருந்ததோ, கெட்ட பிள்ளையே?''

''உங்களிடம் விடை பெற்றுப் போக வந்தேன், இளவரசியாரே'' என்று பதில் அளித்தேன். ''ஒருவேளை கடைசியாக. நாங்கள் போகிறோம் என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.''

ஜினயீதா வைத்த கண் வாங்காமல் என்னை உற்றுப் பார்த்தாள்.

''ஆம், கேள்விப்பட்டேன். நீங்கள் வந்ததற்கு நன்றி. உங்களைப் பார்க்க மாட்டேன் என்று எண்ணத் தொடங்கி விட்டேன். என்னைப் பற்றி மோசமாக நினைக்காதீர்கள். சில வேளைகளில் உங்களைத் தொல்லைப்படுத்தினேன். ஆனாலும் என்னைப் பற்றி நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்களே, அந்த மாதிரிப் பெண் அல்ல நான்.''

அவள் திரும்பி, சன்னலில் சாய்ந்து கொண்டாள்.

''மெய்யாகச் சொல்லுகிறேன், நான் அப்படிப்பட்டவள் அல்ல. நீங்கள் என்னைப் பற்றிக்

கெட்ட அபிப்பிராயம் கொண்டிருப்பதை அறி வேன்.''

''நானா?''

''ஆமாம், நீங்கள்... நீங்கள்.''

''நானா?'' என்று துயரம் பொங்கத் திருப்பிச் சொன்னேன். எதிர்த்து விலக்கவோ வெளி யிடவோ முடியாத கவர்ச்சியின் பாதிப்பால் என் இதயம் துடித்தது. ''நானா? என்னை நம்புங்கள், ஜினயீதா அலெக்சாந்திரவ்னா, நீங்கள் என்ன செய் தாலும், என்னை எப்படித் துன்புறுத்தினாலும், என் வாழ்நாளின் இறுதி வரை உங்களைக் காத லித்துப் போற்றி வருவேன்.''

அவள் சட்டென்று என் பக்கம் திரும்பி, கைகளை அகல விரித்து, என் தலையை அணைத்துக் கொண்டு, அழுத்தமாகவும் ஆவேசத்துடனும் என்னை முத்தமிட்டாள். அந்த நீடித்த, பிரிவு பெறும் முத்தம் யாரைத் தேடியதோ அறியேன், ஆனால் அதன் இனிமையை நான் பேராசையுடன் சுவைத்தேன். இனி ஒருபோதும் அது திரும்பக் கிடைக்காது என நான் அறிந்திருந்தேன்.

''விடை கொடுங்கள், விடை கொடுங்கள்'' என்று மறுபடி மறுபடி சொன்னேன்...

அவள் அணைப்பிலிருந்து விடுபட்டு விரைந்து சென்று விட்டாள். நானும் போய் விட்டேன். போன போது நான் இருந்த மனநிலையை விவரிக்க என்னால் முடியாது. அது எப்போதேனும் மறுபடி ஏற்பட வேண்டும் என்று நான் விரும்ப மாட் டேன். ஆனால் அதை நான் ஒருபோதும் அனுப வித்திரா விட்டால் என்னை ஆக்கம் கெட்டவனாக மதித்திருப்பேன்.

நாங்கள் நகரத்துக்குத் திரும்பினோம். நடந்த வற்றிலிருந்து நான் விரைவில் விடுபடவில்லை,

வேலையில் விரைவில் ஈடுபடவில்லை. என் உளப் புண் மெதுவாகவே ஆறி வந்தது. ஆனால் அப்பா வுக்கு எதிராக எந்த விதமான கெட்ட உணர்வும் எனக்கு உண்மையில் ஏற்படவில்லை. மாறாக, அவர் என் மதிப்பில் முன்னிலும் உயர்ந்து விட்டார் போல் இருந்தது... இந்த முரண்பாட்டை உள வியலார் தங்களுக்குத் தெரிந்த வகையில் விளக்கிக் கொள்ளட்டும். ஒரு நாள் நான் உலாச்சாலையில் நடந்து கொண்டிருந்தவன், லூஷினைச் சந்தித்து வருணனைக்கு எட்டாத மகிழ்ச்சி அடைந்தேன். அவனுடைய வெளிப்படையான, பாசாங்கற்ற போக்குக்காக நான் அவனை நேசித்து வந்தேன். தவிரவும் அவன் எனக்குள் எழுப்பிய நினைவுகளின் காரணமாகவும் என் அன்புக்கு உரியவனாக இருந் தான். அவனிடம் பாய்ந்து சென்றேன்.

''ஆகா!'' என்றவன், நெற்றியைச் சுளித் தான். ''நீங்களா, இளைஞரே! எங்கே, உங்களைக் காட்டுங்கள். நீங்கள் இன்னும் ஒரே மஞ்சள் பாரித்துக் கிடக்கிறீர்கள், இருந்தாலும் கண் களில் முந்திய சப்புச் சவறு இல்லை. அறை நாய்க் குட்டி போல இல்லாமல் மனிதனாகத் தோற்றம் அளிக்கிறீர்கள். இது நல்லது. என்ன செய்கிறீர் கள்? வேலை செய்கிறீர்களா?''

நான் பெருமூச்செறிந்தேன். பொய் சொல்ல எனக்கு விருப்பம் இல்லை. உண்மை சொல்லவோ, வெட்கினேன்.

''அட, பரவாயில்லை'' என்று தொடர்ந்தான் லூஷின். ''கூச்சப்படாதீர்கள். முக்கியமானது முறையாக வாழ்வதும் உளக் கவர்ச்சிகளுக்கு ஆளாகாதிருப்பதுந்தான். இல்லாவிட்டால் பயன் என்ன? அலை எந்தப் பக்கம் அடித்துப் போனாலும் மோசந்தான். மனிதன் பாறை மேல் நின்றாலும்

தன் பலங் கொண்டு நிற்க வேண்டும். நான் இந்த இருமலால் அவதிப்படுகிறேன்... ஆனால் பெலவ் ஸோரவ்—கேள்விப்பட்டீர்களா?''

''என்ன அது? கேள்விப்படவில்லையே.''

''தகவல் இல்லாமல் மறைந்து போனான். காக்கேஷியா போய்விட்டான் என்று சொல்லுகிறார்கள். உங்களுக்குப் படிப்பினை இளைஞரே. சரியான தருணத்தில் விலக முடியாதது, வலையை அறுத்துவிட முடியாததுதான் எல்லாத் துன்பத்துக்கும் காரணம். உதாரணமாக நீங்கள் சேதம் இல்லாமல் வெளியேறி விட்டதாகத் தெரிகிறது. எச்சரிக்கையாய் இருங்கள், மறுபடி மாட்டிக் கொள்ளாதீர்கள். போய் வாருங்கள்.''

''மாட்டிக் கொள்ள மாட்டேன்... அவளை இனிக் காண மாட்டேன்'' என்று நினைத்துக் கொண்டேன். ஆனால் ஜினயீதாவை இன்னொரு தடவை காண எனக்கு விதித்திருந்தது.

## 21

என் தகப்பனார் நாள்தோறும் குதிரைச் சவாரி செய்து வந்தார். வெண் புள்ளிகள் இட்ட பழுப்பு நிற ஆங்கிலச் சாதிப் புரவி அவரிடம் இருந்தது. மெல்லிய நீள் கழுத்தும் நீண்ட கால்களும் உள்ள இந்தக் குதிரை களைப்பு அறியாதது, முரண்டு பிடித்தது. அதன் பெயர் எலெக்ட்ரிக். அப்பாவைத் தவிர வேறுயாரும் அதன் மேல் சவாரி செய்ய முடியவில்லை. ஒரு நாள் அப்பா பரிவுள்ள மன நிலையில் என்னிடம் வந்தார். அந்த மாதிரிப் பெருந்தன்மையை வெகு நாட்களாக அவரிடம் நான் காணவில்லை. குதிரையேறிப் போக அவர் ஆயத்தமாய் இருந்தார், அப்போதே குதி

முட்கள் அணிந்திருந்தார். என்னையும் தம்மோடு அழைத்துப் போகும்படி நான் அவரைக் கேட்டுக் கொண்டேன்.

''வா பச்சைக் குதிரை விளையாட்டு ஆடுவோம்'' என்றார் அப்பா. ''இல்லாவிட்டால் உன் ஜெர்மன் குதிரையை ஓட்டிக் கொண்டு என்னைத் தொடர உன்னால் முடியாது.''

''முடியும். நானும் குதிமுட்கள் அணிந்து கொள்கிறேன்.''

''சரி, வா.''

நாங்கள் புறப்பட்டோம். என்னிடம் கறுப்புச் சடைக் குதிரை இருந்தது. வலிய கால்களும் போதிய விரைவும் உள்ளது. எலெக்ட்ரிக் முழு வேகத்தில் போன போது என் குதிரை வலுவெல்லாம் திரட்டிப் பாய வேண்டி வந்தது உண்மையே. ஆனாலும் நான் பின் தங்கவில்லை. அப்பாவைப் போன்ற குதிரையேற்றக்காரரை நான் கண்டதில்லை. அவர் மிக அழகாக, அசட்டையான லாகவத்துடன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்த போது, குதிரையே அதை உணர்ந்தது போலவும் அவரைக் காட்டிப் பிலுக்கியது போலவும் தோன்றியது. நாங்கள் எல்லா உலாச்சாலைகளையும் கடந்து திவீச்சியெ திடலை அடைந்து, சில வேலிகளைத் தாண்டிக் குதித்து (முதலில் நான் தாவப் பயந்தேன், ஆனால் கோழைகளை அப்பா இகழ்ந்தபடியால் நானும் அஞ்சுவதை விட்டு விட்டேன்), மாஸ்கோ ஆற்றை இரண்டு தடவைகள் கடந்தோம். நாங்கள் வீடு திரும்பப் போவதாக நான் நினைக்கத் தொடங்கினேன், அதிலும் என் குதிரை களைத்துப் போனதை அப்பாவே கண்டு கொண்டதால். ஆனால் அப்பா என்னிடமிருந்து திடீரென ஒரு புறம் திரும்பிக் கிரிமியக் கடவை

என்னும் இடத்திலிருந்து கரையோரமாகக் குதி ரையை விட்டுக் கொண்டு போனுர். நான் அவ ரைப் பின்தொடர்ந்தேன். பழைய மரக் கட்டை கள் அடுக்கப்பட்டிருந்த உயரமான குவியலுக்கு நேரே வந்ததும் அவர் குதிரையிலிருந்து துடியாக இறங்கி, என்னையும் இறங்கச் சொல்லி, தன் குதி ரையின் கடிவாள வாரை என்னிடம் கொடுத்து, அங்கேயே கட்டைகளின் அருகில் தமக்காகக் காத்திருக்கும்படிக் கூறி, ஒரு சிறிய சந்தில் திரும்பி மறைந்து விட்டார். நான் குதிரைகளை நடத்திய வாறும் எலெக்ட்ரிக்கை வைது திட்டியவாறும் கரையோரமாக முன்னும் பின்னும் நடை போட் டேன். எலெக்ட்ரிக் நடந்து கொண்டே தலையை ஓயாமல் வெட்டி வெட்டி அசைப்பதும் குலுக்கு வதும், செருமுவதும் கனைப்பதுமாக இருந்தது. நான் நின்றபோது ஒன்று மாற்றி ஒன்ருகக் குளம்பு களால் தரையைத் தோண்டியது, என் ஜெர்மன் குதிரையின் கழுத்தைக் கீச்சொலியுடன் கடித் தது. சுருங்கச் சொன்னுல் சீராட்டி வளர்க்கப் பட்ட pur sang* போன்று நடந்து கொண்டது. அப்பா திரும்பவில்லை. ஆற்றிலிருந்து உவப்பற்ற ஈரக்காற்று வீசிற்று. சிறு தூறல் மெதுவாகத் தூற்றி, எனக்கு ஒரே சலிப்பு ஊட்டி விட்ட, நான் வளைய வந்து கொண்டிருந்த இடத்தின் அருகில் இருந்த, மட்டித்தனமான சாம்பல் நிறக்கட்டை கள் மேல் நுண்ணிய கரும் புள்ளிகள் இட்டது. ஏக்கம் என்னை ஆட்கொண்டது, ஆனுல் அப்பா வரவே காணும். ஒரே சாம்பல் நிறமும் சட்டி வடிவான பழைய தோல் தொப்பியும் நீள்பிடிக் கோடரியுமாகஒரு பின்லாந்திய ரோந்துப் போலீஸ்

---

* சாதிப் புரவி (பிரெஞ்சு).

காரன் (போலீஸ்காரனுக்கு மாஸ்கோ ஆற்றின் கரையில் என்ன வேலை என்று எனக்குத் தோன்றியது) என் அருகே வந்து, சுருக்கங்கள் விழுந்த தன் கிழ முகத்தை என் பக்கம் திருப்பி, ''குதிரைகளோடு இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர், சீமான் மகனே. கொடும், நான் பிடித்துக் கொள்கிறேன்'' என்ருன்.

நான் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. அவன் என்னிடம் மூக்குப் பொடி கேட்டான். அவனிடமிருந்து விடுபடுவதற்காக (தவிர, பொறுமையின்மை என்னை வதைத்துக் கொண்டிருந்தது), அப்பா போன திக்கில் சில அடிகள் நடந்து, பின்பு சந்தின் கோடி வரை சென்று, மூலையில் திரும்பியவன், நின்று விட்டேன். வீதியில், எனக்குச் சுமார் நாற்பது அடி தூரத்தில், மர வீடு ஒன்றின் திறந்த சன்னலுக்கு எதிரே எனக்கு முதுகைக் காட்டியவாறு நின்று கொண்டிருந்தார் என் தகப்பனர். அவர் சன்னல் குறட்டின் மேல் மார்பைச் சாய்த்துக் கொண்டிருந்தார். வீட்டில், திரையால் பாதி மூடப்பட்டு உட்கார்ந்திருந்த கறுப்பு உடை அணிந்த ஒரு மாது அப்பாவோடு பேசிக் கொண்டிருந்தாள். அவள் ஜினயீதா.

நான் கல்லாய்ச் சமைந்து போனேன். இதை நான் எதிர்பார்க்கவே இல்லை என்று ஒப்புக் கொள்ளுகிறேன். முதலில் நான் ஓடப் பார்த்தேன். ''அப்பா திரும்பிப் பார்த்தாராஞல் நான் தொலைந்தேன்...'' என்று நினைத்தேன். ஆனல் விந்தையான ஓர் உணர்வு, ஆவலை விட வலிய உணர்வு, பொருமையைக் காட்டிலும் கூட வலிய, அச்சத்தை விட வலிய உணர்வு என்னை நிறுத்தியது. நான் பார்வையிடத் தொடங்கினேன். உற்றுக் கேட்கக் கூடத் துணிவு கொண்டேன்.

அப்பா எதையோ வற்புறுத்தியது போலவும் ஜின யீதா இசையவில்லை போலவும் தோன்றியது. அவளுடைய முகத்தை இப்போது போலக் கண் எதிரே காண்கிறேன். ஏக்கமும் ஆழ்ந்த தோற்றமும் எழிலும் வாய்ந்த அந்த முகத்தில் ஆத்ம சமர்ப்பணமும் துயரமும் காதலும் ஒருவகை முரட்டுத் துணிச்சலும்—வேறு சொல்லைத் தெரிந் தெடுக்க என்னால் முடியவில்லை—தங்கள் அடையாளத்தைப் பதித்திருந்தன. அவள் ஓரசைச் சொற்களை உச்சரித்தாள், விழிகளை நிமிர்த்தவே இல்லை, வெறுமே புன்னகை செய்து கொண்டிருந் தாள்—பணிவும் பிடிவாதமும் தோன்ற. இந்தப் புன்னகை ஒன்றால் தான் என் முந்திய ஜினயீதாவை நான் அடையாளம் தெரிந்து கொண்டேன். அப்பா தோள்களைக் குலுக்கித் தொப்பியைச் சரிப்படுத்திக் கொண்டார். அவர் இவ்வாறு செய்தது எப்போதும் பொறுமை இன்மையைக் காட்டியது. அப்புறம் "Vous dever vous sèparer de cette..."* என்ற சொற்கள் கேட்டன. ஜின யீதா மேனியை நிமிர்த்தி, அவர் முத்தமிடுவதற் காகக் கையை நீட்டினாள்... திடீரென என் கண் முன்னே நடந்தது நம்ப முடியாத செயல்: அப்பா எதிர்பாரா விதமாகச் சாட்டையை ஓங்கி, தம் நீள் கோட்டு விளிம்பில் அடித்துப் புழுதியைப் போக்கினார். முழங்கை வரை திறந்திருந்த ஜின யீதாவின் கரத்தில் சுளீர் என்ற அடி பட்ட சத்தம் கேட்டது. நான் கத்த வாயெடுத்தவன் சிரமப் பட்டு அடக்கிக் கொண்டேன். ஜினயீதா திடுக் கிட்டு என் தகப்பனாரை மௌனமாகப் பார்த்

---

* ''நீங்கள் இதைப் பிரிய வேண்டும்...'' (பிரெஞ்சு).

தாள், பின்பு கையை மெதுவாக உதடுகளின் பக்கம் தூக்கி, அதில் கன்றத் தொடங்கி இருந்த தழும்பை முத்தமிட்டாள். அப்பா சாட்டையை ஒரு புறம் எறிந்து விட்டு, வாயிற் படிகளில் தட தடவென்று ஏறி வீட்டுக்குள் பாய்ந்தார்... ஜின யீதா திரும்பினுள், பின்பு கைகளை நீட்டி, தலை யைப் பின்னே சாய்த்தவாறு தானும் சன்னலி லிருந்து அகன்ருள்.

அச்சத்தால் மரத்துப் போய், விளங்காத பயங்கர உணர்வு நெஞ்சை அழுத்த நான் திரும்பிப் பாய்ந்தேன். சந்து முழுவதையும் ஓடிக்கடந்து, எலெக்ட்ரிக்கை அனேகமாக நழுவ விடத் தெரிந்து, ஆற்றின் கரையை அடைந்தேன். என்னுல் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை. உணர்ச்சிகளை வெளிக்காட்டாத, கட்டுப்பாடு உள்ள என் தகப்பனுருக்குச் சில வேளைகளில் கோபாவேசம் பொங்குவது உண்டு என்பதை நான் அறிந்திருந்தேன்—ஆயினும் நான் கண்டதை என்னுல் புரிந்து கொள்ளவே முடியவில்லை... ஒன்றை மட்டும் நான் அப்போதே உணர்ந்தேன்: நான் எவ்வளவு காலம் வாழ்ந்திருந்தாலும் ஜின யீதாவின் இந்த அங்க அசைவையும் பார்வையை யும் புன்னகையையும் மறப்பது என்னுல் ஒருகா லும் முடியாது; அவளுடைய உருவம், எதிர்பாரா விதமாக எனக்குக் காட்சி அளித்த இந்தப் புதிய உருவம், என் நினைவில் என்றும் அழியாதவாறு பதிந்து விட்டது. அர்த்தமின்றி ஆற்றின் மீது பார்வை செலுத்திய நான் என் விழிகளில் கண்ணீர் பெருக்கெடுத்ததைக் கவனிக்கவில்லை. அவள் அடிபடுகிருள் என்று எண்ணமிட்டேன்... அடிபடுகிருள்... அடிபடுகிருள்...

''ஊம், நீ என்ன, குதிரையை என்னிடம்

கொடு!'' என்று என் பின்னே கேட்டது அப்பாவின் குரல்.

கடிவாள வாரை இயந்திர ரீதியில் அவரிடம் கொடுத்தேன். அவர் எலெக்ட்ரிக் மேல் துள்ளி ஏறினார்... குளிர்ந்து போன குதிரை பின்கால்களில் எம்பி நின்று மூன்று மீட்டருக்கு மேல் முன்னே தாவிக் குதித்தது... ஆனால் அப்பா விரைவில் அதை அடக்கி விட்டார். அதன் விலாக்களில் குதி முட்களைப் பாய்ச்சினார், அதன் கழுத்தில் முட்டியால் குத்தினார்... ''அட, சாட்டை இல்லாமல் போயிற்றே'' என்று முணுமுணுத்தார்.

இந்தச் சாட்டை சற்று முன் சீழ்க்கையுடன் அடித்ததை நினைவு கூர்ந்து நான் திடுக்கிட்டேன்.

''நீர் அதை எங்கே போட்டீர்?'' என்று கொஞ்ச நேரத்துக்குப் பின் அப்பாவிடம் கேட்டேன்.

அப்பா எனக்குப் பதில் சொல்லாமல் குதிரையை விரட்டிச் சென்றார். நான் என் குதிரையை அவருக்கு முன்னே செலுத்த முயன்றேன். அவருடைய முகத்தைக் கட்டாயம் பார்க்க எனக்கு ஆசையாய் இருந்தது.

''நான் இல்லாமல் அலுத்துப் போனாயோ?'' என்று பற்களைக் கடித்தவாறு கேட்டார் அவர்.

''கொஞ்சம் போல. ஆனால் நீர் உமது சாட்டையை எங்கே தவற விட்டீர்?'' என்று மறுபடி கேட்டேன்.

அப்பா சட்டென்று என்னைப் பார்த்தார்.

''நான் அதைத் தவற விடவில்லை, எறிந்து விட்டேன்'' என்றார்.

அவர் சிந்தனையில் ஆழ்ந்து தலையைத் தொங்கப் போட்டார்... அவருடைய கண்டிப்பான முகக் கூறுகள் எவ்வளவு கனிவையும் பரிவையும்

வெளியிட முடியும் என்பதை முதல் தடவையும் அனேகமாகக் கடைசித் தடவையுமாக அப்போது தான் நான் கண்டேன்.

அவர் மறுபடி குதிரையைப் பாய்ச்சலில் விரட்டினர். இப்போது அவரை எட்டிப்பிடிக்க என்னல் முடியவில்லை. அவருக்குப் பதினைந்து நிமிடங்கள் பின்னரே நான் வீடு சேர்ந்தேன்.

நோட்டுப் புத்தகங்களும் பாட நூல்களும் ஏற்கெனவே காணப்படத் தொடங்கி இருந்த என் எழுது மேசை முன் இரவில் உட்கார்ந்து சிந்தித்தவாறு, ''இதுதான் காதல்!'' என்று மறுபடி எனக்குள் சொல்லிக் கொண்டேன். ''இது தான் மோகம்!.. எத்தகையதாய் இருந்தாலும் என்ன! யாவற்றிலும் இனிய கையிலிருந்து கூட அடி படும் போது கடுங் கோபம் கொள்ளாதிருப்பது முடியாது என்று தோன்றும்!.. ஆனல் காதலித்தால் இவ்வாறு செய்ய முடியும் என்று தெரிகிறது... நானே... நானே எண்ணி இருந்தேன்...''

கடைசி மாதம் என்னை மிகவும் முதிர்ச்சி அடையச் செய்து விட்டது. எதனலோ அறிவுக்கு எட்டாத, என்னல் அனேகமாக ஊகிக்க முடியாத, அரை இருட்டில் எதை நன்றுகப் பார்க்க வீணே கடு முயற்சி செய்கிறேமோ அந்தப் பழக்கமற்ற, அழ[illegible], ஆனல், குரூரமான முகத்தைப் போல என்னை அச்சுறுத்திய மற்றக் காதலுக்கு முன்னல், எத்தனையோ வகையான கிளர்ச்சிகளும் துன்பங் களும் நிறைந்த என்னுடைய காதல் எதனலோ மிகச் சிறியதாகவும் குழந்தைத் தன்மை உள்ள தாகவும் அற்பமாகவும் எனக்கே தோன்றியது...

இதே இரவில் விந்தையும் பயங்கரமுமான ஒரு கனவு கண்டேன். தாழ்வான, இருண்ட அறை யில் நான் புகுந்தது போல் எனக்குத் தோன்

றியது... அப்பா சாட்டையும் கையுமாக நின்று தொப்புத் தொப்பென்று கால்களால் இடிக்கிறார். ஜினயீதா மூலையில் ஒண்டி இருக்கிறாள். அவ ளுடைய கையில் அல்ல, நெற்றியில் சிவப்புத் தழும்பு காணப்படுகிறது... அவர்கள் இருவருக் கும் பின்னால் இரத்த விளாறுன பெலவ்ஸோரவ் எழுந்து வெளிறிய உதடுகளைத் திறந்து அப்பா வைக் கோபத்துடன் பயமுறுத்துகிறான்.

இரண்டு மாதங்கள் கழித்து நான் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தேன். ஆறு மாதங்கள் சென்ற தும் என் தகப்பனார் தாயாருடனும் என்னுடனும் அண்மையில் குடியேறியிருந்த பீட்டர்ஸ்பர்க் நகரில் (மாரடைப்பால்) இறந்தார். சாவதற்குச் சில நாட்கள் முன்னர் அவருக்கு மாஸ்கோ விலிருந்து ஒரு கடிதம் வந்தது. அது அவரை அளவு கடந்த கவலைக்கு உள்ளாக்கிற்று... அம்மாவிடம் எதையோ வேண்டிக் கொள்ளப் போனாராம், வாய்விட்டு அழக்கூடச் செய்தாராம், அவர், என் தகப்பனார்! மாரடைப்பு ஏற்பட்ட அன்று காலை யில் எனக்கு பிரெஞ்சு மொழியில் கடிதம் எழுதத் தொடங்கி இருந்தார். ''என் மகனே, பெண்ணின் காதலுக்கு அஞ்சு. இந்த இன்பத்துக்கு, இந்த நஞ்சுக்குப் பயப்படு...'' என்று எழுதி இருந் தார். அவர் காலமான பிறகு அம்மா கணிசமாகப் பெரிய பணத் தொகையை மாஸ்கோவுக்கு அனுப் பினாள்.

## 22

ஒரு நான்கு ஆண்டுகள் கழிந்தன. நான் பல் கலைக் கழகப் படிப்பை அப்போது தான் முடித்திருந் தேன். என்ன செய்யத் தொடங்குவது, எந்தக்

கதவைத் தட்டுவது என்று நான் இன்னும் நன்ருக அறியவில்லே. அப்போதைக்கு வேலே இல்லாமல் வளேய வந்து கொண்டிருந்தேன். ஒரு மாலேயில் நாடக அரங்கில் மைதானவைச் சந்தித்தேன். அவன் மணம் செய்து கொண்டு அரசாங்க வேலே யும் பார்க்கத் தொடங்கி இருந்தான். ஆனுல் அவ னிடம் எந்த மாறுதலேயும் நான் காணவில்லே. முன் போலவே தேவை இல்லாதபோது களி துள்ளி ஞன், அதே போலத் திடீரென்று உளம் சோர்ந் தான்.

''ஒன்று தெரியுமா உங்களுக்கு, திருமதி தோல்ஸ்கயா இங்கே இருக்கிருள்'' என்று என் னிடம் கூறிஞன்.

''எந்தத் திருமதி தோல்ஸ்கயா?''

''நீங்கள் மறந்து விட்டீர்களா என்ன? நாம் எல்லோரும், அட நீங்களும் கூடத்தான், காதல் கொண்டிருந்தோமே, முன்ஞள் ஜஸேகிஞ இளவரசி, அவள்தான். நிஸ்கூச்னயா பக்கத்தில், நகர்ப்புற விடுதியில், நினேவு இருக்கிறதா?''

''அவள் தோல்ஸ்கிக்கு வாழ்க்கைப் பட்டிருக் கிருளா?''

''ஆமாம்.''

''அவள் இங்கே, நாடக மன்றத்துக்கு வந் திருக்கிருளா?''

''இல்லே, பீட்டர்ஸ்பர்கில் இருக்கிருள். சில நாட்களுக்கு முன்ஞல் இங்கே வந்தாள். வெளி நாடு செல்லத் திட்டம் இட்டிருக்கிருள்.''

''அவளுடைய கணவன் எப்பேர்ப்பட்டவன்?'' என்று கேட்டேன்.

''அருமையான பையன், சொத்துக்காரன். மாஸ்கோவில் என்ஞேடு சேர்ந்து படைப்பணி ஆற்றியவன். உங்களுக்குப் புரியும்—அந்த நிகழ்ச்

சிக்குப் பிறகு... உங்களுக்கு இது எல்லாம் நன்ருகத் தெரிந்திருக்க வேண்டும் (மைதானவ் பொருள் பொதிந்த முறையில் புன்னகை செய்தான்)... தனக்கு மணமகன் தேடுவது அவளுக்கு எளிதாய் இல்லே. விளேவுகளும் இருந்தன... ஆனுல் அவள் போன்ற அறிவாளிகளுக்கு எதுவும் சாத்தியம். அவளேப் போய்ப் பாருங்கள்: உங்களேக் கண்டு அவள் மிகவும் மகிழ்வாள். அவள் முன்னே விட அழகாய் இருக்கிருள்.''

ஜினயீதாவின் முகவரியை மைதானவ் எனக்குக் கொடுத்தான். அவள் தெமூத்* ஓட்டலில் தங்கி இருந்தாள். பழைய நினேவுகள் எனக்குள் கிளர்ந்தன... எனது முன்னுள் ''காதலியை'' மறு நாளே போய்ப் பார்ப்பது என்று உறுதி செய்து கொண்டேன். ஆனுல் எவையோ வேலேகள் குறுக்கிட்டன. வாரங்கள் ஒன்று, இரண்டு என்று கழிந்து கொண்டு போயின. முடிவில் நான் தெமூத் ஓட்டல் சென்று திருமதி தோல்ஸ்கயா பற்றி விசாரித்ததில், அவள் நான்கு நாட்களுக்கு முன் பிரசவத்தின் போது அனேகமாகத் திடீரென்று இறந்து விட்டதாக அறிந்தேன்.

என் இதயத்தில் எதுவோ இடித்தது போல் இருந்தது. நான் அவளேப் பார்த்திருக்க முடியும், ஆனுல் பார்க்கவில்லே, இனி ஒருபோதும் பார்க்கப் போவதில்லே என்ற எண்ணம்—இந்தக் கசப்பான எண்ணம்—மறுக்க முடியாத கண்டனத்தின் முழு வலிமையுடனும் என் நெஞ்சைத் துளேத்தது. வாயில் காப்போனே வெறித்து நோக்கிய

* பீட்டர்ஸ்பர்கில் இருந்த இந்த ஓட்டல் அதன் முதலாவது உரிமையாளர் ப. தெமூத்தின் பெயரால் குறிக்கப்பட்டது.

வாறு ''இறந்து விட்டாள்'' என்று திருப்பிச் சொல்லி, மெதுவாக வீதிக்கு வந்து, எங்கு போகிறேன் என்று நானே அறியாமல் நடந்தேன். இளமையும் உற்சாகப் பெருக்கும் ஒளியும் சுடர்ந்த இந்த வாழ்க்கை இதில் முடிந்தது, பதற்றத்துடனும் கிளர்ச்சியுடனும் அந்த வாழ்க்கை விரைந்தது இதை நோக்கித்தான்! நான் இவ்வாறு எண்ணமிட்டேன். எனக்கு இனிய இந்த முக அமைப்புக் கூறுகள், இந்த விழிகள், இந்தக் கூந்தல் சுருள்கள், இட நெருக்கடி உள்ள பெட்டியில், ஈரித்த தரையடி இருட்டில், இன்னும் உயிரோடு இருக்கும் எனக்கு அருகே, ஒருவேளை, என் தகப்பனுருக்குச் சில அடிகள் தூரத்தில், கிடப்பதாகக் கற்பனை செய்து கொண்டேன்... நான் இதை எல்லாம் எண்ணினேன், என் கற்பனையை ஒருமுனைப்படுத்தினேன், ஆனால் என் உள்ளத்தில் ஒலித்தன இந்த வரிகள்:

''அசட்டையான வாய்கள் மூலம்
அறிந்தேன் சாவுச் சேதியை,
அசட்டையாகச் செவியேற்றேன்
அதனை நானுமே...''*

ஓ இளமையே! இளமையே! உனக்கு எதுவும் ஒரு பொருட்டில்லை, பிரபஞ்சத்தின் நிதியங்கள் அனைத்தையும் பெற்றவள் போல் இருக்கிறாய் நீ, துயரம் கூட உனக்கு வேடிக்கைப் பொழுது போக்காய் இருக்கிறது, வருத்தம் கூட உனக்கு அணி செய்

---

* ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினின் ''அன்புத் தாயகத்தின் நீல வானின் அடியிலே...'' என்ற கவிதையின் (1826) வரிகள்.

கிறது. தன்னம்பிக்கையும் துடுக்கும் உள்ளவள் நீ. ''நான் ஒருத்திதான் வாழ்கிறேன் பாருங்கள்!'' என்கிருய் நீ. உண்மையிலோ, நாட்கள் ஓடு கின்றன, சுவடு தெரியாமல், கணக்கு இல்லாமல். உன்னிடம் உள்ளவை எல்லாம் மறைந்து விடும், வெயிலில் மெழுகு போல, வெண்பனி போல... ஒருவேளை, உன்னுடைய கவர்ச்சியின் மர்மம் முழுவதும் எல்லாம் செய்ய உனக்கு உள்ள வாய்ப் பில் அல்ல, நீ எல்லாம் செய்வாய் என்று எண்ணு வதற்கான வாய்ப்பில் அடங்கி இருக்கிறது; எந்த ஆற்றல்களை வேறு எதற்கும் பயன்படுத்த உனக்குத் திறமை கிடையாதோ, அவற்றை நீ ஆழும் பாழும் ஆக்குகிருய் என்பதில் தான் அடங்கி இருக்கிறது; தான் விரயம் செய்பவன் என்று ஒவ் வொருவனும் மெய்யாக எண்ணுவதில், ''நான் மட்டும் நேரத்தை வீண் போக்கி இராவிட்டால் என்னவெல்லாம் சாதித்திருப்பேன்!'' என்று சொல்லத் தனக்கு உரிமை இருப்பதாக ஒவ்வொரு வனும் மெய்யாகவே கருதுவதில் தான் இந்த மர்மம் அடங்கி இருக்கிறது.

என்னையே எடுத்துக் கொள்ளலாம்... கண நேரம் தோற்றம் அளித்த எனது முதல் காதலின் ஆவி உருவை ஒரே பெருமூச்சுடன், ஒரே துயர உணர்ச்சியுடன், பெயருக்கு வழியனுப்பிய போது நான் எதை நம்பி இருந்தேன், எதை எதிர்பார்த் தேன், எத்தகைய வளமுள்ள வருங்கால வாழ்க் கையை முன் கண்டேன்?

நான் நம்பி இருந்தவை எல்லாவற்றிலும் எது மெய் ஆயிற்று? இப்போதும் கூட, எனது வாழ்க் கையின் மீது மாலை நிழல்கள் படியத்தொடங்கி இருக்கையில், விரைவாகக் கழிந்து விட்ட அந்த வசந்தகாலக் காலை இடிமின் புயலின் நினைவுகளைக்

காட்டிலும் அதிகப் புதுமைப் பொலிவுள்ள, அதிக மதிப்புள்ள எது என்னிடம் எஞ்சி இருக்கிறது?

ஆனால் நான் வீணாக என்னையே பழி தூற்று கிறேன். அப்போதும், பொறுப்பற்ற அந்த இளம் பருவத்தில் கூட, என்னை அழைத்த துயரக் குர லுக்கு, கல்லறைக்குப் பின்னே இருந்து என்னை எட்டிய ஆழ்ந்த ஒலிக்கு, நான் செவி சாய்க்காமல் இருக்கவில்லை. எனக்கு நினைவு இருக்கிறது, ஜின யீதாவின் சாவு பற்றி நான் அறிந்ததற்குச் சில நாட்கள் கழித்து, எங்களோடு ஒரே வீட்டில் வசித்து வந்த ஏழைக் கிழவி ஒருத்தியின் சாவு நேரத்தில் தவிர்க்க முடியாத சொந்த ஆர்வத் தால் தூண்டப்பட்டு நான் உடன் இருந்தேன். கந்தல்களால் போர்த்தப்பட்டு, கரடு முரடான பலகைகள் மேல் மூட்டையைத் தலைக்கடியில் வைத்தவாறு படுத்து, மிகுந்த சிரமத்துடனும் கஷ்டத்துடனும் உயிரை விட்டாள் அவள். அவ ளுடைய வாழ்க்கை முழுவதும் அன்றாட வறுமை யுடன் கொடிய போராட்டத்தில் கழிந்தது அவள் மகிழ்ச்சியைக் காணவில்லை, இன்பத் தேனைச் சுவைக்கவில்லை. சாவினால், தன் விடுதலையால், தன் அமைதியால் அவள் பெரு மகிழ்ச்சி அடை யாதிருக்க முடியாது என்று தோன்றியது. உண் மையிலோ, அவளுடைய அற்றலைந்த உடல் விடாப்பிடியாகப் போராடிக் கொண்டிருந்த வரை, அவளுடைய மார்பு தன் மேல் கிடந்த சில் லிட்ட கைக்கு அடியில் எழுந்து தணிந்து கொண் டிருந்த வரை, கடைசி ஆற்றல் அவளைக் கைவி டாத வரை, கிழவி ஓயாமல் சிலுவைக் குறி இட்ட வாறு, ''ஆண்டவனே, என் பாவங்களைப் போக்கு'' என்று இடைவிடாது கிசுகிசுத்துக் கொண்டிருந் தாள். கடைசி உணர்வுப் பொறி அணைந்ததுந்

தான் முடிவு பற்றிய அச்சத்தையும் கோர உணர்வையும் காட்டிய தோற்றம் அவள் விழிகளிலிருந்து மறைந்தது. எனக்கு நினைவு இருக்கிறது, இங்கே, இந்த ஏழைக் கிழவியின் மரணப் படுக்கையின் அருகே, ஜினயீதாவுக்காக நான் பேரச்சம் கொண்டேன். அவளுக்காகவும், அப்பாவுக்காகவும் எனக்காகவும் பிரார்த்தனை செய்ய எனக்கு விருப்பம் உண்டாயிற்று.

*1860*

*மகிழ் நிறைந்த ஆண்டுகளும் இன்ப நாட்களும் வசந்தகால வெள்ளம் போல் பாய்ந்து மறைந்தன!**

பழம் பாடலிலிருந்து. ... இரவு ஒரு மணிக்கு மேல் அவன் தன் அலுவல் அறைக்குத் திரும்பினுன். மெழுகு வத்தி விளக்கு ஏற்றி வைத்த பணியாளைப் போகச் சொல்லி விட்டு, கணப்பருகே இருந்த சாய்வு நாற்காலியில் விழுந்து இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டான்.

உடலிலும் உள்ளத்திலும் இத்தகைய களைப்பை முன் ஒருபோதும் அவன் உணர்ந்ததில்லை. இனிய மாதர்களுடனும் படித்த ஆடவர்களுடனும் மாலை முழுவதையும் அவன் கழித்திருந்தான். மாதர்களில் சிலர் அழகாய் இருந்தார்கள். அனேகமாக எல்லா ஆடவர்களும் அறிவிலும் திறமைகளிலும் சிறந்து விளங்கிஞர்கள். அவனே நிரம்பச் சமத்காரமாகவும் சுடர்விடும் அறிவுடனும் கூட உரையாடினுன்... இவ்வளவு எல்லாம் இருந்தும்,

---

* ''வேஸ்த்னிக் யெவ்ரோப்பி'' (ஐரோப்பிய தூதன்) சஞ்சிகையின் 1872ம் ஆண்டு முதல் இதழில் இந்தக் குறுநாவல் முதன் முதலில் வெளியாயிற்று. திருத்தக் கையெழுத்துப் பிரதியும் அச்சகப் பிரதியும் பாரிஸில் உள்ள துர்கேனிவ் சுவடிக் கூடத்தில் இருக்கின்றன.

பண்டைய ரோமானியர்கள் குறிப்பிட்டு வந்த "taedium vitae" ''வாழ்க்கை மீது அருவருப்பு'' இத்தகைய தடுக்க முடியாத ஆற்றலுடன் முன் ஒருபோதும் அவனை ஆட்கொண்டதில்லை, திணற வைத்ததில்லை. அவன் இன்னும் கொஞ்சம் இளையவனாய் இருந்தால் ஏக்கத்தாலும் சலிப் பாலும் எரிச்சலாலும் வாய்விட்டு அழுதிருப்பான். காஞ்சிரையின் கைப்பு போன்று உறுத்துவதும் காந்துவதுமான கைப்பு அவனுடைய உள்ளம் முழுவதையும் நிறைத்தது. தப்பி விலக முடியாத தும் தன்மீது அருவருப்பு உண்டாக்குவதும் வெறுக்கத் தக்கதும் துன்புறுத்துவதுமான ஒன்று இலையுதிர் காலத்து இருண்ட இரவு போல எல் லாப் புறங்களிலுமிருந்து அவன்மேல் கவிந்தது. இந்த இருளிலிருந்து, இந்தக் கைப்பிலிருந்து, எப்படி விடுபடுவது என்று அவனுக்குத் தெரிய வில்லை. தூக்கத்தை நம்பிப் பயன் இல்லை. தன் ஞல் தூங்க முடியாது என்பதை அவன் அறிந் திருந்தான்.

அவன் எண்ணமிடத் தொடங்கினுன்... மெது வாகவும் சோர்வுடனும் எரிச்சலுடனும்.

மனித குலத்தின் எல்லாச் செயல்களிலும் இருந்த பரபரப்பையும் தேவை இன்மையையும் கடைகெட்ட பொய்மையையும் பற்றி அவன் சிந் தனை செய்தான். எல்லாப் பிராயங்களும் ஒன்றன் பின் ஒன்ருக அவனுடைய மனக்கண்ணுக்கு முன்னே உலா வந்தன (அண்மையில் அவனுக்கு 52 வயது நிறைந்திருந்தது). ஒரு பிராயம் கூட அவனுடைய இரக்கத்துக்கு உள்ளாகவில்லை. எங் கும் ஒரே மாதிரி இடையருத வெட்டிப் பேச்சுக் களும் வீண் செயல்களும் கால விரயமும், பாதி அறியாமையாலும் பாதி நெஞ்சாரவும் தங்களைத்

தாங்களே ஏமாற்றிக் கொள்வதும்—குழந்தை எதைக் கொண்டு பொழுது போக்கினாலும் சரி, அழாமல் மட்டும் இருந்தால் போதும் என்ற மனப் போக்கும். இருந்தாற் போலிருந்து தலையில் வெண்பனி பெய்தது போன்று முதுமை திடு மென்று வந்து விடும். இடையறாது வளர்வதும் ஓயாமல் அரிப்பதும் கூராவதுமான மரண பயம் அதோடு சேர்ந்து கொள்ளும்.... அப்புறம் தடா லென்று அகாதத்தில் வீழ்ச்சி! வாழ்க்கை இந்த மாதிரி நடந்து முடிந்தால் கூட எவ்வளவோ நல் லது! இல்லா விட்டால், இரும்பில் துரு பிடிப்பது போல முடிவுக்கு முன்பு பலவீனங்களும் துன்பங் களும் சூழலாம்... வாழ்க்கைக் கடல் கவிஞர்கள் வருணிப்பது போலக் கொந்தளிக்கும் அலைகள் மோதுவதாக அவனுக்குக் காட்சி தரவில்லை. இல்லை. கலக்க முடியாதபடி மழமழப்பும் அசை வின்மையும் இருண்ட அடித்தளம் வரையில் தெளி வும் உள்ளதாக இந்தக் கடலை அவன் கற்பனை செய்து கொண்டான். ஒருச்சாய்ந்த சிறு படகில் அவன் உட்கார்ந்திருக்கிறான். இருண்டு வண்டல் படிந்த இந்த அடித்தளத்தில், பிரமாண்டமான மீன்களை நிகர்த்த அவலட்சணம் பிடித்த விகிருதிகள் மங்கலாகத் தோற்றம் அளிக்கின்றன: எல்லா வகையான அன்றாடச் சுகக் கேடு களும் நோய்களும் துயரங்களும் அறிவீனமும் வறுமையும் குருட்டுத்தனமும் இத்தகைய பிற வும்... அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான்: இதோ விகிருதிகளில் ஒன்று இருட்டிலிருந்து தனிப் பிரிந்து வர வர உயரே எழுகிறது, மேலும் மேலும் துலக்கமாக, மேலும் மேலும் அருவருப் பூட்டும் வகையில் துலக்கமாக, பார்வைக்குத் தெரிகிறது... இன்னும் ஒரு நிமிடத்தில் அதன்

முதுகால் இடிபட்டுப் படகு கவிழ்ந்து விடும்! ஆனால் அது மறுபடி மங்கத் தொடங்குவது போலிருக்கிறது. விலகிச் சென்று அடித் தளத்தில் ஆழ்ந்து நீரைச் சற்றே அசைத்தவாறு அங்கே கிடக்கிறது... ஆனால் குறித்த நாள் வந்ததும் அது படகைக் கவிழ்த்து விடும்.

அவன் தலையைக் குலுக்கி, நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்து அறையில் இரண்டொரு தரம் நடமாடி விட்டு, எழுது மேசை அருகே உட்கார்ந்து, இழுப்பறைகளை ஒவ்வொன்றாக இழுத்து, தன் காகிதங்களில், பெரும்பாலும் பெண்கள் எழுதிய பழைய கடிதங்களில், துருவிப் பார்க்கலானான். தான் இவ்வாறு செய்தது எதற்காக என்பது அவனுக்கே தெரியவில்லை. அவன் குறிப்பாக எதையும் தேடவில்லை—தன்னைச் சோர்வு அடையச் செய்த எண்ணங்களிலிருந்து ஏதேனும் வெளி வேலையின் துணையால் விடுபடவே அவன் விரும்பினான். ஊகமாகச் சில கடிதங்களைப் பிரித்துப் பார்த்தவன் (அவற்றில் ஒன்றில் சாயம் போன ரிப்பனில் சுற்றிய வாடிய மலர் ஒன்று இருந்தது), வெறுமே தோள்களைக் குலுக்கி, கணப்பு மீது பார்வை செலுத்தியவாறு அவற்றை ஒரு புறம் போட்டான்—இந்த வேண்டாத கூளத்தை எல்லாம் நெருப்பிலிட்டுப் பொசுக்குவதற்கு ஆயத்தம் செய்தான் போலும். ஒன்று மாற்றி ஒன்றாக வெவ்வேறு இழுப்பறைகளில் அவசரமாகக் கைவிட்டவன், திடீரென்று விழிகளை அகல விரித்து, பழைய மோஸ்தரில் அமைந்த எண்கோண வடிவான சிறு பெட்டியை மெதுவாக வெளியில் எடுத்து, அதன் மூடியைப் பதபாகமாகச் சிறிது திறந்தான். பெட்டியில் மஞ்சள் பாரித்த காகிதத்

தின் இரட்டை அடுக்கின் கீழ் சின்னஞ்சிறு செம் மணிச் சிலுவை ஒன்று இருந்தது.

இந்தச் சிலுவையைச் சில விஞடிகள் விளங் காமையுடன் பார்த்துக் கொண்டிருந்த அவன் திடீரெனப் பலவீனமாகக் கத்தினன்... வருத்தமா மகிழ்ச்சியா என்று தெரியாத ஓர் உணர்ச்சியை அவனுடைய முகக் கூறுகள் காட்டின. ஒரு காலத் தில் தனது கனிந்த அன்புக்குப் பாத்திரமாய் இருந்து, வெகு காலமாகக் கண்ணில் படாதிருந்த மனிதனை எதிர்பாராமல் சந்திக்க நேரும் போது, அவன் முற்றிலும் அதே மனிதனுகவும் காலப் போக்கில் ஒரேயடியாக மாறியும் திடீரென்று எதிர்ப்படும் போது, ஒருவனுடைய முகத்தில் இம்மாதிரித் தோற்றம் காணப்படுவதுண்டு.

அவன் எழுந்து, மீண்டும் கணப்பின் அருகே போய், மறுபடி சாய்வு நாற்காலியில் அமர்ந்து, முன்போலவே முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டான்... ''ஏன் இன்றைக்கு? குறிப்பாக இன்றைக்கு?'' என்ற எண்ணம் அவனுக்குள் எழுந் தது. வெகு காலத்துக்கு முன் நடந்த பற்பல நிகழ்ச்சிகளை அவன் நினைவு கூர்ந்தான்.

அவன் நினைவு கூர்ந்தவை இவை...

ஆனல் முதலில் அவனுடைய பெயரையும் தந்தை பெயரையும் குலப் பெயரையும் சொல்லி விட வேண்டும். அவன் பெயர் திமீத்ரி பாவ்லவிச் ஸானின்.

இவையே அவன் நினைவு கூர்ந்தவை.

## 1

இது நடந்தது 1840ம் ஆண்டுக் கோடையில். ஸானினுக்கு இருபத்திரண்டு வயது நிறைந்து

விட்டது. இத்தாலியிலிருந்து ருஷ்யா திரும்பும் வழியில், பிராங்க்பர்ட் நகரில் அவன் இருந்தான். அவனுக்குச் சொத்து கொஞ்சந்தான் இருந்தது, ஆனல் அவன் சார்பற்றவன், அனேகமாகக் குடும்பம் இல்லாதவன். தூர உறவினர் ஒருவரின் மரணத்தினல் அவனுக்குச் சில ஆயிரம் ரூபிள்கள் கிடைத்தன. அரசாங்க அலுவலில் புகுவதற்கு முன்பு, எது இல்லாமல் வசதியான வாழ்க்கை அவனுக்கு அசாத்தியமாகத் தோன்றியதோ அந்த அரசாங்க நுகத்தில் கழுத்தைக் கொடுப்பதற்கு முன்னல், இந்தப் பணத்தை அயல் நாடுகளில் வாழ்ந்து செலவிடுவது என்று அவன் முடிவு செய்தான். தனது நோக்கத்தை ஸானின் துல்லியமாக நிறைவேற்றினன், மிகத் திறமையாகச் செயலாற்றினன். விளைவாக, பிராங்க்பர்ட் வந்த அன்று, பீட்டர்ஸ்பர்க் போய்ச் சேர்வதற்குத் தேவையான பணத்தொகை மட்டுமே அவனிடம் சரியாக எஞ்சி இருந்தது. 1840ம் ஆண்டில் இருப்புப் பாதைகள் மிகக் குறைவாகவே இருந்தன. சுற்றுலாப் பயணித் திருவாளர்கள், அஞ்சல்-பயணிக் குதிரை வண்டிகளில் பயணம் செய்து வந்தார்கள். ''பெய்வாகன்'' எனப்பட்ட இத்தகைய தொடர் வண்டியில் ஸானின் இடம் பதிவு செய்து கொண்டான். ஆனல் வண்டி இரவு பத்து மணிக்கு மேல் தான் புறப்படும் என்று தெரிந்தது. நேரம் நிறைய இருந்தது. நல்ல வேளையாகப் பருவ நிலை அருமையாக இருந்ததால், அந்தக் காலத்தில் பிரபலமாய் விளங்கிய ''வெள்ளை அரச அன்னம்'' என்னும் விடுதியில் மதிய உணவு அருந்திய பின் ஸானின் நகரில் சுற்றித் திரியக் கிளம்பினன். தான்

னிகெரின் அரியாத்னுவைப்* பார்க்கப் போனான். அது அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. கியோத்தேயின் படைப்புக்களில் ''வெர்த்தேர்'' என்ற ஒரு நூலை, அதுவும் பிரெஞ்சு மொழி பெயர்ப்பில்தான், அவன் படித்திருந்தான், ஆனாலும் அவருடைய வீட்டைப்** போய்ப் பார்த்தான். மைன் ஆற்றின் கரையில் உலாவினான். பாங்குள்ள சுற்றுலாப் பயணிக்கு உரியமுறையில் சற்று சலிப்பு அடைந்தான். முடிவில், மாலை ஆறு மணிக்கு, களைத்துப் போய், புழுதி படிந்த கால் களுடன், பிராங்க்பர்ட் நகரின் அறவே முக்கிய மற்ற வீதிகளில் ஒன்றை அடைந்தான். இந்த வீதியைப் பின்னர் நெடுங்காலம் அவனால் மறக்க முடியவில்லை. வீதியில் இருந்த சில வீடுகளில் ஒன் றின் மேல் ஒரு பெயர்ப் பலகையைக் கண்டான்: ''ஜியோவான்னி ரொஸேல்லியின் மிட்டாய்க் கடை'' வழிப்போக்கர்களுக்குத் தன்னை அறி வித்துக் கொண்டிருந்தது. ஒரு குவளை லெமனேடு சாப்பிடலாம் என்று ஸானின் அதற்குள் போனான். முதல் அறையில், எளிய கல்லாவுக்குப் பின், வண் ணம் பூசிய அலமாரியின் தட்டுக்களில், தங்க நிறப் பெயர்ச் சீட்டுகள் ஒட்டிய சில புட்டிகளும் ரஸ்க் குகள், சாக்கலேட் துண்டுகள், கற்கண்டு ஆகிய வை நிறைத்த கண்ணாடிச் சாடிகளும் மருந்துக்

---

* பெரிய ஜெர்மன் சிற்பி தான்னிகெர் (1758—1841) வடித்த ''சிறுத்தை மேல் அரியாத்னு'' என்னும் சிற்பம் மைன் ஆற்றின் கரையில் உள்ள பிராங்க்பர்ட் நகரின் ஒரு காட்சிச்சாலையில் வைக்கப்பட்டிருந்தது.

** ஜெர்மானியப் பெருங் கவிஞர் யோகான் வோல்ப்காங்க் கியோத்தே (1749—1832) பிறந்த வீடு பிராங்க்பர்ட் நகரில் இருக்கிறது.

கடையை நினைவுபடுத்தியவாறு வைத்திருந் தன. ஆனால் அந்த அறையில் ஒருவரும் இல்லை. ஒரு சாம்பல் நிறப் பூனை மட்டுந்தான் சன்னல் ஓரமாக இருந்த உயரமான பிரம்பு நாற்காலியில் கால்களை மடக்கி உட்கார்ந்து கண்களை இடுக்கிய வாறு கர்ரிட்டுக் கொண்டிருந்தது.பெரிய சிவப்புக் கம்பளி நூல் பந்து ஒன்று மாலைக் கதிரவனின் சாய்ந்த கிரணங்களில் பளிச்சென்று தகதகத்த வாறு, செதுக்கு வேலை செய்த கவிழ்ந்த மரக் கூடை ஒன்றின் அருகே உருண்டு கிடந்தது. பக் கத்து அறையில் தெளிவற்ற இரைச்சல் கேட்டது. ஸானின் சிறிது நின்றான். பின்பு வாயில் மணியை இழுத்து முடிவுவரை ஒலிக்க விட்டு விட்டு, குரலை உயர்த்தி, ''இங்கே யாரும் இல்லையா?'' என்று கேட்டான். அதே கணத்தில் பக்கத்து அறைக் கதவு திறந்தது. ஸானின் தன் வசமின்றியே வியப் படைய நேர்ந்தது.

2

மிட்டாய்க் கடைக்குள் பாய்ந்து வந்தாள் பத் தொன்பது வயது மதிக்கத் தக்க ஒரு மங்கை. அவளுடைய திறந்த தோள்கள் மேல் சிதறிக் கிடந்தன கரிய கூந்தல் சுருள்கள். திறந்த கரங் களை முன்னே நீட்டியவாறு ஓடி வந்த அவள் ஸானி னைக் கண்டதும் அவனிடம் தாவி, அவனுடைய கையைப் பற்றித் தன்னோடு இழுத்தவாறு, ''சீக் கிரம், சீக்கிரம், இங்கே வாருங்கள், காப்பாற்றுங் கள்!'' என்று மூச்சு திணறக் கூறினாள். கீழ்ப்படிய விருப்பம் இல்லாமையால் அல்ல, அளவு கடந்த திகைப்பு காரணமாகத்தான் ஸானின் அந்தப் பெண்ணின் பின் உடனே போகவில்லை, நின்ற

இடத்திலேயே அசையாமல் நின்றான்: அவள் போன்ற அழகியை அவன் வாழ்நாளில் கண்டதில்லை. அவள் அவன் பக்கம் திரும்பி, குரலிலும் பார்வையிலும் வெளிறிய கன்னத்தில் பதற்றத் துடன் வைத்த முட்டி பிடித்த கையின் அசைவிலும் புகலின்மை ததும்ப, ''அட வாருங்களேன், வாருங்கள்!'' என்று மொழிந்தாள். அவன் அவள் பின் அக்கணமே பாய்ந்து திறந்த வாயிலுக்குள் புகுந்தான்.

மங்கையின் பின்னால் அவன் ஓடிப் புகுந்த அறையில், குதிரை மயிர் மெத்தை தைத்த பழைய மோஸ்தர் சோபாவில் கிடந்தான் ஒரே வெண்மையான—மெழுகு அல்லது பண்டைக் காலச் சலவைக்கல் போன்று மஞ்சள் சாயல்கள் கொண்ட வெண்மையான—பதினான்கு வயதுப் பையன். வியப்பூட்டும்படி மங்கையை ஒத்திருந்த அவன் அவளுடைய தம்பி என்பது கண்கூடாய் இருந்தது. அவனுடைய விழிகள் மூடி இருந்தன. அடர்ந்த கரு முடியின் நிழல் கல்லாகி விட்டது போன்ற நெற்றி மீதும் அசைவற்ற மெல்லிய புருவங்கள் மீதும் புள்ளிகளாகப் படிந்திருந்தது. நீலம் பாரித்த உதடுகளுக்கு அடியில் கிட்டித்துப் போன பற்கள் தெரிந்தன. அவன் மூச்சு விடவில்லை போலக் காணப்பட்டது. அவனுடைய ஒரு கை தரையில் தொங்கியது. மறு கை தலைக்குப் பின்னே கிடந்தது. பையன் உடுப்பு அணிந்து பொத்தான்கள் போட்டுக் கொண்டிருந்தான். இறுக்கமான டை அவன் கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தது.

கன்னி அலறலுடன் அவன் பக்கம் பாய்ந்தாள்.

''இவன் இறந்து விட்டான், இறந்து விட்டான்!'' என்று கதறினாள். ''இப்போதுதான்

இங்கே உட்கார்ந்து என்னேடு பேசிக் கொண் டிருந்தான். திடீரென்று விழுந்து கட்டையாக விரைத்துப் போனுன்... அட கடவுளே! உதவ முடியாதா என்ன? அம்மாவும் இல்லே! பந்தலி யோனே, பந்தலியோனே, டாக்டர் எங்கே?'' என்று திடீரென இத்தாலிய மொழியில் கேட் டாள். ''நீ டாக்டரிடம் போனுயா?''

''ஸிஞ்ஞோரா, நான் போகவில்லே, லுயி ஸாவை அனுப்பினேன்'' என்று கதவின் மறுபுற மிருந்து ஒலித்தது கம்மிய குரல். பின்பு கவட்டுக் கால்களால் கிந்தி நடந்து அறைக்குள் வந்தான் சிறு கூடான கிழவன் ஒருவன். கறுப்புப் பொத் தான்கள் தைத்த ஊதா நிற பிராக் கோட்டும் உயரக் கட்டிய வெள்ளே டையும் தடித்த பருத்தித் துணிக் குட்டைச் சராயும் நீலக் கம்பளிக் காலுறைகளும் அணிந்திருந்தான் அவன். இரும்பு நிறமான அடர்ந்த நரைமுடிக்கு அடியில் அவ னுடைய சின்ன முகம் ஒரேயடியாக மறைந்திருந் தது. எல்லாப் புறங்களிலும் குத்திட்டு நிற்பதும் அலங்கோலமான கற்றைகளாக மீண்டும் விழுவது மாக இந்த முடி கிழவனது உருவத்துக்குக் கொண் டைக் கோழியின் தோற்றத்தை அளித்தது, அதன் கருஞ்சாம்பல் திரளுக்கு அடியில் கூரிய மூக்கை யும் வட்டமான மஞ்சள் விழிகளேயும் மட்டுமே தெளிவாகக் காண முடிந்ததால் இந்த ஒப்புமை இன்னும் வியப்பூட்டுவதாக இருந்தது.

''லுயிஸா வேகமாய் ஓடுகிருள். என்னுல் ஓட முடியாது'' என்று கீல்வாதம் பிடித்த தட்டைக் கால்களே ஒன்று மாற்றி ஒன்ருகத் தூக்கி இத்தாலிய மொழியில் பேச்சைத் தொடர்ந்தான் முதிய வன். குஞ்சங்கள் வைத்த உயரமான பூட்சுகள்

கால்களுக்கு அணி செய்தன. ''இதோ, தண்ணீர் கொண்டுவந்திருக்கிறேன்'' என்ருன்.

வறண்டு கரடு தட்டிய விரல்களால் புட்டியின் நீண்ட கழுத்தை இறுகப் பிடித்துக் கொண்டிருந் தான் அவன்.

''ஆனல் அதற்குள் எமீலியோ இறந்து போவான்!'' என்று கூவி ஸானின் பக்கம் கைகளை நீட்டினுள் மங்கை. ''ஓ என் திருவாளரே, o mein Herr! உங்களால் உதவி செய்ய முடியாதா?''

''இவனுக்கு இரத்தம் வடிக்க வேண்டும். இது மாரடைப்பு'' என்ருன் பந்தலியோனே என்ற பெயர் சூடிய முதியவன்.

ஸானினுக்கு மருத்துவத்தைப் பற்றி ஒன்றுமே தெரியா விட்டாலும் ஒரு விஷயத்தை அவன் திண்ணமாக அறிந்திருந்தான். பதினுன்கு வயதுச் சிறுவனுக்கு மாரடைப்பு வராது என்பது அந்த விஷயம்.

''இது மயக்கம், மாரடைப்பு அல்ல'' என்று பந்தலியோனேயைப் பார்த்துக் கூறி, ''உங்க ளிடம் பிரஷ்கள் இருக்கின்றனவா?'' என்று கேட் டான்.

முதியவன் தன் சிறு முகத்தை நிமிர்த்தினுன். ''என்ன?''

''பிரஷ்கள், பிரஷ்கள்'' என்று ஜெர்மனிலும் பிரெஞ்சிலும் திருப்பிச் சொன்ஞன் ஸானின். தன் உடையைத் துப்புரவு செய்வது போலச் சாடை காட்டி, ''பிரஷ்கள்'' என்று மீண்டும் கூறிஞன்.

''கிழவன் முடிவில் அவனைப் புரிந்து கொண் டான்.

''ஆ, பிரஷ்களா! Spazzette! பிரஷ்கள் இல் லாமல் என்ன?''

''கொண்டு வாருங்கள்! இவனுடைய கோட்டைக் கழற்றி விட்டு இவன் உடம்பைத் தேய்ப்போம்.''

''நல்லது... Benone! இவன் தலையில் தண்ணீரை விட வேண்டாமா?''

''வேண்டாம்... அப்புறம். இப்போது போய், சட்டென்று பிரஷ்களை எடுத்து வாருங்கள்.''

பந்தலியோனே புட்டியைத் தரையில் வைத்து விட்டு வெளியே ஓடி தலை வாருவதற்கும் உடை சுத்தப்படுத்துவதற்குமான இரண்டு பிரஷ்களோடு உடனே திரும்பி வந்தான். அவனுடன் ஓடி வந்த சுருட்டைச் சடைநாய் வாலை மும்முரமாக ஆட்டியவாறு, ''இந்தக் கலவரத்துக்கு எல்லாம் என்ன அர்த்தம்?'' என்று கேட்பது போல முதியவளையும் மங்கையையும் ஸானினையுங்கூட ஆவலுடன் ஏறிட்டுப் பார்த்தது.

சோபாவில் கிடந்த பையனின் கோட்டை ஸானின் மளமளவென்று களைந்து, அவனுடைய சட்டைக் கழுத்துப் பட்டையைத் திறந்து கைகளை மடக்கி விட்டு, பிரஷும் கையுமாக அவனுடைய மார்பையும் கைகளையும் முழு பலத்துடன் தேய்க்கத் தொடங்கினான். பந்தலியோனே தலை வாருவதற்கான மறு பிரஷால் பையனுடைய பூட்சுகள் மேலும் சராய் மேலும் அவ்வாறே முனைந்து தேய்த்தான். பெண் சோபாவின் அருகில் முழந்தாள் படியிட்டு அமர்ந்து இரு கைகளாலும் தலையைப் பற்றியவாறு தம்பியின் முகத்தையே கண் கொட்டாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஸானின் தேய்த்தவாறே கடைக்கண்ணால் அவள் மேல் பார்வை செலுத்தினான். அட கடவுளே! எப்பேர்ப்பட்ட அழகி அவள்!

3

அவளுடைய மூக்கு கொஞ்சம் பெரியது, ஆனால் அழகானது, கழுகினது போன்றது. மேல் உதட்டில் தூவியின் கருமை சிறிது படிந்திருந்தது, ஆனால் முகத்தின் வண்ணம் ஒரு சீரான வெண் பழுப்பாக யானைத் தந்தம் அல்லது அம்பர் மணியை அப்படியே நிகர்த்திருந்தது. அலைபடிந்த கூந்தலின் ஒளிர்வு பிட்டி மாளிகையில் உள்ள அல்லோரியின் ஜூடித்தினது* போன்று இருந்தது. எல்லாவற்றிலும் சிறப்பானவை விழிகள். கருஞ் சாம்பல் நிறமானவை, கண் மணிகளைச் சுற்றிக் கரு விளிம்புகள் கொண்டவை. மாட்சியுள்ள, வெற்றி கொண்டாடுகிற விழிகள்—பயமும் துயரமும் அவற்றின் ஒளிர்வை மங்கச் செய்துவிட்ட இந்த நேரத்தில் கூட... தான் திரும்பி வந்த அற்புத நாடு ஸானினுக்கு அவனையும் அறியாமல் நினைவு வந்தது... ஆனால் இத்தாலியில் கூட இதற்கு ஒப்பானது எதையும் அவன் காண வில்லை! மங்கை நீண்ட இடைவெளிகளுடனும் சீரின்றியும் மூச்சு விட்டாள். தம்பி மூச்சுவிடத் தொடங்குவானா என்று ஒவ்வொரு தரமும் அவள் எதிர்பார்ப்பது போல் இருந்தது.

ஸானின் பையனுடைய உடம்பைத் தொடர்ந்து தேய்த்துக் கொண்டு போனான்.

---

* ''ஜூடித்'' என்பது பிரபல இத்தாலிய ஓவியர் கிறிஸ்தபானோ அல்லோரி (1577—1621) தீட்டிய ஓவியம், பிளாரென்ஸ் நகரில் உள்ளது. பிட்டி மாளிகை பிளாரென்ஸ் நகரின் காட்சிச் சாலை. 16ம்-17ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த இத்தாலிய, வெளிநாட்டு ஓவியர்களின் படங்கள் இங்கே திரட்டி வைக்கப்பட்டுள்ளன.

''கொண்டு வாருங்கள்! இவனுடைய கோட்டைக் கழற்றி விட்டு இவன் உடம்பைத் தேய்ப்போம்.''

''நல்லது... Benone! இவன் தலையில் தண்ணீரை விட வேண்டாமா?''

''வேண்டாம்... அப்புறம். இப்போது போய், சட்டென்று பிரஷ்களை எடுத்து வாருங்கள்.''

பந்தலியோனே புட்டியைத் தரையில் வைத்து விட்டு வெளியே ஓடி தலை வாருவதற்கும் உடை சுத்தப்படுத்துவதற்குமான இரண்டு பிரஷ்களோடு உடனே திரும்பி வந்தான். அவனுடன் ஓடி வந்த சுருட்டைச் சடைநாய் வாலை மும்முரமாக ஆட்டியவாறு, ''இந்தக் கலவரத்துக்கு எல்லாம் என்ன அர்த்தம்?'' என்று கேட்பது போல முதியவளையும் மங்கையையும் ஸானினையுங்கூட ஆவலுடன் ஏறிட்டுப் பார்த்தது.

சோபாவில் கிடந்த பையனின் கோட்டை ஸானின் மளமளவென்று களைந்து, அவனுடைய சட்டைக் கழுத்துப் பட்டையைத் திறந்து கைகளை மடக்கி விட்டு, பிரஷும் கையுமாக அவனுடைய மார்பையும் கைகளையும் முழு பலத்துடன் தேய்க்கத் தொடங்கினான். பந்தலியோனே தலை வாருவதற்கான மறு பிரஷால் பையனுடைய பூட்சுகள் மேலும் சராய் மேலும் அவ்வாறே முனைந்து தேய்த்தான். பெண் சோபாவின் அருகில் முழந்தாள் படியிட்டு அமர்ந்து இரு கைகளாலும் தலையைப் பற்றியவாறு தம்பியின் முகத்தையே கண் கொட்டாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஸானின் தேய்த்தவாறே கடைக்கண்ணால் அவள் மேல் பார்வை செலுத்தினான். அட கடவுளே! எப்பேர்ப்பட்ட அழகி அவள்!

3

அவளுடைய மூக்கு கொஞ்சம் பெரியது, ஆனால் அழகானது, கழுகினது போன்றது. மேல் உதட்டில் தூவியின் கருமை சிறிது படிந்திருந்தது, ஆனால் முகத்தின் வண்ணம் ஒரு சீரான வெண் பழுப்பாக யானைத் தந்தம் அல்லது அம்பர் மணியை அப்படியே நிகர்த்திருந்தது. அலைபடிந்த கூந்தலின் ஒளிர்வு பிட்டி மாளிகையில் உள்ள அல்லோரியின் ஜூடித்தினது* போன்று இருந்தது. எல்லாவற்றிலும் சிறப்பானவை விழிகள். கருஞ் சாம்பல் நிறமானவை, கண் மணிகளைச் சுற்றிக் கரு விளிம்புகள் கொண்டவை. மாட்சியுள்ள, வெற்றி கொண்டாடுகிற விழிகள்—பயமும் துயரமும் அவற்றின் ஒளிர்வை மங்கச் செய்துவிட்ட இந்த நேரத்தில் கூட.... தான் திரும்பி வந்த அற்புத நாடு ஸானினுக்கு அவனையும் அறியாமல் நினைவு வந்தது... ஆனால் இத்தாலியில் கூட இதற்கு ஒப்பானது எதையும் அவன் காணவில்லை! மங்கை நீண்ட இடைவெளிகளுடனும் சீரின்றியும் மூச்சு விட்டாள். தம்பி மூச்சுவிடத் தொடங்குவானா என்று ஒவ்வொரு தரமும் அவள் எதிர்பார்ப்பது போல் இருந்தது.

ஸானின் பையனுடைய உடம்பைத் தொடர்ந்து தேய்த்துக் கொண்டு போனான்.

---

* "ஜூடித்" என்பது பிரபல இத்தாலிய ஓவியர் கிறிஸ்தபானோ அல்லோரி (1577—1621) தீட்டிய ஓவியம், பிளாரென்ஸ் நகரில் உள்ளது. பிட்டி மாளிகை பிளாரென்ஸ் நகரின் காட்சிச் சாலை. 16ம்-17ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த இத்தாலிய, வெளிநாட்டு ஓவியர்களின் படங்கள் இங்கே திரட்டி வைக்கப்பட்டுள்ளன.

ஆனுல் அவன் பார்வையிட்டது நங்கையை மட்டும் அல்ல. பந்தலியோனேயின் தனி வகையான உருவமும் அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. முதியவன் ஒரேயடியாகச் சோர்ந்து போய்த் திணறிக் கொண்டிருந்தான். பிரஷ்ஷால் ஒவ்வொரு தரம் அடிக்கும் போதும் துள்ளிக் குதித்து, கீச்சிட்டு முனகினுன். அவனுடைய பெருத்த மயிர்க் கற்றைகள் வேர்வையில் நனேந்து, நீரினுல் அரிக்கப்பட்ட பெரிய செடியின் வேர்கள் போல இப்புறமும் அப்புறமுமாகக் கனமாக ஆடிக் கொண்டிருந்தன.

''இவனுடைய பூட்சுகளேயாவது கழற்றுங்களேன்'' என்று அவனிடம் சொல்ல வாயெடுத்தான் ஸானின்...

நடந்து கொண்டிருந்தவற்ருல் கிளர்ச்சி அடைந்து போலும் சடைநாய் திடீரென்று முன்னங்கால்களில் குனிந்து குலேக்கத் தலேப்பட்டது.

"Tartaglia—canaglia!"* என்று அதை நோக்கிச் சீறினுன் கிழவன்...

ஆனுல் அந்தக் கணத்தில் பெண்ணின் முகம் மாற்றம் அடைந்தது. அவளுடைய புருவங்கள் உயர்ந்தன, விழிகள் இன்னும் பெரியவை ஆகி மகிழ்ச்சியால் சுடர்ந்தன...

ஸானின் பக்கத்தில் பார்வை செலுத்தினுன்... பையனுடைய முகத்தில் செம்மை படரலாயிற்று. இமைகள் அசைந்தன... மூக்குத் துளேகள் நடுங்கின. பையன் இன்னும் கிட்டித்திருந்த பற்களின் ஊடாகக் காற்றை இழுத்தான், மூச்சு விட்டான்...

''எமீல்!..'' என்று கத்தினுள் மங்கை. ''என் எமீலியோ!''

---

* தர்த்தாலியா—கனுலியா! (இத்தாலிய மொழி).

பெரிய கரு விழிகள் மெதுவாகத் திறந்தன. அவை இன்னமும் விளங்காமையுடன் நோக்கின, ஆயினும் முறுவல் செய்தன—பலவீனமாக. அதே பலவீனப் புன்னகை வெளிறிய உதடுகளுக்கு இறங்கிற்று. பிறகு பையன் தொங்கிக் கொண்டிருந்த கையை அசைத்து மார்பின் மேல் வீசிப் போட்டுக் கொண்டான்.

''எமீலியோ!'' என்று மீண்டும் அழைத்துச் சற்று எழுந்தாள் மங்கை. அவளுடைய முகத்தில் உணர்ச்சி வெளிப்பாடு வலிவாகவும் ஒளியுள்ள தாகவும் இருந்ததைக் கண்ட போது, அவள் இதோ கண்ணீர் பெருக்கப் போகிறுள் அல்லது கெக்கலிகொட்டிச் சிரிக்கப் போகிறுள் என்று தோன்றியது.

''எமீல்! என்ன இது? எமீல்!'' என்ற குரல் கதவுக்கு வெளியே கேட்டது. அறைக்குள் விடு விடென்று நுழைந்தாள் பாங்காக உடையணிந்த ஒரு மாது. வெள்ளி நரை முடியும் பழுப்பேறிய முகமும் கொண்டிருந்தாள் அவள். முதிர்ந்த வய துள்ள ஓர் ஆடவர் அவளேத் தொடர்ந்து வந்தார். அவருடைய தோள்களுக்குப் பின் தெரிந்தது பணிப் பெண்ணின் தலே.

மங்கை அவர்களிடம் ஓடிச் சென்ருள்.

''அவன் பிழைத்து விட்டான், அம்மா, உயி ரோடு இருக்கிறுன்!'' என்று வந்த மாதைப் பர பரப்புடன் தழுவியவாறு கூவிஞள்.

''அட என்ன இது?'' என்று மறுபடி கேட்டாள் வந்தவள். ''திரும்பி வந்து கொண்டிருந்தேன்... திருவாளர் டாக்டரையும் லுயிஸாவையும் திடீ ரென்று சந்தித்தேன்...''

மங்கை நடந்ததை விவரிக்கலாஞள். டாக்டர் நோயாளியிடம் சென்ருர். பையன் நிமிடத்துக்கு

நிமிடம் தெளிவு அடைந்து கொண்டு போனுன், புன்னகை செய்த வண்ணமாய் இருந்தான். தான் விளைவித்த கலவரத்தால் அவன் வெட்கப்படத் தொடங்கி இருந்தான் போலும்.

''நீங்கள் இவன் உடம்பைப் பிரஷ்களால் தேய்த்தீர்கள் என்பதைக் காண்கிறேன். நீங்கள் செய்தது அருமையானது... நிரம்ப நல்ல எண் ணம்...'' என்று ஸானினையும் பந்தலியோனேயை யும் பார்த்துச் சொன்னுர் டாக்டர். ''இன்னும் என்ன சாதனங்கள் வேண்டும் என்று இதோ பார்ப் போம்...'' சிறுவனுடைய நாடியைப் பிடித்துப் பார்த்தார் டாக்டர். ''ஹ்ம்! எங்கே, நாக்கைக் காட்டுங்கள்!''

மாது கவலையுடன் அவன் பக்கம் குனிந்தாள். பையன் இன்னும் மலர்ச்சியுடன் புன்னகைத்து அவளை நிமிர்ந்து பார்த்து. முகம் சிவந்தான்...

தான் தேவை அற்றவன் ஆகி விட்டதாக ஸானினுக்கு எண்ணம் உண்டாயிற்று. அவன் மிட் டாய்க் கடைப் பகுதிக்குப் போனுன். ஆனல் தெருக் கதவுப் பிடியை அவன் பற்றுவதற்குள் அந்தப் பெண் மறுபடி அவன் முன் வந்து அவனை நிறுத்தினுள்.

''நீங்கள் போகிறீர்கள்'' என்று அவன் முகத்தை அன்பு ததும்ப நோக்கியவாறு தொடங்கினுள். ''நான் உங்களைத் தடுக்கவில்லை. ஆனல் இன்று மாலை நீங்கள் எங்கள் வீட்டுக்குக் கட்டாயம் வர வேண்டும். நாங்கள் உங்களுக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம். நீங்கள் தம்பியைக் காப்பாற்றி னீர்கள் என்று சொல்லலாம். உங்களுக்கு நன்றி செலுத்த நாங்கள் விரும்புகிறோம்—அம்மா விரும்பு கிறுள். நீங்கள் யார் என்று எங்களுக்குச் சொல்ல

வேண்டும், எங்களோடு சேர்ந்து நீங்கள் மகிழ்ச்சி கொண்டாட வேண்டும்...''

''ஆனல் நான் இன்று பெர்லின் போகிறேன்'' என்று திக்கித் தடுமாறினுன் ஸானின்.

''உங்களுக்கு நேரம் இருக்கும்'' என்று துடியாகக் கூறினுள் மங்கை. ''ஒரு மணி நேரத்துக்குப் பின் வந்து ஒரு கப் சாக்லேட் பானம் எங்களோடு அருந்துங்கள். வருவீர்களா? நான் மறுபடி தம்பியிடம் போக வேண்டும்! வருவீர்கள் அல்லவா?''

ஸானின் செய்வதற்கு வேறு என்ன இருந்தது?

''வருவேன்'' என்று பதில் அளித்தான்.

அழகி சட்டென அவன் கையைப் பற்றிக் குலுக்கினுள், விர்ட்டென்று பறந்து போய் விட்டாள், அவன் வீதிக்கு வந்தான்.

4

ஒரு ஒன்றரை மணி நேரம் பொறுத்து ஸானின் ரொஸேல்லி மிட்டாய்க் கடைக்குத் திரும்பிய போது சொந்த உறவினன் போல வரவேற்கப் பட்டான். எமீலியோ தான் பிரஷ்களால் தேய்க்கப்பட்ட அதே சோபாவில் உட்கார்ந்திருந்தான். டாக்டர் அவனுக்கு மருந்து எழுதிக் கொடுத்து விட்டு, அவன் பதற்ற சுபாவம் உள்ளவன், இருதயக் கோளாறுகளுக்கு ஆளாகக் கூடியவன் ஆகையால் ''புலன் உணர்ச்சிகளை அனுபவிப்பதில் பெருத்த எச்சரிக்கை'' கடைப்பிடிக்கும்படி அறிவுறுத்தினுர். முன்பும் அவனுக்கு மயக்கம் போட்டது உண்டு, ஆனல் அது இவ்வளவு நீடித்தும் கடுமையாகவும் ஒருபோதும் இருக்கவில்லை. ஆனல் இப்போது எல்லாவித அபாயமும் கடந்து

விட்டது என்று தெரிவித்தார் டாக்டர். எமீ லியோ குணம் அடைந்து வரும் நோயாளிக்கு ஏற்றபடி தொளதொளப்பான அங்கியை மாட்டிக் கொண்டிருந்தான். தாயார் அவன் கழுத்தைச் சுற்றி நீலக் கம்பளிக் குட்டையைக் கட்டி விட்டிருந்தாள். ஆனாலும் பார்வைக்கு அவன் மகிழ்ச்சி உள்ளவனாக, அனேகமாகக் களி கொண்டாடுபவன் போலக் காணப்பட்டான். சுற்று முற்றும் இருந்தவையும் விழாக் கோலம் கொண்டிருந்தன. சோபாவுக்கு எதிரே, தூய விரிப்பு விரிக்கப் பட்டிருந்த வட்ட மேசை மேல் கமகமக்கும் சாக்கலேட் பானம் நிறைந்த பிரமாண்டமான பீங்கான் பாத்திரமும் அதைச் சுற்றிக் கோப்பைகளும் பாகுச் சாடிகளும் பிஸ்கோத்துக்களும் பன்களும் பூக்களும் கூட வைக்கப்பட்டிருந்தன. இரண்டு பழங்கால வெள்ளி விளக்குத் தண்டுகளில் ஆறு மெல்லிய மெழுகு வத்திகள் எரிந்து கொண்டிருந்தன. சோபாவின் ஒரு புறம் தோல் மெத்தைச் சாய்வு நாற்காலி மென்மையாகத் தழுவிக் கொள்ள ஆயத்தமாக நின்றது. ஸானின் இந்த நாற்காலியில் உட்கார வைக்கப்பட்டான். அன்று அவன் அறிமுகம் செய்து கொள்ள நேர்ந்த மிட்டாய்க் கடைக்காரர்கள் எல்லோரும்—சடை நாய் தர்த்தாலியாவும் பூனையும் உட்பட—அங்கே கூடி இருந்தார்கள். எல்லோரும் சொல்ல முடியாத அளவு மகிழ்ச்சியில் திளைப்பவர்களாகக் காணப்பட்டார்கள். சடைநாய் சந்தோஷ மிகுதியால் தும்மக்கூடச் செய்தது. பூனை ஒன்று மட்டும் முன் போலவே தளுக்கு மினுக்கு பண்ணிக் கொள்வதும் கண்களை இடுக்கிக் கொள்வதுமாக இருந்தது. தான் எந்த வகுப்பைச் சேர்ந்தவன், எந்த நாட்டினன், தன் பெயர் என்ன என்று சொல்லும்

படி எல்லோரும் ஸானினைக் கட்டாயப்படுத்தினார் கள். தான் ருஷ்யன் என்று அவன் சொன்ன போது இரண்டு மாதர்களும் கொஞ்சம் வியப்படைந்து ஆ என்று வாய்விட்டுக் கூடச் சொன்னார்கள். ஆனால் அவன் அருமையாக ஜெர்மன் பேசுவதாக மறு கணமே ஒரே குரலில் கூறினார்கள். எனினும், இருவருக்கும் பிரெஞ்சு மொழி நன்றாகப் புரியும், பேச வரும் ஆகையால், அந்த மொழியில் பேசுவது ஸானினுக்கு அதிகச் சௌகரியமாய் இருந்தால் அவன் அதிலும் பேசலாம் என்றார்கள். இந்த யோசனையைத் தாமதமின்றிக் கடைப்பிடித்தான் ஸானின். ''ஸானின்! ஸானின்!'' ருஷ்யக் குலப் பெயர் உச்சரிக்க இவ்வளவு எளிதாய் இருக்கும் என்று மாதர்கள் எதிர்பார்க்கவே இல்லை. ''திமீத்ரி'' என்ற அவனுடைய பெயரும் அவர்களுக்கு நிரம்பப் பிடித்திருந்தது. இள வயதில் "Demetrio e Polibio"* என்னும் அருமையான இசை நாடகத்தைத் தான் கேட்டதாகவும் ஆனால் இந்த "Dimitri," அந்த "Demetrio" வைக் காட்டிலும் எவ்வளவோ மேல் என்றும் மூத்த மாது கூறினாள். இந்த மாதிரி சுமார் ஒரு மணி நேரம் உரையாடிக் கொண்டிருந்தான் ஸானின். தங்கள் தரப்பில் மாதர்கள் தங்களது வாழ்க்கை விவரங்கள் எல்லாவற்றையும் ஸானினுக்குத் தெரிவித்தார்கள். தாயார், அதாவது நரைத் தலைமாது, அதிகமாகப் பேசினாள். அவளிடமிருந்து பின்வரும் தகவல்களை ஸானின் தெரிந்து

---

* *Demetrio e Polibio* (திமீத்ரியோ எ பொலீபியோ)—ரஸ்ஸீனியின் முதல் ஆபெராக்களில் ஒன்று. ரோம் நகரில் 1812ல் அரங்கேற்றப் பட்டது.

கொண்டான்: அவளுடைய பெயர் லெனோரா ரொஸேல்லி. கணவன் ஜியோவான்னி பத்தீஸ்தா ரொஸேல்லி காலமான பிறகு அவள் விதவை யாகவே வாழ்ந்து வந்தாள். ஜியோவான்னி பத் தீஸ்தா இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் மிட்டாய்க் கடைக்காரனாக பிராங்க்பர்ட் நகரில் குடியேறினான். அவன் விச்செந்த்ஸாவில் பிறந்து வளர்ந்தவன். கொஞ்சம் முன்கோபி, செருக்கு உள்ளவன், போதாக்குறைக்குக் குடியரசுவாதி! ஆனாலும் நிரம்ப நல்லவன். இந்த வார்த்தைகளைச் சொல்லுகையில் திருமதி ரொஸேல்லி கணவ னுடைய உருவப் படத்தைச் சுட்டிக் காட்டினாள். எண்ணெய் வண்ணங்களால் தீட்டப்பட்ட அந்தப் படம் சோபாவுக்கு மேலே சுவற்றில் தொங்கிக் கொண்டிருந்தது. திருமதி ரொஸேல்லி பெருமூச் சுடன் சொன்னது போல, ''தானும் குடியரசு வாதி!'' ஆன ஓவியன் உருவ ஒப்புமையை முழுமை யாகக் கொண்டு வரத் தவறி விட்டான் என்று எண்ண வேண்டி இருந்தது, ஏனென்றால் காலம் சென்ற பத்தீஸ்தா படத்தில் ரினால்தோ ரினால் தீனி* போன்ற, ஏக்கமும் கடுகடுப்பும் உள்ள வழிப்பறி கொள்ளைக்காரனாகக் காட்சி அளித் தான். திருமதி ரொஸேல்லி ''அழகான தொன் மைக் கால நகரமான பார்மாவைச் சேர்ந்தவள். அமரன் கொரேஜியோ சித்திரங்கள் தீட்டியிருக் கும் அற்புதமான கும்மட்டம்** அங்கே உள்ளது!''

---

* இங்கு குறிக்கப்படுபவன் ஜெர்மன் எழுத் தாளர் வூல்பியூஸ் (1762—1827) இயற்றிய ''ரினால்தோ ரினால்தீனி, வழிப்பறி கொள்ளைக் காரர்கள் தலைவன்'' என்னும் மயிர்க் கூச்செறியும் சம்பவங்கள் நிறைந்த நவீனத்தின் கதாநாயகன்.

** இங்கே குறிக்கப்படுவது பார்மா நகரக் கதீட்ரலின் கும்மட்டம். **அந்தோனியோ அல்லெக்ரி**

ஆனால் நீண்ட காலமாக ஜெர்மனியில் வசிப்பதால் அவள் அனேகமாக முழு ஜெர்மன்காரி ஆகிவிட்டாள். இப்போது அவளிடம் எஞ்சி இருப்பது எல்லாம் இதோ இந்த மகளும் இதோ இந்த மகனும் தாம் (அவர்களை அவள் விரல்களால் முறையே சுட்டிக் காட்டினாள்) என்று துயரத்துடன் தலையை ஆட்டியவாறு பின்பு சொன்னாள் அவள். மகளின் பெயர் ஜெம்மா, மகனுடையது எமீலியோ. இரண்டு பேரும் நிரம்ப நல்ல, கீழ்ப்படிவு உள்ள குழந்தைகள். சிறப்பாக எமீலியோ... (''நான் கீழ்ப்படியாதவளா?'' என்று குறுக்கே கேட்டாள் மகள். ''ஐயோ, நீயும் குடியரசுவாதிப் பெண்!'' என்று பதிலளித்தாள் தாய்); கணவன் மிட்டாய்கள் தயாரிப்பதில் பெரிய நிபுணன்... ("Un grand'uomo!" என்று கடுமையான தோற்றத்துடன் ஒத்துப்பாடினான் பந்தலியோனே). அவன் காலத்தில் நடந்ததை விட மோசமாகவே இப்போது வியாபாரம் நடந்து கொண்டிருக்கிறது. ஆனாலும் ஆண்டவன் அருளால் இன்னமும் பிழைப்பு நடத்த முடிகிறது!

## 5

தாயார் சொன்னவற்றை ஜெம்மா கேட்டுக் கொண்டிருந்தாள். சில வேளைகளில் நகையாடினாள், சில வேளைகளில் பெருமூச்செறிந்தாள், சில வேளைகளில் தாயாரின் தோளை வருடினாள்,

---

கரேஜியோ (1489—1534) தீட்டிய. ''மரியம்மையின் விண்ணேற்றம்'' (16ம் நூற்றாண்டு) என்னும் பெயர் பெற்ற சுவரோவியம் இதில் இருக்கிறது.

வேறு சில வேளைகளில் விரலைக் காட்டி அவனை அச்சுறுத்தினுள், சில வேளைகளில் ஸானினை நோக்கினுள். முடிவில் அவள் எழுந்து தாயாரைத் தழுவி அவளுடைய கழுத்தில் முத்தமிட்டுக் கிச்சுக்கிச்சு மூட்டினுள். இதனுல் தாயார் நிரம்பச் சிரித்தாள், கீச்சிடக் கூடச் செய்தாள். பந்தலியோனேயும் ஸானினுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டான். அவன் ஒரு காலத்தில் நடுத்தர ஆண் குரல் பாத்திரங்களில் இசை நாடகங்களில் பாடி வந்தானும். ஆனுல் வெகு காலமாக நாடக அரங்க நடவடிக்கைகளை நிறுத்தி விட்டு ரொஸேல்லி குடும்பத்தில் ஒருவனுக, குடும்ப நண்பனுக்கும் வேலையாளுக்கும் இடைப்பட்ட நிலையில், இருந்து வந்தான். ஜெர்மனியில் நீண்ட காலம் வசித்த போதிலும் ஜெர்மன் மொழியை அவன் மோசமாக அறிந்திருந்தான். அந்த மொழியில் திட்டுவதற்கு மட்டுமே அவன் திறன் பெற்றிருந்தான். வசவுகளைக் கூட இரக்கம் இல்லாமல் சிதைத்தான். அனேகமாக ஒவ்வொரு ஜெர்மானியனையும் ''பெர்ரோ-புளுக்தோ ஸ்பிச்செபுப்பியோ!''* என்று திட்டினுன். இத்தாலிய மொழியை மிகச் செம்மையாகப் பேசினுன், ஏனென்ருல் அவன் பிறந்து வளர்ந்தது ஸினிகாலியாவில். அங்கே காதில் படுவது "lingua toscana in bocca romana"** என்ருன். எமீலியோ சொகுசு கொண்டாடிக் கொண்டிருந்தான். அண்மையில்தான் ஆபத்திலிருந்து மீண்டவன், அல்லது குணமடைந்து

---

* பாழாய்ப் போன புரட்டன் (ஜெர்மன: verfluchte Spitzbube).

** ரோமானியர்கள் பேசும் டஸ்கானிய மொழி (இத்தாலியன்).

கொண்டிருந்தவனுக்கு உரிய இனிய உணர்ச்சியை ரசித்துக் கொண்டிருந்தான். தவிர, குடும்பத்தினர் அவனுக்குச் செல்லம் கொடுத்து வந்தார்கள் என்பதைச் சூழ்நிலேயிலிருந்து அனுமானிக்க முடிந்தது. அவன் ஸானினுக்குக் கூச்சத்துடன் நன்றி தெரிவித்தான், ஆனல் பாகையும் மிட்டாய்களேயும் உண்பதில் அதிகக் கவனம் செலுத்தினன். உயர்தரச் சாக்கலேட் பானம் இரண்டு பெரிய கோப்பைகள் நிறையப் பருகி, கணிசமான எண்ணிக்கை பிஸ்கோத்துக்களேத் தின்பது ஸானினுக்குக் கட்டாயம் ஆகி விட்டது: அவன் ஒன்றைத் தின்று முடிப்பதற்குள் ஜெம்மா இன்னென்றை அவனிடம் நீட்டினள். மறுக்க வாய்ப்பு இல்லே! விரைவில் அவன் சகஜமாகப் பழகலானன். நேரம் நம்ப முடியாத விரைவுடன் பறந்தது. அவன் நிறைய விஷயங்களேப் பற்றிச் சொல்ல வேண்டி வந்தது—பொதுவாக ருஷ்யாவைப் பற்றியும், ருஷ்யாவின் தட்ப வெப்ப நிலேயைப் பற்றியும் ருஷ்ய சமூகத்தைப் பற்றியும் ருஷ்ய நாட்டுப்புறத்தவனேப் பற்றியும் சிறப்பாகக் கஸாக்கியர்களேப் பற்றியும், 1812ம் ஆண்டில் நெப்போலியனுடைய படையெடுப்பை முறியடிப்பதற்காக நடந்த யுத்தத்தைப் பற்றியும், பேரரசன் முதலாம் பீட்டரைப் பற்றியும், கிரெம்ளினேப் பற்றியும், ருஷ்யப் பாட்டுக்களேப் பற்றியும், கண்டாமணிகளேப் பற்றியும். ஸானினுடைய விரிந்து பரந்த, தொலே தூரத் தாயகத்தைப் பற்றி இரண்டு மாதர்களும் மிக மிகக் கொஞ்சந் தான் அறிந்திருந்தார்கள். திருமதி ரொஸேல்லி, அல்லது மற்றவர்கள் அவளே அடிக்கடி அழைத்தது போல பிராவு லெனேரே, ஒரு கேள்வியால் ஸானினேத் திகைப்பில் கூட ஆழ்த்தினள். தன்

காலஞ் சென்ற கணவனுடைய "Bellezze delle arti" என்னும் புத்தகத்தில் நிரம்பச் சுவார சியமான ஒரு கட்டுரையை அவள் படித்தாளாம். பீட்டர்ஸ்பர்க் நகரில் சென்ற நூற்றுண்டில் கட்டப்பட்ட பனிக் கட்டி வீட்டைப் பற்றியதாம் இந்தக் கட்டுரை. அந்தப் புகழ் பெற்ற வீடு இன் னமும் இருக்கிறதா என்று கேட்டாள் பிராவு லெஞேரே. ''ருஷ்யாவில் கோடைகாலமே கிடை யாது என்று நினைக்கிறீர்கள்?'' என்று ஸானின் கேட்டதற்கு, ருஷ்யாவைப் பற்றி இதுவரை பின் வருமாறு தான் எண்ணி வந்திருப்பதாக பிராவு லெஞேரே பதிலளித்தாள்: ஓயா வெண்பனி, எல் லோரும் மென்மயிர்த் தோல் மேல் கோட்டுக்கள் அணிந்து நடமாடுவார்கள், எல்லோரும் படையி னர், ஆனல் விருந்தினரை அபரிமிதமாக உபசரிப் பார்கள், எல்லா விவசாயிகளும் மிகவும் பணிவு உள்ளவர்கள்! இன்னும் சரியான தகவல்களை அவ ளுக்கும் அவளுடைய புதல்விக்கும் தெரிவிக்க ஸானின் முயன்றான். ருஷ்ய இசை பற்றிப் பேச்சு வந்ததும் ஏதாவது ருஷ்ய ஒரு குரல் பாட்டைப் பாடும்படி அவனைக் கேட்டுக் கொண்டு அறையில் இருந்த சின்னஞ் சிறு பியானேவைக் காட்டினார் கள். அதில் வெள்ளையாய் இருக்க வேண்டிய கட் டைகள் கறுப்பாகவும் கறுப்பாய் இருக்க வேண் டியவை வெள்ளையாகவும் இருந்தன. ஸானின் சுற்றி வளைக்காமல் அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்கினன். வலது கையின் இரண்டு விரல்களா லும் இடது கையின் மூன்று (பெரு, நடு, சுண்டு) விரல்களாலும் பியானேவைப் பக்க வாத்தியமாக இசைத்தவாறு மூக்கொலி உள்ள மெல்லிய குர லில் ''ஸரபான்'' என்ற பாட்டையும் பின்பு ''ப ஊலித்ஸே மஸ்தவோய்'' என்ற பாட்டையும்

பாடினுன். அவனுடைய குரலையும் இசையையும் மாதர்கள் மெச்சினுர்கள். ருஷ்ய மொழியின் மென்மையையும் இனிய ஒலிப்பையும் அதைவிட அதிகமாக வியந்து பாராட்டினுர்கள். மூலப் பாட்டுக்களின் மொழிபெயர்ப்பை வேண்டினுர்கள். ஸானின் அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றினுன். ஆனுல் ''ஸரபான்''* என்பதும் சிறப்பாகப் ''ப ஊலித்ஸே மஸ்தவோய்'' என்பதும் (அவன் அதை sur une rue pavée une jeune fille allait à l'eau** என்று மொழி பெயர்த்தான்) ருஷ்யக் கவிதையின் உயர்ந்த தரம் பற்றிய புரிவைக் கேட்டவர்களுக்கு ஏற்படுத்த முடியவில்லை ஆகையால் ஸானின் ''நினைந்திடுவேன் நான் அற்புதக் கணத்தை'' என்று பொருள்படும் வரியுடன் தொடங்கும் பூஷ்கினின் கவிதையை முதலில் வெறுமே படித்தான், பின்பு மொழி பெயர்த்தான், முடிவில், கிளீன்கா*** அமைத்த மெட்டில்—சில அபஸ்வரங்களுடன்—பாடினுன். இப்போது மாதர்களின் மகிழ்ச்சிக்குக் கங்கு கரை இல்லை. ருஷ்ய மொழிக்கும் இத்தாலிய மொழிக்கும் வியப்பூட்டும் படியான ஒப்புமை இருந்ததாகக் கூட பிராவு லெனேரே கண்டுபிடித்தாள். ''ம்க்னவேனியெ''****—''O,Vieni''*****—ஸ ம்னேய்''******

---

* ருஷ்ய நாட்டுப்புற மாதர் அணியும் கைகளற்ற உடுப்பு.—மொ-ர்.

** கற்கள் பாவிய வீதியில் இள நங்கை தண்ணீருக்காக நடந்தாள் (பிரெஞ்சு).

*** மிகயீல் இவானவிச் கிளீன்கா (1804—1857)—புகழ்பெற்ற ருஷ்ய இசை அமைப்பாளர். ருஷ்ய சாஸ்திரீய சங்கீதத்திற்கு வித்திட்டவர்.

**** ''கணம்'' (ருஷ்ய மொழி).

***** ''ஓ, வாராய்'' (இத்தாலியம்).

****** ''என்னேடு'' (ருஷ்ய மொழி).

—"Siam noi"* முதலியன. பூஷ்கின் (இதை அவள் புஸ்ஸெகின் என்று உச்சரித்தாள்), கிளீன்கா என்னும் பெயர்கள்கூட அவளுக்கு எதனாலோ சொந்தமானவையாக ஒலித்தன. தன் தரப்பில் ஸானின் மாதர்களை ஏதேனும் பாடும்படி கேட்டுக் கொண்டான். அவர்களும் பிகு பண்ணிக் கொள்ளவில்லை. பிராவு லெனோரே பியானோ முன் அமர்ந்து ஜெம்மாவுடன் சேர்ந்து சில இருவர் பாடல்களும் "ஸ்தோர்னெல்லோ" என்னும் மக்கள் பாடல்களும் பாடினாள். தாயாருக்கு ஒரு காலத்தில் தாழ்ந்த இசைக் குரல் நன்றாக இருந்ததாம். மகளின் குரல் கொஞ்சம் பலவீனமானது என்றாலும் இனிமையாய் இருந்தது.

6

ஆனால் ஜெம்மாவின் குரலை அல்ல, அவளையே வியந்து பாராட்டிக் கொண்டிருந்தான் ஸானின். அவன் சற்றுப் பின்னே பக்க வாட்டில் உட்கார்ந்திருந்தான். எந்தப் பாக்கு மரமும்—அப்போது மோஸ்தரில் இருந்த கவியான பெனிதிக்தோவின்** கவிதைகளில் வருபவை கூட—அவளுடைய மேனியின் எழில் திகழ்ந்த வடிவமைப்புடன் போட்டி போட முடியாது என்று தனக்குள் நினைத்துக் கொண்டான். நுட்பமான ஸ்வரங்களைப் பாடுகையில் அவள் விழிகளை உயர்த்திய போது, இந்தப் பார்வைக்கு முன் விரியத் திறக்காத விண்ணகம் எதுவும் இராது என்று அவனுக்குத் தோன்றியது.

---

* "இது நாங்கள்" (இத்தாலியம்).

** இங்கு குறிக்கப்படுபவர் ருஷ்யக் கவிஞர் விளதீமிர் பெனிதிக்தோவ் (1807—1873).

வாயில் மேல் கட்டையில் தோளைச் சாய்த்து இடமகன்ற டையில் மோவாயையும் வாயையும் புதைத்தவாறு விஷயம் தெரிந்த தோற்றத்துடன் பெருமிதம் ததும்பக் கேட்டுக் கொண்டிருந்த பந்தலியோனே கூட, அந்த அழகிய மங்கையின் முகத்தை வியந்து நோக்கிப் பரவசம் அடைந்து கொண்டிருந்தான்—இவ்வளவுக்கும் அவன் இந்த முகத்துக்குப் பழக்கப்பட்டிருக்க வேண்டும்! பெண்ணுடன் தன் இருவர் பாடலை முடித்து விட்டு, பிராவு லெஞேரே மகனைப் பற்றிப் பேசத் தலைப் பட்டாள். எமீலியோவின் குரல் சிறப்பானது, உண்மையான வெள்ளி, ஆனுல் இப்போது குரல் மாறும் பிராயத்தில் அவன் அடி வைத்திருக்கிருன் (மெய்யாகவே அவன் இடை விடாமல் உடைந்து கொண்டிருந்த கட்டைக் குரலில் பேசினுன்), இந்தக் காரணத்தால் அவன் பாடுவது தடை செய்யப்பட்டிருக்கிறது என்று கூறினுள். விருந்தாளியைக் கவுரவிப்பதற்காகப் பந்தலியோனே இளமைக்குத் திரும்பலாம்! இப்படி அவள் சொன்னதும் பந்தலியோனே அதிருப்தியைக் காட்டும் தோற்றத்தை மேற்கொண்டான், முகம் சுளித்துத் தலைமயிரைக் கலைத்துக் கொண்டு, இதை எல்லாம் தான் வெகு காலத்துக்கு முன்பே விட்டு விட்டதாக அறிவித்தான். இளமையில் எதற்கும் ஈடு கொடுக்க உண்மையாக வல்லவனுய் இருந்தானும். அசலான, சாஸ்திரீயமான பாடகர்களும்—இந்தக் காலத்துக் கீச்சான்கள் மாதிரி அல்ல!—அசலான பாட்டுப் பாணியும் இருந்த மகத்தான காலத்தைச் சேர்ந்தவனும் அவன். அவனுக்கு, வாரேஸே நகரவாசியான பந்தலியோனே சிப்பத்தோலாவுக்கு, மோதெனில் மக்கள் லாரல் மலர் மகுடம் சூட்டினுர்களாம். இந்த நிகழ்ச்சியை ஒட்டி நாடக

மன்றத்தில் சில வெண் புறுக்கள் பறக்க விடப் பட்டனவாம். தர்பூஸ்க்கி என்னும் ஒரு ருஷ்யச் சிற்றரசனுடன்—"il principe Tarbusski"—அவன் நெருங்கிய நட்புறவு கொண்டிருந்தானும். அந்தச் சிற்றரசன் தினந்தோறும் இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு ருஷ்யாவுக்கு வரும்படி அவனை அழைத் தானும், தங்க மலைகள் தருவதாக வாக்களித் தானும், மலைகள்!.. ஆனால் இத்தாலியை, தாந்தே யின் நாட்டை—il paese del Dante!—விட்டுப் பிரிய அவன் விரும்பவில்லையாம். அப்புறந்தான் நிகழ்ந்தன வாம்... துன்பங்கள், அவனே அஜாக்கிரதையாய் இருந்தானும்... இந்தக் கட்டத்தில் கிழவன் தன் பேச்சைத் தானே இடை முறித்து, ஒரு இரண்டு தரம் ஆழ்ந்த பெருமூச்சு விட்டு, தலையைக் குனிந்து கொண்டான். பின்பு பாட்டின் சாஸ்தி ரீயக் காலத்தையும் பெயர் பெற்ற உயர் குரல் பாடகர் கார்ஸியாவையும்* பற்றி மறுபடி பேசத் தொடங்கினன். கார்ஸியா மீது தான் பெரு மதிப்பு வைத்திருப்பதாகவும் எல்லையற்ற மரி யாதை கொண்டிருப்பதாகவும் கூறினன்.

"அவர் தாம் மனிதர்!" என்று கூவினன். "மாபெரும் கார்ஸியா "il gran Garcia"—இந்தக் காலத்துப் பாடகக் குஞ்சுகள்—tenoracci—போலப் பொய்க் குரலில் பாடும் அளவுக்கு ஒரு போதும் இழியவில்லை. எல்லாம் நெஞ்சிலிருந்து,

---

* மனுவேல் கார்ஸியா (1775—1832)—உலகப் பிரசித்தி பெற்ற ஸ்பானிய ஆபெராப் பாடகர், இசை அமைப்பாளர். துர்கேனிவ் ஆழ்ந்த அன்பால் பிணைக்கப்பட்டிருந்த பலீனு வியார்தோ கார்ஸியா என்னும் பிரபல பாடகி யின் தந்தையும் ஆசானும்.

நெஞ்சிலிருந்து, voce di petto, sì!"* வறண்ட சிறு முட்டியால் தன் மார்பில் இடித்துக் கொண் டான் கிழவன்! "அப்புறம், எப்பேர்ப்பட்ட நடிகர்! எரிமலை, Signori miei,** எரிமலை, un Vesuvio! dell'illustrissimo maestro*** ரோஸ்ஸினியின் ஆபெரா 'ஒதெல்லோ'வில் அவரோடு பாடும் கௌரவமும் இன்பமும் எனக்குக் கிடைத்தன! கார்ஸியா ஒதெல்லோ, நான் யாகோ. இந்த வாக்கியத்தை அவர் பாடிய போது..."

இந்தக் கட்டத்தில் பந்தலியோனே நாடக தோரணையில் நின்று, நடுக்கமும் கம்மலும் உள் ளதானாலும் இன்னமும் உணர்ச்சி நிறைந்த குர லில் பாடத் தொடங்கினான்:

"L'i...ra daver... so daver... so il fato
Jo più no...no...no...non temerò!****

"அரங்கமே அதிர்ந்தது, signori miei! ஆனால் நானும் சளைக்கவில்லை. நானும் அவருக்குப் பின் பாடினேன்:

"'L'i... radaver... so daver... so il fato
Temèr più non dovrò!'*****

---

* "நெஞ்சிலிருந்து எழும் குரலில், ஆமாம்!" (இத்.).
** "என் திருவாளர்களே" (இத்.).
*** "எல்லாரிலும் பிரபலமான அருங்கலைஞர்" (இத்.).
**** "ஊழின்... சீற்றத்துக்கு... நான் இனி அஞ்சேன்!" (இத்.).
***** "ஊழின்... சீற்றத்துக்கு... நான் இனி அஞ்சேன்!" (இத்.).

''திடீரென்று அவர் மின்னலைப் போல, புலியைப் போல, 'Morro!.. ma vendicato...'* என்று முழங்கினார்.

''அல்லது, இன்னொரு கட்டத்தில், அவர் பாடியபோது... 'Matrimonio segreto'** ஆபெராவின் 'Pria che spunti...'*** என்ற பிரபலமான ஒரு குரல் பாட்டை, அவர் பாடிய போது செய்ததை எடுத்துக் கொள்வோம். 'J cavalli di galoppo'**** என்ற சொற்களுக்குப் பிறகு, 'Senza posa cacciera'***** என்ற சொற்களில் ஒரு பிருகா விட்டார், கேளுங்கள் எவ்வளவு பிரமிக்கச் செய்வது என்று com'è stupendo!****** இந்த இடத்தில் அவர் இப்படிச் செய்தார்...'' கிழவன் அசாதாரணமான ஒரு பிருகாவைத் தொடங்கியவன், பத்தாவது ஸ்வரத்தில் தடுமாறி, இருமி, கையை வீசி ஆட்டித் திரும்பி, ''எதற்காக நீங்கள் என்னை வதைக்கிறீர்கள்?'' என்று முணுமுணுத்தான். ஜெம்மா உடனே நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்து, ''பலே!.. பலே!'' என்று ஆரவாரித்துக் கைகளை உரக்கத் தட்டியவாறு ஓய்வு பெற்ற ஏழை யாகோவிடம் ஓடிப் போய் அவனுடைய தோள்களை இரண்டு கைகளாலும் அன்பாகப் பற்றிக் குலுக்கினாள். எமீலியோ ஒருவன் மட்டும் இரக்கம் இன்றிச் சிரித்தான். "Cet âge est sans

---

* ''மரிப்பேன்!.. ஆனால் பழி வாங்கிய பிறகு...'' (இத்.).

** ''இரகசிய மணம்'' (இத்.).

*** ''உள்ளே வரு முன்'' (இத்.).

**** பாயும் புரவிகள் (இத்.).

***** 'இடை நிற்காமல் விரட்டிச் செல்வான்' (இத்.).

****** எவ்வளவு அற்புதமானது! (இத்.).

pitié"—இந்தப் பிராயம் இரக்கம் இல்லாதது —என்று லபோன்டேனே* சொல்லி இருக்கிறார்.

ஸானின் முதிய பாடகனைத் தேற்ற முயன்றான், அவனோடு இத்தாலிய மொழியில் பேசத் தொடங்கினான் (தனது அண்மைப் பயணத்தின் போது இந்த மொழியை அவன் லேசாகத் தெரிந்து கொண்டிருந்தான்). "Pease del Dante, dove il si suona"** பற்றிப் பேசலானான். இந்தச் சொற்றொடரும் "Lasciate ogni speranza"*** என்பதும் தான் இளம் சுற்றுலாப் பயணி திரட்டி இருந்த இத்தாலியக் கவிதைச் செல்வம். ஆனால் பந்தலியோனே அவனுடைய முகத்துதிக்கு மசியவில்லை. முன் எப்போதையும் விட ஆழமாக டையில் மோவாயைப் புதைத்துக் கொண்டு, கண்களை ஏக்கம் ததும்ப உருட்டி விழித்தவாறு அவன் மீண்டும் பறவையை, அதுவும் கோபங் கொண்ட பறவையை—காகத்தை அல்லது பருந்தை—உருவத்தில் ஒத்தவன் ஆகி விட்டான். அப்போது எமீலியோ, சீராட்டப் பெறும் குழந்தைகளுக்கு வழக்கமாக நேர்வது போல நொடிப் போதில் எளிதாக முகம் சிவந்தவாறு தமக்கையைப் பார்த்து, விருந்தாளிக்கு சுவாரசியம் ஏற்படுத்த அவள்

---

* ழான் த லபோன்டேன் *(1621—1695)*—*பிரெஞ்சு எழுத்தாளர். ஐந்து கதைத் தொகுப்புக்கள், இன்பியல் நாடகங்கள், நீதிக் கதைகள் முதலியவற்றின் ஆசிரியர். இங்கே எடுத்துக்காட்டப்பட்டிருப்பது ''இரண்டு புறாக்கள்'' என்னும் நீதிக் கதையில் உள்ள வாக்கியம்.*

** *'''ஆம்' என்ற சொல் ஒலிக்கும் தாந்தேயின் நாட்டை'' (இத்.).*

*** *''எல்லா வித நம்பிக்கையையும் விடு...'' (இத்.).*

விரும்பினால் மால்த்ஸின் நகைச்சுவை நாடகங்களில் ஒன்றைப் படித்துக் காட்டுவதை விட மேலாக எதையும் அவளால் கற்பனை செய்ய முடியாது என்றும் அவற்றை அவள் நன்றாகப் படிப்பதாகவும் சொன்னான். ஜெம்மா கலீரென நகைத்தாள், தம்பியின் கையில் அன்பாக அடித்தாள், அவன் ''எப்போதும் இப்படி ஏதாவது கற்பனை செய்கிறான்'' என்று சொன்னாள். ஆயினும் உடனே தன் அறைக்குப் போய், ஒரு சிறு புத்தகத்தை எடுத்துக் கொண்டு திரும்பி, மேசை அருகே விளக்குக்கு எதிரே உட்கார்ந்து, சுற்றும் கண்ணோட்டி, ஒரு விரலை உயர்த்தி, ''பேசாமல் இருக்கச் சொல்கிறேன்!'' என்று தூய இத்தாலியப் பாணியில் சைகை செய்த பிறகு படிக்கத் தொடங்கினாள்.

7

மால்த்ஸ் என்பவர் முப்பதுக்களில் பிராங்க்பர்ட் நகரில் இருந்த இலக்கியவாதி. தமது சுருக்கமான, அனாயாசமாக வரையப்பட்ட கிண்டல் நாடகங்களில் உள்ளூர், பிராங்க்பர்ட் வாசிகளின் மாதிரிகளை, ஆழம் அற்றதாயினும் கேலியும் உற்சாகமும் பொங்கிய நகைச்சுவையுடன் வட்டாரப் பேச்சு மொழியில் தீட்டி வந்தார். ஜெம்மா மெய்யாகவே அற்புதமாக, முழுதும் நடிகை போலப் படித்தாள். இத்தாலிய இரத்தத்தோடு கூடவே மரபு வழியில் பெற்ற தன் நடிப்புக் கலையைப் பயன்படுத்தி ஒவ்வொரு பாத்திரத்தையும் உருவகப்படுத்தினாள். பாத்திரத்தின் சுபாவத்தை அருமையாகச் சித்திரித்தாள். முதுமையால் அறிவு மழுங்கிப்போன கிழவியையோ அசட்டு புர்கோமிஸ்டரையோ உருவகப்படுத்த வேண்டி

இருந்த போது, தன் மென்மையான குரலுக்கோ அழகான முகத்துக்கோ இரக்கம் காட்டாமல் மிக மிக வேடிக்கையான கோரணிகள் செய் தாள், கண்களை நெளித்தாள், மூக்கைச் சுளித் தாள், குழறினாள், கீச்சிட்டாள்... படிக்கை யில் அவளாகச் சிரிக்கவில்லை. ஆனால் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் (பந்தலியோனே நீங்கலாக, ஏனென்றால் quel ferroflucto Tedesco* பற்றிப் பேச்சு தொடங்கியதுமே அவன் கடுங் கோபத்துடன் வெளியேறி விட்டான்), கேட்டுக் கொண்டிருந் தவர்கள் ஒன்று சேர்ந்து வெடிச் சிரிப்பு சிரித்து அவள் படிப்பதை இடை நிறுத்திய போது அவள் புத்தகத்தை, மடியில் வைத்துக் கொண்டு தலையைப் பின்னே சாய்த்து, தானும் கலகலவென நகைத்தாள். அவளுடைய கருங் கூந்தல் சுருள்கள் அவளுடைய கழுத்திலும் குலுங்கிய தோள்களி லும் மென்மையான வளையங்களாகத் துள்ளின. சிரிப்பு நின்றதுமே புத்தகத்தை உயர்த்தி, முக அமைப்புக் கூறுகளுக்கு உரிய வடிவை மீண்டும் அளித்தவாறு ஆழ்ந்த முறையில் படிக்க முற்பட் டாள். ஸானினுக்கு அவளைப் பார்க்கப் பார்க்க அலுக்கவில்லை. அத்தகைய ஆதர்ச எழில் வாய்ந்த முகம் இந்த மாதிரி வேடிக்கையான, சில வேளை களில் அனேகமாக அற்பத்தனம் ததும்பிய தோற் றத்தை எத்தகைய மாயத்தால் திடீரென மேற் கொண்டது என்று எண்ணிச் சிறப்பாக வியப் படைந்தான் ஸானின். இளம் கன்னியரின், "jeunes premières"** எனப்பட்டவர்களின் பாத்திரங்களை

---

* எவனோ பாழாய்ப் போகிற ஜெர்மானியனை (இத்தாலிய, ஜெர்மன் கலப்பு).

** கதாநாயகி (பிரெஞ்சு).

ஜெம்மா படித்த விதம் குறைவாகவே திருப்தி அளித்தது. சிறப்பாகக் காதல் காட்சிகள் அவளுக்கு வாய்க்கவில்லை. அவள் தானே இதை உணர்ந்தாள், எனவே அவற்றுக்கு லேசான கேலிச் சாயல் அளித்தாள்—உவகைப் பெருக்குள்ள இந்த உறுதி மொழிகளையும் ஆடம்பரப் பேச்சுக்களையும் அவள் நம்பவில்லை போல. உண்மையில் நாடகாசிரியரே முடிந்த வரை இவற்றைத் தவிர்த்திருந்தார்.

மாலை எப்படி நொடியாய்க் கழிந்து விட்டது என்பதை ஸானின் கவனிக்கவில்லை. கடிகாரம் பத்து மணி அடித்த போதுதான் தான் செய்ய விருந்த பயணத்தின் நினைவு அவனுக்கு வந்தது. தேள் கொட்டி விட்டது போல நாற்காலி யிலிருந்து துள்ளி எழுந்தான்.

''உங்களுக்கு என்ன?'' என்று கேட்டாள் பிராவு லெஞேரே.

''நான் இன்றைக்கு பெர்லின் போக வேண்டியவன். அஞ்சல் பயணிக் குதிரை வண்டியில் இடம் பிடித்திருக்கிறேன்.''

''வண்டி எப்போது புறப்படுகிறது?''

''பத்தரை மணிக்கு!''

''அப்படியானுல் நீங்கள் இப்போதே நேரம் தாழ்த்து விட்டீர்கள்'' என்ருள் ஜெம்மா. ''இருங்கள்... நான் இன்னும் படிக்கிறேன்.''

''நீங்கள் முழுப் பணமும் கொடுத்து விட்டீர்களா, அல்லது முன் பணம் மட்டுமா?'' என்று விசாரித்தாள் பிராவு லெஞேரே.

''முழுப் பணமும்!'' என்று ஏக்கச் சுளிப்புடன் ஓலமிட்டான் ஸானின்.

ஜெம்மா அவனைப் பார்த்துக் கண்களைச் சுருக்கிக் கொண்டு கலீரென நகைத்தாள். தாயார் அவளைக் கடிந்து கொண்டாள்.

''இளைஞர் பணத்தை வீண் செலவு செய்திருக்கிறார், நீ சிரிக்கிறாயே!'' என்றாள்.

''பரவாயில்லை'' என்று கூறினாள் ஜெம்மா. ''இதனால் இவர் ஒட்டாண்டி ஆகிவிட மாட்டார். நாம் இவரைத் தேற்ற முயல்வோம். லெமனேடு சாப்பிடுகிறீர்களா?''

ஸானின் ஒரு கிளாஸ் லெமனேடு பருகினான். ஜெம்மா மால்த்ஸின் நாடகங்களை மறுபடி படிக்கத் தொடங்கினாள். மீண்டும் பொழுது இன்பமாகக் கழியலாயிற்று.

கடிகாரம் பன்னிரண்டு அடித்தது. ஸானின் விடை பெறலானான்.

''இப்போது நீங்கள் பிராங்க்பர்ட்டில் இன்னும் சில நாட்கள் தங்க வேண்டி இருக்கும்'' என்று அவனிடம் சொன்னாள் ஜெம்மா. ''உங்களுக்கு எங்கே போக அவசரம்? வேறு நகரில் இங்கே விடக் குதூகலமாய் இருக்காது.'' அவள் சற்று பேசாதிருந்தாள். ''மெய்யாகவே இருக்காது'' என்று கூறிப் புன்னகை செய்தாள். ஸானின் பதில் சொல்லவில்லை. பணப்பை காலியாகி விட்டதனால், தான் பணம் கேட்டு எழுத முடிவு செய்திருந்த ஒரு பெர்லின் நண்பனின் பதில் வரும் வரை விருப்பம் இல்லா விட்டாலும் தான் பிராங்க்பர்ட்டில் தங்கி இருக்க வேண்டி வரும் என்று நினைத்துக் கொண்டான்.

''தங்கி இருங்கள், தங்கி இருங்கள்'' என்று பிராவு லெனோரேயும் சொன்னாள். ''ஜெம்மாவின் மணமகன் கார்ல் கிளியூபெரை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம். அவனுக்குத் தன் கடையில் வேலை ஒரேயடியாக நெரிந்ததால் இன்றைக்கு அவனால் வர முடியவில்லை. த்ஸெயிலில் கம்பளி, பட்டுத் துணிகள் விற்கும் ஆகப் பெரிய கடையை

நீங்கள் பார்த்திருப்பீர்களே? அங்கே அவன் தான் முதல்வன். ஆனால் உங்களை அறிமுகம் செய்து கொள்ள அவனுக்கு நிரம்ப மகிழ்ச்சியாய் இருக்கும்.''

இந்தத் தகவல் ஸானினுக்கு—எதனாலோ ஆண்டவனே அறிவான்—சற்று வருத்தம் உண்டாக்கியது. ''அதிர்ஷ்டக்காரன் இந்த மணமகன்!'' என்று எண்ணிக் கொண்டான். ஜெம்மாவைப் பார்வையிட்டான். அவளுடைய விழிகளில் நகையாடும் பாவம் தென்பட்டதாக அவனுக்குத் தோன்றியது. வணங்கி விடை பெறத் தொடங்கினான்.

''நாளை வருவீர்கள் அல்லவா? மெய்தானே, நாளை வருவீர்கள் அல்லவா?'' என்று கேட்டாள் பிராவு லெனோரே.

''நாளை வருவீர்கள்!'' என்று கேள்வியாக இன்றி உறுதிப்படுத்தும் தோரணையில் சொன்னாள் ஜெம்மா, வேறு விதமாக இருக்க முடியாது போல.

''நாளை வருவேன்!'' என்று பதிலளித்தான் ஸானின்.

எமீலியோ, பந்தலியோனே, சடைநாய் மூவரும் வீதி முனை வரை வந்து அவனை வழி அனுப்பினார்கள். ஜெம்மாவின் வாசிப்பு பற்றித் தன் அதிருப்தியை வெளியிடாதிருக்கப் பந்தலியோனேக்குப் பொறுமை இல்லை.

''அவளுக்கு வெட்கமாய் இல்லையே! கோரணி செய்கிறாள், கீச்சிடுகிறாள் —una carricatura! மெரோப்பாவாகவோ* அல்லது கிளிதம்

* மெரோப்பா—கிரேக்க-ரோமானியச் செவிவழிக் கதையின் நாயகி. மெஸ்ஸென் அரசனை

னெஸ்திராவாகவோ* நடிக்க வேண்டும் இவள் —மகத்தான, துன்பமயமான பாத்திரத்தில். இவள் என்னடா என்ருல் எவளோ கடைகெட்ட ஜெர்மன்காரியை ஏளனம் செய்கிருள்! இந்த மாதிரி என்னுலுந்தான் முடியும்... மெர்த்ஸ், கெர்த்ஸ், ஸ்மெர்த்ஸ்'' என்று முகத்தை முன்னே தள்ளி விரல்களை விரித்தவாறு கூறிஞன் பந்தலியோனே, தர்த்தாலியா அவனைப் பார்த்துக் குலைத்தது, எமீலியோவோ கெக்கலி கொட்டிச் சிரித்தான். கிழவன் சட்டெனத் திரும்பி நடந்தான்.

ஸானின் ''வெள்ளை அரச அன்னம்'' விடுதிக்கு (அங்கே பொதுக் கூடத்தில் தன் சாமான்களை வைத்திருந்தான்) கணிசமாகக் குழம்பிய மனநிலையில் போய்ச் சேர்ந்தான். இந்த ஜெர்மன்-பிரெஞ்சு-இத்தாலிய உரையாடல்கள் எல்லாம் அவனுடைய காதுகளில் அப்படியே ஒலித்துக் கொண்டிருந்தன.

தனக்குத் தரப்பட்ட அடக்கமான அறையில் படுக்கையில் படுத்தவாறு, ''மணமகள்!'' என்று கிசுகிசுத்தான். ''அதோடு அழகியுங்கூட! ஆனுல் நான் எதற்காகத் தங்கினேன்?''

எனினும் மறுநாள் பெர்லின் நண்பனுக்குக் கடிதம் அனுப்பிஞன்.

---

கிரெஸ்போந்தின் மனைவி. அவளுடைய கணவனையும் புதல்வர்களையும் கொன்ற கொடுங்கோலன் பொலிபோந்த் அவளை வலிய மனைவி ஆக்கிக் கொண்டான்.

* கிளிதம்னெஸ்திரா—தொன்மைக் கிரேக்கப் புராணக் கதையில் வரும் அரசன் அகமெம்னோனின் மனைவி. தன் கணவனைக் கொன்றவள், புதல்வன் அரெஸ்தால் கொல்லப்பட்டவள்.

## 8

அவன் நல்லுடை அணிவதற்குள் இரண்டு திருவாளர்கள் வந்திருப்பதாகப் பரிசாரகன் அறிவித்தான். அவர்களில் ஒருவன் எமீலியோ. மற்றவன், எடுப்பான தோற்றமும் நெடிய மேனியும் மிகத் திருத்தமான முகமும் கொண்ட இளைஞன். அவன்தான் அழகி ஜெம்மாவின் மணமகனை ஹெர் கார்ல் கிளியூபெர்.

அந்தக் காலத்தில் பிராங்க்பர்ட் முழுவதிலும் எந்த ஒரு கடையிலும் ஹெர் கிளியூபெர் போன்று மரியாதையும் பண்பும் பெருமிதமும் வினயமும் உள்ள தலைமை அலுவலன் இருக்கவில்லை என்று எண்ண வேண்டும். குற்றங்காண முடியாதபடிக் கச்சிதமாய் இருந்த அவனது உடை அவனுடைய மேனிப் பொலிவையும் பழகு முறையில் காணப் பட்ட நயத்தையும்—ஆங்கிலேயரது போன்று ஓரளவு ஒழுங்குக் கண்டிப்பும் அடக்கமும் கொண்டிருந்தாலும் (அவன் இரண்டு ஆண்டுகள் இங்கிலாந்தில் இருந்தான்), கவர்ச்சி உள்ள நயத்தையும்—போலவே உயர் தரமாக இருந்தது! அழகும் சிறிது கண்டிப்பும் உள்ள, அருமையாகப் பயிற்றி வளர்க்கப்பட்ட, சிறப்பாகக் கழுவித் துப்புரவாக்கப்பட்ட இந்த இளைஞன் மேலே உள்ளவர்களுக்குக் கீழ்ப்படியவும் கீழே உள்ளவர்களுக்கு ஆணையிடவும் பழகி இருக்கிறான், தன் கடைக் கல்லாவில் இருக்கையில் இவன் வாடிக்கைக்காரர்களின் மரியாதையைக் கட்டாயம் பெற வேண்டும் என்பது முதல் பார்வையிலிருந்தே தெளிவாய் இருந்தது. அவனுடைய இயற்கைக்கு மீறிய நேர்மையைப் பற்றிச் சிறிதளவும் சந்தேகம் இருக்க முடியவில்லை. கஞ்சி போட்டு முடமுடப்

பாக இருந்த அவனுடைய கழுத்துப் பட்டையைப் பார்ப்பதே போதுமானதாய் இருந்தது! அவனுடைய குரலும் எதிர்பார்த்திருக்கக் கூடிய வகையானதாக இருந்தது. அது கனமானது, தன்னம்பிக்கையைக் காட்டும் கணீரொலி உள்ளது, ஆனால் மட்டுமீறி உரத்தது அல்ல, ஒலிப்பில் ஓரளவு கனிவு கூடக் கொண்டது. இந்த மாதிரிக் குரலால் கீழே வேலை செய்பவர்களுக்குக் கட்டளைகள் இடுவது சிறப்பாக வசதியானது: ''அந்த லியோன் சிவப்பு வெல்வெட்டுத் துணியை எடுத்துக் காட்டும்!'' அல்லது: ''இந்தச் சீமாட்டிக்கு உட்கார நாற்காலி போடும்!''

ஹெர் கிளியூபெர் தன்னை அறிமுகம் செய்து கொள்வதிலிருந்து தொடங்கினான். அப்போது அவன் உயர்குடிப் பாங்கில் மேனியை முன் சாய்த்து, இனிமையாகக் கால்களை நகர்த்தி ஒரு குதியால் மறு குதியை வெகு நாகரிகமாகத் தொட்டான். அதைக் கண்டவன் எவனும் ''இந்த ஆளின் உள்ளாடைகளும் உளப் பண்புகளும் முதல் தரமானவை!'' என்று கட்டாயமாக உணர்ந்திருக்க வேண்டும். திறந்திருந்த வலது கையின் சீர்பாடு (ஸ்வீடிஷ் கையுறை அணிந்த இடது கரத்தில் அவன் கண்ணாடி போன்று மெருகேற்றிய தொப்பியைப் பிடித்திருந்தான், அதன் அடியில் கிடந்தது மறு கையுறை)—அந்த வலது கையின் சீர்பாடு நம்பவே முடியாத அளவு சிறப்பாய் இருந்தது. ஒவ்வொரு நகமும் செவ்வைப்பாட்டின் சிகரமாகத் திகழ்ந்தது! இந்தக் கரத்தை அவன் பணிவுடன், ஆனால் உறுதியாக, ஸானின் பக்கம் நீட்டினான். பிறகு அவன் மிகச் சிறந்த ஜெர்மன் மொழியில் பேசத் தொடங்கினான். தன் வருங்கால உறவினனுக்கு, தன் மணமகளின் தம்பிக்கு,

மிக அவசியமான உதவி செய்த திருவாளர் அயல் நாட்டாருக்குத் தன் வணக்கத்தையும் நன்றியை யும் தெரிவிக்க விரும்பியதாகக் கூறினுன். அப் போது அவன் தொப்பியைப் பிடித்திருந்த இடது கையால் எமீலியோவின் பக்கம் சுட்டினுன். சிறுவனே, வெட்கம் அடைந்தவன் போல சன்னல் புறம் திரும்பி விரலை வாயில் விட்டுக் கொண்டான். திருவாளர் அயல்நாட்டாருக்கு உவப்பான எதை யேனும் செய்யத் தன்னுல் முடிந்தால் தன்னைப் பேறு பெற்றவனுகக் கருதிக் கொள்வான் என்ருன் ஹெர் கிளியூபெர்.ஸானின், கொஞ்சம் சிரமத்துடன், ஜெர்மன் மொழியில் பதில் சொன்னுன். தனக்கு நிரம்ப மகிழ்ச்சி... தான் செய்த உதவி பிரமாத மானது அல்ல... என்று கூறிய பின் வந்தவர்களை உட்காரச் சொன்னுன். ஹெர் கிளியூபெர் நன்றி தெரிவித்து, கோட்டு முனைகளைச் சட்டென விலக்கி நாற்காலியில் அமர்ந்தான். ஆனுல் அவன் லேசாக அமர்ந்து உறுதியின்றி உட்கார்ந்திருந்ததிலிருந்து, ''இந்த ஆள் மரியாதைக்காக உட்கார்ந்திருக் கிருன், இதோ பறந்து விடுவான்!'' என்று புரிந்து கொள்ளாதிருக்க முடியாவில்லை. உண்மையில் அவன் தாமதமின்றிப் பறந்து விட்டான். தான் கடைக்குஅவசரமாகப் போவதால்—வேலை எல்லா வற்றுக்கும் முன்னுல்!—அதிக நேரம் இருக்க முடியாது என்று நாட்டியம் ஆடுபவன் போலக் கால்களை வெட்கத்துடன் இரண்டு தரம் மாற்றி வைத்தவாறு அறிவித்தான். ஆனுல் மறு நாள் ஞாயிற்றுக் கிழமை ஆதலால், பிராவு லெஞேரே, பிரேய்லின் ஜெம்மா இருவரதும் இசைவுடன் ஸோடெனுக்கு உல்லாசப் பயணம் போக ஏற்பாடு செய்திருப்பதாகவும் அதில் சேர்ந்து கொள்ளத் திருவாளர் அயல்நாட்டாரைப் பணிவுடன் அழைப்

பதாகவும், தமது வருகையால் அதற்கு அணி செய்ய அவர் மறுக்க மாட்டார் என்று நம்புவ தாகவும் கூறினன். ஸானின் அதற்கு அணி செய்ய மறுக்கவில்லை. ஹெர் கிளியூபெர் மறுமுறை வணக்கம் தெரிவித்து விட்டு, மிக மிக மென்மை யான பச்சை நிறச் சராய் இதமாகப் பளிச்சிட, புத்தம் புதிய பூட்சுகள் அவ்வாறே இதமாக நெறு நெறுக்க அங்கிருந்து அகன்றுன்.

9

ஸானின் உட்காரச் சொன்ன பிறகும் சன்னல் பக்கம் பார்த்தவாறு தொடர்ந்து நின்று கொண் டிருந்த எமீலியோ தன் வருங்கால உறவினன் வெளியேறியதுமே முழுத் திருப்பம் திரும்பி, தான் இன்னும் கொஞ்ச நேரம் அவனுடைய அறை யில் இருக்கலாமா என்று சிறுவர்களின் வழக்கப் படி முகத்தைச் சுளித்துக் கொண்டும் சிவந்து கொண்டும் ஸானினிடம் கேட்டான்! ''எனக்கு இன்று உடம்பு எவ்வளவோ நன்றுய் இருக்கிறது, ஆனல் நான் வேலை செய்யக் கூடாது என்று டாக் டர் சொல்லி விட்டார்'' என்றுன்.

''இருங்கள்! நீங்கள் எனக்குக் கொஞ்சங்கூட இடைஞ்சல் செய்யவில்லை'' என்று உடனே ஒப் புதல் தெரிவித்தான் ஸானின். ஒவ்வோர் உண்மை ருஷ்யனையும் போல, ஏதாவது செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்துக்குத் தான் ஆளாகாமல் இருக்கும் பொருட்டு, கிடைத்த முதலாவது சாக்கை மகிழ்ச்சி யுடன் பற்றிக் கொண்டான் அவன்.

எமீலியோ அவனுக்கு நன்றி தெரிவித்தான். மிகக் குறுகிய நேரத்தில் அவனுக்கும் அவனுடைய இருப்பிடத்திற்கும் பழகி விட்டான், அவனுடைய

சாமான்களை விரிவாகப் பார்வையிட்டான், அவற்றில் அனேகமாக ஒவ்வொன்றையும் பற்றி, அவன் அதை எங்கே வாங்கினான், அதனுடைய சிறப்பு என்ன என்று விசாரித்தான். ஸானின் முகம் மழித்துக் கொள்ள உதவினான், அவன் மீசை வளர்க்காமல் இருப்பது வீண் என்று கூறினான். முடிவில் தன் தாயாரையும் தமக்கையையும் பந்தலியோனேயையும் சடைநாய் தர்த்தாலியாவையும் பற்றிக் கூட ஏராளமான விவரங்களைத் தெரிவித்தான். தங்கள் வாழ்க்கை நிலைமைகள் எல்லாவற்றையும் விவரித்தான். எமீலியோவிடம் இருந்த கூச்சத்தின் சுவட்டையே காணோம். ஸானின் பால் அவனுக்குத் திடீரென்று மட்டுமீறிய கவர்ச்சி ஏற்பட்டது. தலைக்கு நாள் அவன் தன் உயிரைக் காப்பாற்றினான் என்பதால் அல்லவே அல்ல. அவன் அவ்வளவு கவர்ச்சி உள்ளவனாக இருந்ததால் தான்! ஸானினுக்குத் தன் அந்தரங்கங்கள் எல்லாவற்றையும் தெரிவிக்க அவன் தயங்கவில்லை. தாயார் தன்னை வியாபாரி ஆக்கக் கட்டாயமாக விரும்புவதாகவும் ஆனால் தான் பிறவிக் கலைஞன், இசைஞன், பாடகன் என்பது தனக்குத் தெரியும், நிச்சயமாகத் தெரியும் என்றும், அரங்கக் கலை தன்னுடைய இரத்தத்தில் ஊறியிருப்பதாகவும் பந்தலியோனே கூடத் தன்னை ஊக்குவிப்பதாகவும் திருவாளர் கிளியூபெர் தாயாரை ஆதரிப்பதாகவும் அவள் மேல் அவருக்குப் பெருத்த செல்வாக்கு உண்டு என்றும் தன்னை வியாபாரி ஆக்கும் எண்ணமே திருவாளர் கிளியூபெருடையதுதான் என்றும், வியாபாரி பதவிக்கு உலகில் எதுவும் ஈடாக முடியாது என்பது அவருடைய கருத்து என்றும் தனிப்பட்ட ஆவேசத்துடன் கூறினான்! கம்பளித் துணியும் வெல்வெட்டும் விற்பதும்

பொது மக்களை ஏமாற்றுவதும் அவர்களிடம் "Narren-oder Russen-Preise" (முட்டாள்தனமான அல்லது ருஷ்ய விலைகள்) வாங்குவதும்தான் அவருடைய குறிக்கோள் என்றான்!*

ஸானின் உடை அணிந்து தயார் ஆகி, பெர்லினுக்குக் கடிதம் எழுதி முடித்ததும், "நல்லது, இப்போது எங்கள் வீட்டுக்குப் போக வேண்டும்!" என்று கூறினான்.

"இன்னும் நேரம் ஆகவில்லையே" என்றான் ஸானின்.

"அதனால் ஒன்றும் இல்லை" என்று கொஞ்சலாக ஸானினுடன் ஒண்டிக் கொண்டான் எமீலியோ. "போவோம் வாருங்கள்! அஞ்சலகத்துக்கு முதலில் போவோம், அங்கிருந்து எங்கள் வீட்டுக்கு. உங்களைக் கண்டு ஜெம்மா நிரம்ப மகிழ்வாள்! எங்கள் வீட்டில் காலைச் சிற்றுண்டி சாப்பிடுங்கள்... என்னைப் பற்றி, என் தொழிலைப் பற்றி, அம்மாவிடம் நீங்கள் ஏதாவது சொல்லலாம்..."

"சரி, வாருங்கள் போவோம்" என்றான் ஸானின். அவர்கள் புறப்பட்டார்கள்.

## 10

ஜெம்மா அவன் வரவால் உண்மையாகவே மகிழ்ச்சி அடைந்தாள். பிராவு லெனோரேயும்

---

* முன் காலத்தில்—ஒருவேளை இப்போதும் இது மறைந்து விடவில்லை—மே மாதம் முதல் ஏராளமான ருஷ்யர்கள் பிராங்க்பர்ட் போய்ச் சேர்ந்த போது எல்லாக் கடைகளிலும் விலைகள் அதிகரித்தன, "Russen-" அல்லது, அந்தோ! "Narren-Preise" என்ற பெயரைப் பெற்றன (ஆக்கியோர் குறிப்பு).

மிகுந்த நட்புடன் அவனை வரவேற்றாள். இருவர் மீதும் தலைக்கு நாள் அவன் நல்ல உளப்பதிவு ஏற்படுத்தியது தெரிந்தது. எமீலியோ காலைச் சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்யப் போனவன், ''மறவாதீர்கள்!'' என்று ஸானின் காதோடு கிசுகிசுத்தான்.

''மறக்க மாட்டேன்'' என்று பதில் அளித்தான் ஸானின்.

பிராவு லெனோரேக்கு உடம்பு கொஞ்சம் சரியாய் இல்லை. அவளுக்குக் கடுமையான ஒற்றைத் தலைவலி. சாய்வு நாற்காலியில் பாதி படுத்தவாறு அசையாதிருக்க முயன்று கொண்டிருந்தாள். ஜெம்மா அகலமான மஞ்சள் பிளவுஸ் அணிந்து கறுப்புத் தோல் வாரால் இடையில் இறுக்கி இருந்தாள். அவளும் களைப்பு அடைந்தவளாகக் காணப்பட்டாள், சற்று வெளிறி இருந்தாள். அவளது கண்களைச் சுற்றிக் கரிய வட்டங்கள் படிந்திருந்தன. ஆயினும் விழிகளின் ஒளி இதனால் குறைந்துவிடவில்லை. வெளிறலோ, அவளுடைய முகத்தின் கண்டிப்பான பண்டை ரோமானிய அமைப்புக் கூறுகளுக்கு மர்மமான, இனிய தன்மையை அளித்தது. அவளுடைய கரங்களின் பண்பட்ட அழகு அன்றைய தினம் ஸானினுக்குச் சிறப்பாக வியப்பூட்டியது. தன் பளபளப்பான கருங் குழலை அவற்றால் அவள் கோதிய போதும் பிடித்துக் கொண்ட போதும் அவளுடைய விரல்களிலிருந்து பார்வையை அகற்ற அவனால் முடியவில்லை. அவை நீளமானவை, ஒன்றிலிருந்து ஒன்று விலகியவை, ரபேல் தீட்டிய போர்னரினாவின்* விரல்கள் போல.

---

* வாழ்க்கை வரலாற்றை ஒட்டிய செவிவழிக் கதையின்படி, போர்னரினா என்னும் ஏழைப்

வெளியே படு வெக்கையாக இருந்தது. காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு ஸானின் வெளியேற விரும்பினுன். ஆனுல் இந்த மாதிரி நாளில் இடத்தை விட்டு நகராமல் இருப்பதே மேல் என்று எல்லோரும் சொல்லவே அவன் இசைந்து அங்கேயே தங்கிவிட்டான். வீட்டு மாதர்களுடன் அவன் உட்கார்ந்த பின்கட்டு அறையில் குளுகுளு வென்று இருந்தது. வேல மரங்கள் அடர்ந்த சிறு தோட்டத்தைப் பார்த்திருந்தது சன்னல். தங்க மலர்கள் பூத்துக் குலுங்கிய அடர்ந்த மரக்கிளை களில் ஏராளமான தேனீக்களும் குளவிகளும் பெருந்தேனீக்களும் ஒன்ருக மொய்த்துப் பேரோசையுடன் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. பாதி மூடிய சன்னல் கதவுகளுக்கும் தொங்க விடப் பட்ட திரைகளுக்கும் ஊடாக அறைக்குள் வந்தது இந்த ஓய்வற்ற ஒலி. வெளிக் காற்றில் பரவி இருந்த வெக்கையை உணர்த்தியது அது. வசதி யுள்ள மூடிய அறையின் குளுமை இதனுல் இன் னும் இனியது ஆயிற்று.

முந்திய நாளில் போலவே ஸானின் நிறையப் பேசினுன், ஆனுல் ருஷ்யாவைப் பற்றியோ ருஷ்ய வாழ்க்கையைப் பற்றியோ அல்ல. காலையாகாரம் முடிந்ததுமே கணக்கு வேலை கற்பதற்காக எமீலியோ ஹெர் கிளியூபெரிடம் அனுப்பப்பட்டான். தன் இளம் நண்பனின் விருப்பத்தை நிறை வேற்றும் பொருட்டு ஸானின் கலையிலும் வியா பாரத்திலும் உள்ளஒப்பீடான சாதக பாதகங்களைப்

---

பெண் இத்தாலிய ஓவியர் ரபேல் மீது காதல் கொண்டிருந்தாள். ரோம் நகரில் பார்பெரீனி மாளிகையில் உள்ள உருவப் படம் அவளுடைய பெயரால் குறிக்கப்படுகிறது.

பற்றிப் பேச்சு தொடங்கினான். பிராவு லெனேரே வியாபாரத்தின் சார்பில் இருந்தது அவனுக்கு வியப்பு அளிக்கவில்லை, அவன் இதை எதிர்பார்த் தான். ஆனால் ஜெம்மாவும் அவளுடைய கருத்தைப் பகிர்ந்து கொண்டாள்.

''ஒருவன் கலைஞன், அதிலும் பாடகன் என்றால்'' என்று கையை மேலும் கீழும் துடியாக ஆட்டியவாறு பேசத் தொடங்கி, ''அவன் கட் டாயமாக முதல் இடத்தில் இருக்க வேண்டும்!'' என்று உறுதியாகக் கூறினாள். ''இரண்டாவது இடம் எதற்கும் உதவாது. ஒருவனால் முதல் இடத்தை எட்ட முடியுமா என்று யார் கண்டார் கள்?'' பந்தலியோனேயும் உரையாடலில் பங்கு கொண்டான் (நெடுங்காலப் பணியாள், முதியவன் என்ற காரணத்தால் வீட்டுக்காரர்களுக்கு முன் னால் நாற்காலியில் உட்காரக்கூட அவன் அனு மதிக்கப்பட்டான். பழகு முறைகள் விஷயத்தில் இத்தாலியர்கள் பொதுவாகவே கண்டிப்பு உள்ள வர்கள் அல்ல). அவன் கலைக்கு அசையாத ஆதரவு அளித்தான் என்று கூறவே வேண்டாம். உள் ளதைச் சொன்னால், அவனுடைய வாதங்கள் பெரிதும் பலவீனமாக இருந்தன. முதன்மையாக ஒருவனுக்கு d'un certo estro d'inspirazione—உள் தூண்டலின் பெருக்கு—இருக்க வேண்டும் என்றே பெரும்பாலும் சொல்லிய வண்ணமாய் இருந் தான் அவன்! அவனுக்கும் இந்த ''estro'' கட்டாயம் இருந்திருக்கும் என்று பிராவு லெனேரே அவ னிடம் கூறி, ஆனால்... என்று இழுத்தாள்.

''எனக்குப் பகைவர்கள் இருந்தார்கள்'' என்று ஏக்கத்துடன் சொன்னான் பந்தலியோனே.

''எமீலியோவுக்கு இந்த 'estro' இருக்கும் என்று வைத்துக் கொண்டால் கூட அவனுக்குப்

பகைவர்கள் இருக்க மாட்டார்கள் என்று நீ எப்படிக் கண்டாய் (இத்தாலியர்கள் எளிதாக 'நீ' போட்டுப் பேசுவார்கள் என்பது தெரிந்ததே)?''

''அப்படியானால் சரி, இவனை வியாபாரி ஆக்கிக் கொள்ளுங்கள்'' என்று எரிச்சலுடன் சொன்னான் பந்தலியோனே, ''ஜியோவான்னி பத்தீஸ்தா மிட்டாய்க் கடைக்காரனாய் இருந்தாலும் இப்படிச் செய்திருக்க மாட்டான்!''

''என் கணவன் ஜியோவான்னி பத்தீஸ்தா நல்லறிவுள்ளவன். இள வயதில் அவன் ஈடுபாடு கொண்டிருந்தால்...''

ஆனால் அவள் பேச்சைக் கேட்கக் கிழவன் விரும்பவில்லை. அவன் வெளியேறி விட்டான்.

''ஆ! ஜியோவான்னி பத்தீஸ்தா!..'' என்று கண்டனக் குரலில் இன்னொரு தரம் சொல்லி விட்டுப் போனான்.

எமீலியோ தான் தேசபக்தன் என்று உணர்ந்து, இத்தாலியின் விடுதலைக்குத் தன் ஆற்றல்கள் எல்லாவற்றையும் அர்ப்பணிக்க விரும்பினால், அத்தகைய உயர்ந்த, புனிதமான குறிக்கோளுக்காக வசதியுள்ள வருங்கால வாழ்க்கையைத் தியாகம் செய்யலாம், சந்தேகம் இல்லாமல், ஆனால் அரங்கத்துக்காக அல்ல என்று கூவினாள் ஜெம்மா! இதைக் கேட்ட பிராவு லெனோரே பதற்றம் அடைந்து, குறைந்த பட்சம் தம்பியின் மூளையையாவது குழப்பாமல் இருக்கும்படியும், தான் இப்படி மூர்க்கமான குடியரசுவாதியாக இருப்பதுடன் திருப்தி அடையும்படியும் மகளைக் கேட்டுக் கொண்டாள். இந்தச் சொற்களைக் கூறிய பின் பிராவு லெனோரே ஓவென்று முனகி, தலை வலிப்பதாக முறையிடலானாள். அது ''வெடித்து விடும் போல் இருப்பதாகக்'' கூறினாள். (விருந்

தாளிக்கு மரியாதை காட்டுவதற்காக பிராவு லெஞ்ஞேரே மகளுடன் பிரெஞ்சு மொழியில் பேசினாள்.)

ஜெம்மா உடனே அவளுக்கு உபசாரம் செய்வதில் முனைந்தாள். • தாயாரின் நெற்றியை ஓடிகொலோனால் நனைத்து அதன் மேல் மெதுவாக ஊதினாள், அவளுடைய கன்னங்களில் மெல்லென முத்தம் இட்டாள், அவளுடைய தலையைத் தலையணையில் கிடத்தினாள், பேசக் கூடாது என்று அவளுக்கு ஆணையிட்டு மறுபடி அவளை முத்தமிட்டாள். பிறகு ஸானினைப் பார்த்து, பாதி கிண்டலாகவும் பாதி உள நெகிழ்ச்சியுடனும் பேசத் தொடங்கி, தன்னுடைய தாயார் எவ்வளவு அருமையானவள், எப்பேர்ப்பட்ட அழகியாய் இருந்தாள் என்றவள், ''அட நான் என்ன சொல்லுகிறேன், இருந்தாள் என்று! இப்போதும் அவள் எவ்வளவு அழகு! பாருங்கள், பாருங்கள், இவளுடைய கண்கள் எப்பேர்ப்பட்டவை என்று!'' எனக் கூறினாள்.

பையிலிருந்த வெள்ளைக் கைக்குட்டையைச் சட்டென எடுத்து, தாயாரின் முகத்தை அதனால் மூடி, கைக்குட்டை விளிம்பை மேலிருந்து கீழே மெதுவாக இழுத்து, பிராவு லெஞ்ஞேரேயின் நெற்றி, புருவங்கள், கண்கள் ஆகியவற்றை வரிசையாக காட்டினாள். சற்றுப் பொறுத்து அவற்றைத் திறக்கச் சொன்னாள். தாயார் அப்படியே செய்தாள். ஜெம்மா பரவசமடைந்து ஆரவாரித்தாள் (பிராவு லெஞ்ஞேரேயின் கண்கள் மெய்யாகவே மிக அழகாக இருந்தன). பின்பு, தாயாருடைய முகத்தின் குறைந்த செப்பமுள்ள கீழ்ப் பகுதி மேல் கைக்குட்டையை விரைவாக இழுத்து, விட்டு, அவளை மறுபடி ஆர்வத்துடன் முத்தமிட

லாஞள். பிராவு லெஞேரே சிரித்தாள், சற்றே ஒருக்கணித்து, தன் மகளே அப்பால் தள்ளுவது போல மெய்ப்புக்குச் சைகை செய்தாள், மகளும் தாயாருடன் சண்டையிடுவது போலப் பாசாங்கு செய்து கொஞ்சலாக அவளுடன் ஒண்டிக் கொண் டாள்—ஆனல் பூனே போல அல்ல, பிரெஞ்சுப் பாணியில் அல்ல, வலிமை இருப்பதை எப் போதும் உணர்த்தும் இத்தாலிய ஒயிலுடன்.

தான் களேத்துப் போனதாக முடிவில் பிராவு லெஞேரே அறிவித்தாள்... அங்கேயே, நாற்காலி யில் சிறிது உறங்கும்படி அப்போது அவளுக்கு யோசனே சொன்ஞள் ஜெம்மா. ''திருவாளர் ருஷ்யரும்—'avec le monsieur russe'—நானும் சத்தமே காட்டாமல், கம்மென்று இருப்போம்... சின்னச் சுண்டெலிகள் போல... 'comme des petites souris' என்ருள். பிராவு லெஞேரே பதிலுக்கு அவளே நோக்கிப் புன்னகை செய்து, கண்களே மூடிக் கொண்டு, சற்றுப் பெருமூச்செறிந்து தூங்கத் தொடங்கிஞள். ஜெம்மா அவள் அருகே பெஞ் சியில் சட்டென அமர்ந்தவள், மேற்கொண்டு அசையவில்லே, ஒரு கை விரலே மட்டும் எப் போதாவது உதடுகள் மேல் வைத்துக் கொண் டாள்—மறு கையால் தாயாரின் தலேக்குப் பின் இருந்த தலேயணேயைப் பிடித்துக் கொண்டிருந் தாள். ஸானின் துளி அசைந்தாலும் அவனே ஒரப் பார்வையாகப் பார்த்து ஷ்-ஷ் என்று மெல் லொலி செய்தாள். விளேவாக அவன் கட்டை யாய் விரைத்துப் போஞன், மந்திரத்தால் கட் டுண்டவன் போல அசையாமல் உட்கார்ந்திருந் தான், தனக்கு முன் விரிந்த காட்சியை உள ஆற்றல்கள் எல்லாவற்ருலும் பரவசத்துடன் நோக்கிக் கொண்டிருந்தான்: அரை இருள் சூழ்ந்த

அறை, அதில் பழங்காலப் பச்சைத் தம்ளர்களில் ஒளிப் புள்ளிகள் போல இங்கும் அங்கும் சுடர்ந்த அன்றலர்ந்த தளதளப்பான ரோஜாப் பூக்கள், அடக்கமாக மடக்கிய கைகளும் தலையணையின் பனி வெண்மையால் விளிம்பு கட்டிய நல்லியல் புள்ளகளைத்த முகமும் கொண்ட உறங்கும் மாது, இளமையும் நுட்பமான எச்சரிப்பு உணர்வும் அதே போன்ற நல்லியல்பும் அறிவுக் கூர்மையும் தூய்மை யும் வருணிக்க முடியாத அழகும் உள்ள இந்த ஜீவன், கருமையும் ஆழமும் வாய்ந்து நிழலார்ந் தவை ஆயினும் ஒளி வீசும் விழிகள் கொண்ட இந்தப் பெண்... என்ன இது? கனவா? கற்பனைக் கதையா? **அவன்** எப்படி இங்கே இருக்கிறான்?

## 11

வெளிக் கதவுக்கு மேலே கணகணவென்று மணி அடித்தது. மென்மயிர்த்தோல் தொப்பியும் சிவப்பு மார்புச் சட்டையும் அணிந்த விவசாயி இளைஞன் ஒருவன் வீதியிலிருந்து மிட்டாய்க் கடைக்குள் வந்தான். காலை முதல் ஒரு வாடிக் கைக்காரன் கூட அதற்குள் வரவில்லை... ''இது தான் நாங்கள் வியாபாரம் செய்யும் அழகு!'' என்று காலைச் சிற்றுண்டியின் போது பெருமூச் சுடன் ஸானினிடம் சொன்னாள் பிராவு லெனோரே. இப்போது அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். தலையணையிலிருந்து கையை எடுக்க அஞ்சிய ஜெம்மா, ''போங்கள், எனக்குப் பதில் நீங்கள் கடையை நடத்துங்கள்!'' என்று ஸானின் காதோடு சொன்னாள். அவன் உடனே நுனிக் கால்களால் நடந்து கடைப் பகுதிக்குப் போனான். இளைஞ

னுக்கு அரை ராத்தல் பெப்பெர்மிண்ட் வில்லை கள் வேண்டி இருந்தது.

''இவனிடம் எவ்வளவு வாங்க வேண்டும்?'' என்று கதவின் மறுபுறமிருந்து ஜெம்மாவிடம் கிசு கிசுக் குரலில் கேட்டான் ஸானின்.

''ஆறு கிரேய்த்ஸெர்கள்!'' என்று அவ்வாறே கிசுகிசுத்தாள் ஜெம்மா.

ஸானின் அரை ராத்தல் நிறுத்தான், காகிதம் தேடி எடுத்தான், பொட்டலம் கட்டுவதற்காக அதைக் கொம்பு வடிவில் சுருட்டினான், வில்லை களைப் பொட்டலம் கட்டினான், அவற்றைச் சிதறி னான், மறுபடியும் பொட்டலம் கட்டினான், மறுபடி யும் சிதறினான், முடிவில் அவற்றைக் கொடுத்துப் பணத்தை வாங்கினான்... இளைஞன் தொப்பியை வயிற்றின் மேல் வைத்தவாறு அவனை வியப் புடன் பார்த்துக் கொண்டிருந்தான். பக்கத்து அறையில் ஜெம்மா வாயை இறுகப் பொத்திக் கொண்டு சிரிப்பை அடக்க மாட்டாமல் தவித்துக் கொண்டிருந்தாள். இந்த வாடிக்கைக்காரன் போனதும் போகாததுமாக அடுத்தவன் வந்தான், பின் மூன்றுமவன்... ''எனக்கு ஆகி வந்த கை போலிருக்கிறதே!'' என்று எண்ணிக் கொண்டான் ஸானின். இரண்டாமவன் ஒரு தம்ளர் வாதுமைப் பால் பானம் கேட்டான், மூன்றுமவன் அரை ராத் தல் மிட்டாய்கள் வாங்கினான். ஸானின் உற்சாக மாகச் சிறு கரண்டிகளை ஓசைப்படுத்துவதும் தட்டுக்களை இங்கும் அங்கும் நகர்த்துவதும் பெட்டிகளிலும் பாத்திரங்களிலும் விரல்களை அஞ்சாமல் நுழைப்பதுமாக அவர்களுடைய தேவைகளை நிறைவேற்றினான். முடிவில் கணக்குப் பார்த்தபோது வாதுமைப்பால் பானத்தை அவன் மலிவாக்கி விட்டான், மிட்டாய்களுக்கு இரண்டு

கிரேய்த்ஸெர்கள் அதிகம் வாங்கி விட்டான் என்று தெரிந்தது. ஜெம்மா வாய்க்குள் சிரிப்பதை நிறுத்தவே இல்லை. ஸானினும் அசாதாரணமான களிப்பை, தனிவகையான இன்ப மனநிலையை உணர்ந்தான். ஆயுள் முழுவதும் இப்படியே கல்லா பக்கத்தில் நின்று மிட்டாய்களும் வாதுமைப்பால் பானமும் விற்பனை செய்து கொண்டிருக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. இதற்கிடையே கதவின் மறு புறமிருந்து நட்பார்ந்த கேலிச் சிரிப்பு ஒளிர்ந்த விழிகளால் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தது அந்த இனிய ஜீவன். சன்னல்களுக்கு எதிரே வளர்ந்திருந்த செஸ்ட்நட்டு மரங்களின் அடர்ந்த தழைகளின் ஊடாக வந்த கோடை வெயில் நண்பகல் கிரணங்களதும் நண்பகல் நிழல்களதும் பைம்பொன் ஒளிர்வால் அறை முழுவதையும் நிறைத்துக் கொண்டிருந்தது. சோம்பல், கவலையின்மை, இளமை—அரும்பத் தொடங்கி இருந்த புத்திளமை—ஆகியவற்றின் இனிய சோர்வில் விளைந்த இன்பத்தைத் துய்த்துக் கொண்டிருந்தது இதயம்!

நான்காம் வாடிக்கைக்காரன் ஒரு கோப்பை காப்பி கேட்டான். பந்தலியோனேயைக் கூப்பிட வேண்டியதாயிற்று (எமீலியோ ஹெர் கிளியூபெரின் கடையிலிருந்து இன்னும் திரும்பவில்லை). ஸானின் மறுபடி ஜெம்மாவின் அருகில் உட்கார்ந்தான். பிராவு லெனோரே தொடர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள், அவளுடைய மகளுக்கு அதனால் மிகுந்த திருப்தி ஏற்பட்டது.

''தூங்கும் போது அம்மாவின் தலைவலி போய் விடும்'' என்று கூறினாள் அவள்.

ஸானின் தன் ''வியாபாரத்தைப்'' பற்றிப் பேசத் தொடங்கினான்—முன் போலவே கிசுகிசுக்

குரலில்தான். பல வகை ''இனிப்புப்'' பண்டங்களின் விலைகளை ஆழ்ந்த முறையில் விசாரித்தான். ஜெம்மா அதே போல ஆழ்ந்த முறையில் விலைகளைக் கூறினாள். ஆனால் இருவருமே தாங்கள் மிக வேடிக்கையான நாடகம் ஆடுவதை உணர்ந்தவர்கள் போன்று மனதுக்குள் ஒரே மாதிரிச் சிரித்துக் கொண்டார்கள். திடீரென்று வீதியில் ஆர்கன் வாத்தியம் ''பிரெய்ஷியூத்ஸ்'' ஆபெராவின் ''Durch die Felder, durch die Auen...''* என்னும் ஒரு குரல் பாட்டை இசைக்கத் தொடங்கியது. அழுகை போன்ற ஒலிகள் அசையாத காற்றில் நடுங்கிச் சீழ்க்கை அடித்தவாறு முறையிடலாயின... ஜெம்மா திடுக்கிட்டாள். ''இவன் அம்மாவின் தூக்கத்தைக் கலைத்து விடுவான்!'' என்றாள். ஸானின் உடனே வீதிக்குப் பாய்ந்து சில கிரெய்த்ஸெர்களை ஆர்கன்காரன் கையில் திணித்து பாட்டை நிறுத்தி விட்டு அப்பால் போக வைத்தான். அவன் திரும்பியதும் ஜெம்மா மெல்லிய தலை அசைப்பால் அவனுக்கு நன்றி தெரிவித்து விட்டு, சிந்தனை ததும்ப முறுவலித்தவாறு வேபெரின் அழகிய இசையை—முதல் காதலின் விளங்காமையை மாக்ஸ் வெளியிடும் இசையை—சற்றேறக்காதில் படும்படித் தானே பாடத் தொடங்கினாள். ஸானினுக்கு ''பிரெய்ஷியூத்ஸ்'' தெரியுமா, வேபரை அவனுக்குப் பிடிக்குமா என்று கேட்டாள். தான் இத்தாலியைச் சேர்ந்தவள் என்றா

---

* ''பிரெய்ஷியூத்ஸ்''—(''விடுபட்ட அம்பு'') ஜெர்மன் இசை அமைப்பாளர் கார்ல் மரீ வேபர் (1786—1826) இயற்றிய ரொமாண்டிக் ஆபெரா. இந்த வரியின் பொருள்: ''வயல் வழியாகவும் பள்ளத்தாக்கு வழியாகவும்...''

லும் இந்த மாதிரி இசை தனக்கு எல்லாவற்றை யும் விடப் பிடித்திருப்பதாகச் சொன்னுள். பேச்சு வேபரிலிருந்து வழுகி, கவிதைக்கும் ரொமாண்டி சிஸத்துக்கும், அந்தக் காலத்தில் மக்கள் இன்னும் படித்து வந்த எழுத்தாளர் ஹாப்மனுக்கும்* தாவியது...

பிராவு லெஞேரே தூங்கிக் கொண்டே இருந்தாள், லேசாகக் குறட்டைகூட விட்டாள். சன்னல் கதவுகளின் ஊடே குறுகிய கோடுகளாக அறைக்குள் வந்த சூரிய கிரணங்கள் கவனத்தைக் கவராமல், ஆனுல் இடைவிடாது நகர்ந்தவாறு தரை மேலும் மேசை நாற்காலிகள் மேலும் ஜெம் மாவின் உடை மேலும் இலைகள் மேலும் பூ இதழ்கள் மேலும் பயணம் செய்து கொண்டு போயின.

## 12

ஹ்ராப்மனை ஜெம்மாவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை, அவருடைய எழுத்துக்கள் அவ ளுக்கு... சலிப்பாகக்கூட இருந்தன என்று தெரிய வந்தது! அவருடைய கதைகளின் மிகைக் கற்பனை யும் தெளிவின்மையும் வாய்ந்த வட புலத்து இயல்பு தென்புலத்தைச் சேர்ந்த அவளுடைய ஒளி வீசும் தன்மைக்குக் கொஞ்சந்தான் விளங் கியது. ''இதெல்லாம் கட்டுக்கதை, இது எல் லாமே குழந்தைகளுக்காக எழுதப்பட்டது!''

---

* ஹாப்மன்—(1776—1822) ஜெர்மன் எழுத் தாளர், இசை அமைப்பாளர். 12ம் அத்தியா யத்தின் தொடக்கத்தில் குறிக்கப்படுவது ஹாப் மனது ''தவறுகள்'' (Jrrungen) என்னும் குறு நாவலில் வரும் நிகழ்ச்சி.

என்று ஓரளவு புறக்கணிப்பு தொனிக்கக் கூறினுள். ஹாப்மனிடம் கவிதை நயம் இல்லாததை யும் அவள் தெளிவின்றி உணர்ந்தாள். ஆனுல் அவருடைய ஒரு குறுநாவல் அவளுக்கு நிரம்பப் பிடித்ததாகவும் ஆனுல் அதன் தலைப்பை அவள் மறந்து விட்டதாகவும் சொன்னுள். உண்மையில் அவளுக்குப் பிடித்தது கதையின் தொடக்கப் பகுதி மட்டுந்தான். முடிவை ஒன்று அவள் படிக்க வில்லை, இல்லாவிட்டால் மறந்து விட்டாள். கதை ஒரு இளைஞனைப் பற்றியது. அவன் எங்கோ ஓர் இடத்தில், அனேகமாக மிட்டாய்க் கடையில், ஒரு பெண்ணைச் சந்திக்கிருன். அவள் பிரமிக்க வைக்கும் அழகுள்ளவள், கிரீஸ் நாட்டினள். மர்ம மும் விசித்திரமும் உள்ள கொடிய கிழவன் ஒருவன் அவள் கூட இருக்கிருன். இளைஞன் நங்கை மேல் கண்டதும் காதல் கொண்டு விடுகிருன். அவள் முறையிடும் பாங்கில், தன்னை விடுவிக்கும் படிஇறைஞ்சுபவள் போல அவனைப் பார்க்கிருள்... அவன் கணப் போது அப்பால் செல்கிருன். பின்னர் மிட்டாய்க் கடை திரும்பியவன், பெண் ணையோ கிழவனையோ காணுமல் திகைக்கிருன். அவளைத் தேடக் கிளம்புகிருன். அவர்களுடைய புதிய புதிய தடங்கள் அவனுக்கு ஓயாமல் கிடைத்த வண்ணமாய் இருக்கின்றன. அவற்றின்படி அவர் களைப் பின்பற்றிச் செல்கிருன். ஆனுல் எந்த வகை யிலும், எங்கும், ஒருபோதும் அவர்களை எட்டிப் பிடிக்க அவனுல் முடியவில்லை. அந்த அழகி அவன் வரையில் என்றென்றைக்கும் மறைந்து விடு கிருள். அவளுடைய இறைஞ்சும் பார்வையையும் அவனுல் மறக்கவே முடியவில்லை. தனது வாழ்க் கையின் இன்பம் முழுவதும் தன் கைகளிலிருந்து

நழுவிப் போய் விட்டது போலும் என்று எண்ணி மறுகுகிறான்...

ஹாப்மன் தம்முடைய கதையை இப்படி முடித்திருப்பது சந்தேகமே. ஆனால் ஜெம்மாவின் நினைவில் அது இப்படி உருவாகி இப்படிப் பதிந்திருந்தது.

''இந்த மாதிரிச் சந்திப்புக்களும் இந்த மாதிரிப் பிரிவுகளும் நாம் நினைப்பதை விட அதிகம் அடிக்கடி உலகில் நேர்கின்றன'' என்றாள் ஜெம்மா.

ஸானின் பேசாதிருந்தான்... சிறிது நேரம் சென்ற பின் பேசத் தொடங்கினான்... ஹெர் கிளியூபெரைப் பற்றி. அந்தக் கணம்வரை அவன் கிளியூபெரைப் பற்றி ஒரு தரங்கூட நினைக்கவில்லை.

இப்போது ஜெம்மா பேசாதிருந்தாள், சுட்டு விரல் நகத்தை லேசாகக் கடித்துக் கொண்டு பார்வையை ஒரு பக்கம் செலுத்தியவாறு சிந்தனையில் ஆழ்ந்தாள். பிறகு தன் மணமகனைப் புகழ்ந்தாள், அவன் மறு நாள் ஏற்பாடு செய்திருந்த உல்லாசப் பயணத்தைக் குறிப்பிட்டாள், ஸானினைச் சட்டென்று ஒரு பார்வை பார்த்து விட்டு மறுபடி பேச்சை நிறுத்தினாள்.

எதைப் பற்றிப் பேச்சு எடுப்பது என்று ஸானினுக்குத் தெரியவில்லை.

எமீலியோ தடதடவென்று ஓடி வந்து பிராவு லெனோரேயை எழுப்பி விட்டான்... அவனுடைய வருகையால் ஸானின் மகிழ்ச்சி அடைந்தான்.

பிராவு லெனோரே சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்தாள். பந்தலியோனே வந்து சாப்பாடு தயார் என்று அறிவித்தான். குடும்ப நண்பனும் முன்னாள் பாடகனும் வேலையாளுமான அவன் சமையல் வேலையையும் பார்த்துக் கொண்டான்.

## 13

மதியச் சாப்பாட்டுக்குப் பிறகும் ஸானின் தங்கி இருந்தான். பயங்கர வெக்கை என்ற அதே சாக்கைச் சொல்லி வீட்டுக்காரர்கள் அவனைத் தடுத்து விட்டார்கள். வெக்கை தணிந்ததும், தோட்டத்துக்குப் போய் வேல மர நிழலில் காப்பி சாப்பிடலாம் என்று சொன்னார்கள். ஸானின் இசைந்தான். அவனுக்கு மிக இன்பமாய் இருந்தது. வாழ்க்கையின் ஒரே மாதிரி நிம்மதியான, கொந்தளிப்பற்ற பெருக்கில் பெருத்த கவர்ச்சிகள் மறைந்திருந்தன. நடப்பு நாளினிடம் சிறப்பாக எதையும் கோராமலும், மறு நாளைப் பற்றி எண்ணுமலும் முந்திய நாளை நினைவுகூராமலும் இன்பமாக அவற்றில் ஆழ்ந்தான் ஸானின். ஜெம்மா போன்ற பெண்ணின் நெருக்கம் மட்டும் என்ன பெறுமானம் உள்ளது? அவன் அவளை விரைவில் பிரிந்து விடுவான், ஒருவேளை என்றென்றைக்கும். ஆனுலும் உலாந்தோ பாட்டில்* வருவது போல ஒரே தோணி இருவரையும் பழக்கமான வாழ்க்கைத் தாரையில் இட்டுச் செல்லும் வரையில், மகிழ், இன்பம் அனுபவி, பயணியே! அதிர்ஷ்டசாலியான பயணிக்கு எல்லாமே உவப்பாகவும் இனியதாகவும் தென்பட்டது. ''திரெஸெட்டே'' என்னும் சிக்கலற்ற இத்தாலியச் சீட்டாட்டத்தில் தன்னேடும் பந்தலியோனேயோடும் போட்டி போடும்படி பிராவு லெஞேரே அவனிடம் சொன்ஞள். அந்த ஆட்டத்தை அவனுக்குக் கற்றுக்

---

* ஜெர்மன் ரொமாண்டிக் கவி லுத்விக் உலாந்தின் *(1787—1862)* ''தோணி'' (Das Schiffein) என்னும் பாட்டு இங்கே குறிக்கப்படுகிறது.

கொடுத்தாள். ஆட்டத்தில் அவனிடம் சில கிரெய்த்ஸெர்கள் கெலித்தாள். ஸானின் மிகுந்த திருப்தி அடைந்தான். எமீலியோ கேட்டுக் கொண்டதன் பேரில் பந்தலியோனே சடைநாய் தர்த்தாலியாவை அதற்குத் தெரிந்த விளையாட்டுக்களை எல்லாம் காட்டச் செய்தான். தர்த்தாலியா கழியைத் தாண்டிக் குதித்தது, ''பேசிற்று'', அதாவது குலைத்தது, தும்மியது, மூக்கால் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டது, தன் எசமானனின் தேய்ந்த செருப்பை எடுத்து வந்தது. முடிவில், பழைய படையினர் வட்டத் தொப்பியைத் தலையில் வைத்துக் கொண்டு, துரோகத்தின் பொருட்டு பேரரசன் நெப்போலியனால் கடுமையாக விளாசப்படும் மார்ஷல் பெர்னடோட்டாக* நடித்தது. பந்தலியோனே நெப்போலியனாக நடித்தான் என்று சொல்லவே வேண்டாம். மிகத் தத்ரூபமாக நடித்தான். கைகளை மார்பில் கட்டிக் கொண்டான், முக்கோணத் தொப்பியைக் கண்கள் வரை இழுத்து விட்டுக் கொண்டான், முரட்டுத்தனமாகவும் கடுமையாகவும் பிரெஞ்சு மொழியில் பேசினான், ஆனால், கடவுளே! எந்த

---

* பெர்னடோட்டு *(1764—1844)*—நெப்போலியன் நடத்திய போர்களில் பங்கு கொண்ட பிரெஞ்சு மார்ஷல். 1810ம் ஆண்டில் சுவீடனின் அரசு மன்றம் அவனை அரியணைக்கு உரிமையாளனாகவும் நாட்டின் ரீஜெண்டாகவும் தேர்ந்தெடுத்தது. அந்தக் காலம் முதல் பெர்னடோட்டு ஐரோப்பிய அரசியலில் நெப்போலியனுக்கு எதிரான நிலையை மேற்கொண்டான். 1813ல் பிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராக நடந்த போராட்டத்தில் பங்கு கொண்ட சுவீடிஷ் படையினருக்குத் தலைமை தாங்கினான். 1818 முதல் சுவீடன் நாட்டின் அரசனாக இருந்தான்.

மாதிரி பிரெஞ்சு மொழியில்? தர்த்தாலியா உடலைக் குறுக்கி வாலைக் கால்களுக்கு இடையே இடுக்கிக் கொண்டு கோணலாகத் தலையில் கவிந்திருந்த படையினர் தொப்பியின் விளிம்புக்கு அடியில் குழப்பத்துடன் கண்களைக் கொட்டுவதும் சுருக்கு வதுமாகத் தன் அரசனுக்கு முன்னே உட்கார்ந் திருந்தது. அவ்வப்போது நெப்போலியன் குரலை உயர்த்தியதும் பெர்ஞடோட்டு பின்னங்கால் களில் நின்முன். "Fuori, traditore!"* என்று முடிவில் இத்தாலிய மொழியில் கத்தினன் நெப் போலியன். தன் பிரெஞ்சுத் தன்மையை முடிவு வரை கடைப்பிடிக்க வேண்டும் என்பதை அளவு கடந்த எரிச்சல் காரணமாக அவன் மறந்து விட் டான். பெர்ஞடோட்டு பாய்ந்து சோபாவுக்கு அடியில் பதுங்கியவன், மறு கணமே மகிழ்ச்சி பொங்கக் குலைத்தவாறு, நாடகம் முடிந்தது என்று எல்லோருக்கும் அறிவிப்பது போல அங் கிருந்து வெளியே தாவினன். எல்லாப் பார்வை யாளர்களும் நிறையச் சிரித்தார்கள். எல்லோரை யும்விட அதிகமாகச் சிரித்தான் ஸானின்.

வேடிக்கையான சிறு கீச்சொலிகளுடன் இடை யீடற்ற மெல்லிய சிரிப்பு சிரித்தாள் ஜெம்மா. அந்தச் சிரிப்பில் தனி வகை இனிமை இருந்தது... ஸானினுக்கு இந்தச் சிரிப்பு பேருவகை உண்டாக் கிற்று. அந்தக் கீச்சொலிகளுக்காக அவன் ஜெம் மாவை முத்தம் இட்டிருப்பான்!

முடிவில் நள்ளிரவு வந்தது. மட்டு மரியாதை தெரிய வேண்டும் அல்லவா? "நாளை சந்திப் போம்!" என்று எல்லோரிடமும் பல தடவைகள் சொல்லி விடை பெற்ற பின் (எமீலியோவை

---

* அப்பாலே போ, துரோகி! (இத்.).

அவன் முத்தம்கூடக் கொஞ்சினுன்), ஸானின் விடுதிக்குப் புறப்பட்டான். சில வேளைகளில் சிரிப்பதும் சில வேளைகளில் சிந்தனையில் ஆழ்வதுமாக, சில வேளைகளில் அமைதியாகவும் அசட்டையாகக் கூடவும் ஆனுல் எப்போதும் கவர்ச்சியுடனும் இருந்த இளமங்கையின் உருவம் அவன் உள்ளத்தில் பதிந்திருந்தது! சில வேளைகளில் விரியத் திறந்து பகல் போன்று ஒளியும் மகிழ்வும் நிறைந்தும் சில வேளைகளில் இமை மயிர்களால் பாதி மூடப்பட்டு இரவு போல ஆழமாகவும் கறுத்தும் இருந்த அவளுடைய விழிகள் அவனது கண்களுக்கு முன்னே ஒளிர்ந்து, மற்ற எல்லா உருவங்களையும் எண்ணங்களையும் விந்தையாகவும் இனிமையாகவும் ஊடுருவின.

ஹெர் கிளியூபெரையும் தான் பிராங்க்பர்டில் தங்க வேண்டி வந்த காரணங்களையும், சுருங்கக் கூறின், தலைக்குநாள் தன்னைக் கவலைக்குள்ளாக்கியவை எல்லாவற்றையும் ஒரு தரங்கூட அவன் நினைத்துப் பார்க்கவில்லை.

## 14

ஆயினும், ஸானினைப் பற்றியும் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும்.

முதலாவதாக, அவன் மிக மிக மோசமில்லாத உருவம் கொண்டிருந்தான். பொருத்தமாக, நன்கு வடிவமைந்த மேனி, கண்ணுக்கு இனிய, சற்றுத் தெளிவற்ற முக அமைப்புக் கூறுகள், அன்பு ததும்பும் இளநீல விழிகள், பொன் முடி, வெண்மையும் செம்மையும் உள்ள தோல். ஆனுல் முக்கியமானது, கபடமின்மையும் குதூகலமும் பிறரை எளிதில் நம்பும் தன்மையும் ஒளிவு

மறைவு இன்மையும் முதல் நேரங்களில் ஓரளவு அசட்டுத்தனமும் வாய்ந்த அவனுடைய முகத் தோற்றம். நிதானப் போக்குள்ள பிரபுக் குடும்பக் குழந்தைகளை, ''தகப்பனார் வளர்த்த'' பிள்ளை களை, ருஷ்யாவின் விரிந்து பரந்த அரை ஸ்தெப் பிப் பிரதேசங்களில் பிறந்து ஊட்டி வளர்க்கப் பட்ட நல்ல சீமான் மகன்களை, முன் காலத்தில் இந்த முகத் தோற்றத்தைக் கொண்டு இனங்காண முடிந்தது. தயக்கம் உள்ள நடை, சற்றுக் கிசு கிசுக்கும் குரல், குழந்தை போன்று பார்த்ததும் புன்னகைக்கும் வழக்கம்... முடிவில் நிகு நிகுப்பு, உடல் நலம், இவற்றோடு மென்மை, மென்மை, மென்மை—இவைதாம் முழுமையான ஸானின். இரண்டாவதாக, அவன் அசடனாகவும் இருக்கவில்லை, ஏதோ சில விஷயங்களைத் தெரிந்து கொண்டிருந்தான். வெளிநாட்டுப் பயணத்துக்குப் பின்பும் அவனுடைய நிகுநிகுப்பு அப்படியே இருந்தது. காரணம், அந்தக் காலத்து இளைஞர் களின் சிறந்த பகுதியினரிடையே கொந்தளிப்பு ஏற்படுத்திக் கொண்டிருந்த கலவரம் நிறைந்த உணர்ச்சிகள் அவனுக்கு அவ்வளவாகத் தெரிந் திருக்கவில்லை.

அண்மைக் காலத்தில் ருஷ்ய இலக்கியத்தில் ''புதிய மனிதர்களை'' வீணாகத் தேடிய பின், என்ன விலை செலுத்தியும் நிகுநிகுப்பாக இருக்க முடிவு செய்த இளைஞர்களை உருவாக்குவது தொடங் கியது... இவர்களுடைய நிகுநிகுப்பு, செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் நகரத்துக்குக் கொண்டுவரப் படும் பிளென்ஸ்புர்க் ஆளிகளின் நிகுநிகுப்பு போன்றது... ஸானின் அவற்றை ஒத்திருக்கவில்லை. ஒப்புமை காட்ட வேண்டும் என்றால், ருஷ்யா வின் கருமண் தோட்டங்களில் அண்மையில் ஒட்டு

சேர்க்கப்பட்ட தளதளப்பான ஆப்பிள் கன்று போல் இருந்தான் அவன். இன்னும் மேலாக, முன்னேயச் ''சீமான்களின்'' குதிரைப் பண்ணை களில் ஊட்டி வளர்க்கப்பட்ட, அண்மையில் தான் வட்டத்தில் ஓடப் பழக்கப்பட்டுக் கொண் டிருந்த, மழமழப்பான, பருத்த கால்கள் உள்ள, மென்மையான மூன்று வயதுக் குதிரைக் குட்டி போல் இருந்தான்... பிற்காலத்தில், வாழ்க்கை அவனைப் போதிய அளவு அடித்து வசக்கிய பின், இளமையின் போலிக் கொழுப்பு வடிந்து வெகு காலம் சென்ற பிறகு, ஸானினைச் சந்தித்தவர் கள், முற்றிலும் வேறு மனிதனை அவனிடம் கண் டார்கள்.

---

மறு நாள் ஸானின் படுக்கை விட்டு எழுந்தி ருக்கு முன்பே பகட்டான உடை அணிந்து, நிறைய மயிர்ச் சாந்து பூசிக் கொண்டு, கைத்தடியுடன் அவனுடைய அறைக்குள் பாய்ந்து வந்தான் எமீ லியோ. ஹெர் கிளியூபெர் வண்டியுடன் இதோ வந்து விடுவார் என்றும் பருவநிலை அற்புதமாக இருக்கும் என்பதற்கான குறிகள் தென்படுவதாக வும் தங்கள் வீட்டில் எல்லாம் தயார் ஆகி விட்ட தாகவும் அம்மாவுக்கு மறுபடி தலை வலிப்பதால் அவள் வர மாட்டாள் என்றும் அவன் தெரிவித் தான். ஒரு நிமிடங்கூட வீணுக்கக் கூடாது என்று சொல்லி ஸானினை அவசரப்படுத்தினுன்... மெய் யாகவே ஸானின் உடை அணிந்து முடிவதற்குள் ஹெர் கிளியூபெர் வந்து விட்டான். கதவைத் தட்டி விட்டு உள்ளே வந்து வணக்கம் தெரிவித் தான், உடலை வளைத்தான், எவ்வளவு வேண்டு மானுலும் காத்திருக்கத் தயார் என்முன், பின்பு

உட்கார்ந்து, தொப்பியை நாகரிகமாக முழங் கால்கள் மேல் வைத்துக் கொண்டான். இனிய தோற்றம் உள்ள கடை அலுவலன் வந்தது வரு கிறது என்று மிகப் பகட்டாக உடை அணிந்து அத்தரை வாரித் தெளித்துக் கொண்டிருந்தான். அவனுடைய ஒவ்வொரு அங்க அசைவையும் தொடர்ந்து நுட்பமான நறுமணம் பெருகி வந் தது. அழகற்றவை ஆயினும் வலிய, உயரமான இரண்டு குதிரைகள் பூட்டிய, லாந்தோ எனப் பட்ட விசாலமான திறந்த வண்டியில் அவன் வந்தான். கால் மணி நேரம் பொறுத்து ஸானின், கிளியூபெர், எமீலியோ மூவரும் இதே வண்டியில் மிட்டாய்க் கடை வாயிலை அடைந்தார்கள். உல்லாசப் பயணத்தில் கலந்து கொள்ளத் திருமதி ரொஸேல்லி அறவே மறுத்து விட்டாள். ஜெம்மா தாயாருடன் தங்கியிருக்க விரும்பினுள், ஆனுல் அவள் மகளை, வழக்கு மொழியில் சொல்வது போல விரட்டி விட்டாள்.

''எனக்கு ஒருவரும் வேண்டாம்'' என்று அழுத்தமாகக் கூறினுள் அவள். ''நான் தூங்கப் போகிறேன். ''பந்தலியோனேயையும் உங்க ளோடு அனுப்பி இருப்பேன், ஆனுல் கடையைப் பார்த்துக் கொள்ள ஆள் இருக்காதே.''

''தர்த்தாலியாவை அழைத்துப் போக லாமா?'' என்று கேட்டான் எமீலியோ.

''தாராளமாக.''

தர்த்தாலியா உடனேயே மகிழ்ச்சியுடன் முயன்று வண்டியோட்டியின் இருக்கையில் தொற்றி ஏறி உட்கார்ந்து, உடம்பை நக்கிக் கொண்டது. இது அதற்குப் பழக்கமான காரியம் என்பது தெரிந்தது. ஜெம்மா கறுப்பு ரிப்பன்கள் சுற்றிய பெரிய வைக்கோல் தொப்பியை அணிந்

திருந்தாள். இந்தத் தொப்பி அனேகமாக முகம் பூராவையும் வெயிலிலிருந்து மறைத்தவாறு முன்னே வளைந்திருந்தது. நிழல் கோடு உதடு களுக்கு நேர் மேலே நின்றிருந்தது. உதடுகளோ, அடர்த்தியான ரோஜாப் பூவின் இதழ்கள் போலக் கன்னிமையும் மென்மையும் திகழ ஒளிர்ந்தன. பற்கள் மறைவில் பளிச்சிட்டன. அவையும் குழந் தையின் பற்கள் போன்று தூய்மை கொண்டிருந் தன. ஜெம்மா பின் இருக்கையில் ஸானின் பக்கத் தில் உட்கார்ந்தாள். கிளியூபெரும் எமீலியோவும் அவர்களுக்கு எதிரே அமர்ந்தார்கள். பிராவு லெனோரேயின் வெளிறிய உருவம் சன்னல் அருகே தெரிந்தது. ஜெம்மா கைக்குட்டையை ஆட்டி அவளிடம் விடை பெற்றாள். குதிரைகள் புறப் பட்டன.

## 15

ஸோடென், பிராங்க்பர்ட்டிலிருந்து அரை மணி நேரப் பயணத் தொலைவில் உள்ள சிற்றூர். தாவுனுஸின் கிளைமலைத் தொடரில், அழகான இடத்தில் அமைந்துள்ளது. பலவீனமான மார்பு உள்ளவர்களுக்குப் பயனுள்ளது என்று சொல்லப் படும் நீருக்காக நம் ருஷ்யாவில் அது பிரசித்தி பெற்றிருக்கிறது. பிராங்க்பர்ட் வாசிகள் அங்கே போவது பெரும்பாலும் பொழுது போக்குவதற் காக, ஏனெனில் ஸோடெனில் நேர்த்தியான பூங் காவும் ''விர்த்ஷாப்த்'' எனப்படும் பல வகை உண்டிக் கடைகளும் உள்ளன. இந்தக் கடை களில், உயரமான லிண்டன், மாப்பிள் மரங்களின் நிழலில் பீரும் காப்பியும் பருகலாம். பிராங்க் பர்ட்டிலிருந்து ஸோடெனுக்குச் செல்லும் சாலை

மைன் ஆற்றின் வலது கரையோரமாகப் போகிறது. அதன் இரு மருங்கிலும் நெடுகப் பழ மரங்கள் நடப்பட்டுள்ளன. இந்த அருமையான சாலையில் வண்டி மெதுவாகப் போய்க் கொண்டிருந்த போது, ஜெம்மா தன் மணமகனிடம் எப்படி நடந்து கொள்கிருள் என்பதை ஸானின் இரகசியமாகக் கவனித்தான். அவர்கள் இருவரையும் சேர்ந்தாற்போல அப்போதுதான் அவன் முதல் தடவையாகப் பார்த்தான். அவள் அமைதியாகவும் சாதாரணமாகவும் இருந்தாள், ஆனல் வழக்கத்தை விட அதிக அடக்கத்துடனும் ஆழ்ந்த முறையிலும் நடந்து கொண்டாள். அவன் தன்னையும் தனக்குக் கீழ்ப்பட்டவர்களையும் எளிய, மரியாதையுள்ள மகிழ்ச்சியைப் பெற அனுமதித்த பெருந்தன்மையுள்ள ஆசாஞகக் காணப்பட்டான். ஜெம்மாவுக்கு அவன் தனிப்பட்ட முறையில் பரிந்து உபசாரம் செய்யவில்லை, பிரெஞ்சுக்காரர்கள் "empressement"* என்று குறிப்பதை அவனிடம் ஸானின் காணவில்லை. இது தீர்ந்து போன விவகாரம் என்று ஹெர் கிளியூபெர் கருதியதும் அதனல் முயற்சி எடுத்துக் கொள்ளவோ கவலைப்படவோ அவனுக்குக் காரணம் இல்லை என்பதும் தெரிந்தன. ஆனல் பெரியமனிதத் தோரணை அவனிடமிருந்து ஒரு கணமேனும் அகலவில்லை! ஸோடெனுக்கு அப்பால் இருந்த மரங்கள் அடர்ந்த மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் மதியச் சாப்பாட்டுக்கு முன் அவர்கள் நெடுந்தூரம் உலாவிய போதும், இயற்கையின் அழகுகளை ரசித்த போதும் கூட, அதனிடம், இந்த இயற்கையினிடம், அதே பெரிய மனிதப் பாங்குடன்

---

* பணிவிடை (பிரெஞ்சு).

ஸானின் கடிதத்தை—வழக்கமாகச் சொல்வது போல, இயந்திர கதியில்—வாங்கி, பிரித்துப் படித்தான். அவனுக்குத் தெரிந்த விவகாரம் குறித்துத் தான் நிரம்பக் கவலைப்படுவதாகவும் அவனை உடனே பார்க்க விரும்புவதாகவும் ஜெம்மா எழுதி இருந்தாள்.

''ஸிஞ்ஞோரினு கவலைப்படுகிறுள்'' என்று ஆரம்பித்தான் பந்தலியோனே. கடிதத்தின் உள்ளடக்கம் அவனுக்குத் தெரிந்திருந்தது புலப்பட்டது. ''நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று பார்க்கும்படியும் உங்களைத் தன்னிடம் அழைத்து வரும்படியும் என்னிடம் சொன்னுள்.''

முதிய இத்தாலியன் மீது கண்ணோட்டிய ஸானின் சிந்தனையில் ஆழ்ந்தான். திடீரென ஓர் எண்ணம் அவன் மூளையில் உதித்தது. முதல் கணத்தில் அது அசாத்தியமாகப் படும் அளவுக்கு விந்தையானதாக அவனுக்குத் தோன்றியது.

''ஆனுலும்... ஏன் கூடாது?'' என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

''திருவாளர் பந்தலியோனே!'' என்று உரக்க அழைத்தான்.

கிழவன் திடுக்கிட்டு, மோவாயை டையில் புதைத்துக் கொண்டு ஸானினை உறுத்துப் பார்த்தான்.

''நேற்று என்ன நடந்தது, உங்களுக்குத் தெரியுமா?'' என்று தொடர்ந்தான் ஸானின்.

பந்தலியோனே உதடுகளை மென்று பிரமாண்டமான முடிப் புதரை உலுக்கினுன்.

''தெரியும்.''

(திரும்பியதுமே எமீலியோ அவனுக்கு எல்லாவற்றையும் சொல்லி இருந்தான்.)

''ஆ! தெரியுமா! நல்லது, விஷயம் இதுதான்.

இப்போது என் அறையிலிருந்து வெளியே போனன் ஒரு படை அதிகாரி. அந்தத் துடுக்கன் என்னே இருவர் போருக்கு அறைகூவுகிருனும். அவனுடைய அறைகூவலே நான் ஏற்றுக் கொண்டு விட்டேன். ஆனல் என்னிடம் போர்த் துணேவன் இல்லே. என்னுடைய போர்த் துணேவனுக இருக்க நீங்கள் விரும்புகிறீர்களா?''

பந்தலியோனே திடுக்கிட்டு, புருவங்களே ஒரே யடியாக உயர்த்தவே அவை கவிந்திருந்த முடிக்கு அடியில் மறைந்து விட்டன.

''நீங்கள் கட்டாயம் சண்டை போட வேண்டுமா?'' என்று கடைசியில் இத்தாலிய மொழியில் கேட்டான். அந்தக் கணம் வரை அவன் பிரெஞ்சில் பேசிக் கொண்டிருந்தான்.

''கட்டாயம். வேறு விதமாகச் செயல்படுவதன் பொருள் என்னே என்றென்றைக்கும் அவமதிப்புக்கு உள்ளாக்குவதாகும்.''

''ஹ்ம். உங்கள் போர்த் துணேவனுய் இருக்க நான் இசையா விட்டால், நீங்கள் வேறு ஒருவனேத் தேடிப் பிடிப்பீர்களோ?''

''ஆமாம்... சந்தேகம் இல்லாமல்.''

பந்தலியோனே தலேயைக் குனிந்து கொண்டான்.

''ஆனல் ஒன்று கேட்க அனுமதியுங்கள், ஸிஞ்ஞோர் தெ-த்ஸானின், உங்களுடைய இருவர் போர் ஒரு நபரின் நன்மதிப்பை ஓரளவு கறைப் படுத்தாதா?''

''நான் நினேக்கவில்லே. ஆனல், எது எப்படி ஆனலும் ஒன்றும் செய்வதற்கில்லே.''

''ஹ்ம்.'' பந்தலியோனே தன் டைக்குள் முழுதும் புதைந்து விட்டான். ''ஆமாம், அந்த பெர்ரோப்ளுக்தோ க்ளுபேரியோ—அவன் என்ன

சொல்லுகிறுன்?'' என்று திடீரெனக் கூவி முகத்தை மேலே தூக்கினுன்.

''அவஞு? ஒன்றுமில்லை.''

''கே! (Che!)*'' பந்தலியோனே இகழ்ச்சியுடன் தோள்களைக் குலுக்கினுன். ''என்ன ஆனுலும் நான் உங்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும்'' என்று முடிவில் நடுங்கும் குரலில் சொன்னுன். ''என்னுடைய இப்போதைய இழிந்த நிலையிலும் நான் கண்ணியமானவன்—un galant'uomo !—என்று கண்டு கொண்டீர்களே, அதற்காக! இந்த மாதிரி நடந்து கொண்டதன் மூலம், நீங்களும் உண்மையான galant'uomo என்று காட்டிக் கொண்டு விட்டீர்கள். ஆனுல் உங்கள் யோசனையைப் பற்றி நான் தீர ஆலோசனை செய்ய வேண்டும்.''

''நேரம் இல்லையே, அன்பார்ந்த திருவாளர் சி... சிப்பா...''

''தோலா'' என்று நிறைவுபடுத்தினுன் முதியவன். ''ஆலோசனை செய்வதற்கு ஒரு மணி நேரந்தான் கேட்கிறேன். என் உபகாரிகளுடைய மகள் இதில் இடம் பெற்றிருக்கிறுள்... ஆகையால் தான் நான் சிந்தனை செய்ய வேண்டும், அதற்குக் கடமைப்பட்டிருக்கிறேன்!!. ஒரு மணி நேரத்தில்... முக்கால் மணி நேரத்தில் நீங்கள் என் முடிவைத் தெரிந்து கொள்வீர்கள்.''

''நல்லது. நான் பொறுத்திருக்கிறேன்.''

''இப்போது... ஸிஞ்ஞோரினு ஜெம்மாவுக்கு நான் என்ன பதில் சொல்வது?''

---

* ருஷ்ய மொழியின் ''நூ!'' (ஓகோ!) என்பது போன்று இத்தாலிய மொழியில் உள்ள வியப்புச் சொல் (ஆக்கியோர் குறிப்பு).

ஸானின் ஒரு காகிதத்தை எடுத்துப் பின்வரு மாறு எழுதினுன்: ''நிம்மதியாய் இருங்கள், என் அன்புக்கு உகந்த மங்கையே. ஒரு மூன்று மணி நேரத்தில் நான் உங்கள் வீட்டுக்கு வருகிறேன், அப்போது எல்லாம் தெளிவாகி விடும். உங்கள் பரிவுக்காக உளமார நன்றி தெரிவிக்கிறேன்.'' கடிதத்தைப் பந்தலியோனேயிடம் கொடுத்தான்.

அவன் அதைப் பதபாகமாகப் பக்கப் பையில் வைத்துக்கொண்டு''ஒரு மணி நேரம் பொறுத்து'' என்று இன்னொரு தரம் சொல்லி விட்டு வாயிலை நோக்கி நடந்தவன், சட்டெனத் திரும்பி ஸானின் பக்கத்தில் ஓடி, அவன் கையைப் பற்றித் தன் மார்போடு சேர்த்து அழுத்திக் கொண்டு, கண் களை வானை நோக்கி நிமிர்த்தி, பின்வருமாறு கூறி ஞன்:

''நல்ல குடிப் பிறந்த இளைஞரே! மாண்புசால் நெஞ்சரே! (Nobil giovanotto! Gran cuore!) உங்கள் ஆண்மையுள்ள வலக்கரம் பற்றிக் குலுக்குவதற்கு (la vostra valorosa destra !) வலுவற்ற இந்தக் கிழவனை (a un vecchiotto !) அனுமதியுங்கள்!'' பின்பு சற்று பின்னே நகர்ந்து இரண்டு கைகளையும் ஆட்டி விட்டு வெளியேறினுன்.

ஸானின் அவன் போவதைப் பார்த்துக் கொண் டிருந்தான்... பின்பு செய்தித் தாளை எடுத்துப் படிக்க முயன்றுன். ஆனுல் அவன் கண்கள் வரிகளை வீணே பார்வையிட்டன. அவன் எதையும் புரிந்து கொள்ளவில்லை.

## 18

ஒரு மணி நேரம் சென்றதும் பரிசாரகன் மறு படி ஸானினிடம் வந்து, கறை படிந்த பழைய

பெயர்ச் சீட்டைக் கொடுத்தான். அதில் பின்வரும் சொற்கள் இருந்தன: பந்தலியோனே சிப்பத் தோலா, வாரேஸ் நகர், மாட்சிமை தங்கிய மோதேன் கோமகனின் அரசவைப் பாடகன் (cantante di camera). பரிசாரகனின் பின் பந்தலி யோனே தானும் வந்து விட்டான். தலைமுதல் கால் வரை அவன் மாற்றுடை அணிந்திருந்தான். செம்பட்டை நிறம் ஆகி விட்ட கறுப்பு மார்புச் சட்டையும் பிர் கோட்டும் போட்டிருந்தான். செம்புத் துத்தநாகக் கலவைச் சங்கிலி ஒன்று கோட்டில் சிக்கலாக வளைந்து சென்றிருந்தது. இடைவார்ப் பொத்தான் உள்ள குறுகிய கறுப்புச் சராய் மீது தாழ்வாகத் தொங்கியது கனத்த கோமேதக முத்திரை. முயல் மென்மயிர்த் தோல் கறுப்புத் தொப்பியை அவன் வலது கையில் பிடித் திருந்தான். இடது கையில் பருத்த இரண்டு மான்தோல் கையுறைகள் வைத்திருந்தான். டையை வழக்கத்தை விட அகலமாகவும் உயரத் திலும் கட்டியிருந்தான். கஞ்சி போட்ட மார்புப் பட்டையில் ''பூனைக்கண்'' (o eil de chat) என் னும் கல் வைத்த குண்டூசியைச் செருகிக் கொண் டிருந்தான். வலது கைச் சுட்டு விரலில் திகழ்ந்த மோதிரத்தில், இணைந்த அங்கைகளின் நடுவே சுடர் விடும் இதயத்தின் வடிவம் அமைந்திருந் தது. கட்டுக்கிடைத் துணியின் மணமும் கர்ப்பூர, கஸ்தூரி மணமும் முதியவனுடைய மேனி முழு வதிலும் கமழ்ந்தது. அவனுடைய உருவத்தின் சிரமப்பட்டுப் புனைந்த விழாக் கோலம் மிக மிக அசட்டையுள்ள பார்வையாளனைக் கூட வியப்பில் ஆழ்த்தி இருக்கும்! ஸானின் எழுந்து அவனை எதிர் கொண்டான்.

''நான் உங்கள் போர்த் துணைவன்'' என்று

பிரெஞ்சு மொழியில் சொல்லி உடல் முழுவதை யும் முன்னே சாய்த்து வணங்கினான் பந்தலி யோனே. அப்போது, நர்த்தகர்கள் செய்வது போல நுனிப்பாதங்களை அகற்றி வைத்துக் கொண் டான். ''ஆணைக் குறிப்புகள் பெறுவதற்காக வந்திருக்கிறேன். இரக்கம் காட்டாமல் போரிட நீங்கள் விரும்புகிறீர்களா?''

''எதற்காக இரக்கம் காட்டாமல், என் அன் பார்ந்த திருவாளர் சிப்பத்தோலா? எனது நேற் றையச் சொற்களை எந்தக் காரணத்தை முன்னிட் டும் திரும்பப் பெற மாட்டேன். ஆனால் நான் இரத்த வெறியன் அல்ல!.. இப்போது பொறுங் கள். என் எதிராளியின் போர்த் துணைவன் இதோ வருவான். நான் பக்கத்து அறைக்குப் போய் விடு கிறேன். நீங்கள் அவனோடு பேசி நிபந்தனைகளை முடிவு செய்து கொள்ளுங்கள். உங்கள் உதவியை வாழ்நாள் முழுதும் மறக்க மாட்டேன். உங்க ளுக்கு உளமார்ந்த நன்றி தெரிவிக்கிறேன்.''

''மானம் எல்லாவற்றுக்கும் முன்னால்!'' என்று கூறி, ஸானின் உட்காரச் சொல்வதற்காகக் காத்திராமல் சாய்வு நாற்காலியில் அமர்ந்தான் பந்தலியோனே. ''இந்த பெர்ரோப்ளுக்தோ ஸ்பீச் செபுப்பியோ'' என்று பிரெஞ்சு, இத்தாலிய மொழிகளைக் கலந்து குழப்பியவாறு பேசத் தொடங்கினான். ''இந்த விற்பனையாள் கிளியூபெ ரியோ தன் நேரான பொறுப்பைப் புரிந்து கொள்ள முடியாதவனாய் இருந்து விட்டான் அல்லது வெரு விப் போனான் என்றால் அத்தனைக்கு அத்தனை அவ னுக்குத்தான் கேடு!.. காசுக் கணக்குப் பார்க்கிற ஆன்மா, அவ்வளவு தான்!.. போர் நிபந்தனை களைப் பொறுத்தவரையில், நான் உங்களுடைய போர்த் துணைவன், உங்களுடைய நலன்கள்

எனக்குப் புனிதமானவை!!. நான் பாதுயாவில் வசித்தபோது அங்கே வெண் குதிரைப் படையினர் முகாம் போட்டிருந்தார்கள். பல படை அதிகாரிகளுக்கு நான் நெருங்கியவனுய் இருந்தேன்!.. அவர்களுடைய விதி முறைகள் எல்லாம் எனக்கு மிக நன்ருகத் தெரியும். உங்கள் சிற்றரசர் தர்பூஸ்கியுடனும் இந்த விஷயங்களைப் பற்றி நான் அடிக்கடி பேசுவது உண்டு... அந்தப் போர்த் துணைவன் விரைவில் வர வேண்டுமா?''

''ஒவ்வொரு நிமிடமும் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இதோ அவனே வருகிருன்'' என்று வீதியைப் பார்த்து விட்டுக் கூறினுன் ஸானின்.

பந்தலியோனே எழுந்து, கடிகாரத்தைப் பார்த்து விட்டு, தன் அடர் முடியைக் கோதி விட்டுக் கொண்டு, சராய்க்கு அடியில் தொங்கிய நாடாவை அவசரமாக பூட்சுக்குள் செருகினுன். இளம் துணை லெப்டினண்டு முன் போலவே சிவப்பேறிய முகமும் கூச்சமுமாக வந்து சேர்ந்தான்.

ஸானின் போர்த் துணைவர்களை ஒருவருக்கு ஒருவர் அறிமுகப்படுத்தினுன்.

"Monsieur Richter, souslieutenant!—Monsieur Zippatola, artiste !*

கிழவனுடைய தோற்றத்தைக் கண்டு துணை லெப்டினண்டு சிறிது வியப்பு அடைந்தான்... தனக்கு அறிமுகம் செய்யப்பட்ட ''நடிகன்'' சமையல் கலையிலும் ஈடுபடுகிருன் என்று தெரிந்தால், ஓ, அவன் என்ன சொல்லி இருப்பான்!.. ஆனல் பந்தலியோனேயோ, இருவர் போருக்கான ஏற்பாட்டில் பங்கு கொள்வது தனக்கு மிகவும்

---

* திருவாளர் ரீஹ்தர், துணை லெப்டினண்டு! —திருவாளர் சிப்பத்தோலா, நடிகர்! (பிரெஞ்சு).

சகஜமான காரியம் போன்ற தோற்றத்தை மேற்கொண்டான். அவனது அரங்கத் தொழில் நினைவுகள் இந்தச் சந்தர்ப்பத்தில் அவனுக்குக் கைகொடுத்தன போலும். போர்த் துணைவன் பாத்திரத்தில் அவன் நடித்தான், பாத்திரமாகத் தான். அவனும் துணை லெப்டினண்டும் சற்றுப் பேசாதிருந்தார்கள்.

''என்ன, தொடங்குவோமா?'' என்று கோமேதக முத்திரையை ஆட்டிக் கொண்டு முதலில் பேசினான் பந்தலியோனே.

''தொடங்குவோம். ஆனால்... போரிடுபவர்களில் ஒருவர் எதிரில் இருப்பது...'' என்று தயங்கினான் துணை லெப்டினண்டு.

''நான் இதோ போய்விடுகிறேன், திருவாளர்களே'' என்று கூறித் தலை வணங்கி விட்டுப் படுக்கை அறைக்குள் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டான் ஸானின்.

கட்டிலில் சாய்ந்து ஜெம்மாவைப் பற்றி எண்ணமிடலானான்... ஆனால் போர்த் துணைவர்களின் பேச்சு மூடிய கதவின் ஊடாக அவனை எட்டியது. உரையாடல் பிரெஞ்சு மொழியில் நடந்து கொண்டிருந்தது. இருவரும் அந்த மொழியைத் தங்கள் தங்கள் பாணியில் இரக்கமின்றிச் சிதைத்து உருக்குலைத்துக் கொண்டிருந்தார்கள். பாதுயாவில் முகாம் போட்டிருந்த குதிரைப் படையினரைப் பற்றியும் சிற்றரசன் தர்பூஸ்கியைப் பற்றியும் மறுபடி விவரித்தான் பந்தலியோனே. துணை லெப்டினண்டோ, "exghizes léchéres" பற்றியும் "goups á l'amiaple" பற்றியும் கூறினான். ஆனால் exghizes* பற்றிய பேச்சையே காதில் போட்டுக்

* மன்னிப்பு என்று பொருள்படும் பிரெஞ்சுச் சொல்லின் (excuses) தவறான உச்சரிப்பு.—மொ-ர்.

கொள்ளக் கிழவன் விரும்பவில்லை! மாசு மறு வற்ற ஒரு கன்னியைப் பற்றி அவன் எதிராளிக்குத் திடீரென்று வருணிக்கத் தொடங்கியதைக் கேட்டு ஸானின் பதைத்தான். உலகத்தில் உள்ள எல்லாப் படை அதிகாரிகளும் சேர்ந்தாலும் அந்த மங்கை யின் ஒரு சுண்டு விரலுக்கு ஈடாக மாட்டார்கள் (oune zeune damigella innoucenta, qu'a ella sola dans soun péti doa vale piu que toutt le zouffissié del mondo !) என்று கூறிய கிழவன், ''இது வெட்கக் கேடு! இது வெட்கக் கேடு!'' (E ouna onta, ouna onta !) என்று ஆவேசத்துடன் திருப்பித் திருப்பிச் சொன்னான். துணை லெப்டினண்டு முதலில் அவனை மறுத்துப் பேசவில்லை. ஆனால் அப்புறம் இளைஞனுடைய குரலில் கோபத் துடிப்பு ஒலித்தது: தான் நீதி உபதேசங்களைக் கேட்பதற்காக வரவில்லை என்று கூறினான் அவன்.

''உங்கள் வயதில் நியாயமான பேச்சுக்களைக் காது கொடுத்துக் கேட்பது எப்போதும் பயனுள்ளது!'' என்று கூவினான் பந்தலியோனே.

போர்த் துணைத் திருவாளர்களின் விவாதம் சில தடவைகள் உக்கிரம் ஆயிற்று. அது ஒரு மணி நேரத்துக்கு மேல் நீடித்தது. முடிவில், பின்வரும் நிபந்தனைகளுடன் நிறைவு பெற்றது: ''வான் டோன்ஹாப் பிரபுவும் திருவாளர் தெ ஸானினும் நாளைக் காலை பத்து மணிக்கு, கனவ் அருகில் உள்ள சிறு காட்டில், இருபது அடி தொலைவில் நின்று சுட்டுக் கொள்வார்கள். போர்த் துணைவர் கள் செய்யும் குறிப்படி இரண்டு தடவைகள் சுட ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. கைத் துப்பாக்கிகள் தனிப்பட்ட சுடு விசை பொருத் தாதவை, வெட்டிக் குறுக்கப்படாதவை''. வான் ரீஹ்தர் போய்விட்டான். பந்தலியோனே வெற்றிப்

பெருமிதத்துடன் படுக்கையறைக் கதவைத் திறந்து ஆலோசனை முடிவுகளை அறிவித்த பின், "Bravo, Russo! "Bravo, giovanotto!* நீ வெல்வாய்!'' என்று மீண்டும் கூவினான்.

சில நிமிடங்களுக்குப் பிறகு அவர்கள் இருவரும் ரொஸேல்லியின் மிட்டாய்க் கடைக்குப் போனார்கள். இருவர் போர் விவகாரத்தை மிக மிக ஆழ்ந்த இரகசியமாக வைத்திருக்கும்படிப் பந்தலியோனேயிடம் முன்னதாக உறுதி மொழி வாங்கிக் கொண்டான் ஸானின். கிழவன் விரலை உயர்த்தினான், பின்பு கண்களை இடுக்கிக் கொண்டு "Segredzza !" (இரகசியம்!) என்று அடுத்தடுத்து இரண்டு தரம் கிசுகிசுத்தான். அவன் கொஞ்சம் இளைஞன் ஆகி விட்டவன் போலத் தோற்றம் அளித்தான், முன்னை விடக் கட்டின்றிப் பழகினான். பிடிக்காதவை என்றாலும் அசாதாரணமான இந்த எல்லா நிகழ்ச்சிகளும் அவனை அறைகூவல்கள் விடுவதும் ஏற்பதுமாக—அரங்கில் தான்—இருந்த காலத்துக்கு அவனைச் சட்டெனக் கொண்டு போய் விட்டன. நடுத்தர ஆண்குரல் பாடகர்கள் தங்கள் பாத்திரங்களை மிகுந்த பெருமையுடன் போற்றுகிறார்கள் என்பது தெரிந்ததே.

## 19

எமீலியோ ஸானினை எதிர் கொள்ள ஓடி வந்தான். ஸானின் வருவதற்காக அவன் ஒரு மணி நேரத்துக்கு மேல் காத்திருந்தான். தலைக்கு நாள் நடந்த பிடிக்காத நிகழ்ச்சி பற்றித் தாயாருக்கு ஒன்றும் தெரியாது என்றும் அதைச் சாடையாகக் கூடக் குறிப்பிட வேண்டாம் என்றும் தன்னை மறு

* ''பலே, ருஷ்யா! பலே, சிறுவா!'' (இத்.).

படி கடைக்குப் போகச் சொல்லுகிறார்கள்(!!.) என்றும் தான் அங்கே போகப்போவதில்லை என்றும் எங்காவது ஒளிந்து கொள்ளப் போவதாகவும்(!) மளமளவென்று கிசுகிசுத்தான். சில விநாடிகளில் இந்த எல்லாத் தகவல்களையும் தெரிவித்து விட்டு, அவன் திடீரென்று ஸானினுடைய தோளில் சாய்ந்து ஆவேசத்துடன் அவனை முத்தம் இட்டு விட்டு வீதிக்குப் பாய்ந்தான். மிட்டாய்க் கடையில் ஜெம்மா ஸானினை வரவேற்றாள். ஏதோ சொல்ல வந்தாள், ஆனால் அவளால் முடியவில்லை. அவளுடைய உதடுகள் லேசாக நடுங்கின, விழிகள் சுருங்கி இங்குமங்கும் பார்த்தன, காரியம் எல்லாம் முடிந்து விட்டது... அற்ப விஷயங்களில் என்று கூறி விரைவாக அவளைத் தேற்ற முற்பட்டான் ஸானின்.

''உங்களிடம் இன்று ஒருவரும் வரவில்லையா?''

''ஒரு நபர் வந்திருந்தான். நாங்கள் பேச்சு வார்த்தை நடத்தினோம், பிறகு நாங்கள்... மிகவும் திருப்திகரமான முடிவுக்கு வந்தோம்.''

ஜெம்மா கல்லாவுக்குத் திரும்பினாள்.

''இவள் என்னை நம்பவில்லை!'' என்று அவன் நினைத்துக் கொண்டான்... ஆனாலும் பக்கத்துக்கு அறைக்குப் போனவன், பிராவு லெனோரேயை அங்கே கண்டான்.

அவளுடைய தலைவலி போய் விட்டது, ஆனாலும் அவள் ஏங்கிய மனநிலையில் இருந்தாள். அவனைப் பார்த்து மகிழ்ச்சியுடன் புன்னகை செய்தாள், ஆனால் அதே சமயம் தன்னால் அவனுடைய பொழுது போக்குக்கு வகை செய்ய முடியாது ஆகையால் தன்னோடு இருப்பது இன்று அவனுக்குச் சலிப்பாய் இருக்கும் என்று எச்சரித்

தாள். அவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்தவன், அவளுடைய இமைகள் சிவந்து வீங்கி இருந்ததைக் கண்டான்.

''உங்களுக்கு என்ன, பிராவு லெஞேரே? நீங்கள் அழுதீர்களா என்ன?''

''ஷ்-ஷ்-ஷ்...'' என்று சீறி, தன் பெண் இருந்த அறையைத் தலை அசைப்பால் காட்டினுள் அவள். ''இதை... உரக்கச் சொல்லாதீர்கள்.''

''ஆனல் நீங்கள் எதற்காகத்தான் அழுதீர்கள்?''

''ஆ, மிஸியே ஸானின், எதற்காக என்று நானே அறியேன்!''

''உங்களுக்கு ஒருவரும் வருத்தம் ஏற்படுத்தவில்லையே?''

''அட இல்லை!.. எனக்குத் திடீரென்று நிரம்பச் சலிப்பு வந்து விட்டது. ஜியோவான்னி பத்தீஸ்தாவை நினைத்துக் கொண்டேன்... என் இளமையையும் கூட... பின்பு, இது எல்லாம் எப்படி விரைவாகக் கழிந்து விட்டன என்பதை. நான் கிழவி ஆகிக் கொண்டிருக்கிறேன், என் நண்பரே, இதற்கு இணங்கிப் போக என்னுல் முடியவே இல்லை. நான் முன்பு இருந்தவளேதான் என்று எனக்குத் தோன்றுகிறது... ஆனல் முதுமையோ, இதோ வந்து விட்டது!'' பிராவு லெஞேரேயின் விழிகளில் கண்ணீர்த் துளிகள் தென்பட்டன. ''நீங்கள் என்னைப் பார்த்து வியப்பு அடைவதைக் காண்கிறேன்... ஆனல் நீங்களுந்தாம் முதுமை அடைவீர்கள், நண்பரே, இது எவ்வளவு கசப்பானது என்பதை அப்போது தெரிந்து கொள்வீர்கள்!''

ஸானின் அவளைத் தேற்ற முயன்றான், அவளுடைய குழந்தைகளைக் குறிப்பிட்டு, அவளது

இளமை அவர்களில் மறு உயிர்ப்பு பெற்றிருக் கிறது என்றுன். அவள் புகழுரைகளைக் கேட்பதற் காகத் தன்னைத் தூண்டி விடுகிருள் என்று அவளைப் பரிகாசம் கூடச் செய்ய முயன்றுன்... அவளோ, ''நிறுத்துங்கள்'' என்று ஆழ்ந்த முறையில் அவனைக் கேட்டுக் கொண்டாள். இந்த வகையான சோர்வை, முதுமை உணர்வால் ஏற்படும் சோர் வை, எதனுலும் தேற்றவோ போக்கவோ முடி யாது, அது தாளுகவே போகும் வரை காத்திருக்க வேண்டும் என்று இப்போது அவன் முதல் தடவை புரிந்து கொண்டான். தன்னேடு திரெஸெட்டே என்னும் சீட்டாட்டம் ஆட வரும்படி அவளை அழைத்தான். இதை விட மேலான யோசனை அவனுக்குத் தோன்றியிருக்க முடியாது. அவள் உடனே இசைந்தாள், குதூகலம்கூட அடைந்தாள் போல் காணப்பட்டாள்.

மதியச் சாப்பாட்டு நேரம் வரையிலும் சாப் பாட்டுக்குப் பின்னும் ஸானின் அவளோடு சீட்டா டினுன். பந்தலியோனேயும் ஆட்டத்தில் கலந்து கொண்டான். அவனுடைய அடர் முடி முன் ஒரு போதும் நெற்றியில் இவ்வளவு தாழ்வாகப் படிந்த தில்லை. அவனுடைய மோவாய் டையில் அவ் வளவு ஆழமாக முன் ஒருபோதும் புதையவில்லை! அவனது ஒவ்வோர் அங்க அசைவிலும் திகழ்ந்த பெருமிதத்தைக் கண்டு, இந்த மனிதன் எந்த இரகசியத்தை இவ்வளவு உறுதியுடன் பாது காத்துக் கொண்டிருக்கிருன் என்ற எண்ணம் தாளுகவே ஏற்பட்டது.

ஆனுல் segredezza ! segredezza !

அன்று முழுவதும் ஸானினுக்கு மிக மிக ஆழ்ந்த மரியாதை காட்ட அவன் எல்லா விதத்திலும் முயன்று கொண்டிருந்தான். சாப்பாட்டின் போது

மாதர்களை விட்டு விட்டு ஆடம்பரமாகவும் உறுதியாகவும் ஸானினுக்கு முதலில் பரிமாறினன். சீட்டு ஆடிய போது அதிகப்படிச் சீட்டுக்களை அவனுக்கு விட்டுக் கொடுத்தான், தேவையான பிடிகள் பிடிக்க வேண்டுமென்று அவனைக் கட்டாயப் படுத்தவில்லை. ருஷ்யர்கள் உலகில் எல்லோரையும் விடப் பெருந்தன்மையும் வீரமும் மனவுறுதியும் உள்ளவர்கள் என்று சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் அறிவித்தான்!

''அட கிழட்டு நடிகனே!'' என்று நினைத்துக் கொண்டான் ஸானின்.

திருமதி ரொஸேல்லியின் எதிர்பாராத உள நிலையைக் காட்டிலும் அவளுடைய மகள் தன்னிடம் நடந்து கொண்ட விதத்தால் ஸானின் அதிக வியப்பு அடைந்தான். அவள் அவனைத் தவிர்த்தாள் என்று சொல்ல முடியாது... மாருக, அவள் அவனிடமிருந்து சிறிது தூரத்தில் எப்போதும் உட்கார்ந்திருந்தாள், அவனுடைய பேச்சை உற்றுக் கேட்டாள், அவனைக் கூர்ந்து பார்த்தாள். ஆனல் அவனிடம் பேச்சுக் கொடுக்க அவள் அறவே விரும்பவில்லை. அவன் அவளோடு பேசத் தொடங்கியதும் மெல்ல எழுந்து சந்தடியின்றிச் சில விஞடிகளுக்கு வெளியே சென்ருள். பின்பு மறுபடி வந்து எங்கேனும் மூலையில் மீண்டும் உட்கார்ந்து கொண்டாள்—ஏதோ சிந்தனை செய்பவள் போலவும் எதையோ புரிந்து கொள்ளவில்லை போலவும்...புரிந்து கொள்ளாத தோற்றமே மேலோங்கி இருந்தது. அவளது வழக்கத்துக்கு மாருன நடத்தையை பிராவு லெஞேரே கூட முடிவில் கவனித்தாள். அவளுக்கு என்ன நேர்ந்தது என்று ஓரிரு தரம் கேட்டாள்.

''ஒன்றும் இல்லை. சில வேளைகளில் நான்

இப்படி இருப்பதுண்டு என்பது உனக்குத் தெரியுமே'' என்ருள் ஜெம்மா.

''அது சரிதான்'' என்று ஒப்புக் கொண்டாள் தாய்.

அந்த நீண்ட நாள் முழுதும் இந்த மாதிரி—உற்சாகமும் இல்லாமல், சோர்வும் இல்லாமல், குதூகலமும் இல்லாமல், சலிப்பும் இல்லாமல்—கழிந்தது. ஜெம்மா வேறு விதமாக நடந்து கொண்டிருந்தால் ஸானின்... எப்படிச் சொல்ல முடியும்? கொஞ்சம் பகட்டிக் கொள்ளும் ஆசையை அடக்கிக் கொண்டிருக்க மாட்டான்—அல்லது ஒருவேளை நிரந்தரமாகப் பிரிய நேரலாம் என்ற எண்ணத்தால் ஏற்படும் துயரத்துக்கு ஆளாகி இருப்பான்... ஆனல் ஜெம்மாவோடு ஒரு தரம் கூடப் பேச அவனுக்கு வாய்க்காத படியால், மாலைக் காப்பிக்கு முன்னர் ஒரு கால் மணி நேரம் பியோனேவில் சோக கீதம் இசைத்ததுடன் அவன் திருப்தி அடைய வேண்டியதாயிற்று.

எமீலியோ நேரம் தாழ்த்து வந்தான். ஹெர் கிளியூபெர் பற்றிய விசாரணைகளைத் தவிர்க்கும் பொருட்டு வெகு விரைவில் தூங்கப் போய் விட்டான். ஸானினும் விடைபெறும் முறை வந்தது.

அவன் ஜெம்மாவிடம் சொல்லிக் கொண்டான். ''அனேகினில்''* லேன்ஸ்கி ஓல்காவைப் பிரியும் கட்டம் அவனுக்கு எதனுலோ நினைவு வந்தது. அவளுடைய கையை உறுதியாகப் பற்றி அழுத்தினன், அவளுடைய முகத்தை உற்றுப் பார்க்க முயன்ருன். ஆனல் அவள் லேசாகத் திரும்பி, விரல்களை விடுவித்துக் கொண்டாள்.

---

* ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கின் இயற்றிய காவிய நவீனம் ''யெவ்கேனி அனேகின'' இங்கே குறிக்கப்படுகிறது.

20

ஸானின் வாசலுக்கு வந்த போது வானம் ''விண்மீன்கள் மயம்'' ஆகி இருந்தது. பெரியவை, சிறியவை, மஞ்சள், சிவப்பு, நீலம், வெள்ளை என்று விதம் விதமாக எத்தனை விண்மீன்கள்தாம் இறைந்து கிடந்தன! அவை எல்லாமே ஒன்றோடு ஒன்று போட்டி போட்டுக் கொண்டு கதிர்களை வீசியவாறு அற்புதமாக மினுமினுத்தன, அற்புதமாக மொய்த்தன. வானத்தில் நிலா இல்லை. ஆனாலும் அது இல்லாமலே, அரை வெளிச்சமுள்ள நிழலற்ற கருக்கலில் ஒவ்வொரு பொருளும் துலக்கமாகத் தெரிந்தது. ஸானின் வீதி முனை வரை நடந்தான்... உடனே இருப்பிடம் திரும்ப அவனுக்கு விருப்பம் இல்லை. தூய காற்றில் கொஞ்ச நேரம் உலாவுவதின் தேவையை அவன் உணர்ந்தான். வந்த வழியில் திரும்பி நடந்தான். ரொஸேல்லியின் மிட்டாய்க் கடை இருந்த வீட்டுக்கு நேராக அவன் வருமுன்பே தெருவைப் பார்த்திருந்த ஒரு சன்னல் ஓசையுடன் திறந்து கொண்டது. அதன் கரிய நீள் சதுரத்தில் (அறையில் விளக்கு எரியவில்லை) ஒரு பெண் உருவம் தென்பட்டது.

"Monsieur Dimitri !"* என்று அழைத்தது ஒரு குரல்.

அவன் சன்னலருகே பாய்ந்து சென்றான்... ஜெம்மா!

அவள் சன்னல் குறட்டில் முழங்கைகளை ஊன்றி முன்னே சாய்ந்தாள்.

"Monsieur Dimitri" என்று அடக்கிய குரலில்

---

* திருவாளர் திமீத்ரி! (பிரெஞ்சு).

தொடங்கினுள். ''ஒரு பொருளே உங்களிடம் கொடுக்க இன்று முழுவதும் விரும்பிக் கொண் டிருந்தேன்... ஆனால் தயங்கினேன். இப்போது உங்களைத் திடீரென்று மறுபடி கண்டதும் விதி இப்படி முடிவு செய்திருக்கிறது என்று எண்ணி னேன்...''

ஜெம்மா தன் வசம் இன்றியே பேச்சை நிறுத் திஞள். அவளால் மேற்கொண்டு பேச முடிய வில்லை, ஏனெனில் அபூர்வமான ஒன்று அதே கணத்தில் நிகழ்ந்தது.

ஆழ்ந்த நிசப்தத்தின் இடையே, வானம் அறவே மேகங்கள் அற்றதாக இருக்கையில், காற்று திடீரென்று பேரலையாகக் குப்பென்று வீசி அடித்தது. அதன் உக்கிரம் காரணமாகக் காலடி யில் தரை குலுங்கியது போலவும், மெல்லிய நட் சத்திர வெளிச்சம் திடுக்கிட்டுத் தாரையாய்ப் பெருகியது போலவும், காற்றே உருண்டையாகிச் சுழன்றது போலவும் பிரமை உண்டாயிற்று. குளிர்ச்சியாக இன்றி வெதுவெதுப்பாக, அனேக மாய் சூடாக இருந்த சூறுவளி மரங்களேயும் வீட்டுக் கூரையையும் வீதியையும் தாக்கியது. ஸானின் தலேயில் இருந்த தொப்பியை அது சட் டென்று அடித்துப் போய் விட்டது, ஜெம்மாவின் கருங் கூந்தல் சுருள்களே உயர்த்திப் பரத்தி யது. ஸானினுடைய தலே சன்னல் குறட்டின் மட்டத்திற்கு வந்தது. தன் வசமின்றியே அவன் அதோடு ஒட்டிக் கொண்டான். ஜெம்மா அவ னுடைய தோள்களே இரு கரங்களாலும் பற்றிக் கொண்டு அவன் தலேமேல் மார்பை அழுத்திஞள். இரைச்சலும் கணகணப்பும் தடதடப்பும் ஒரு நிமிடம் போல நீடித்தன... பிரமாண்டமான பறவைகளின் கூட்டம் போல அப்பால் சென்று

விட்டது சுழன்று அடித்த சூறைக் காற்று... ஆழ்ந்த நிசப்தம் மீண்டும் குடிகொண்டது.

ஸானின் நிமிர்ந்தவன், அற்புதமான, மிரண்ட, கிளர்ச்சியுற்ற முகத்தையும், மிகப் பெரிய, அச்சம் நிறைந்த, ஒளி திகழ்ந்த கண்களேயும் தனக்கு மேலே கண்டான். அந்தப் பேரழகியின் வனப்பால் ஆட்கொள்ளப்பட்டு அவனுடைய இதயத் துடிப்பு நின்று விட்டது, தன் மார்பின் மேல் விழுந்த மெல்லிய கூந்தல் சுருள்களே உதடுகளால் ஒற்றிக் கொண்டான். அவனல் சொல்ல முடிந்தது எல்லாம் இதுதான்:

''ஓ ஜெம்மா!''

''இது என்ன? மின்னலா?'' என்று கண்களே அகல விரித்தவாறு கேட்டாள் அவள். அவன் தோள்கள் மேலிருந்து தன் திறந்த கரங்களே அவள் எடுக்கவில்லே.

''ஜெம்மா!'' என்று திருப்பிச் சொன்னன் ஸானின்.

அவள் பெரு மூச்செறிந்து, திரும்பி அறையில் பார்வை செலுத்தி விட்டு, சட்டை மார்பில் விரைவாகக் கையை விட்டு வாடிப் போய் விட்ட ரோஜாவை எடுத்து ஸானின் பக்கம் போட்டாள்.

''இந்தப் பூவை உங்களிடம் கொடுக்க விரும்பினேன்...''

தலேக்கு நாள் தான் எதிராளிகளிடமிருந்து வலியப் பிடுங்கிய ரோஜா அது என்று அவன் கண்டு கொண்டான்...

ஆனல் அதற்குள் சன்னல் கதவு சாத்தப்பட்டு விட்டது. இருண்ட கண்ணுடியின் மறு புறம் எதுவும் தென்படவில்லே, வெண்மையாகப் பளிச்சிடவில்லே.

ஸானின் தொப்பி இல்லாமல் இருப்பிடம்

திரும்பினுன்... தான் தொப்பியை இழந்து விட்டதை அவன் கவனிக்கத்தானும் இல்லை.

## 21

விடியும் தறுவாயில்தான் அவனுக்குத் தூக்கம் வந்தது. புரியக் கூடியதுதான்! அந்தக் கணநேரக் கோடைச் சூருவளியின் தாக்குதலின் போது ஒரு விஷயத்தை அவன் அவ்வாறே கண நேரத்தில் உணர்ந்தான். ஜெம்மா அழகானவள் என்பதை அல்ல, அவளை அவனுக்குப் பிடித்திருந்தது என்பதை அல்ல—இதை அவன் முன்பும் அறிந்திருந்தான்...—அவன் அவள் மேல் அனேகமாகக் காதல் கொண்டு விட்டான் என்பதை! கண நேரத்தில், அந்தச் சூருவளி போலவே அவனைத் தாக்கியது காதல். இந்தச் சமயம் பார்த்து இந்த அசட்டுத்தனமான இருவர் போர்! துயர் நிறைந்த முன்னுணர்வு அவனை வதைக்கத் தலைப்பட்டது. நல்லது, அவன் கொல்லப்பட மாட்டான் என்றே வைத்துக் கொள்வோம்... இந்த மங்கை மேல், மற்றவனுடைய மணப்பெண் மேல், அவன் கொண்ட காதலினுல் என்ன விளையக் கூடும்? இந்த ''மற்றவன்'' அவனுக்கு ஆபத்தானவன் அல்ல, ஜெம்மாவே அவனைக் காதலிப்பாள் அல்லது இப்போதே காதலித்து வருகிருள் என்று கூட வைத்துக் கொள்வோம்... இதனுல் என்னவாம்? என்ன வாமா? அப்பேர்ப்பட்ட அழகி...

அவன் அறையில் நடந்தான், மேசை அருகே உட்கார்ந்து ஒரு காகிதத்தை எடுத்து அதில் சில வரிகள் எழுதினுன், உடனே அடித்து விட்டான்... இருண்ட சாளரத்தில், விண்மீன்களுடைய கிரணங்களின் ஒளியில், வெது வெதுப்பான சூறைக்

காற்று மேனி முழுதிலும் வீச நின்ற ஜெம்மாவின். வியப்பூட்டும் உருவத்தை நினைவுபடுத்திக் கொண் டான். ஒலிம்பிக் தேவியரின் கரங்களை நிகர்த்த, சலவைக் கல்லில் செதுக்கியவை போன்ற அவ ளுடைய கரங்களை நினைவுகூர்ந்தான், அவற்றின் உயிர்ப்புள்ள சுமையைத் தன் தோள்களில் உணர்ந் தான்... தனக்காகப் போடப்பட்ட ரோஜாப் பூவைப் பிறகு எடுத்தான். அதன் பாதி வாடிய இதழ்களிலிருந்து ரோஜா மலர்களின் வழக்க மான மணத்தை விட நுண்மையான வேறு நறு மணம் வீசுவதாக அவனுக்குத் தோன்றியது...

''அவன் கொல்லவோ அங்கவீனன் ஆக்கவோ பட்டால்?''

அவன் படுக்கையில் படுக்காமல், உடைகளை யாமல், சோபாவிலேயே உறங்கி விட்டான்.

---

யாரோ அவனுடைய தோளைப் பற்றி உலுக் கினார்கள்...

அவன் கண்களைத் திறந்தவன் பந்தலியோ னேயைக் கண்டான்.

''பாபிலோனியப் போருக்கு முந்திய இரவில் மகா அலெக்சாந்தர் தூங்கியது போலத் தூங்கு கிறார்!''* என்று கூவினான் கிழவன்.

''அடே, மணி என்ன?'' என்று கேட்டான் ஸானின்.

---

* பாரசீக மன்னன் டரையஸின் (கி.மு. 331) படைகளுடன் நிர்ணயகரமான போருக்கு முந்திய இரவில் மகா அலெக்சாந்தர் வழக்கத்துக்கு மாறாக நெடு நேரம் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்ததாகத் தொன்மை வரலாற்றாளர்கள் சொல்லுகிறார்கள். அவனுடைய தளகர்த்தன் இதனால் வியப்பு அடைந்

அவன் நடந்து கொண்டான். அலுவல் தலை வனுக்குரிய வழக்கமான கண்டிப்பு சில வேளை களில் இந்தப் பெரிய மனிதப்பாங்கின் ஊடாக வெளிப்பட்டது. உதாரணமாக, ஒரு ஓடையைப் பற்றி அது அழகான சில வளைவுகளுடன் பெருகு வதற்குப் பதிலாகப் பள்ளத்தாக்கில் மட்டு மீறி நேராக ஓடுகிறது என்முன். ஒரு பறவையின்— பிஞ்ச் பறவையின்—செயலையும் அவன் ஒப்ப வில்லை. தனது இசையொலிகளில் போதிய வேறு பாடுகளை அது காட்டவில்லையாம்! ஜெம்மா அலுப்பு அடையவில்லை, வெளிப்பார்வைக்கு அவள் மகிழ்ச்சி அனுபவித்ததாகக் கூடத் தோன் றியது. ஆனல் முந்திய ஜெம்மாவை ஸானின் அவளிடம் காணவில்லை. அவளுடைய ஒளி மங்கி விட்டது என்று சொல்ல முடியாது. அவளது அழகு முன் ஒருபோதும் இப்போதை விடச் சுடர் வீசிய தில்லை. ஆயினும் அவளுடைய நெஞ்சம் தன்னில், உள்ளுக்குள், போய் விட்டது. குடையை விரித்து, கையுறைப் பொத்தான்களைக் கழற்ருமல், படித்த பெண்கள் உலாவுவது போல அடிமேல் அடி வைத்து, நிதானமாக நடந்தாள், குறைவாகப் பேசினுள். எமீலியோவும் கூச்சப்பட்டான். ஸானினே ஒரேயடியாகக் கூசினுன். உரையாடல் இடைவிடாமல் ஜெர்மன் மொழியில் நடந்தது அவனை ஓரளவு குழப்பத்துக்கு உள்ளாக்கிற்று. தர்த்தாலியா ஒன்றுதான் சோர்வே அடைய வில்லை! தனக்கு எதிர்ப்பட்ட கருங் குருவிகளை விரட்டிக் கொண்டு வெறியுள்ள குலைப்புடன் பாய்ந்தது, நொடிகளையும் அடி மரத் துண்டுகளை யும் பானைகளையும் தாண்டிக் குதித்தது, நீரில் தாவிப் பாய்ந்து அவசர அவசரமாக அதை நக்கிக் குடித்தது, உடம்பை நீர் போகும் படி உதறி

உலுக்கியது, கீச்சிட்டது, சிவந்த நாக்கைத் தோள் வரை தொங்க விட்டுக் கொண்டு மறுபடி அம்பு போல் பாய்ந்தது! கூட்டாளிகளைச் சந் தோஷப்படுத்துவதற்குத் தேவையானவை என்று தான் எண்ணிய எல்லாவற்றையும் தன் பங்குக்கு ஹெர் கிளியூபெர் செய்தான். கிளைகளை விரியப் பரப்பி நின்ற ஓக் மரத்தின் நிழலில் அவர்களை உட்காரச் சொன்னான். பின்பு, பக்கப் பையிலி ருந்து "Knallerbsen—oder du sollst und wirst lachen !" (தடை வெடிகள்—அல்லது நீ சிரிக்க வேண் டும், சிரிப்பாய்!) என்னும் தலைப்புள்ள சிறு புத் தகத்தை எடுத்தான். நகைச்சுவைத் துணுக்குகள் நிறைந்த அந்தப் புத்தகத்திலிருந்து பொறுக்கி எடுத்த சிலவற்றை உரக்கப் படித்தான். ஒரு பன்னிரண்டு துணுக்குகளைப் படித்தான், ஆனால் பிரமாத மகிழ்ச்சி ஏற்படுத்தி விடவில்லை. ஸானின் ஒருவன்தான் மரியாதைக்காகப் பற்களைக் காட்டினான். ஹெர் கிளியூபெர் ஒவ்வொரு நகைச்சுவைத் துணுக்குக்கும் பிறகு சுருக்கமான, காரியப் பாங்கான, அதே சமயம் பெரிய மனிதத் தோரணையுள்ள சிரிப்பு சிரித்தான். பன்னிரண்டு மணி வாக்கில் எல்லோரும் ஸோடெனுக்குத் திரும்பி, அங்கிருந்த சிறந்த உணவு விடுதியை அடைந்தார்கள்.

மதியச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்ய வேண்டி இருந்தது.

எல்லாப் புறங்களிலும் மூடிய பந்தரில்—"im Gartensalon"—சாப்பாட்டை வைத்துக் கொள் ளலாம் என்று ஹெர் கிளியூபெர் யோசனை சொன் னான். அப்போது ஜெம்மா திடீரெனக் கிளர்ச்சி செய்தாள். காற்றோட்டமாகத் தோட்டத்தில், உணவு விடுதிக்கு முன்னே போட்டிருக்கும்

''ஆறே முக்கால். கனவு போய்ச் சேர இரண்டு மணி நேரம் ஆகும். நாம் முன்னதாக இடத்தில் இருக்க வேண்டும். ருஷ்யர்கள் எப் போதும் பகைவர்களை முந்துவார்கள்! பிராங்க் பர்ட்டில் உள்ள மிகச் சிறந்த வண்டியை அமர்த்தி இருக்கிறேன்!''

ஸானின் உடம்பு கமுவிக் கொள்ளத் தொடங் கினன்.

''கைத்துப்பாக்கிகள் எங்கே?''

''கைத்துப்பாக்கிகளை அந்த பெர்ரோபு ளுக்தோ தெதேஸ்கோ கொண்டு வருவான். டாக் டரையும் அவனே அழைத்து வருவான்.''

பந்தலியோனே முந்திய நாளில் போலவே உற்சாகமாய் இருந்தான். ஆனல் ஸானினுடன் அவன் வண்டியில் உட்கார்ந்து, வண்டிக்காரன் சாட்டையைச் சொடுக்கி, குதிரைகள் எடுத்த எடுப்பிலேயே பாய்ச்சலில் ஓடத் தொடங்கியதும் முன்னுள் பாடகனும் பாதுயாக் குதிரைப் படை யினரின் நண்பனுமான கிழவனிடம் திடீர் மாறு தல் நிகழ்ந்தது. அவன் கூச்சப்பட்டான், அச்சம் கூடக் கொண்டான். மோசமாக எழுப்பப்பட்ட சுவர் மாதிரி எதுவோ ஒன்று அவனுக்குள் இடிந்து தகர்ந்து விட்டது போல் இருந்தது.

''ஆனலும் நாம் என்னதான் செய்கிறோம், என் ஆண்டவனே, santissima Madonna !* என்று எதிர்பாரா விதமாகக் கீச்சுக் குரலில் கூவித் தலை மயிரைப் பிடித்துக் கொண்டான். ''என்ன

---

தானும். வெற்றியில் உள்ள நம்பிக்கை காரண மாகவே தான் அமைதியாய் இருப்பதாக அலெக் சாந்தர் அவனுக்கு விளக்கினனும். மெய்யாகவே போர் பாரசீகர்களின் படு தோல்வியில் முடிந்தது.

* புனித தேவ மாதாவே! (இத்.).

செய்கிறேன் நான், மட்டிக் கிழவனுன நான், பைத்தியம் பிடித்தவன், frenetico?"

ஸானின் வியப்படைந்தான். வாய் விட்டுச் சிரித்து, பந்தலியோனேயின் இடையை லேசாகத் தழுவிக் கொண்டு, பிரெஞ்சுப் பழமொழியை அவனுக்கு நினைவுபடுத்தினன்: "Le vin est tirè—il faut le boire."*

''ஆமாம், ஆமாம்'' என்முன் கிழவன். ''இந்தக் கோப்பையை நாம் குடித்துத் தீர்ப்போம், ஆனுலும் நான் மதியீனன்! நான் அறிவு கெட்டவன்! எல்லாம் ஒரே அமைதியாக, நன்முக இருந்தது... திடீரென்று எல்லாம் தடதடவென்று சரிந்து விடும் போல் இருக்கிறது!''

''கூட்டிசையில் வரும் tutti** போல'' என்று வலிந்த புன்னகையுடன் சொன்னுன் ஸானின். ''ஆனுல் பொறுப்பாளி நீங்கள் அல்ல.''

''நான் அல்ல என்பதை அறிவேன்! அதுதான் குறை! ஆனுலும் இது... கட்டுப்படுத்த முடியாத செயல். Diavolo! Diavolo!*** என்று புதர் முடியைக் குலுக்கிப் பெருமூச்செறிந்தான்.

இதற்கிடையே வண்டி உருண்டு ஓடிய வண்ணமாய் இருந்தது.

காலே கண்கவர் வனப்புடன் திகழ்ந்தது.

அரைகுறையாக உயிர்க்கத் தொடங்கி இருந்த பிராங்க்பர்ட் நகர வீதிகள் மிகத் துப்புரவாகவும் வசதி உள்ளவையாகவும் காட்சி தந்தன. வீட்டுச்

---

* ''நுகத்தில் கழுத்தைக் கொடுத்த பின் வலிக்கிறதே என்முல் முடியுமா?'' என்ற தமிழ்ப் பழமொழி போன்றது.—மொ-ர்.

** எல்லா இசைக் கருவிகளும் ஒருங்கே இசைப்பதைக் குறிக்கும் சொல் (இத்.).

*** அட சைத்தான்! அட சைத்தான்!

சாளரங்கள் வெள்ளிக் குருநாத் தகடு போலப் பளபளத்து ஒளிர்ந்தன. வண்டி நகர எல்லையைக் கடந்ததுதான் தாமதம், மேலிருந்து, இன்னும் வெளிச்சமாகாத இள நீல வானத்திலிருந்து, வானம்பாடிகளின் தெளிவான குரலிசை தாரை களாகப் பொழிந்தது. திடீரென்று சாலைத் திருப் பத்தில் உயரமான பாப்ளார் மரத்தின் பின் னிருந்து வெளிப்பட்டது தெரிந்த உருவம். சில அடி கள் நடந்த பிறகு அது நின்று விட்டது. ஸானின் கூர்ந்து நோக்கினான்... அட கடவுளே! எமீலியோ!

''இவனுக்கு என்ன, விஷயம் தெரியுமோ?'' என்று பந்தலியோனேயிடம் கேட்டான் ஸானின்.

''நான் மூளை கெட்டவன் என்று நான்தான் உங்களிடம் சொல்லுகிறேனே'' என்று புகலின்றி, அனேகமாக வீரிட்டான் பேதைக் கிழவன். ''இந்த ஆக்கங்கெட்ட சிறுவன் இரவு முழுவதும் என்னை நச்சரித்தான். கடைசியில் இன்று காலை நான் இவ னுக்கு விஷயத்தைத் தெரிவித்து விட்டேன்!''

''அழகுதான் உன்னுடைய segredezza!" என்று எண்ணிக் கொண்டான் ஸானின்.

வண்டி எமீலியோவுக்கு நேராக வந்ததும் குதிரைகளை நிறுத்தும்படி வண்டிக்காரனிடம் சொல்லி விட்டு ''ஆக்கங் கெட்ட சிறுவனை'' அரு கழைத்தான் ஸானின். எமீலியோ தயக்கத்துடன் நடந்து பக்கத்தில் வந்தான். மயக்கம் போட்ட அன்று போல ஒரேயடியாக வெளிறிப் போயிருந் தான். நிற்கவே முடியாமல் தள்ளாடினான்.

''இங்கே நீங்கள் என்ன செய்கிறீர்கள்? நீங் கள் ஏன் வீட்டில் இல்லை?'' என்று கண்டிப்புடன் வினவினான் ஸானின்.

''அனுமதியுங்கள்... உங்களோடு வர என்னை அனுமதியுங்கள்'' என்று நடுங்கும் குரலில் குழறி

ஞன் எமீலியோ. குளிருக்கு அடக்கமாகக் கை களைக் கட்டிக்கொண்டான். அவனுடைய பற்கள் காய்ச்சலில் போலக் கடகடவென்று அடித்துக் கொண்டன. ''நான் உங்களுக்கு இடைஞ்சல் செய்ய மாட்டேன். என்னையும் கூட்டிப் போங் கள்!''

''என் மேல் உங்களுக்கு மயிரிழையாவது அன்போ மரியாதையோ இருக்குமானல், இக் கணமே வீட்டுக்கோ ஹெர் கிளியூபெரின் கடைக் கோ திரும்புங்கள், ஒருவரிடமும் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் நான் திரும்பும் வரை காத் திருங்கள்! என்முன் ஸானின்.

''நீங்கள் திரும்பும்வரை'' என்று முனகிஞன் எமீலியோ. அவனுடைய குரல் ஒலித்து விட்டு முறிந்தது, ''ஆனல் நீங்கள்...''

''எமீலியோ!'' என்று அவன் பேச்சில் குறுக் கிட்டு வண்டிக்காரனை விழிகளால் சுட்டிஞன் ஸானின். ''நிதானத்துக்கு வாருங்கள்! எமீலியோ, தயை செய்து வீட்டுக்குப் போங்கள்! நான் சொல் வதைக் கேளுங்கள், என் அன்பரே! என்னை நேசிப் பதாக நீங்கள் கூறுகிறீர்களே. ஊம், நான் உங் களை வேண்டிக் கொள்கிறேன்!''

அவன் சிறுவனிடம் கையை நீட்டிஞன். எமீ லியோ முன்னே சாய்ந்து, தேம்பி, அதைத் தன் உதடுகளோடு அழுத்திக் கொண்டு, சாலையிலி ருந்து துள்ளி விலகி, திடலின் ஊடாக பிராங்க் பர்ட் நகருக்குத் திரும்பி ஓடிஞன்.

''இதுவும் சால்புள்ள இதயம்'' என்று வாய்க் குள் முணுமுணுத்தான் பந்தலியோனே, ஆனல் ஸானின் அவனை முறைத்துப் பார்த்தான்... கிழ வன் வண்டியின் மூலையில் ஒடுங்கி விட்டான். தன்

குற்றத்தை அவன் உணர்ந்தான். அதோடுகூடக் கணத்துக்குக் கணம் அவனுடைய வியப்பு அதிக மாகிக் கொண்டு போயிற்று: உண்மையிலேயே போர்த் துணைவன் ஆகி இருப்பவன் அவனு, குதிரை களை அமர்த்தி இருப்பவனும் எல்லா ஏற்பாடு களும் செய்திருப்பவனும் தன்னுடைய அமைதி யான இருப்பிடத்தை விட்டுக் காலை ஆறு மணிக்குக் கிளம்பி இருப்பவனும் அவனு? இவ்வாறு எண்ணி எண்ணி வியந்தான். போதாக்குறைக்கு அவனுடைய கால்கள் வலியெடுத்து உளைந்தன.

அவனை உற்சாகப்படுத்துவது அவசியம் என்று ஸானின் கருதினுன். சரியான தந்தியை மீட்ட, பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுக்க அவ னுக்கு வாய்த்தது.

''உங்களுடைய முந்திய வீரம் எங்கே போயிற்று, மதிப்புக்குரிய ஸிஞ்ஞோர் சிப்பத் தோலா? எங்கே il antico valor!"

ஸிஞ்ஞோர் சிப்பத்தோலா உடம்பை நிமிர்த்து முகத்தைச் சுளித்தான்.

"Il antico valor?" என்று கட்டைக் குரலில் முழங்கினுன். "Non é ancora spento" (அது அறவே தீர்ந்து போய் விடவில்லை)— "il antico valor!!"

அவன் பெருமிதத் தோற்றத்தை மேற் கொண்டு தன் அரங்கத் தொழிலையும் ஆபெரா வையும், உயர்குரல் பாடகர் கார்ஸியாவையும் பற்றிப் பேசத் தொடங்கியவன் கனுவு போய்ச் சேருகையில் உற்சாகம் பொங்க விளங்கினுன். நினைத்துப் பார்க்கும் போது தெரிகிறது: சொற் களைக் காட்டிலும் வலிமை உள்ளவையும்... வலி மை இல்லாதவையும் உலகில் எவையும் இல்லை!

## 22

படுகொலை நடக்க வேண்டி இருந்த சிறு காடு கணுவிலிருந்து இரண்டு பர்லாங்கு தூரத்தில் இருந்தது. பந்தலியோனே முன் கூறியது போலவே அவனும் ஸானினும் முதலில் அங்கு போய்ச் சேர்ந் தார்கள். காட்டு ஓரத்தில் நிற்கும்படி வண்டிக் காரனிடம் சொல்லிவிட்டு, போதிய அளவு அடர்ந்து நெருக்கமாய் இருந்த மரங்களின் நிழ லில் புகுந்தார்கள். அவர்கள் சுமார் ஒரு மணி நேரம் காத்திருக்க வேண்டி வந்தது.

காத்திருப்பது ஸானினுக்கு அவ்வளவு சிரம மாக இல்லை. பாதையில் முன்னும் பின்னும் நடந் தான், பட்சிகள் பாடியதை உற்றுக் கேட்டான், முக்கோண வரிசைகளில் பறந்த பறவைக் கூட்டங் களைப் பார்வையால் தொடர்ந்தான், அதோடு, இம்மாதிரி சந்தர்ப்பங்களில் பெரும்பாலான ருஷ் யர்கள் செய்வது போல, ஒன்றுமே எண்ணுமல் இருக்க முயன்முன். ஒரு தரந்தான் அவனைச் சிந் தனை ஆட்கொண்டது: ஓர் இளம் லிண்டன் மரத் தை அவன் கண்டான். அது முறிந்திருந்தது— தலைக்கு நாள் அடித்த சுழற் காற்றில் போலும். அது கட்டாயம் பட்டுப் போகும் நிலையில் இருந் தது... அதன் இலைகள் எல்லாம் வாடிக் கொண் டிருந்தன. ''என்ன இது? முன் அறிகுறியா?'' என்ற எண்ணம் அவன் மனத்தில் எழுந்தது. ஆனல் அவன் உடனே சீழ்க்கை அடிக்கத் தொடங்கினன். அதே லிண்டன் மரத்தைத் தாண்டிக் குதித்துப் பாதையில் நடந்தான். பந்தலியோனேயோ, முணு முணுத்தான், ஜெர்மானியர்களைத் திட்டினன், முனகினன், முதுகையும் காலையும் மாற்றி மாற்றித் தேய்த்துக் கொண்டான். உள்ளக் கிளர்ச்சி

காரணமாகக் கொட்டாவிகூட விட்டான். அது அவனுடைய சிறிய, சுருங்கிய முகத்திற்கு மிக வேடிக்கையான தோற்றத்தை அளித்தது. ஸானி னுக்கு அதைப் பார்த்துக் கெக்கலி கொட்டி நகைக்க வேண்டும் போல் இருந்தது.

மென்மையான சாலையில் சக்கரங்களின் கட கடப்பு கடைசியில் காதில் பட்டது. ''அவர்கள்!'' என்று கூறிய பந்தலியோனே எச்சரிக்கை அடைந்து உடம்பை விறைப்பாக்கிக் கொண்டான். நரம்புக் கிளர்ச்சியால் கண நேர நடுக்கம் அவனுக்கு ஏற் படத்தான் செய்தது. ''ப்ர்ர்ர்!'' என்று கூவி, அன்று காலையில் குளிர் கொஞ்சம் அதிகம் என்று கூறி, இந்த நடுக்கத்துக்குத் திரையிட முயன்றான். நிறையப் பெய்திருந்த பனி நீர் புற்களையும் இலை களையும் மூழ்கடித்திருந்தது, ஆனாலும் வெக்கை காட்டுக்கு உள்ளே ஏற்கெனவே புகுந்து விட்டது.

இரண்டு படை அதிகாரிகளும் காட்டின் கிளைப் பந்தர்களின் கீழ் விரைவில் தென்பட்டார்கள். அசட்டையுள்ள, அனேகமாக உறங்கி வழியும் முகமும் கட்டுக் குட்டான சிறிய மேனியும் கொண்ட ஒரு மனிதன் அவர்களோடு வந்தான். படை மருத்துவன் அவன். ஒரு கையில் நீர் நிறைந்த மண் கூஜா வைத்திருந்தான்—எதற்கும் இருக்கட்டும் என்று. அறுவை மருத்துவக் கருவி களும் கட்டுத் துணிச் சுருள்களும் அடங்கிய பை அவனுடைய இடது தோளில் தொங்கியது. இந்த மாதிரிப் பயணங்களுக்கு அவன் மிக நிறையப் பழக்கப்பட்டிருந்தது கண்கூடாகத் தெரிந்தது. அவனுடைய வருவாய்க்கு ஓர் ஊற்றாக விளங்கின இவை. ஒவ்வோர் இருவர் போரும் அவனுக்கு

எட்டுச் செர்வோனெத்ஸ்* வருவாய் தந்தது—ஒவ்வொரு தரப்பிலிருந்தும் நான்கு செர்வோனெத்ஸ். வான் ரீஹ்தர் கைத்துப்பாக்கிப் பெட்டியை எடுத்து வந்தான். வான் டோன்ஹாப் சிறு சாட்டையை—பகட்டுக்காகப் போலும்—கையில் பிடித்துச் சுழற்றிக் கொண்டிருந்தான்.

''பந்தலியோனே!'' என்று கிழவனிடம் கிசு கிசுத்தான் ஸானின்.''ஒருவேளை... ஒருவேளை நான் கொல்லப்பட்டால், என் பக்கப் பையிலிருக்கும் காகிதத்தை ஸிஞ்ஞோரிஜு ஜெம்மாவிடம் கொடுங்கள். அதில் பூ சுற்றி வைத்திருக்கிறது. கேட்டீர்களா? கொடுப்பீர்களா?''

முதியவன் அவனைச் சோர்வுடன் பார்த்து ஆகட்டும் என்று தலையை ஆட்டினுன்... ஆனுல் ஸானின் தன்னிடம் கேட்டதை அவன் புரிந்து கொண்டானு என்பது கடவுளுக்கே வெளிச்சம்.

எதிராளிகளும் போர்த் துணைவர்களும் முறைப்படி ஒருவருக்கு ஒருவர் வணக்கம் தெரிவித்தார்கள். மருத்துவன் ஒருவன்தான் புருவங்களைக் கூட உயர்த்தவில்லை. கொட்டாவி விட்டவாறு புல்லில் அமர்ந்தான். ''இந்தப் பிரபுவம்ச மரியாதை விதிகளுக்கும் எனக்கும் வெகு தூரம்'' என்றுஅவன் சொன்னது போலிருந்தது.இடத்தைத் தெரிந்தெடுக்கும்படி வான் ரீஹ்தர் ''திருவாளர் த்ஷிபதோலா''வைக் கேட்டுக் கொண்டான். ''திருவாளர் த்ஷிபதோலா'' அசட்டுத்தனமாக நாக்குழற (அவனுக்குள் ''சுவர்'' மறுபடி இடிந்து தகர்ந்து விட்டது) ''எல்லாம் நீங்களே செய்யுங்கள் அன்பார்ந்த திருவாளரே, நான் பார்த்துக்

---

* பத்து ரூபிள் மதிப்புள்ள தங்க நாணயம் அல்லது நோட்டு.—மொ-ர்.

கொண்டிருப்பேன்...'' என்று பதில் சொன்ஞன்.

வான் ரீஹ்தர் செயல்படத் தொடங்கிஞன். அங்கேயே காட்டில், பல நிறப் பூக்கள் மலர்ந் திருந்த அழகான திறப்பு வெளியைக் கண்டுபிடித் தான். அடிகளை நடந்து அளவிட்டான். அவசர மாகச் சீவிய இரண்டு கழிகளால் இரு எல்லைகளை யும் குறித்தான், பெட்டியிலிருந்து கைத்துப்பாக்கி களை எடுத்து மண்டியிட்டு அமர்ந்து அவற்றில் தோட்டாக்களைக் கெட்டித்தான். சுருங்கச் சொன் ஞல் முழு மூச்சாகப் பாடுபட்டு உழைத்தான். வியர்த்து வடிந்த முகத்தை வெள்ளைக் கைக்குட் டையால் ஓயாமல் துடைத்துக் கொண்டு போஞன். அவனேடு நடந்த பந்தலியோனே குளிரில் நடுங்கு பவனை அதிகமாக ஒத்திருந்தான். இந்த முன்னேற் பாடுகள் எல்லாம் நடந்து கொண்டிருந்த போது இரண்டு எதிராளிகளும் தங்கள் ஆசிரியர்களிடம் முறைத்துக் கொண்டிருக்கும் தண்டிக்கப்பட்ட பள்ளிச் சிறுவர்கள் போல எட்ட நின்று கொண் டிருந்தார்கள்.

நிர்ணயகரமான நேரம் வந்தது...

''அவரவர் எடுத்தனர் தம்தம் கைத்துப் பாக்கி...''*

விதியை முடிவு செய்யும் ''ஒன்று, இரண்டு மூன்று!'' என்னும் சொற்களைக் கூறுவதற்கு முன் ஞல், சமாதானம் செய்து கொள்ளும்படி அறி வுறுத்திக் கடைசி முறையாக யோசனை சொல்வது

---

* அலெக்சாந்தர் பூஷ்கின் இயற்றிய ''யெவ் கேனி அனேகின்'' காவிய நவீனத்தில் வரும் வரி (அத்தியாயம் 6, வரி 29).

மூத்த போர்த் துணைவன் என்ற வகையில் பந்தலி யோனேயின் கடமை என்று வான் ரீஹ்தர் அப் போது அவனிடம் சொன்னான். இந்த யோசனை யால் ஒருபோதும் எவ்விதப் பயனும் விளைவதில்லை என்றும், இது மொத்தத்தில் வெறும் சடங்கு தவிர வேறில்லை என்றும், ஆனாலும் இந்தச் சடங்கை நிறைவேற்றுவதன் மூலம் திருவாளர் சிப்பத் தோலா பொறுப்பின் ஒரு பகுதியைத் தம்மிட மிருந்து அகற்றுவார் என்றும், இந்த மாதிரி அறி வுறுத்துவது ''சார்பற்ற சாட்சி'' (unparteisicher Zeuge) எனப் படுபவரின் நேரான பொறுப்பு என்றும், அவர்களிடம் அந்த மாதிரிச் சாட்சிகள் இல்லாமையால், இந்தச் சிறப்புரிமையைத் தன் மதிப்புக்குரிய. சோதரருக்குத் தான் மகிழ்ச்சி யுடன் விட்டுக் கொடுப்பதாகவும் அப்போது வான் ரீஹ்தர் பந்தலியோனேயிடம் சொன்னான். அவ மதித்த படை அதிகாரியை அறவே பார்க்காதிருக் கும் பொருட்டு இதற்குள் புதரின் பின் மறைந்து கொண்ட பந்தலியோனே, வான் ரீஹ்தரின் பேச் சில் எதையும் முதலில் புரிந்து கொள்ளவில்லை, அதிலும் அவன் மூக்கால் பேசியதால். எனினும் திடீரென்று திடுக்கிட்டு விரைவாக முன்னே போய், வலிப்பு வந்தவன் போல மார்பில் அறைந்து கொண்டு, தன் கலப்படப் பேச்சில் கம்மிய குரலில் கூறினான்: “A la-la-la... Che bestialitá! Deux zeun' ommes comme ca qué si battono—perche? Che diavolo? Andate a casa!”*

---

* ஆ ல-ல-லா... இது என்ன மிருகத்தனம்? இரண்டு இளைஞர்கள் சண்டை போடுகிறார்கள்— எதற்காக? இது என்ன சைத்தான்! போங்கள் வீட்டுக்கு!'' (இத்தாலிய, பிரெஞ்சுக் கலவை).

''நான் சமரசத்துக்கு இசையவில்லை'' என்று விரைவாக முந்திக் கொண்டு சொன்னான் ஸானின்.

''நானும் இசையவில்லை'' என்று அவன் பின்னே திருப்பிச் சொன்னான் எதிராளி.

செய்வது தெரியாமல் குழம்பிய பந்தலியோனேயைப் பார்த்து, ''ஒன்று, இரண்டு, மூன்று!'' என்று கத்துங்கள் என்றான் வான் ரீஹ்தர்.

அவன் தாமதமின்றி மீண்டும் புதருக்குப் பின் மறைந்து கொண்டு, ஒரேயடியாகக் கூனிக் குறுகி, கண்களைச் சுருக்கி, தலையை மறுபுறம் திருப்பியவாறு, உரக்கக் கத்தினான்:

"Una... due... e tre!"*

முதலில் சுட்டான் ஸானின். அவனுக்குக் குறி பிசகி விட்டது. அவன் சுட்ட குண்டு மரத்தைக் கணீரென்று தாக்கியது. டோன்ஹாப் பிரபு அவனுக்குப் பின் உடனே சுட்டான்—வேண்டுமென்றே ஒரு புறமாக, காற்றில்.

இறுக்கம் நிறைந்த மௌனம் குடிகொண்டது... ஒருவரும் இடத்தை விட்டு அசையவில்லை. பந்தலியோனே பலவீனமாக ஓவென்று முனகினான்.

''தொடர உத்தரவிடுகிறீர்களா?'' என்றான் டோன்ஹாப்.

''நீங்கள் எதற்காகக் காற்றில் சுட்டீர்கள்?'' என்று கேட்டான் ஸானின்.

''அது உங்கள் விவகாரம் அல்ல.''

''இரண்டாம் தடவையும் காற்றில் சுடப் போகிறீர்களா?'' என்று ஸானின் மறுபடி கேட்டான்.

''ஒருவேளை. அறியேன்.''

''கேளுங்கள், கேளுங்கள், திருவாளர்களே...''

---

* ஒன்று... இரண்டு... மூன்று! (இத்.).

என்று தொடங்கினான் வான் ரீஹ்தர். ''இருவர் போர் செய்பவர்களுக்குத் தங்களுக்குள் பேசிக் கொள்ள உரிமை கிடையாது. இது அறவே முறை அற்றது.''

''நான் இந்தத் தடவை சுடுவதற்கு மறுக்கிறேன்'' என்று கூறிக் கைத்துப்பாக்கியைத் தரையில் எறிந்தான் ஸானின்.

''எனக்கும் இருவர் போரைத் தொடர்வதாக எண்ணம் இல்லை'' என்று கூவி, தன் கைத்துப் பாக்கியை டோன்ஹாபும் வீசி எறிந்தான். ''தவிர வும் மூன்றாம் நாள் நான் செய்தது சரி அல்ல என்று ஒப்புக் கொள்ள இப்போது நான் தயார்.''

அவன் சற்று நேரம் தயங்கி நின்றான், பின்பு உறுதி இன்றிக் கையை முன்னே நீட்டினான். ஸானின் விரைவாக அவனை நெருங்கி அதைப் பற்றிக் குலுக்கினான். இரு இளைஞர்களும் ஒரு வரை ஒருவர் புன்னகையுடன் பார்த்துக் கொண் டார்கள். இருவருடைய முகங்களும் சிவந்தன.

"Bravi ! Bravi !"* என்று பைத்தியம் பிடித் தவன் போலத் திடீரென்று கூப்பாடு போட்ட பந்தலியோனே, கைகளைக் கொட்டியவாறு புத ருக்குப் பின்னாலிருந்து சிறகடிக்கும் புறா போலப் பறந்து வந்தான். ஒரு பக்கம் விலகி வெட்டு மரத் துண்டின் மேல் உட்கார்ந்திருந்த மருத்துவன் தாமதமின்றி எழுந்து கூஜாத் தண்ணீரைக் கொட்டி விட்டு, சோம்பலுடன் அசைந்தாடி நடந்தவாறு காட்டோரத்துக்குப் போனான்.

''மான உணர்ச்சி திருப்தி ஆகி விட்டது, இரு வர் போர் முடிந்தது!'' என்று அறிவித்தான் வான் ரீஹ்தர்.

---

* பலே! பலே! (இத்.).

"Fuori !* என்று பழைய நினைவுப்படி இன்னும் ஒரு முறை முழங்கினான் பந்தலியோனே.

---

படை அதிகாரித் திருவாளர்களுடன் வணக்கங்களைப் பரிமாறிக் கொண்டு வண்டியில் உட்கார்ந்ததும் ஸானின் திருப்தி இல்லாவிடினும், அறுவைச் சிகிச்சையைத் தாங்கிக் கொண்ட பிறகு ஏற்படுவது போன்ற, ஓரளவு சுமை இறங்கிய உணர்வைத் தன் உடல், உள்ளம் அனைத்தாலும் உணர்ந்தான். அதே சமயம் வேறோர் உணர்வும் அவனுக்குள் உயிர்த்தது. வெட்கத்தை நிகர்த்த உணர்வு அது... தான் அப்போதுதான் தன் பாத்திரத்தை நடித்து முடித்த இருவர் போர் பொய்மையாக, முன்கூட்டி ஏற்பாடு செய்யப்பட்ட வெற்றுச் சடங்காக, படை அதிகாரிகளுக்கும் கல்லூரி மாணவர்களுக்கும் உரிய சாதாரணச் சம்பிரதாயமாக அவனுக்குத் தோன்றியது. அசட்டைப் போக்குள்ள மருத்துவனை அவன் நினைவு கூர்ந்தான். டோன்ஹாப் பிரபுவுடன் அனேகமாகக் கைகோத்துக் கொண்டு ஸானின் காட்டிலிருந்து வெளியே வந்ததைக் கண்ட போது மருத்துவன் புன்னகை செய்ததை, அதாவது மூக்கைச் சுளித்ததை, நினைத்துக் கொண்டான். பிற்பாடு இதே மருத்துவனுக்குப் பந்தலியோனே அவனுக்குச் சேர வேண்டிய நான்கு செர்வோனெத்ஸ்

---

* ''முன்வருக!'' என்று பொருள்படும் இத்தாலியச் சொல். கலைஞர்களின் நிகழ்ச்சியைப் பாராட்டி அவர்களை அரங்கில் முன்னே வருமாறு அழைக்கப் பார்வையாளர்கள் பயன்படுத்திய சொல்.—மொ.-ர்.

கொடுத்த போதும் அதே போல... சே! மோசம் ஒரு வகையில்!

ஆம், ஸானினுக்கு ஓரளவு நாணமாகவும் அவமானமாகவும் இருந்தது... ஆனால், வேறு நோக்கில் பார்க்கும் போது, அவன் என்ன செய்திருக்க முடியும்? இளம் படை அதிகாரியின் துடுக்குக்குத் தண்டனை கொடுக்காமல் விட்டிருக்கக் கூடாதல்லவா, ஹெர் கிளியூபெர் போல நடந்து கொண்டிருக்கக் கூடாதல்லவா? அவன் ஜெம்மாவின் சார்பில் செயல்பட்டான், அவளைக் காத்துப் போராடினான்... இது சரிதான். ஆனாலும் அவனது நெஞ்சில் உறுத்தல் ஏற்பட்டது. அவனுக்கு நாணமும் அவமானமுங்கூட உண்டாயின.

மாருகப் பந்தலியோனே ஒரே வெற்றி கொண்டாடினான்! அவனுக்குத் திடீரென்று கர்வம் தலைக்கேறி விட்டது. தான் வென்ற போர்க் களத்திலிருந்து திரும்பும் வெற்றியாளனை தளகர்த்தன் அவனைவிட அதிகச் சுயதிருப்தியுடன் சுற்றுமுற்றும் பார்வை செலுத்தி இருக்க மாட்டான். இருவர் போரின் போது ஸானின் நடந்து கொண்ட விதம் அவனை உவகையால் பூரிக்கச் செய்தது. ஸானினை வீரன் என்று அழைத்தான். அவனுடைய கடிந்துரைகளையும் வேண்டுகோள்களையும் கூடக் காதிலேயேபோட்டுக் கொள்ள மறுத்து விட்டான். சலவைக்கல் அல்லது வெண்கல நினைவுச் சின்னத்துக்கும் ''டான் ஜுவான்'' நாடகத்தில் வரும் கமாண்டோரின் சிலைக்கும் அவனை ஒப்பிட்டான்! தான் கொஞ்சம் திகில் அடைந்ததாக ஒப்புக் கொண்டான். ''ஆனால் நான் நடிகன், என் இயல்பு பதற்றம் உள்ளது. நீங்களோ, வெண்பனியும் கற்பாறைகளும் செறிந்த நாட்டின் புதல்வர்'' என்றான்.

எல்லை கடந்து உற்சாகம் அடைந்து விட்ட நடிகனை நிலைக்குக் கொண்டு வருவது எப்படி என்று ஸானினுக்குத் தெரியவே இல்லை.

---

சுமார் இரண்டு மணி நேரத்துக்கு முன்னால் சாலையின் எந்தப் பகுதியில் அவர்கள் எமீலியோ வைக் கண்டார்களோ, அனேகமாக அதே இடத் தில் அவன் மரத்தின் பின்னாலிருந்து மறுபடி தாவினான். களி பொங்கும் ஆரவாரத்துடன் தொப்பியைத் தலைக்கு மேலே ஆட்டிக் கொண் டும் துள்ளிக் குதித்துக் கொண்டும் நேரே வண் டியை நோக்கிப் பாய்ந்தவன், சக்கரத்துக்கு அடி யில் மாட்டிக் கொள்ளாமல் மயிரிழை தப்பினான். குதிரைகள் நிற்கும் வரை காத்திராமல் மூடிய கதவுகள் வழியே தொற்றி உள்ளே புகுந்து ஸானி னோடு ஒண்டிக் கொண்டான்.

''நீங்கள் உயிரோடு இருக்கிறீர்கள், நீங்கள் காயம் அடையவில்லை!'' என்று திருப்பித் திருப்பிச் சொன்னான். ''என்னை மன்னியுங்கள், நான் உங்கள் பேச்சைக் கேட்கவில்லை, பிராங்க்பர்ட் திரும்பவில்லை... என்னால் முடியவில்லை! இங்கே உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்... சொல்லுங்கள். இது எப்படி நடந்தது?.. அவனை நீங்கள்... கொன்று விட்டீர்களோ?''

ஸானின் எமீலியோவைச் சிரமத்துடன் சமா தானப் படுத்தி உட்கார வைத்தான்.

இருவர் போரின் எல்லா விவரங்களையும் சொல் ஆடம்பரத்துடன், வெளிப்படையான திருப்தி ததும்ப அவனுக்கு விவரித்தான் பந்தலி யோனே. வெண்கல நினைவுச் சின்னத்தையும் கமாண்டோரின் சிலையையும் குறிப்பிட அவன்

தவறவில்லை! தன் இடத்திலிருந்துகூட எழுந்து, சமநிலை பிசகாமல் இருப்பதற்காகக் கால்களைப் பரப்பியவாறு நின்று, கைகளை மார்பில் கட்டிக் கொண்டு, தோள் வழியே இகழ்ச்சியுடன் ஓரப் பார்வை பார்த்த வண்ணம் கமாண்டோர் ஸானினைக் கண்கூடாக உருவகப்படுத்திக் காட்டினான்! ஆழ்ந்த பக்தியுடன் கேட்டுக் கொண்டிருந்த எமீலியோ நடுவில் எப்போதாவது வியப்புடன் கூவினான், அல்லது சட்டென்று எழுந்து தன் வீர நண்பனை முத்தமிட்டான்.

வண்டிச் சக்கரங்கள் பிராங்க்பர்ட் நகர வீதிகளில் கடகடத்தன, முடிவில், ஸானின் தங்கி இருந்த விடுதியின் எதிரே நின்றன.

தன் இரு துணைவர்களும் உடன் வர அவன் படியேறி முதல் மாடியை அடைந்ததும் இருண்ட தாழ்வாரத்திலிருந்து விரைவாக நடந்து வெளியேறினாள் ஒரு மாது. முகத்திரை அவளுடைய வதனத்தை மறைத்திருந்தது. ஸானினுக்கு எதிரே அவள் நின்று சற்றே தள்ளாடினாள், படபடப்புடன் பெருமூச்செறிந்தாள், உடனே இறங்கி வீதிக்கு ஓடி விட்டாள். இதைக் கண்டு பரிசாரகன் பெரு வியப்பு அடைந்தான். ''திருவாளர் அயல் நாட்டாரின் வருகையை எதிர்பார்த்து இந்த அம்மாள் ஒரு மணி நேரத்துக்கு மேல் காத்திருந்தார்கள்'' என்று தெரிவித்தான் அவன். அவள் ஒரு விஞடி நேரமே தென்பட்டாள் எனினும், அவள் ஜெம்மா என்பதை ஸானின் கண்டு கொண்டான். பழுப்பு முகத்திரையின் தடித்த பட்டின் ஊடாக அவளுடைய விழிகளை அவன் அடையாளம் தெரிந்து கொண்டான்.

''பிரேய்லேன் ஜெம்மாவுக்கு விஷயம் தெரியுமா என்ன?..'' என்று தன்னை அடியொற்றித்

தொடர்ந்த எமீலியோவிடமும் பந்தலியோனே யிடமும் அதிருப்திக் குரலில் ஜெர்மன் மொழியில் வினவினான்.

எமீலியோ முகம் சிவந்து நாணினான்.

''விஷயத்தை அவளுக்குத் தெரிவிப்பது எனக்குக் கட்டாயம் ஆகி விட்டது'' என்று குழறினான்.''அவள் ஊகித்துக் கொண்டாள்—என்னால் மறைக்கவே முடியவில்லை... இப்போதுதான் இதனால் ஒன்றுமில்லையே'' என்று உற்சாகத்துடன் தொடர்ந்தான். ''எல்லாம் நல்லபடியாக முடிந்து விட்டது, நீங்கள் சேதமில்லாமல் உடல் நலத்தோடு இருப்பதை அவளும் பார்த்து விட்டாளே!''

ஸானின் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

''என்னதான் உளறு வாயர்கள் நீங்கள் இருவரும்!'' என்று எரிச்சலோடு சொல்லி விட்டுத் தன் அறைக்குள் போய் நாற்காலியில் உட்கார்ந்தான்.

''தயவு செய்து கோபித்துக் கொள்ளாதீர்கள்'' என்று கேட்டுக் கொண்டான் எமீலியோ.

''நல்லது, நான் கோபித்துக் கொள்ள மாட்டேன்.'' (மெய்யாகவே அவன் கோபிக்கவில்லை தவிர, ஜெம்மா ஒன்றையுமே அறியாமல் இருக்க வேண்டும் என்று அவன் விரும்பி இருக்க முடிவது சந்தேகமே.) ''நல்லது... தழுவியது எல்லாம் போதும். இப்போது போங்கள். நான் தனியே இருக்க விரும்புகிறேன். தூங்கப் போகிறேன். களைத்துப் போனேன்'' என்றான்.

''அருமையான எண்ணம்!'' என்று கூவினான் பந்தலியோனே. ''உங்களுக்கு ஓய்வு வேண்டும்! நீங்கள் அதற்கு முழுத் தகுதி பெற்றவர், சால்பு உள்ள ஸின்ஞோரே! போவோம் வா, எமீலியோ! ஓசைப்படாமல் நடப்போம்! ஷ்ஷ்ஷ்!''

தான் தூங்கப் போவதாகச் சொன்ன போது ஸானின் தன் தோழர்களிடமிருந்து விடுபட மட்டுமே விரும்பினுன். ஆனுல் அவர்கள் போன பிறகு உடம்பின் எல்லா உறுப்புக்களிலும் கணிசமான களைப்பை அவன் உண்மையாகவே உணர்ந்தான். முந்திய இரவு முழுவதிலும் அவன் அனேகமாக விழிகளை மூடவில்லை. இப்போது படுக்கையில் விழுந்தவன் விரைவில் அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

## 23

நடுவில் விழித்துக் கொள்ளாமல் தொடர்ந்தாற் போலப் பல மணி நேரம் அவன் உறங்கினுன். பின்பு, தான் மறுபடி இருவர் போர் செய்வதாகவும், எதிராளியாகத் தனக்கு முன் ஹெர் கிளியூபெர் நிற்பதாகவும், பிர் மரத்தில் ஒரு கிளி உட்கார்ந்திருப்பதாகவும் அந்தக் கிளி பந்தலியோனே என்றும், மூக்கால் சுடக்கொலி செய்தவாறு ''ஒன்று-ஒன்று-ஒன்று-ஒன்று-ஒன்று-ஒன்று!'' என்று அவன் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதாகவும் அவன் கனவு கண்டான்.

''ஒன்று... ஒன்று... ஒன்று!!'' என்ற ஒலி இப்போது மிகவும் வெளிப்படையாக அவனுக்குக் கேட்டது! கண்களைத் திறந்து, தலையை நிமிர்த்தினுன்... அவனுடைய அறைக் கதவு தட்டப்பட்டது. அவன் கண்களைத் திறந்து தலையை நிமிர்த்தினுன்... யாரோ அவனுடைய அறைக் கதவைத் தட்டினுர்கள்.

''உள்ளே வாருங்கள்!'' என்று கத்தினுன் ஸானின்.

பரிசாரகன் வந்து ஒரு மாது அவனைப் பார்க்க மிகவும் விரும்புவதாகத் தெரிவித்தான்.

''ஜெம்மா!'' என்ற எண்ணம் அவன் மூளையில் உதித்தது... ஆனால் வந்தவள் அவளுடைய தாயார் பிராவு லெனோரே.

அறைக்குள் வந்ததுமே அவள் நாற்காலியில் உட்கார்ந்து அழத் தொடங்கினாள்.

''உங்களுக்கு என்ன, என் பரிவுள்ள, இனிய திருமதி ரொஸேல்லி!'' என்று அவள் அருகில் உட்கார்ந்து அவளுடைய கரத்தை உளமார்ந்த அன்புடன் தொட்டவாறு கேட்டான் ஸானின். ''என்ன நடந்தது? அமைதி அடையுங்கள், உங்களை வேண்டிக் கொள்கிறேன்.''

''ஐயோ, ஹெர் திமீத்ரி, நான் நிரம்ப... நிரம்ப ஆக்கம் கெட்டவள்!''

''நீங்களா ஆக்கம் கெட்டவர்?''

''ஆமாம், நிரம்ப! என்னால் எதிர்பார்த்திருக்க முடியுமா? திடீரென்று, தெளிந்த வானத்திலிருந்து இடி விழுந்தது போல...''

அவள் இரைத்த மூச்சைச் சிரமத்துடன் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''ஆனால் என்னதான் நடந்தது? விவரமாகச் சொல்லுங்கள்! ஒரு தம்ளர் தண்ணீர் சாப்பிடுகிறீர்களா?''

''வேண்டாம், நன்றி.'' பிராவு லெனோரே கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டவள், முன்னிலும் உரக்க அழத் தொடங்கினாள். ''எனக்கு எல்லாம் தெரியும்! எல்லாம்!''

''அதாவது, என்ன அர்த்தம் எல்லாம் என்பதற்கு?''

''இன்றைக்கு நடந்தது எல்லாம். காரணமும்... எனக்குத் தெரியும்! நல்ல குடிப் பிறந்தவருக்கு ஏற்ப நீங்கள் நடந்து கொண்டீர்கள். ஆனால் சூழ்நிலைமைகள் எந்த மாதிரி ஒன்று சேர்ந்து

கொண்டன! இந்த ஸோடென் பயணம் எனக்குப் பிடிக்காதது காரணமாகத்தான்... காரணமாகத் தான்!'' (பயணத்தன்று பிராவு லெஞேரே இந்த மாதிரி ஒன்றும் சொல்லவில்லை. ஆனல் அப்போதே ''எல்லாவற்றையும்'' தான் முன் உணர்ந்ததாக இப்போது அவளுக்குத் தோன்றியது.) ''நான் உங்களை முதல் தடவையாகப் பார்த்தது ஐந்து நாட்களுக்கு முன்புதான் என்றாலும், சால்பு உள்ளவர், நண்பர் என்ற முறையில்தான் நான் உங்களிடம் வந்திருக்கிறேன்... ஏனென்றால் நான் கைம்பெண், துணை இல்லாதவள்... என் மகள்...''

கண்ணீர் பிராவு லெஞேரேயின் தொண்டையை அடைத்தது. என்ன நினைப்பது என்று ஸானினுக்குத் தெரியவில்லை.

''உங்கள் மகளா?'' என்று கேட்டான்.

''என் மகள், ஜெம்மா'' என்ற சொற்கள் கண்ணீரால் நனைந்த கைக்குட்டையின் ஊடாக பிராவு லெஞேரேயின் வாயிலிருந்து வெடித்தன. ''ஹெர் கிளியூபெருக்கு மனைவி ஆகத் தான் விரும்பவில்லை என்றும் நான் அவரை மறுத்துவிட வேண்டும் என்றும் என்னிடம் சொல்லி விட்டாள்!''

ஸானின் கொஞ்சம் நகர்ந்து கூட விட்டான். அவன் இதை எதிர்பார்க்கவில்லை.

பிராவு லெஞேரே தன் பேச்சைத் தொடர்ந்தாள்: ''இது வெட்கக்கேடு, மணப்பெண் மணமகனை நிராகரித்தது உலகத்தில் ஒருபோதும் நடந்ததில்லை என்று கூட நான் சொல்லவில்லை. ஆனல் எங்களுக்கு இது சீரழிவு ஆகுமே, Herr Dimitri!'' பிராவு லெஞேரே கைக்குட்டையைப் பெரு முயற்சியுடன் இறுக்கமான பந்தாகச் சுருட்டினாள்—தன் துயரத்தை எல்லாம் அதில் அடக்கிவிட விரும்பியவள் போன்று. ''எங்கள் கடை வரு

சிறு மேசைகளில் ஒன்றின் அருகே அமர்ந்து தவிர வேறு எந்த விதமாகவும் தான் சாப்பிடப் போவ தில்லை என்று அறிவித்தாள். ஒரே ஆட்களோடு ஓயாமல் இருந்து கொண்டிருப்பது தனக்குச் சலித்துப் போனதாகவும் தான் வேறு ஆட் களைப் பார்க்க விரும்புவதாகவும் சொன்னாள். சில மேசைகளைச் சுற்றிப் புதிதாக வந்த விருந்தாளி களின் குழுக்கள் ஏற்கெனவே உட்கார்ந்திருந்தன.

''தன் மணமகளின் சபலத்துக்குப்'' பெரிய மனிதத் தன்மையுடன் பணிந்து ஹெர் கிளியூபெர் தலைமைப் பரிசாரகனுடன் ஆலோசனை செய்யப் போயிருந்த போது ஜெம்மா விழிகளைத் தாழ்த்தி உதடுகளை இறுக மூடியவாறு அசையாமல் நின்று கொண்டிருந்தாள். ஸானின் தன்னை இடை விடாமல் கேள்விக் குறியுடன் போலப் பார்த்துக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். இது அவளுக்குக் கோபம் ஊட்டியது போல் இருந்தது. முடிவில் ஹெர் கிளியூபெர் திரும்பி வந்து, சாப் பாடு அரை மணி நேரத்தில் தயாராகும் என்று அறிவித்து, அது வரை மரப் பந்து விளையாடலாம் என்று யோசனை சொன்னதோடு, பசியைத் தூண்டு வதற்கு இது மிகவும் நல்லது, ஹெ-ஹெ-ஹே! என்றான். மரப் பந்தாட்டத்தை அவன் தேர்ந்த நிபுணன் போல ஆடினான். பந்து வீசும் போது வியப்பூட்டும்படி நேர்த்தியான தோரணைகளை மேற்கொண்டான், தசைகளைப் பகட்டாக இறுக்கித் தளர்த்தினான், பகட்டாகக் காலை வீசித் தடாலென்று அடித்தான். தன் வகையில் அவன் உடற்பயிற்சியாளனாக விளங்கினான்—அற்புதமான உடல் அமைப்பு பெற்றிருந்தான்! அவனுடைய கைகளும் தூய வெண்மையாக, அழகாக இருந் தன. அவற்றை அவன் மிகுந்த செல்வச் செழிப்

பைக் காட்டிய, தங்க நிறமும் வேறு நிறப்புள்ளிகளும் கொண்ட இந்திய மென்பட்டுக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டான்!

சாப்பாட்டு நேரம் வந்தது. எல்லோரும் மேசையைச் சுற்றி அமர்ந்தார்கள்.

## 16

ஜெர்மன் மதியச் சாப்பாடு எப்பேர்ப்பட்டது என்பது யாருக்குத்தான் தெரியாது? மாவுக் கொழுக்கட்டைகளும் இலவங்கப் பட்டையும் போட்ட நீர்த்த சூப்பு, நெட்டி போல உலர்ந்து வெண் கொழுப்பு ஒட்டிக் கொண்டிருக்கும் வெந்த மாட்டிறைச்சி, பிசுக்காக ஒட்டிக் கொண்ட உருளைக் கிழங்கு, உப்பிய சர்க்கரைக் கிழங்கு, சவைத்தது போன்ற காட்டு முள்ளங்கிக் கிழங்கு, கேப்பர் காய்களும் காடியும் சேர்த்து நீலம் பாரித்த விலாங்கு மீன், இறைச்சிப் பொரியலுடன் பழக்கூழ், இவற்றோடு தவிர்க்க முடியாத "Mehlspeise", அதாவது புளித்த சிவப்புச் சாறுடன் உண்ணும் ஒரு வகைப் பணியாரம். ஆனால் மதுவும் பீரும் அற்புதம்! ஸோடென் உணவு விடுதிக்காரன் இந்த மாதிரிச் சாப்பாட்டைத்தான் விருந்தாளிகளுக்குப் போட்டான். ஆனால் சாப்பாடு நலமே நடந்து முடிந்தது. சிறப்பான உற்சாகம் காணப் படவில்லைதான். ஹெர் கிளியூபெர், "எதை நாம் நேசிக்கிறோமோ அதற்காக" (Was wir lieben!) மது அருந்தும்படிக் கூறிய போது கூட உற்சாகம் பிறக்கவில்லை. எல்லாம் மிகவும் முறையாகவும் பண்புடனும் நடந்தன. சாப்பாட்டுக்குப் பிறகு தரப்பட்டது காப்பி, நீர்த்த, செம்பழுப்பான, ஒரு வார்த்தையில், ஜெர்மன் காப்பி. மங்கையின்

மானத்தைக் கொண்டு பிழைப்பு நடத்த இனி மேல் எங்களால் முடியாது, Herr Dimitri! ஹெர் கிளியூபெர் பெரும் பணக்காரர், இன்னமும் பணக் காரர் ஆவார். தவிர அவரை எதற்காக மறுக்க வேண்டும்? தன் மணப்பெண்ணுக்காக அவர் போராடவில்லை என்பதாலா? அவர் செய்தது முழுமையாக நல்லது அல்ல என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் அவர் படைச் சார்பு இல் லாதவர், பல்கலைக் கழகத்தில் பயின்றவர் அல்ல, இன்னார் என்று தெரியாத எவனோ அற்பப் படை அதிகாரியின் பொறுப்பற்ற குறும்புத்தனத்தை, கண்ணியம் உள்ள வியாபாரி என்ற வகையில் அவர் இகழ்ந்து ஒதுக்க வேண்டி இருந்தது. இது எந்த வகையில் அவமானம், Herr Dimitri?"

''தயை செய்யுங்கள், பிராவு லெனோரே, நீங்கள் என்னைக் கண்டனம் செய்கிறீர்கள் போலிருக்கிறது...''

''உங்களை நான் கொஞ்சங்கூடக் கண்டனம் செய்யவில்லை, கொஞ்சங்கூட! உங்கள் விஷயமே வேறு. எல்லா ருஷ்யர்களையும் போல நீங்கள் படையினர்...''

''தயை செய்யுங்கள், நான் படையினனே அல்ல...''

''நீங்கள் அயல் நாட்டார், வழிப்பயணி, நான் உங்களுக்குக் கடமைப்பட்டவள்'' என்று ஸானின் சொன்னதைக் காதில் போட்டுக் கொள் ளாமல் பேச்சைத் தொடர்ந்தாள் பிராவு லெனோரே. அவள் திணறினாள், கைகளை விரித் தாள், கைக்குட்டையை மறுபடி பிரித்து மூக்கைச் சிந்தினாள். அவளுடைய துயரம் வெளிப்பட்ட தோரணையிலிருந்தே அவள் வட புலத்தில் பிறந்த வள் அல்ல என்று தெரிந்து கொள்ள முடிந்தது.

''ஹெர் கிளியூபெர் வாடிக்கைக்காரர்களோடு சண்டை போட்டுக் கொண்டிருந்தால் கடையில் எப்படி வியாபாரம் செய்வாராம்? இது கொஞ் சங்கூடப் பொருந்தாத பேச்சு! இப்போது நான் அவரை மறுக்க வேண்டுமோ? ஆனுல் எதைக் கொண்டு நாங்கள் பிழைப்பு நடத்தப் போ கிறேம்? முன்பெல்லாம் சில வகை மிட்டாய்களை நாங்கள் மட்டுமே தயாரித்தோம், அவற்றை வாங்க ஊர்க்காரர்கள் எங்கள் கடைக்கு வந்தார் கள். இப்போதோ எல்லா வகை மிட்டாய்களையும் எல்லோரும் தயாரிக்கிருர்கள்!! நீங்களே எண்ணிப் பாருங்கள்: ஒன்றும் இல்லா விட்டாலுமே ஊர்க்காரர்கள் உங்கள் இருவர் போரைப் பற்றிப் பேசத்தான் போகிருர்கள்... இதை எங்காவது மறைக்க முடியுமா? திடீரென்று திருமண ஏற் பாடு நிறுத்தப்படுகிறது! இது மானக்கேடு அல் லவா, மானக்கேடு! ஜெம்மா அருமையான பெண். அவளுக்கு என் மேல் நிரம்பப் பிரியம். ஆனுல் அவள் பிடிவாதக்காரக் குடியரசுவாதிப் பெண். மற்றவர்களுடைய கருத்துக்களுக்கு வசப்பட்டு வீரம் உள்ளவள் போலப் பகட்டுகிருள். நீங்கள் ஒருவர்தாம் அவளை வழிக்குக் கொண்டுவர முடி யும்!''

ஸானின் முன்னை விட அதிகமாக வியப்பு அடைந்தான்.

''நானு, பிராவு லெனேரே?''

''ஆம், நீங்கள் ஒருவர்தாம்... நீங்கள் ஒரு வர்தாம். அதற்காகத்தான் உங்களிடம் வந்தேன். வேறு எதுவும் என் புத்தியில் படவில்லை! நீங்கள் நிரம்பப் படித்தவர், நிரம்ப நல்லவர்! நீங்கள் அவளுக்காகப் போராடினீர்களே. உங்களை அவள் நம்புவாள்! அவள் உங்களை நம்ப வேண்டும்—

உயிரை ஆபத்துக்கு உள்ளாக்கிக் கொண்டீர்களே நீங்கள்! அவளுக்குப் புத்தி புகட்டுங்கள், என்னால் இனி ஒன்றும் முடியாது! அவள் தன்னையும் எங்கள் எல்லோரையும் பாழாக்கி விடுவாள் என்று நீங்கள் அவளுக்கு எடுத்துச் சொல்லுங்கள். என் மகனைக் காப்பாற்றினீர்கள், மகளையும் காப்பாற்றுங்கள்! கடவுளே தாம் உங்களை இங்கே அனுப்பி இருக்கிறார்... முழந்தாள் படியிட்டு உங்களை வேண்டிக் கொள்ள நான் தயார்...''

இவ்வாறு சொல்லி பிராவு லெனோரே நாற்காலியிலிருந்து எழுந்தாள், ஸானின் காலில் விழப் போகிறவள் போல... அவன் அவளைத் தடுத்தான்.

''பிராவு லெனோரே! ஆண்டவன் பெயரால் கேட்கிறேன்! என்ன நீங்கள் இப்படி?''

அவள் வலிப்பு வந்தவள் போல அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டாள்.

''உறுதி கூறுகிறீர்களா?''

''பிராவு லெனோரே, யோசித்துப் பாருங்கள், எந்த வகையில் நான்...''

''நீங்கள் உறுதி கூறுகிறீர்களா? இங்கேயே, இப்போது உங்கள் முன்னே நான் உயிர் விடுவதை நீங்கள் விரும்பவில்லையே?''

ஸானின் செய்வதறியாது திகைத்தான். வெப்பமுள்ள இத்தாலிய இரத்தத்தைச் சமாளிக்கும் வாய்ப்பு வாழ்க்கையில் முதல் தடவையாக இப்போது அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

''உங்களுக்கு வேண்டியதை எல்லாம் நான் செய்கிறேன். பிரேய்லேன் ஜெம்மாவோடு பேசுகிறேன்...'' என்றான்.

பிராவு லெனோரே மகிழ்ச்சியால் ஆரவாரித்தாள்.

''ஆனால் இதன் பயன் என்ன ஆகுமோ, அறியேன்...''

''ஐயோ, மறுக்காதீர்கள், மறுக்காதீர்கள்!'' என்று கெஞ்சும் குரலில் கேட்டுக் கொண்டாள் பிராவு லெஞேரே. ''ஏற்கெனவே இசைந்து விட்டீர்கள்! பயன் அருமையானதாக விளையும், கட்டாயம். என்ன ஆனாலும் என்னால் மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாது! என் பேச்சை அவள் கேட்க மாட்டாள்!''

''ஹெர் கிளியூபெருக்கு வாழ்க்கைப்பட விரும்பவில்லை என்று உங்களிடம் அவள் தீர்மானமாகச் சொன்னாளா?'' என்று சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு ஸானின் கேட்டான்.

''வெட்டு ஒன்று, துண்டு இரண்டாக. எல்லாவற்றிற்கும் தகப்பனை, ஜியோவான்னி பத்தீஸ்தாவை, கொண்டிருக்கிறாள். துணிந்த கட்டை!''

''துணிந்த கட்டையா? அவளா?..'' என்று இழுத்தான் ஸானின்.

''ஆமாம்... ஆமாம்.... ஆனால் அதே சமயம் அவள் தங்கமான பெண். உங்கள் பேச்சை அவள் கட்டாயம் கேட்பாள். நீங்கள் வருவீர்களா, சீக்கிரம் வருவீர்களா? ஓ என் இனிய ருஷ்ய நண்பரே!'' பிராவு லெஞேரே பதற்றத்துடன் நாற்காலியிலிருந்து எழுந்து எதிரே உட்கார்ந்திருந்த ஸானினுடைய தலையை ஆவேசத்துடன் கட்டிக் கொண்டாள். ''தாயின் ஆசிகளைப் பெற்றுக் கொள்ளுங்கள். எனக்கு தண்ணீர் கொடுங்கள்!''

திருமதி ரொஸேல்லிக்குத் தம்ளரில் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான் ஸானின். தாமதமின்றி அவள் வீட்டுக்கு வருவதாக வாக்களித்து, வீதிவரை உடன் சென்று அவளை வழியனுப்பினான். தன் அறைக்குத் திரும்பியதும் வியப்பினால்

கைகளைக் கொட்டிக் கண்களைப் பரக்க விழித்தான்.

''ஆகா, இப்போது வாழ்க்கை சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கி இருக்கிறது! அதுவும் எப்படி, தலை கிறுகிறுக்கும்படி!'' தனக்குள் பார்வை செலுத்தவும் உள்ளத்தில் நிகழ்வதைப் புரிந்து கொள்ளவும் அவன் முயற்சி செய்யவில்லை. வெறும் பரபரப்பு, அவ்வளவுதான்! ''எப்பேர்ப் பட்ட நாள் வந்து வாய்த்தது!'' என்று அவனுடைய உதடுகள் முணுமுணுத்தன. ''துணிந்த கட்டையாம்... அவளுடைய தாயார் சொல்லுகிறாள். நான் அவளுக்கு புத்தி புகட்ட வேண்டுமாம்— அவளுக்கு?! என்ன புத்தி புகட்டுவது?!''

ஸானினுடைய தலை உண்மையாகவே கிறு கிறுத்தது. பல வகைப் புலன் உணர்ச்சிகள், உளப் பதிவுகள், முழுதும் வெளியிடப்படாத எண்ணங்கள் ஆகியவற்றின் இந்தச் சூறைக்காற்றுக்கு எல்லாம் மேலே இடையறாது ஒளிர்ந்தது ஜெம்மாவின் உருவம்—மின் அதிர்ச்சி ஏற்படுத்திய அந்த வெப்ப இரவில், மொய்த்துக் கிடந்த விண்மீன்களது கிரணங்களுக்கு அடியில், அந்த இருண்ட சாளரத்தில் தென்பட்டு, அவனுடைய நினைவில் அழிக்க முடியாதவாறு பதிந்து விட்ட உருவம்.

## 24

ஸானின் உறுதி இன்றி அடி வைத்து நடந்து திருமதி ரொஸேல்லியின் வீட்டை அடைந்தான். அவனுடைய நெஞ்சு படபடத்தது. இதயம் விலாவில் இடித்ததை ஸானின் வெளிப்படையாக உணர்ந்தான், காதுகளால் கூடக் கேட்டான். ஜெம்மாவிடம் அவன் எப்படிச் சொல்லுவான்,

எப்படிப் பேச்சைத் தொடங்குவான்? மிட்டாய்க் கடைப் பகுதி வழியாக இன்றிப் பின் வாசல் வழி யாக அவன் வீட்டுக்குள் போனான். சிறிய முன் அறையில் பிராவு லெனோரேயைச் சந்தித்தான். அவனைக் கண்டு அவள் மகிழ்ச்சியும் அடைந்தாள், அச்சமும் கொண்டாள்.

ஸானினுடைய கையை மாற்றி மாற்றித் தன் இரு கைகளாலும் இறுகப் பற்றிக் குலுக்கி, ''நான் காத்திருந்தேன், உங்களுக்காகக் காத் திருந்தேன். தோட்டத்துக்குப் போங்கள். அவள் அங்கே இருக்கிறாள். இதோ பாருங்கள், நான் உங்களை நம்புகிறேன்!'' என்று கிசுகிசுத்தாள்.

ஸானின் தோட்டத்துக்குப் போனான்.

ஜெம்மா பாதை அருகே இருந்த பெஞ்சியில் உட்கார்ந்து, செர்ரிப் பழங்கள் நிறைந்த பெரிய கூடையிலிருந்து கனிந்து பழுத்த பழங்களைப் பொறுக்கி ஒரு தட்டில் வைத்துக் கொண்டிருந் தாள். சூரியன் தாழ்ந்திருந்தது—மாலை ஆறு மணிக்கு மேல் ஆகி விட்டது—திருமதி ரொஸேல் லியின் தோட்டத்திற்கு அகலமான சாய்ந்த கதிர் களால் வெப்பமூட்டிக் கொண்டிருந்தது. இந்தக் கதிர்களில் பொன் நிறத்தை விட அதிகமாகச் செம்மை இருந்தது. இலைகள் எப்போதாவது அரிதாகக் காதில் படும்படியும் அவசரம் இன்றிப் போலவும் ஒன்றோடொன்று கிசுகிசுத்துக் கொண் டன. நேரம் தாழ்த்த தேனீக்கள் ஒரு பூவிலிருந்து அடுத்த பூவுக்குப் பறந்தவாறு விட்டு விட்டு முரன்றன. எங்கோ மாடப்புறா அகவிக் கொண் டிருந்தது—ஒரே மாதிரியும் அலுக்காமலும்.

ஸோடெனுக்குப் பயணம் செய்த போது அணிந்திருந்த அதே வட்டத் தொப்பியை ஜெம்மா போட்டுக் கொண்டிருந்தாள். தொப்பியின்

மேல் வளைந்த விளிம்பு வழியாக ஸானின் மீது பார்வை செலுத்தி விட்டு மறுபடி கூடையின் பக்கம் குனிந்தாள்.

ஸானின் தன்னை அறியாமலே ஒவ்வோர் அடியையும் குறுக்கியவாறு நடந்து ஜெம்மாவை நெருங்கினான். பின்பு... பின்பு... பின்பு அவளிடம் சொல்வதற்கு வேறு எதுவும் தோன்றாததால், செர்ரிப் பழங்களை எதற்காக வகை பிரிக்கிறாள் என்று கேட்டான்.

ஜெம்மா அவனுக்கு விடை அளிக்க அவசரப் படவில்லை.

''இவை நன்றாய்க் கனிந்தவை'' என்று முடிவில் கூறினாள். ''இவை பழக்கூழ் செய்யப் பயன் படும். மற்றவை பணியாரத்தில் பூரணமாக வைக்க உதவும். நாங்கள் இந்த மாதிரி இனிப்பான வட்டப் பணியாரம் விற்கிறோமே, தெரியுமல்லவா?''

இந்தச் சொற்களைக் கூறி விட்டு ஜெம்மா தலையை இன்னும் குனிந்து கொண்டாள். இரண்டு செர்ரிப் பழங்களை விரல்களால் பிடித்திருந்த அவளுடைய வலக்கரம் கூடைக்கும் தட்டுக்கும் நடுவே அந்தரத்தில் நின்றது.

''உங்கள் பக்கத்தில் உட்காரலாமா?'' என்று கேட்டான் ஸானின்.

''உட்காரலாம்'' என்று பெஞ்சியில் கொஞ்சம் நகர்ந்தாள் ஜெம்மா. ஸானின் அவள் அருகில் உட்கார்ந்தான். ''எப்படித் தொடங்குவது?'' என்ற கேள்வி அவன் மனத்தில் எழுந்தது. ஆனால் ஜெம்மா அவனைச் சங்கடத்திலிருந்து தப்புவித்தாள்.

''நீங்கள் இன்று இருவர் போரில் கலந்து கொண்டு சண்டை போட்டீர்கள்'' என்று உற்

சாகமாகப் பேசத் தொடங்கி, நாணத்தால் சிவப் பேறிய தன் அழகான முகம் முழுவதையும் அவன் பக்கம் திருப்பினுள். அவளுடைய விழிகள்தாம் எத்தகைய நன்றியுடன் சுடர்ந்தன! ''ஆனாலும் இவ்வளவு அமைதியாய் இருக்கிறீர்கள். எனவே, ஆபத்தை நீங்கள் மதிப்பதே இல்லை என்று ஆகிறது.''

''நன்ருய்ச் சொன்னீர்களே! நான் எவ்வித ஆபத்தையும் மேற்கொள்ளவில்லை. காரியம் தீங்கு இன்றி மிக நன்ருக முடிந்தது.''

ஜெம்மா ஒரு விரலைக் கண்களுக்கு முன்னே வலமும் இடமுமாக ஆட்டினுள்... இதுவும் இத் தாலியச் சைகை.

''இல்லை! இல்லை! இப்படிச் சொல்லாதீர்கள்! உங்களால் என்னை ஏமாற்ற முடியாது! பந்தலி யோனே எனக்கு எல்லாவற்றையும் விவரித்தான்!

''நம்புவதற்கு ஆள் பார்த்தீர்களே! அவர் என்னைக் கமாண்டோரின் சிலைக்கு ஒப்பிட்டாரா?''

''அவனுடைய சொற்கள் வேடிக்கையாக இருக்கலாம். ஆனுல் அவனுடைய உணர்ச்சி வேடிக்கையானது அல்ல, அதே போல நீங்கள் இன்று செய்ததும் வேடிக்கை அல்ல. இது எல்லாம் என் காரணமாக... எனக்காக... இதை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன்.''

''என்னை நம்புங்கள், பிரேய்லேன் ஜெம் மா...''

''நான் இதை மறக்க மாட்டேன்'' என்று சொற்களை நிறுத்தத்துடன் மறுபடி அழுத்திக் கூறினுள் அவள். அவனை இன்னொரு தரம் உற்றுப் பார்த்து விட்டு முகத்தைத் திருப்பிக் கொண் டாள்.

அவளுடைய மெல்லிய, தூய பக்கத் தோற்றத்தை அவனல் இப்போது பார்க்க முடிந்தது. அது போன்றது எதையும் தான் ஒருபோதும் கண்டதில்லை என்றும், அந்தக் கணத்தில் உணர்ந்ததற்கு நிகரான எதையும் அனுபவித்ததில்லை என்றும் அவனுக்குத் தோன்றியது.

''ஆனல் என்னுடைய வாக்குறுதி?'' என்ற எண்ணம் சட்டென உதித்தது.

''பிரேய்லேன் ஜெம்மா...'' என்று கண நேரத் தயக்கத்துக்குப் பிறகு தொடங்கினுன்.

''என்ன?''

அவள் அவன் பக்கம் திரும்பவில்லை. செர்ரிப் பழங்களைத் தொடர்ந்து வகை பிரித்துக் கொண்டிருந்தாள். அவற்றின் காம்புகளை விரல் நுனிகளால் பதபாகமாகப் பிடித்துக் கொண்டாள். இலைகளைக் கவனமாக உயர்த்தினுள்... ''என்ன?'' என்ற இந்த ஒரு சொல்லில் எத்தகைய அந்தரங்க அன்பு தொனித்தது!

''உங்கள் தாயார் உங்களுக்கு ஒன்றும் தெரிவிக்கவில்லையா?..''

''எதைப் பற்றி?''

''என்னைப் பற்றி?''

ஜெம்மா எடுத்த செர்ரிப் பழங்களைச் சட்டென்று கூடையில் திருப்பிப் போட்டாள்.

''அவள் உங்களிடம் பேசினுளா?'' என்று கேட்டாள்.

''ஆம்.''

''என்ன சொன்னுள்?''

''நீங்கள்... நீங்கள் திடீரென்று முடிவு செய்து விட்டீர்கள்... உங்களுடைய முந்திய எண்ணத்தை மாற்றிக் கொள்ள என்று சொன்னுள்.''

ஜெம்மாவின் தலை மறுபடி குனிந்தது. தொப்

பிக்கு அடியில் அவள் முழுமையாக மறைந்து விட்டாள். வெளியே தெரிந்தது கழுத்து மட்டுமே. பெரிய பூவின் காம்பு போல விகுவும் மென்மையும் கொண்டிருந்தது அது.

''எந்த எண்ணத்தை?''

''உங்களுடைய வாழ்க்கையின் வருங்கால அமைப்பு... சம்பந்தப்பட்ட உங்கள் எண்ணத்தை...''

''அதாவது... நீங்கள் சொல்வது... திருவாளர் கிளியூபெரைப் பற்றியா?''

''ஆம்.''

''திருவாளர் கிளியூபெரின் மனைவி ஆக நான் விரும்பவில்லை என்று அம்மா உங்களிடம் சொன்னாளா?''

''ஆம்.''

ஜெம்மா பெஞ்சியில் நகர்ந்தாள். கூடை சாய்ந்தது, விழுந்தது... சில செர்ரிப் பழங்கள் பாதையில் உருண்டன. ஒரு நிமிடம் கழிந்தது... அடுத்தது...

''உங்களிடம் இதை அவள் எதற்காகச் சொன்னாள்?'' என்ற ஜெம்மாவின் கேள்வி காதில் விழுந்தது. ஸானின் முன்போலவே ஜெம்மாவின் கழுத்தை மட்டும் பார்த்துக் கொண்டிருந்தான். அவளுடைய மார்பு முன்னை விட விரைவாக எழுவதும் தணிவதுமாக இருந்தது.

''எதற்காகவா? நீங்களும் நானும் குறுகிய நேரத்தில் நட்பு கொண்டு விட்டோம் என்று சொல்லலாம், நீங்கள் என்னிடம் ஓரளவு நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள், ஆகையால் உங்களுக்குப் பயனுள்ள யோசனை சொல்ல என்னால் முடியும், நீங்களும் என் பேச்சைக் கேட்பீர்கள் என்று உங்கள் தாயார் எண்ணினாள்.''

ஜெம்மாவின் கைகள் மெதுவாக வழுகி மடியில் விழுந்தன... அவள் தன் உடையைச் சரிப்படுத்துவதில் ஈடுபட்டாள்.

''நீங்கள் எனக்கு என்ன யோசனை சொல்லுகிறீர்கள், monsieur Dimitri?" என்று சற்றுப் பொறுத்துக் கேட்டாள்.

ஜெம்மாவின் விரல்கள் அவளுடைய மடிமேல் நடுங்கியதை ஸானின் கண்டான்... உடையின் மடிப்புக்களை அவள் சீர்படுத்தியது கூட இந்த நடுக்கத்தை மறைப்பதற்குத் தான். வெளிறி நடுங்கிக் கொண்டிருந்த அந்த விரல்கள் மேல் தன் கையை மெதுவாக வைத்தான் ஸானின்.

''ஜெம்மா, என்னை ஏன் பார்க்க மாட்டேன் என்கிறீர்கள்?'' என்ருன்.

அவள் தொப்பியைச் சட்டெனத் தோளுக்குப் பின் போட்டு விட்டு விழிகளை அவன் மேல் நாட்டினுள். முன்போலவே நம்பிக்கையும் நன்றியும் அவற்றில் ததும்பின. அவன் பேசத் தொடங்குவான் என்று அவள் எதிர்பார்த்தாள்... ஆனுல் அவளது முகத் தோற்றம் அவனைக் குழப்பிக் குருடாக்கி விட்டது போல் இருந்தது. மாலைக் கதிரவனின் இதமான வெளிச்சம் அவளுடைய இளமை பொலிந்த தலையை ஒளியுறுத்தியது. அந்தத் தலையின் தோற்றமோ கதிரொளியைக் காட்டிலும் தூயதாகவும் பிரகாசமாகவும் இருந்தது.

''நான் உங்கள் சொற்படி கேட்கிறேன், monsieur Dimitri," என்று லேசாகப் புன்னகை செய்து, புருவங்களைச் சற்றே உயர்த்தியவாறு கேட்டாள் அவள். ''ஆனுல் நீங்கள் எனக்கு என்ன யோசனை சொல்லுகிறீர்கள்?''

''என்ன யோசனையா?'' என்ருன் ஸானின். ''உங்கள் தாயார் நினைக்கிருள், ஹெர் கிளியூபெர்

மூன்று நாள் முன்னால் தனிப்பட்ட வீரத்தைக் காட்டவில்லை என்பதற்காக அவரை நிராகரிப்பது...''

''இதற்காக மட்டுமா?'' என்று கூறிய ஜெம்மா குனிந்து கூடையை எடுத்துத் தன் அருகே பெஞ்சி மேல் வைத்துக் கொண்டாள்.

''அதாவது... பொதுவாகவே... அவரை நிராகரிப்பது, உங்கள் தரப்பில் விவேகமில்லாத செயல். இந்த மாதிரிச் செயலின் விளைவுகளை எல்லாம் நன்றாகச் சீர்தூக்கிப் பார்ப்பது அவசியம். உங்கள் விவகாரங்கள் இருக்கும் நிலைமையே உங்கள் குடும்பத்தின் ஒவ்வோர் உறுப்பினர் மேலும் குறிப்பிட்ட கடமையைச் சுமத்துகிறது...''

''இதெல்லாம் அம்மாவின் எண்ணம்'' என்று குறுக்கிட்டாள் ஜெம்மா. ''இவை அவளுடைய சொற்கள். இது எனக்குத் தெரியும். ஆனால் உங்கள் கருத்து என்ன?''

''என் கருத்தா?'' ஸானின் சற்று நேரம் பேசாதிருந்தான். தன் தொண்டையில் எதுவோ புகுந்து கொண்டு மூச்சைப் பிடிப்பது போல உணர்ந்தான். ''நானும் நினைக்கிறேன்'' என்று சிரமத்துடன் தொடங்கினான்...

ஜெம்மா நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''நீங்களுமா? மெய்யாகவே நீங்களுமா?''

''ஆமாம்... அதாவது...'' மேற்கொண்டு ஒரு சொல் கூடப் பேச ஸானினால் முடியவில்லை, முடியவே முடியவில்லை.

''நல்லது'' என்றாள் ஜெம்மா. ''என்னுடைய முடிவை மாற்றிக் கொள்ளும்படி... அதாவது என் முந்திய முடிவை மாற்றிக் கொள்ளாமல் இருக்கும்படி நண்பர் என்ற முறையில் நீங்கள்

யோசனை சொன்னால், நான் எண்ணிப் பார்க்கிறேன்.'' என்ன செய்கிறோம் என்று தானே கவனிக்காமல் தட்டிலிருந்த செர்ரிப் பழங்களைக் கூடையில் திருப்பிப் போடத் தொடங்கினாள்... ''நான் உங்கள் சொற்படி நடப்பேன் என்று அம்மா நம்புகிறாள்... அதற்கென்ன? ஒருவேளை மெய்யாகவே நான் உங்கள் பேச்சைக் கேட்டு நடக்கலாம்...''

''ஆனால் பொறுங்கள், பிரெய்லென் ஜெம்மா, முதலில் ஒன்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன், எந்தக் காரணங்கள் உங்களைத் தூண்டின...''

''நீங்கள் சொல்வதைக் கேட்பேன்'' என்று திருப்பிச் சொன்னாள் ஜெம்மா. ஆனால் அவளுடைய புருவங்கள் உயர்ந்து கொண்டு போயின, கன்னங்கள் வெளிறின, அவள் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள். ''நீங்கள் எனக்காக எவ்வளவோ செய்திருக்கிறீர்கள், ஆகையால் நீங்கள் விரும்புவதைச் செய்வது என் கடமை. உங்கள் விருப்பத்தை நிறைவேற்ற நான் கடமைப்பட்டவள். நான் அம்மாவிடம் சொல்லுகிறேன்... நான் யோசிக்கிறேன். இதோ அவளும் இந்தப் பக்கம் வருகிறாள்.''

மெய்யாகவே, பிராவு லெனோரே வீட்டிலிருந்து தோட்டத்துக்கு வருவதற்கான வாயிலின் நிலையில் காணப்பட்டாள். பொறுமையின்மை அவளை ஆட்கொண்டிருந்தது. அவளுக்கு இருப்பு கொள்ளவில்லை. ஜெம்மாவுடன் ஸானின் பேசத் தொடங்கிப் பதினைந்து நிமிடங்கள் கூட ஆகவில்லை என்றாலும் அவன் வெகு நேரத்துக்கு முன்பே அவளுக்கு விளக்கி முடித்திருக்க வேண்டும் என்று அவள் கணக்கிட்டாள்.

''வேண்டாம், வேண்டாம், வேண்டாம், தயவு செய்து இப்போது அவளிடம் ஒன்றும் சொல்லா

தீர்கள்'' என்று அவசர அவசரமாக, அனேகமாய் அச்சத்துடன் சொன்னான் ஸானின். ''பொறுங்கள்... நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், நான் உங்களுக்கு எழுதுகிறேன்... அது வரையில் நீங்கள் எந்த முடிவும் செய்யாதீர்கள்... பொறுங்கள்!''

அவன் ஜெம்மாவின் கையைப் பற்றி அழுத்தினான், பெஞ்சியிலிருந்து துள்ளி எழுந்தான், பிராவு லெனோரேயைப் பெரு வியப்பில் ஆழ்த்தியவாறு, தொப்பியை மரியாதையாகச் சற்று உயர்த்தி, தெளிவின்றி ஏதோ முணுமுணுத்து விட்டு, அவளைக் கடந்து பாய்ந்து சென்று மறைந்தான்.

அவள் மகளை நெருங்கினாள்.

''ஜெம்மா, தயை செய்து சொல்லு எனக்கு...''

மகள் சட்டென எழுந்து தாயைத் தழுவிக் கொண்டாள்.

''அருமை அம்மா, உங்களால் பொறுத்திருக்க முடியுமா, ஒரு துளி... நாளை வரையில்? முடியுமா? நாளை வரையில் இதைப் பற்றி ஒரு வார்த்தை பேசக் கூடாது, முடியுமா?.. ஊம்?..''

அவளுக்குத் திடீரென்று கண்ணீர் பொங்கி வந்தது—தூய, அவளே எதிர்பார்க்காத ண் ணீர். ஜெம்மாவின் முகத்தில் கவலைக் குறியே இல்லை, மகிழ்ச்சி தான் தென்பட்டது, எனவே இந்தக் கண்ணீர் பிராவு லெனோரேக்கு அதிக வியப்பு அளித்தது.

''உனக்கு என்ன நேர்ந்தது?'' என்று கேட்டாள். ''நீ ஒருபோதும் அழ மாட்டாயே, திடீரென்று...''

''ஒன்றுமில்லை, அம்மா, ஒன்றுமில்லை! நீங்கள் மட்டும் பொறுத்திருங்கள்! நாம் இருவரும்

பொறுத்திருக்க வேண்டும். நாளைவரை எதுவும் கேட்காதீர்கள். பொழுது சாய்வதற்குள் செர்ரிப் பழங்களை வகை பிரிக்க விடுங்கள்.''

''நீ புத்திசாலியாய் இருப்பாயா?''

''ஓ, நான் நிரம்பப் புத்திசாலி!'' ஜெம்மா பொருள் பொதிந்த முறையில் தலையை ஆட்டினாள். செர்ரிப் பழங்களைச் சிவப்பேறிய முகத்துக்கு நேரே பிடித்தவாறு சிறு கொத்துக்களாகச் சேர்க்க முற்பட்டாள். தன் கண்ணீரை அவள் துடைக்கவில்லை. அது தானே உலர்ந்து போயிற்று.

**25**

ஸானின் ஓட்டமும் நடையுமாகத் தன் இருப்பிடத்துக்குத் திரும்பினான். தனக்கு என்ன நேர்ந்தது, தனக்கு என்ன ஆகி விட்டது என்று அங்கே தான், தன்னந்தனியாக இருக்கும் போதுதான், முடிவில் தனக்குத் தெளிவுபடும் என்று அவன் உணர்ந்தான், அறிந்தான். அவன் உணர்ந்தது சரி ஆயிற்று: தன் அறைக்குள் போய், எழுது மேசை அருகே உட்கார்ந்ததும் உட்காராததுமாக, இரு கைகளையும் இந்த மேசை மேல் ஊன்றிக் கொண்டு, இரண்டு அங்கைகளையும் முகத்தோடு அழுத்தியவாறு, ''நான் அவளைக் காதலிக்கிறேன், வெறியுடன் காதலிக்கிறேன்!'' என்று கம்மிய குரலில் ஏக்கம் ததும்பக் கூவினான். மேலே படிந்த அவிந்த சாம்பல் திடீரென ஊதிப் போக்கப்பட்ட தணல் போல உள்ளே முழுவதும் கனன்றான். ஒரு கணம்தான்... அவள் அருகே... அவள் அருகே! உட்கார்ந்து, அவளோடு பேசிய போது, அவளுடைய உடை விளிம்பைக் கூடத் தான் வழிபடுவதை, இளைஞர்கள் சொல்வது போல ''அவ

ளுடைய காலடியில் உயிரை விடுவதற்குத்'' தான் தயாராய் இருப்பதை உணராமல் இருக்கத் தன்னுல் எப்படி முடிந்தது என்று புரிந்து கொள்ள அவனுக்கு இயலவில்லை. தோட்டத்தில் நிகழ்ந்த கடைசிச் சந்திப்பு எல்லாவற்றையும் முடிவு செய் தது. இப்போது அவன் அவளைப் பற்றி எண்ணிய போது, விண்மீன்களின் ஒளிர்வில், பரத்திய கூந்தலுடன் அவள் அவனுக்குக் காட்சி தரவில்லை. பெஞ்சியில் உட்கார்ந்த வடிவில் அவளை அவன் கண்டான். ஒரு தலை அசைப்பால் தொப்பியை அகற்றி விட்டு நம்பிக்கை ததும்பத் தன்னை நோக்கிய பாங்கில் அவளைக் கண்டான்... அவனது ஒவ்வொரு நாளத்திலும் காதலின் துடிப்பும் வேட் கையும் பெருகின. மூன்று நாட்களாகப் பையில் வைத்திருந்த ரோஜா மலரை நினைவுகூர்ந்தான். அதை எடுத்துச் சுர வேகத்தில் உதடுகளில் அழுத்திக் கொண்டவன், முள் குத்திய வலியால் தன் வசம் இன்றி முகம் சுளித்தான். இப்போது அவன் எதைப் பற்றியும் தர்க்கிக்கவில்லை, எதையும் புரிந்து கொள்ளவில்லை, எதையும் கணக்கிடவில்லை, முன்காணவும் இல்லை. கடந்த கால வாழ்க்கை முழுவதிலுமிருந்து பிரிந்து முன்னே தாவினுன். தனிக் கட்டையான தன் மணமாகாத வாழ்க்கை யின் சோர்வு நிறைந்த கரையிலிருந்து மகிழ்ச்சி யுடன் கொந்தளிக்கும் பிரசண்டமான பெருக் கில் பாய்ந்தான். எதற்கும் அவன் கவலைப்பட வில்லை. பெருக்கு தன்னை எங்கே இழுத்துப் போகும், பாறையில் மோதிவிடாதா என்று அறிய விரும்பவில்லை! அண்மையில் அவனைத் தாலாட்டிய உலாந்தினது பாட்டின் அமைதியான தாரைகள் அல்ல இவை... தடுக்க முடியாத வலிய அலைகள்!

அவை பறந்து முன்னே பாய்ந்தன—அவனும் அவற்றுடன் பறந்தான்!

காகிதத்தை எடுத்து, அடித்தல் திருத்தல் இல்லாமல், பேனுவின் ஒரே வீச்சில் பின்வரும் கடிதத்தை எழுதினுன்:

''இனிய ஜெம்மா!

''உங்களுக்கு எந்த யோசனை அளிப்பதற்கு நான் பொறுப்பு ஏற்றேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்கள் தாயார் விரும்புவது என்ன, அவர் என்னிடம் கேட்டுக் கொண்டது என்ன என்பது உங்களுக்குத் தெரியும். ஆனுல் உங்களுக்குத் தெரியாத, இப்போது உங்களுக்குச் சொல்ல நான் கடமைப்பட்ட விஷயம் என்ன என்ருல், நான் உங்களைக் காதலிக்கிறேன், முதல் தடவை காதல் கொண்ட இதயத்தின் முழு ஆவேசத்துடனும் காதலிக்கிறேன் என்பது ஆகும்! இந்த நெருப்பு எனக்குள் திடீரென்று மூண்டது, ஆனுல் என்னுல் விவரிக்கவே முடியாத அளவு ஆற்றலுடன் எரிகிறது!!! உங்கள் தாயார் என்னிடம் வந்து என்னைக் கேட்டுக் கொண்ட போது இது எனக்குள் வெறுமே கனிந்து கொண்டிருந்தது. இல்லாவிட்டால் நான், நேர்மையுள்ளவன் என்ற வகையில், அவர் கொடுத்த பணியை நிறைவேற்றக் கட்டாயம் மறுத்திருப்பேன்... இப்போது நான் செய்யும் ஒப்புதல் நேர்மையாளனின் ஒப்புதல் ஆகும். எந்த மாதிரி ஆளுடன் தொடர்பு கொள்கிறேம் என்பதை நீங்கள் அறிய வேண்டும். நமக்கு இடையில் அரைகுறையான புரிவு இருக்கக் கூடாது. உங்களுக்கு எவ்வித யோசனையும் கூற என்னுல் முடியவில்லை என்பதைக் காண்கிறீர்கள்... நான் உங்களைக் காதலிக்கிறேன், காதலிக்

கிறேன், காதலிக்கிறேன்—என்னிடம் வேறு எதுவும் இல்லை—அறிவிலும் சரி, நெஞ்சிலும் சரி!!

திமி. ஸானின்.''

கடிதத்தை மடித்து உறையிலிட்டு ஒட்டிய பின் பரிசாரகனை அழைத்து அதை அவன் வசம் கொடுத்து அனுப்பும் நோக்கத்துடன் ஸானின் மணி அடிக்கப் போனான்... ''கூடாது! இப்படிச் செய்வது சங்கடம்...'' என்று அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். 'எமீலியோ வசமா? ஆனால் கடைக்குப் போவதும் அங்கே மற்றக் கடை அலுவலர்களுக்கு நடுவே அவனைத் தேடிப் பிடிப்பதும் கூடச் சங்கடம் தான். தவிரவும், வெளியே இருட்டாகத் தொடங்கி விட்டது. அவன் ஒருவேளை இதற்குள் கடையிலிருந்து போயிருப்பான்.'' இவ்வாறு எண்ணமிட்ட போதிலும் ஸானின் தொப்பியை மாட்டிக் கொண்டு வெளியே சென்றான். ஒரு முனை திரும்பி நடந்தான், அடுத்த முனையில் திரும்பியவன், எமீலியோ எதிரே வரக் கண்டு வருணனைக்கு எட்டாத பேருவகை கொண்டான். பையைக் கக்கத்தில் இடுக்கி, காகிதக் கட்டைக் கையில் பிடித்தவாறு வீட்டுக்கு விரைந்து கொண்டிருந்தான் அந்த இளம் உற்சாகி.

''காதல் கொண்டவனுக்கு அதிர்ஷ்ட நட்சத்திரம் உண்டு என்று மக்கள் சொல்லுவது சரி தான்'' என்று நினைத்துக் கொண்டு எமீலியோவைக் கூப்பிட்டான்.

அவன் திரும்பி, ஸானினிடம் பாய்ந்து வந்தான்.

ஸானின் அவனுக்குக் களி கொண்டாட இடம் கொடுக்காமல், கடிதத்தை அவனிடம் ஒப்படைத்து, யாரிடம் எப்படிக் கொடுக்க வேண்டும்

என்று விளக்கினான்... எமீலியோ கவனித்துக் கேட்டான்.

ஆழ்ந்த பொருளும் மர்மமும் உள்ள தோற்றத்தை முகத்தில் வருவித்துக் கொண்டு, ''ஒருவரும் காணாத படியா?'' என்று வினவினான். ''விஷயம் என்ன என்பது எங்களுக்குத் தெரியும்!'' என்றது அவன் பார்வை.

''ஆமாம் என் அருமை நண்பா'' என்று கூறிய ஸானின் சிறிது குழப்பம் அடைந்தான். ஆனாலும் எமீலியோவின் கன்னத்தை நெருடி, ''பதில் இருந்தால் நீங்கள் கொண்டு தருவீர்கள், அல்லவா?.. நான் அறையில் இருப்பேன்'' என்றான்.

''அதைப் பற்றி மட்டும் கவலையே படாதீர்கள்'' என்று குதூகலம் பொங்கக் கிசுகிசுத்து விட்டு ஓடினான் சிறுவன். ஓடிக் கொண்டே ஸானினைப் பார்த்து இன்னொரு தரம் தலை அசைத்தான்.

ஸானின் இருப்பிடம் திரும்பி, விளக்குப் பொருத்தாமல் சோபாவில் விழுந்து கைகளைத் தலைக்குப் பின்னே நீட்டிக் கொண்டு, சற்று முன் தான் தன் அறிவில் பட்ட காதலின் உணர்ச்சிகளில் திளைக்கலானான். இவற்றை வருணிக்க முடியாது. அனுபவித்தவன் இவற்றின் சோர்வையும் இனிப்பையும் அறிவான். அனுபவிக்காதவனுக்குச் சொல்லிப் பயன் இல்லை.

கதவு திறந்தது. எமீலியோவின் தலை தென்பட்டது.

''கொண்டு வந்திருக்கிறேன். இதோ பதில்!'' என்று கிசுகிசுத்தான்.

மடித்த காகிதத்தைக் காட்டித் தலைக்கு மேலே உயர்த்தினான்.

ஸானின் சோபாவிலிருந்து துள்ளி எழுந்து எமீலியோவின் கையிலிருந்து கடிதத்தைப்

பிடுங்கிக் கொண்டான். காதலின் ஆவேசம் அவனுக்குள் அடக்க மாட்டாமல் பொங்கியது. உணர்ச்சிகளை மறைக்கவும் பண்பாட்டு விதிகளைக் கடைப்பிடிக்கவும் — அவளுடைய தம்பியான இந்தப் பையனுக்கு எதிரில் கூட—அவனால் முடியவில்லை. முடிந்திருந்தால் இவனிடம் நாணி இருப்பான், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருப்பான். முடிந்திருந்தால்!

சாளரத்தின் அருகில் போய், வீட்டின் நேர் எதிரே இருந்த தெரு விளக்கின் ஒளியில் கீழ்க் கண்ட வரிகளைப் படித்தான்:

''நான் உங்களை வேண்டிக் கொள்கிறேன், கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன், நாளை முழுவதும் எங்கள் வீட்டுக்கு வராதீர்கள், இந்தப் பக்கமே தலை காட்டாதீர்கள். இது எனக்கு வேண்டும், கட்டாயம் வேண்டும். அப்புறம் எல்லாம் முடிவாகும். என் சொல்லை நீங்கள் தட்ட மாட்டீர்கள் என்று அறிவேன், ஏனென்றால்...

ஜெம்மா.''

இந்தக் கடிதத்தை ஸானின் இரண்டு தரம் படித்தான்—ஓ, அவளுடைய கையெழுத்து உள்ளத்தை உருக்கும் வகையில் இனியதாகவும் அழகியதாகவும் அவனுக்குத் தோன்றியது! சற்று நேரம் யோசித்தபின், எமீலியோவைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டான். தான் எத்தகைய அடக்கம் உள்ள பையன் என்று காட்டுவதற்காகச் சுவரின் பக்கம் திரும்பி அதை நகத்தால் கீறியவாறு நின்று கொண்டிருந்தான் எமீலியோ.

அவன் உடனே ஸானினிடம் பாய்ந்து வந்தான்.

''என்ன உத்தரவு?''

''கேளுங்கள், நண்பரே...''

"Monsieur திமீத்ரி '' என்று அவன் பேச்சில் குறுக்கிட்டு, ''என்னிடம் ஏன் நீ போட்டுப் பேச மாட்டேன் என்கிறீர்கள்?'' என்று குறை கூறும் குரலில் சொன்னுன் எமீலியோ.

ஸானின் களுக்கென்று நகைத்தான்.

''ஊம், நல்லது. கேள், நண்பா (எமீலியோ சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தான்), கேள். எல்லாம் கணக்காக நிறைவேற்றப்படும் என்று அங்கே, புரிகிறது அல்லவா, அங்கே சொல்லு (எமீலியோ உதடுகளை இறுக மூடிக் கொண்டு பெருமிதத்துடன் தலையை ஆட்டினுன்), அப்புறம் நீ... நாளைக்கு என்ன செய்யப் போகிருய்?''

''நாஞ? என்ன செய்யப் போகிறேஞ? நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''முடியுமாஞல் காலையில் முன்னதாக இங்கே வந்து விடு. பிராங்க்பர்ட்டின் நகர்ப் புறத்தில் மாலை வரை உலாவுவோம்... சம்மதமா?''

எமீலியோ மறுபடி துள்ளிக் குதித்தான்.

''நன்ருய்க் கேட்டீர்களே. இதை விட மேலானது என்ன இருக்க முடியும் உலகத்திலே? உங்களோடு உலாவுவது அற்புதம் ஆயிற்றே! கட்டாயம் வருவேன்!''

''உனக்கு அனுமதி கிடைக்கா விட்டாலோ?''

''கிடைக்கும்!''

''இந்தா... நாள் பூராவும் என்னேடு இருப்பதற்கு நான் உன்னை அழைத்ததாக அங்கே சொல்லாதே.''

''சொல்வது எதற்காக? சொல்லாமலே வந்து விடுகிறேன், என்ன கஷ்டம்?''

எமீலியோ ஸானினை இறுகத் தழுவி முத்தம் இட்டு விட்டு ஓடினுன்.

ஸானினே, அறையில் நெடு நேரம் நடமாடிக் கொண்டிருந்து விட்டு நேரம் தாழ்த்து உறங்கு வதற்காகப் படுத்தான். புது வாழ்வுக்கு முந்திய பயங்கரமும் இனிமையும் கொண்ட அதே உணர்ச் சிகளால், அதே மகிழ் நிறைந்த ஓய்வினல் அவன் ஆட்கொள்ளப்பட்டான். மறு நாள் எமீலியோ வை வரச் சொல்லும் எண்ணம் தனக்கு வந்தது குறித்து ஸானினுக்கு மிகுந்த மகிழ்ச்சி உண் டாயிற்று. முக அமைப்பில் அவன் தமக்கையைக் கொண்டிருந்தான். ''அவளை நினைவு படுத்திக் கொண்டிருப்பான்'' என்று எண்ணமிட்டான் ஸானின்.

ஆனல், இன்று இருப்பதற்கு மாருக முந்திய நாள் அவனல் எப்படி இருக்க முடிந்தது? இதுவே யாவற்றிலும் அதிகமாக அவனை வியப்பில் ஆழ்த் தியது. தான் ஜெம்மாவைச் ''சதா காலமும்'' காதலித்து வந்ததாகவும், இன்று காதலிப்பது போலவே காதலித்து வந்ததாகவும் அவனுக்குத் தோன்றியது.

## 26

மறுநாள் காலே எட்டு மணிக்கு தர்த்தாலி யாவை வார் கட்டிப் பிடித்துக் கொண்டு ஸானி னுடைய இருப்பிடம் வந்து சேர்ந்தான் எமீலியோ. அவன் ஜெர்மானியப் பெற்ரேருக்குப் பிறந் திருந்தால் கூட நேரம் தவருமையில் இதை விட அதிகக் கண்டிப்பைக் காட்டி இருக்க முடிந்தி ராது.*வீட்டில் அவன் புளுகினன். காலேச் சிற்றுண்

---

* நேரம் தவருமைக்கு ஜெர்மானியரை எடுத்துக்காட்டாகக் கருதுவது ருஷ்யர்களின் வழக்கமாய் இருந்தது.—மொ-ர்.

டிக்கு முன் வரை ஸானிேேடு உலாவி விட்டுக் கடைக்குப் போவதாகச் சொன்னன். ஸானின் உடை அணிந்து கொண்டிருக்கையில், ஜெம்மா வைப் பற்றியும் ஹெர் கிளியூபெருடன் அவ ளுடைய மண ஏற்பாடு முறிந்து விட்டதைப் பற்றி யும் பேச்செடுக்க, போதிய தயக்கத்துடன் தான் என்ருலும், எமீலியோ முயன்ருன். ஆனல் ஸானின் பதில் பேசாமல் கடுகடுப்பாக மௌனமாய் இருந்து விடவே, இந்த முக்கியமான விஷயம் பற்றி விளையாட்டாகப் பேசுவது ஏன் கூடாது என்பது தனக்குப் புரிந்து விட்டதாகக் காட்டிக் கொண்டு விஷயத்தை அதோடு நிறுத்தி விட் டான். ஒரு முனைப்பாடும் கண்டிப்பும் கூட உள்ள தோற்றத்தை எப்போதாவது மட்டுமே மேற் கொண்டான்.

காப்பி சாப்பிட்ட பிறகு இரண்டு நண்பர் களும் ஹாவுஸெனுக்கு—கால்நடையாக என்று சொல்ல வேண்டியதில்லை—புறப்பட்டார்கள். பிராங்க்பர்ட்டிலிருந்து சிறிது தொலைவில் இருந்த இந்தச் சிறு கிராமம் காடுகளால் சூழப்பட் டிருந்தது. தாவுனுஸ் மலைத் தொடர் முழுவதும் அங்கிருந்து துலக்கமாகத் தெரிந்தது. பருவ நிலை அருமையாக இருந்தது. வெயில் பளிச்சென்று அடித்துக் கதகதப்பு உண்டாக்கிற்று, ஆனல் பொசுக்கவில்லை. பசிய இலைகளில் உற்சாகமாக இரைந்தது குளிர்ந்த காற்று. உயரத்தில் இருந்த வட்ட மேகங்களின் நிழல்கள் சிறு கறைகளாகத் தரையில் விரைவாக ஊர்ந்து சென்றன. இளைஞர் கள் இருவரும் நகரிலிருந்து விரைவில் வெளியேறி, மழமழப்பாகப் பெருக்கித் துப்புரவு செய்யப் பட்டிருந்த சாலையில் உற்சாகமும் குதூகலமுமாக நடை போட்டார்கள். காட்டுக்குள் புகுந்து அங்கே

வெகு நேரம் சுற்றித் திரிந்தார்கள். பிறகு கிராமச் சாப்பாட்டுக் கடையில் வயிறு முட்டக் காலை யுணவு சாப்பிட்டார்கள். பின்பு மலை மேல் ஏறி, காட்சிகளை வியந்து நோக்கினார்கள். மேலிருந்து கற்களை உருட்டி விட்டு, அவை குழி முயல்கள் போல வேடிக்கையாகவும் விந்தையாகவும் தத்து வதைக் கண்டு கைகளைக் கொட்டினார்கள். கீழே போய்க் கொண்டிருந்த ஒருவன், அவர்கள் பார் வைக்குப் புலப்படாமல், வலுவான கணீர்க் குரலில் அவர்களைத் திட்டி நொறுக்கிய வரையில் இந்த வேடிக்கையில் ஈடுபட்டிருந்தார்கள். மஞ்சளும் ஊதாவுமாக உலர்ந்திருந்த குட்டைப் பாசி மேல் அப்புறம் நீட்டிப் படுத்தார்கள். பின்னர் வேறொரு சாப்பாட்டுக் கடையில் பீர் குடித்தார் கள். பிறகு போட்டி போட்டுக் கொண்டு ஓடினார் கள், பந்தயம் கட்டித் தாவினார்கள்—யார் அதிகத் தொலை என்று. எதிரொலியைக் கிளப்பினார்கள், அதனுடன் உரையாடினார்கள், பாடினார்கள், ''ஆலூ!'' என்று கத்தினார்கள், குஸ்தி போட்டார் கள். மரக் கொம்புகளை முறித்தார்கள், பெரணிக் கிளைகளால் தொப்பிகளை அலங்கரித்துக் கொண் டார்கள். நடனம் கூட ஆடினார்கள். தர்த் தாலியா தன்னால் முடிந்த அளவு இந்த எல்லாக் காரியங்களிலும் கலந்து கொண்டது. கற்களை அது உருட்டி விடவில்லை தான், ஆனால் கற்களின் பின்னே தானே உருண்டு ஓடியது. இளைஞர்கள் பாடிய போது ஊளையிட்டது. பீர் கூடப் பரு கிற்று—ஆனால் அருவருப்பைக் காட்டிக் கொண் டது. ஒரு காலத்தில் அதற்குச் சொந்தக்காரனாக இருந்த மாணவன் பீர் பருக அதைப் பழக்கி இருந் தான். ஆனால் எமீலியோவுக்கு அது சரியாக—தன் எசமானன் பந்தலியோனேக்குப் பணிவது போலப்

—பணியவில்லை. எமீலியோ ''பேசும்'' படியோ ''தும்மும்'' படியோ கட்டளை இட்டபோது அது வெறுமே வாலை ஆட்டியது, நாக்கைக் குழல் போல நீட்டியது.

இரு இளைஞர்களும் தங்களுக்குள் பேசிக் கொள்ளவும் செய்தார்கள். மூத்தவன், ஆகவே அதிக விவேகம் உள்ளவன் என்ற வகையில் ஸானின் உலாவலின் தொடக்கத்தில் பேச ஆரம் பித்து, ஊழ் அல்லது விதியின் முன்முடிவு என்பது என்ன, மனிதன் என்னும் பட்டப் பெயரின் பொருள் என்ன, அதன் உள்ளடக்கம் யாது என்பவற்றைப் பற்றி உரையாட முற்பட்டான். ஆனால் விரைவிலேயே உரையாடல் பொருளாழம் குறைந்த விஷயங்களுக்குத் திரும்பியது. தனது நண்பனும் காப்பாளனுமான ஸானினிடம் ருஷ்யா வைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினான் எமீலி யோ. அங்கே இருவர் போர் எப்படி நடத்துகிறார் கள், அங்கே பெண்கள் அழகானவர்கள் தாமா, ருஷ்ய மொழியை விரைவில் கற்க முடியுமா, படை அதிகாரி கைத்துப்பாக்கியை அவனுக்குக் குறி வைத்த போது அவனுக்கு என்ன உணர்ச்சி ஏற்பட்டது என்று கேட்டான். தன் முறைக்கு ஸானின் எமீலியோவிடம் அவனுடைய தகப்பனை யும் தாயையும், பொதுவாக அவர்களுடைய குடும்ப விவகாரங்களையும் பற்றி விசாரித்தான். ஜெம்மாவின் பெயரைக் குறிக்காதிருக்க எல்லா வகையிலும் முயன்றான், ஆனால் அவளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். உள்ளபடி சொன் னால், அவளைக்கூட அல்ல, மறு நாளைப் பற்றியே —முன் அறியாத, அபூர்வமான இன்பத்தைத் தனக்குக் கொண்டுவரப் போகிற மர்மமான மறு நாளைப் பற்றியே—அவன் எண்ணமிட்டுக் கொண்

டிருந்தான்! ஒரு திரை, மெல்லிய, லேசான திரை, மெதுவாக அசைந்தவாறு அவனது மனக் கண்ணுக்கு முன்னே தொங்கியது போல் இருந்தது. உதடுகளில் அன்புப் புன்னகை தவழ, கண்டிப் புடன், போலிக் கண்டிப்புடன் இமைகளைத் தாழ்த்திக் கொண்டிருக்கும் இள நங்கையின் அசைவற்ற தெய்விக முகம் திரையின் மறு புறம் இருப்பதாக அவன் உணர்ந்தான். அந்த முகம் ஜெம்மாவின் வதனம் அல்ல, இன்பத்தினுடை யவே முகம்! முடிவில் அவனுடைய வேளை வந்தது, திரை தூக்கப்பட்டது, உதடுகள் திறந்தன, இமைகள் உயர்ந்தன, தெய்வதம் அவனை நோக் கியது. கதிரவனிடமிருந்து வருவது போன்ற ஒளியும் மகிழ்ச்சியும் முடிவற்ற பேருவகையும் அந்தப் பார்வையில் இருந்தன!! இந்த மறு நாளைப் பற்றி எண்ணிய போது அவனுடைய நெஞ்சுத் துடிப்பு மீண்டும் மகிழ்ச்சி பொங்க நின்று விட்டது. இடையருது மறுபடி மறுபடி உயிர்த்த எதிர் பார்ப்பின் சோர்வூட்டும் ஏக்கம் உள்ளத்தை நிறைத்தது!

அதோடு இந்த எதிர்பார்ப்பு, இந்த ஏக்கம், எதற்கும் இடைஞ்சலாக இல்லை. அவனுடைய ஒவ்வோர் அசைவோடும் சேர்ந்து வந்தது அது. மூன்ருவது சாப்பாட்டுக் கடையில் எமீலியோ வுடன் நன்ருக மதியச் சாப்பாடு சாப்பிட அவனுக்கு இடையூருய் இல்லை அது. உலகில் யாராவது அறிந் தால்??!! என்ற எண்ணம் எப்போதாவது தான் அவனுக்குள் மின் வெட்டு போலப் பளிச்சிட்டது. மதியச் சாப்பாட்டுக்குப் பின் எமீலியோவுடன் பச்சைக் குதிரை விளையாட இந்த ஏக்கம் அவனுக் குத் தடையாய் இல்லை. அகன்று பரந்த பசும் புல் வெளியில் ஆட்டம் நடந்து கொண்டிருந்தது...

தர்த்தாலியா உற்சாகமாகக் குலேக்க, முன்னே குனிந்திருந்த எமீலியோவைத் தாண்டி லாகவ மாகப் பரப்பிய கால்களுடன் பட்சி போலப் பறந்த ஸானின், தனக்கு முன்னே, பசும் புல்தரை யின் மறு கோடியில் இரண்டு படை அதிகாரிகளேக் கண்டான். தனது முந்திய நாள் எதிராளியும் அவ னுடைய போர்த் துணைவனும்—வான் டோன்ஹாபும் வான் ரீஹ்தரும்—என்று அவர்களை விரைவில் அடையாளம் தெரிந்து கொண்டதும் ஸானினுக்கு ஏற்பட்ட வியப்புக்கும் குழப்பத்துக்கும் அள வில்லே! அவர்கள் ஆளுக்கு ஒரு தொலே நோக் கியைக் கண்ணில் வைத்துக் கொண்டு அவனேப் பார்த்துக் குறுநகை செய்தார்கள்... ஸானின் குதித்துத் திரும்பி, தரையில் போட்டிருந்த மேல் கோட்டை எடுத்துச் சட்டென மாட்டிக் கொண்டு, எமீலியோவிடம் அரைகுறையான வார்த்தை சொன்ஞன். அவனும் குட்டைக் கோட்டை மாட்டிக் கொண்டான். இருவரும் உடனே அப் பால் சென்ருர்கள்.

அவர்கள் பிராங்க்பர்ட் நகரை அடைந்த போது நேரம் ஆகி விட்டது.

''வீட்டில் என்னைத் திட்டுவார்கள்'' என்று ஸானினிடம் சொன்ஞன் எமீலியோ. ''அட எல் லாம் ஒன்றுதான்! ஆனுல் நாளே எவ்வளவு அற்புத மாக, அற்புதமாகக் கழித்தேன்!''

விடுதிக்குத் திரும்பிய ஸானின் ஜெம்மாவின் கடிதத்தைக் கண்டான். பிராங்க்பர்ட் நகரைச் சூழ்ந்திருந்த பொதுப் பூங்காக்கள் ஒன்றில் மறு நாள் காலே ஏழு மணிக்குச் சந்திக்கலாம் என்று அவள் எழுதி இருந்தாள்.

ஸானினுடைய உள்ளம் எப்படிக் களி துள் ளியது! அவள் சொன்னதை மறுக்காமல் ஒப்புக்

கொண்டது குறித்து அவன் எவ்வாறு மகிழ்ந்தான்! கடவுளே, முன் நிகழாத, ஒரே ஒன்முன, அசாத்தியமான, அதே சமயம் ஐயத்துக்கு இடமற்ற மறுநாள் எதை உறுதிப்படுத்தும்... எதை உறுதிப்படுத்தாது!

ஜெம்மாவின் கடிதத்தை அவன் விழிகளால் பருகினுன். கடித்தின் முடிவில் இருந்த அவளுடைய பெயரின் முதல் எழுத்தான ஜேயின் ஒயிலுடன் நீண்ட வால் வீச்சு அவளுடைய அழகான கை விரல்களை அவனுக்கு நினைவுபடுத்திற்று... தான் இந்த விரல்களை உதடுகளால் ஒரு தரங்கூடத் தொடவில்லை என்பதை நினைத்துக் கொண்டான்... "இத்தாலியப் பெண்கள், அவர்களைப் பற்றிய வதந்திகளுக்கு மாருக நாணமும் அடக்கமும் உள்ளவர்கள்..." என்று எண்ணமிட்டான். "ஜெம்மாவோ, எல்லோருக்கும் மேல்! அரசி... தேவி... கன்னிமையும் தூய்மையும் வாய்ந்த பளிங்கு..."

ஆனல் வேளை வரும்—அதுவும் தொலைவில் இல்லை...

பிராங்க்பர்ட்டில் அன்று இரவு இன்பமுள்ள மனிதன் ஒருவன் இருந்தான்... அவன் தூங்கிக் கொண்டிருந்தான். ஆனல் தன்னைப் பற்றி அவன் கவியின் சொற்களில் இவ்வாறு கூறியிருக்க முடியும்.

> "உறங்குகிறேன் நான்... ஆயின்
> நுண் இதயம் உறங்கவில்லை..."*

மலரோடு ஒன்றியவாறு கோடை வெயிலொளியில் முழுக்காடும் வண்ணத்திப் பூச்சி சிறகடிப்

---

* கவிஞர் லேவ் மேய் (1822—1862) இயற்றிய "யூதப் பாட்டுக்கள்" என்னும் தொகுப்பில் அடங்கிய செய்யுளின் பிழையுள்ள மேற்கோள்.

பது போல அனுயாசமாகத் துடித்துக் கொண் டிருந்தது அவனுடைய இதயம்.

## 27

காலை ஐந்து மணிக்கு ஸானின் கண் விழித் தான், ஆறு மணிக்கு உடை அணிந்து தயார் ஆகி விட்டான். ஆறரை மணிக்குப் பொதுப் பூங்கா ஒன்றில், ஜெம்மா கடிதத்தில் குறிப்பிட்டிருந்த சிறு பந்தலின் பக்கத்தில் நடமாடிக் கொண்டிருந் தான்.

காலை நிசப்தமும் வெதுவெதுப்பும் ஈரிப்பும் உள்ளதாக இருந்தது. இதோ மழை பெய்யப் போகிறது என்று சில வேளைகளில் தோன்றியது. ஆனால் நீட்டிய கை மழைத் துளிகளை உணரவில்லை. கோட்டுக் கையை உற்றுப் பார்த்த போது தான், நுண்ணிய பாசி மணி போன்ற சிறு துளிகளின் தடங்களைக் காண முடிந்தது. ஆனால் அவையும் விரைவில் நின்று விட்டன. காற்று வீசவே இல்லை போல அடங்கிவிட்டது. ஒவ்வோர் ஒலியும் பறந்து செல்லாமல் சுற்றிலும் சிந்தியது. சற்று வெண்மை யான நீராவி தொலைவில் சிறிது கட்டி ஆயிற்று. மிஞோனெட், வெள்வேல மலர்களின் மணம் காற்றில் கமழ்ந்தது.

வீதிகளில் கடைகள் இன்னும் திறக்கவில்லை, ஆனால் வழிப்போக்கர்கள் காணப்பட்டார்கள். தனி வண்டி எப்போதாவது கடகடத்துச் சென் றது... பூங்காவில் யாரும் உலாவவில்லை. தோட்டக் காரன் பாதையை மண் வாரியால் நிதான மாகச் சுறண்டித் துப்புரவாக்கிக் கொண்டிருந் தான். கறுப்புக் கம்பளி மழைக்கோட்டு அணிந்த ஒரு தொண்டு கிழவி சிரமத்துடன் தோட்டப்

பாதையைக் கடந்து சென்றுள். அந்த அப்பாவியை ஜெம்மா என்று நினைக்கவே ஸானினுக்கு முடிந் திராது. ஆனுலும் அவனது நெஞ்சு விம்மிதம் அடைந்தது. அப்பால் நகர்ந்த கறுப்புக் கறை யைப் பார்வையால் தொடர்ந்தான்.

ஏழு! கோபுர மணி அடித்தது.

ஸானின் நின்றுன். அவள் வர மாட்டாளா என்ன? அவனுடைய உடம்பு முழுதும் திடீரென்று புல்லரித்தது. ஒரு விஞடிக்குப் பிறகு இதே புல் லரிப்பு அவனுக்கு மறுபடி ஏற்பட்டது, ஆனுல் இம் முறை வேறு காரணத்தால். தனக்குப் பின்னே லேசான காலடி ஓசை, பெண் உடையின் மெல்லிய சரசரப்பு, ஸானினுக்குக் கேட்டது... திரும்பிப் பார்த்தான்: அவள்!

ஜெம்மா பாதையில் அவன் பின்னே வந்து கொண்டிருந்தாள். சாம்பல் நிற வலைப் போர் வையும் சிறிய கறுப்புத் தொப்பியும் அணிந்திருந் தாள். அவள் ஸானின் மேல் பார்வை செலுத் திஞள், தலையை ஒரு புறம் திருப்பிக் கொண்டாள். அவனுக்கு நேராக வந்ததும் விரைவாகக் கடந்து போனுள்.

''ஜெம்மா'' என்று காதில் அரிதாகவே படும்படி அழைத்தான் ஸானின்.

அவள் அவனுக்கு லேசான தலையசைப்பால் சைகை செய்து விட்டுத் தொடர்ந்து முன்னே சென்றுள். அவன் அவளைப் பின்பற்றினுன்.

அவன் இடை நிறுத்தி நிறுத்தி மூச்சு விட் டான். அவனுடைய கால்கள் அவனுக்குச் சரி யாகக் கீழ்ப்படியவில்லை.

ஜெம்மா பந்தலைக் கடந்து வலப்புறம் திரும்பி, ஒரு குருவி அரும் பாடுபட்டுத் துளைந்து கொண் டிருந்த சிறிய தட்டைக் குளத்தையும் கடந்து,

உயரமான பவளக் குறிஞ்சிச் செடிகள் அடர்ந்த பாத்திக்கு மறு பக்கம் சென்று பெஞ்சியில் உட்கார்ந்தாள். இடம் வசதியாகவும் மறைவாகவும் இருந்தது. ஸானின் அவள் அருகே அமர்ந்தான்.

ஒரு நிமிடம் கழிந்தது, ஆனுல் அவளோ அவனே ஒரு வார்த்தை பேசவில்லை. அவள் அவனைப் பார்க்கக்கூட இல்லை. அவனும் அவள் முகத்தை அல்ல, சிறிய குடை பிடித்திருந்த இணைந்த கரங்களையே பார்த்துக் கொண்டிருந்தான். பேசுவதற்கு என்ன இருந்தது? இங்கே, ஒன்ருக, தனிமையில், இவ்வளவு அதிகாலையில், ஒருவருக்கு ஒருவர் இவ்வளவு கிட்டத்தில் அவர்கள் இருக்கும் இந்த ஒரு வாய்ப்புக்கு முக்கியத்துவத்தில் இணை ஆகக் கூடியதாகச் சொல்வதற்கு என்ன இருந்தது?

''நீங்கள்... என் மேல் கோபப்படவில்லையே?'' என்று முடிவில் கூறினுன் ஸானின்.

இவற்றை விட அசட்டுத்தனமான சொற்களைச் சொல்வது ஸானினுக்குக் கடினமாக இருந்தது... அவனுக்கே இது புரிந்தது... ஆனுலும் மௌனம் கலைக்கவாவது பட்டதே.

''நானு? எதற்காக? இல்லை'' என்ருள் ஜெம்மா.

''நீங்கள் என்னை நம்புகிறீர்களா?'' என்று தொடர்ந்தான் அவன்.

''நீங்கள் எழுதி இருந்தீர்களே, அதையா?''

''ஆம்.''

ஜெம்மா தலையைக் குனிந்து கொண்டு பேசாதிருந்தாள். குடை அவள் கையிலிருந்து நழுவிற்று. அது பாதையில் விழுவதற்குள் அவள் சட்டெனப் பிடித்துக் கொண்டாள்.

''என்னை நம்புங்கள், நான் உங்களுக்கு எழுதி

யதை நம்புங்கள்'' என்று கூவினன் ஸானின். அவனுடைய கூச்சம் எல்லாம் திடீரென்று போய் விட்டது. அவன் ஆவேசம் பொங்கப் பேசலானன்: ''உலகத்தில் உண்மை—புனிதமான, சந்தேகத்துக்கு இடமற்ற உண்மை—இருக்கிறது என்ருல், நான் உங்களைக் காதலிக்கிறேன், ஆர்வம் பொங்கக் காதலிக்கிறேன் என்பதுதான் அது, ஜெம்மா!''

அவள் அவனைக் கடைக்கண்ணுல் ஒரு விஞடி நேரம் பார்த்தவள், குடையை மீண்டும் நழுவ விடத் தெரிந்தாள்.

''என்னை நம்புங்கள், என்னை நம்புங்கள்'' என்று திருப்பித் திருப்பிச் சொன்ஞன் அவன். அவளைக் கெஞ்சினன், அவள் பக்கம் கையை நீட்டினன், ஆனல் அவளைத் தொடத் துணியவில்லை. ''உங்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதற்காக... நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அவள் அவன் மீது மீண்டும் பார்வை செலுத்தினள்.

''சொல்லுங்கள், monsieur Dimitri," என்று தொடங்கினள். ''மூன்ரும் நாள் என்னிடம் பேசி இணங்க வைப்பதற்காக வந்தீர்களே, அப்போது நீங்கள் இன்னும் அறியவில்லையோ... உணரவில்லையோ...''

''நான் உணர்ந்தேன், ஆனல் அறியவில்லை. உங்களைக் கண்ட கணம் முதலே நான் உங்கள் மேல் காதல் கொண்டு விட்டேன், ஆனல் எனக்கு நீங்கள் எத்தகையவர் ஆகி விட்டீர்கள் என்பதை நான் உடனே புரிந்து கொள்ளவில்லை! தவிரவும், நீங்கள் மோதிரம் மாற்றிக் கொண்டு விட்ட மணப்பெண் என்றும் கேள்விப்பட்டிருந்தேன்... உங்கள் தாயார் ஒப்படைத்த பொறுப்பு சம்பந்தப்

பட்ட வரை, முதலாவதாக, என்னல் எப்படி மறுக்க முடிந்திருக்கும்? இரண்டாவதாக, நான் அந்தப் பொறுப்பை நிறைவேற்றிய விதத்தைக் கொண்டே உங்களால் ஊகிக்க முடிந்தது...''

கனத்த காலடி ஓசை கேட்டது. தோளில் தொங்கிய பயணப் பையும் தானுமாக, அயல் நாட்டார் போலக் காணப்பட்ட கணிசமாகப் பருமனை ஒரு கனவான் பாத்தியின் மறு புற மிருந்து வெளிப்பட்டு, பெஞ்சியில் அமர்ந்திருந்த இணை மீது அயல் நாட்டுப் பயணிக்கு இயல்பான மரியாதை இன்மையுடன் பார்வை செலுத்தி உரக்க இருமி விட்டு மேலே நடந்தார்.

கனத்த கால்களின் அடியோசை அடங்கியதுமே ஸானின் பேசத் தொடங்கினன். ''உங்கள் மறுப்பு அவதூறைக் கிளப்பும் என்று உங்கள் தாயார் என்னிடம் கூறினர்'' (ஜெம்மா சிறிது முகம் சுளித்தாள்). ''தகாத வதந்திக்கு ஒரு வகையில் நானே இடம் கொடுத்ததாகவும்... ஆகையால்... உங்கள் மணமகன் திருவாளர் கிளியூபெரை மறுக்காதிருக்கும்படி உங்களிடம் சொல்லி இணங்க வைப்பது ஓரளவு என் கடமை என்றும் அவர் கூறினர்...''

"Monsieur Dimitri" என்று ஸானின் பக்கம் பார்த்து தன் கூந்தலைக் கோதியவாறு சொன்னுள் ஜெம்மா. ''திருவாளர் கிளியூபெரை என் மண மகன் என்று தயை செய்து குறிப்பிடாதீர்கள். நான் ஒருபோதும் அவருக்கு மனேவி ஆக மாட்டேன். நான் அவருக்கு மறுப்பு தெரிவித்து விட்டேன்.''

''நீங்கள் அவருக்கு மறுப்பு தெரிவித்து விட்டீர்களா? எப்போது?''

''நேற்று.''

''நேரிலா?''

''நேரில். எங்கள் வீட்டில். அவர் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தார்.''

''ஜெம்மா! அப்படியானுல் நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?''

அவள் முகத்தை அவன் பக்கம் திருப்பினுள்.

''இல்லா விட்டால்... நான் இங்கே வந்திருப்பேனு?'' என்று கிசுகிசுத்த அவளுடைய இரு கரங்களும் பெஞ்சி மேல் விழுந்தன.

அங்கைகள் மேற்புறம் இருக்கும் படியாகக் கிடந்த அந்த வலுவற்ற கரங்களை எடுத்துத் தன் கண்களிலும் உதடுகளிலும் ஒற்றிக் கொண்டான் ஸானின்... முந்திய நாள் அவனுக்குத் தோற்றம் அளித்த திரை அப்போதுதான் தூக்கப்பட்டது! இதோ இருந்தது இன்பம், இதோ அதனுடைய மகிழ் பொங்கும் வதனம்!

அவன் தலையை நிமிர்த்தி ஜெம்மாவை நேராக, துணிவுடன் பார்த்தான். அவளும் அவன் மேல் கண்ணேட்டினுள், ஓரளவு ஏற இறங்க. அவளுடைய பாதி மூடிய விழிகளின் பார்வை இன்பக் கண்ணீர் மல்கச் சற்றே மினுமினுத்தது. முகம் முறுவலிக்கவில்லை... இல்லை! அதுவும் இன்பம் பொங்கிய, ஆனுல் ஒலியற்ற சிரிப்பால் பூரித்தது.

அவளை மார்புறத் தழுவிக் கொள்ள அவன் விரும்பினுன், ஆனுல் அவள் விலகி விட்டாள். முன் போன்றே ஒலி அற்ற சிரிப்பு சிரித்தவாறு, கூடாது என்று தலை அசைத்தாள். மகிழ்ச்சி ததும்பிய அவளுடைய விழிகள், ''பொறு'' என்று சொல்பவை போலக் காணப்பட்டன.

''ஓ ஜெம்மா!'' என்று கூவினுன் ஸானின். ''என்னுல் நினைத்திருக்கக் கூட முடியுமா, நீ''

(இந்த ''நீ'' என்ற ஒருமைச் சொல்லை* அவனுடைய உதடுகள் முதன் முதலாக உச்சரித்த போது அவனது இதயம் தந்தி போலத் துடித்தது), ''நீ என்னைக் காதலிப்பாய் என்று?''

''நானும் இதை எதிர்பார்க்கவில்லை'' என்று மெல்லென மொழிந்தாள் ஜெம்மா.

''சில மணி நேரமே தங்குவதற்காக நான் பிராங்க்பர்ட் வந்த போது, என் வாழ்நாள் முழுவதும் நீடிக்கப் போகிற இன்பத்தை இங்கே பெறுவேன் என்று எண்ணி இருக்க என்னால் முடியுமா? முடியுமா என்னால்?'' என்று பேச்சைத் தொடர்ந்தான் ஸானின்.

''வாழ்நாள் முழுவதுமா? மெய்யாகவா?'' என்று கேட்டாள் ஜெம்மா.

''வாழ்நாள் முழுவதும், என்றென்றும் எக்காலமும்!'' என்று புதிய உற்சாகப் பெருக்குடன் கூவினான் ஸானின்.

அவர்கள் உட்கார்ந்திருந்த பெஞ்சிக்கு இரண்டு அடி தூரத்தில் தரையைத் திடீரென்று சுரண்டத் தொடங்கியது தோட்டக்காரனின் மணல்வாரி.

''வீட்டுக்குப் போவோம்'' என்று கிசுகிசுத்தாள் ஜெம்மா. ''சேர்ந்து போவோம், விரும்புகிறாயா?''

''கடலிலே குதி, விரும்புகிறாயா?'' என்று அந்தக் கணத்தில் அவள் கேட்டிருந்தால் அவள் கடைசிச் சொல்லை முடிப்பதற்குள்ளேயே அவன்

---

* வழக்கமாக ''நீங்கள்'' என்று பன்மையில் ஒருவரை ஒருவர் அழைத்துக் கொள்ளும் ஆடவனும் மாதும் கணவன்-மனைவி, அல்லது காதலர்கள் ஆனதும் ''நீ'' என்று ஒருமையில் விளிப்பது ருஷ்ய மரபு.—மொ-ர்.

அகாதத்தில் தலை தெறிக்கப் பாய்ந்திருப்பான்.

அவர்கள் தோட்டத்திலிருந்து ஒன்ருகக் கிளம்பி, நகர வீதிகள் வழியாக இன்றிச் சுற்று வழியாக வீட்டுக்குப் போனுர்கள்.

## 28

ஜெம்மாவின் மீது வைத்த பார்வையை அகற்ருமலும் புன்னகை செய்வதை நிறுத்தாமலும் சில சமயம் அவள் அருகாகவும் மறு சமயம் அவளுக்குப் பின்னேயும் நடந்தான் ஸானின். அவளோ, அவசரமாக விரைபவள் போல நடந்தாள்... நிற்பவள் போலத் தயங்கினுள். உண்மையைச் சொன்னுல், அவர்கள் இருவரும், கிளர்ச்சி காரணமாக அவன் ஒரேயடியாக வெளிறியும் அவள் ஒரே ரோஜா நிறம் கொண்டும், மதி மயங்கியவர்கள் போல முன்னே சென்ருர்கள். சற்று நேரத்துக்கு முன்பு அவர்கள் செய்தது—தன் உள்ளத்தைப் பிற உள்ளத்திற்கு அர்ப்பணித்தது—அவ்வளவு வலிமையும் புதுமையும் பயங்கரமும் உள்ளதாக இருந்தது. அவர்களுடைய வாழ்க்கையில் இருந்தவை எல்லாம் திடுதிப்பென்று இடம் பெயர்ந்து மாறிவிட்டன ஆதலால் அவர்களால் சுய நிதானத்துக்கு வர முடியவில்லை. தங்களைப் பற்றித் தூக்கிய சூருவளியை அவர்கள் உணர மட்டுமே செய்தார்கள். ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்ளும்படி அவர்களை அனேகமாகத் தள்ளிய அந்த இரவுச் சுழல்காற்றை நிகர்த்திருந்தது இந்தச் சூருவளி. தான் ஜெம்மாவை வேறு விதமாகப் பார்ப்பதாகக் கூட நடந்தவாறு உணர்ந்தான் ஸானின். அவளது நடையில், அவளுடைய அங்க அசைவுகளில் சில தனிச் சிறப்புக்களை ஒரு

நொடியில் அவன் கவனித்தான். அட கடவுளே! அவைதாம் அவனுக்கு எப்படி எல்லையற்ற அன்புக்கு உரியவையாகவும் இனியவையாகவும் இருந்தன! அவன் தன்னை அந்த மாதிரிப் பார்க்கிறான் என்பதை அவள் உணர்ந்தாள்.

ஸானினும் அவளும் முதல் தடவை காதல் கொண்டிருந்தார்கள். முதல் காதலின் எல்லா அற்புதங்களும் அவர்களுக்கு நிகழ்ந்து கொண்டிருந்தன. முதல் காதல் என்பதே புரட்சி ஆகும்: உருவாகி விட்ட வாழ்க்கையின் ஒரே மாதிரிச் சரியான அமைப்பு ஒரு நொடியில் இடிந்து தகர்ந்து விடுகிறது, இளமை தடையரணுக்குப் பின்னே போராடத் தயாராக நிற்கிறது, அதன் ஒளி வீசும் கொடி உயரே பறக்கிறது, மேற்கொண்டு நேரப் போவது சாவோ, புது வாழ்வோ, எது ஆயினும் அதற்குத் தன் உவகை பொங்கும் வணக்கத்தை அது தெரிவிக்கிறது.

''என்ன? இவர் நம் கிழவரா என்ன?'' என்று முக்காடிட்ட உருவம் ஒன்றை விரலால் சுட்டிக் கேட்டான் ஸானின். மற்றவர்கள் கவனத்தைக் கவராமல் இருப்பதற்காகப் போலும், கொஞ்சம் கொஞ்சமாக ஓரத்தில் ஒதுங்கிக் கொண்டிருந்தது அது. அளவு கடந்த மகிழ்ச்சிப் பெருக்கில் காதலைப் பற்றிப் பேசாமல்—அது தீர்ந்து போன விவகாரம், புனிதமானது—வேறு எதையாவது பற்றி ஜெம்மாவுடன் பேசும் தேவையை அவன் உணர்ந்தான்.

''ஆமாம், இவன் பந்தலியோனே தான்'' என்று குதூகலமும் இன்பமும் குமிழிட விடை அளித்தாள் ஜெம்மா. ''என்னைப் பின்பற்றி வீட்டிலிருந்து கிளம்பி இருப்பான். நேற்றே என் ஒவ்வோர் அடி வைப்பையும் நாள் முழுதும் கண்

காணித்துக் கொண்டிருந்தான்... ஊகித்திருக் கிறான்!''

''ஊகித்திருக்கிறாளு!'' என்று பரவசத்துடன் திருப்பிச் சொன்னான் ஸானின். ஜெம்மா என்ன சொல்லி இருந்தால்தான் அவன் பரவசம் அடைந் திருக்க மாட்டான்?

தலைக்கு நாள் நடந்ததை எல்லாம் விவர மாகச் சொல்லும்படி பிறகு அவளைக் கேட்டுக் கொண்டான்.

அவள் உடனே சொல்லத் தொடங்கினாள். அவசரப்படுவதும் குழம்புவதும் குறுகிய பெரு மூச்சுக்கள் விடுவதும் ஒளி திகழும் குறுகிய பார் வைகளை ஸானினுடன் பரிமாறிக் கொள்வதுமாகப் பேசிக் கொண்டு போனாள். மூன்றும் நாள் நடந்த உரையாடலுக்குப் பிறகு ஜெம்மாவிடமிருந்து நிச்சயமான தகவல் எதையாவது பெறுவதற்குத் தாயார் எப்படி இடைவிடாமல் முயன்றாள், தனது முடிவை இருபத்துநான்கு மணி நேரத்தில் தெரிவிப்பதாக உறுதி கூறி, பிராவு லெனேரே யிடமிருந்து தான் எப்படி விடுபட்டாள், இந்தக் கெடுவை எப்படி மன்றாடிக் கேட்டுப் பெற்றாள், இது எப்படிக் கடினமாக இருந்தது, ஹெர் கிளி யூபெர், முன் எப்போதையும் விட அதிக ஒழுங்குக் கண்டிப்பும் கஞ்சி போட்டு முடமுடப்பான உடை யுமாக, முற்றிலும் எதிர்பாராத சந்தர்ப்பத்தில் எப்படி வந்து சேர்ந்தான், அறிமுகம் அற்ற ருஷ் யனின் சிறுபிள்ளைத்தனமான, மன்னிக்க முடியாத, தனக்கு, அதாவது கிளியூபெருக்கு, ஆழ்ந்த அவ மதிப்பு ஏற்படுத்துகிற (இப்படியே அவன் சொன் ஞன்) குறும்பினல்—அவன் குறித்தது உன்னுடைய போரை—தனக்கு உண்டான கடும் கோபத்தை அவன் எப்படி வெளியிட்டான், உன்னை எங்கள்

வீட்டுக்கு வராதபடி உடனே தடுக்க வேண்டும் என்று எப்படிக் கோரினுன்—இங்கே ஜெம்மா கிளியூபெருடைய குரலேயும் தோரணேயையும் சிறிது கோரணி செய்தாள்—''ஏனென்ருல் இது என் மானத்தைக் கறைப்படுத்துகிறது. இன்றியமையாதது, அல்லது பயன் உள்ளது என்று நான் கருதி இருந்தால் என் மணப்பெண்ணுக்குப் பரிந்து கொண்டு வர என்னுல் முடிந்திராது என்பது போன்ற எண்ணத்தை இது ஏற்படுத்துகிறது! என் மணப்பெண்ணுக்காகப் படை அதிகாரிகளோடு எவனே வேற்று மனிதன் போரிட்டான் என்ற செய்தியை பிராங்க்பர்ட் நகரம் முழுவதும் நாளேக்கே தெரிந்து கொள்ளும்—எப்பேர்ப்பட்ட கேலிக்கூத்து!—இது எனக்கு மானக்கேடு உண்டாக்கும்!'' என எப்படிக் கூறினுன் என்பதை எல்லாம் விவரித்து விட்டு ஜெம்மா சொன்ஞள்: ''அம்மா அவன் கருத்தை ஒப்புக் கொண்டாள்—எப்படி இருக்கிறது! ஆனுல் அப்போது சட்டென்று நான் குறுக்கிட்டேன். தன்னுடைய மானத்தைப் பற்றியும் தன் பெயரைப் பற்றியும் அவன் வீணுகக் கவலேப்படுவதாகவும் தன் மணப் பெண் பற்றிய எண்ணங்களால் வீணுக அவமானப் படுவதாகவும், ஏனென்ருல் நான் இனி அவனுடைய மணப்பெண் அல்ல என்றும், ஒரு போதும் அவனுக்கு மனேவி ஆக மாட்டேன் என்றும் அறிவித்து விட்டேன்! முடிவாக அவனுக்கு மறுப்பு தெரிவிப்பதற்கு முன்னுல் உங்களுடன்... உன்னுடன் பேச விரும்பினேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனுல் அவன் வந்தான்... என்னுல் அடக்கிக் கொள்ள முடியவில்லே. அம்மா பயத்தினுல் வீரிடக்கூடச் செய்தாள். நான் அடுத்த அறைக்குப் போய் அவனுடைய மோதிரத்தை

எடுத்து வந்து—அந்த மோதிரத்தை இரண்டு நாட்களுக்கு முன் கழற்றி வைத்து விட்டேன் என் பதை நீ கவனிக்கவில்லை—அவனிடம் திருப்பிக் கொடுத்தேன். அவனுக்குக் கடுமையான மனத் தாங்கல் உண்டாயிற்று. ஆனாலும் அவன் படு மோசமான தன்மானமும் வீறுப்பும் உள்ளவன் ஆகையால் அதிகம் பேசாமல் வெளியேறி விட் டான். அம்மாவிடம் நான் நிறைய வாங்கிக் கட்டிக் கொள்ள நேர்ந்தது என்று சொல்லவே வேண் டாம். அவள் பட்ட துயரத்தைக் காண எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது. நான் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டேன் என்று எண்ணினேன். ஆனால் உன்னுடைய கடிதம் என்னிடம் இருந் ததே. தவிரவும், அது இல்லாமலே நான் அறிந் திருந்தேன்...''

''நான் உன்னைக் காதலிப்பதை'' என்று கூறி முடித்தான் ஸானின்.

''ஆமாம்... நீ என் மேல் காதல் கொண் டிருப்பதை.''

குழம்புவதும் புன்னகை செய்வதும், யாரே னும் எதிர்ப்பட்ட போதும் அருகாகக் கடந்து சென்ற போதும் குரலைத் தாழ்த்துவதும் அல்லது பேச்சை அறவே நிறுத்துவதுமாக இந்த மாதிரிப் பேசிக் கொண்டு போனாள் ஜெம்மா. ஸானினோ, உவகை பெருக்கிட, தலைக்கு நாள் அவளது கையெழுத்தை வியந்து நோக்கியது போல அவ ளுடைய குரலின் ஒலியை ரசித்த வண்ணம் கேட்டுக் கொண்டிருந்தான்.

''அம்மா மட்டுமீறி வருத்தப்படுகிறாள்'' என்று மீண்டும் தொடங்கினாள் ஜெம்மா. அவ ளுடைய சொற்கள் ஒன்றன் பின் ஒன்றாக மளமள வென்று பெருகின. ''ஹெர் கிளியூபெர் மேல்

எனக்கு அருவருப்பு தட்ட முடியும் என்பதையோ, நான் அவனை மணக்க இசைந்தது காதலினால் அல்ல, அவளுடைய விடாப்பிடியான வேண்டு கோள்களின் விளைவாகத்தான் என்பதையோ கவனத்தில் எடுத்துக் கொள்ளவே அம்மா மாட்டேன் என்கிறாள்... அவள் சந்தேகிக்கிறாள்... உங்களை... உன்னை. அதாவது, நேராகச் சொன்னால், நான் உன்மேல் காதல் கொண்டு விட்டதாக அவள் உறுதியாக எண்ணுகிறாள். மூன்று நாள் முன்பு அவளுக்கு இந்த சந்தேகமே ஏற்படவில்லை, என்னிடம் பேசி இணங்கச் செய்யும் பொறுப்பைக் கூட உன்னிடம் ஒப்படைத்தாளே, அதனால் அவளுடைய வேதனை இன்னும் அதிகம் ஆகி விட்டது... விந்தையானது இந்தப் பொறுப்பு, இல்லையா? இப்போது அவள் தந்திரக்காரன், மோசடி செய்பவன் என்று உனக்கு... உங்களுக்குப் பட்டம் சூட்டுகிறாள். நீங்கள் அவளுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டீர்கள் என்கிறாள். என்னையும் நீங்கள் ஏமாற்றுவீர்கள் என்று எச்சரிக்கிறாள்...''

''ஆனால், ஜெம்மா, நீ அவரிடம் சொல்லவில்லையா என்ன?..''

''நான் ஒன்றுமே சொல்லவில்லை! உங்களோடு கலந்து பேசாமல் ஏதேனும் சொல்ல எனக்கு என்ன உரிமை இருந்தது?''

ஸானின் கைகளைக் கொட்டினான்.

''ஜெம்மா, இப்போதாவது அம்மாவிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவாய் என்று நம்புகிறேன். என்னை அவரிடம் அழைத்துப் போ... நான் வஞ்சகன் அல்ல என்று உன் தாயாருக்கு நிரூபித்துக் காட்ட விரும்புகிறேன்!''

பெருந்தன்மையும் ஆவேசமும் மிக்க உணர்ச்சி

களின் பெருக்கால் ஸானினது நெஞ்சு விம்மியது!

ஜெம்மா கண்களை அகல விழித்து அவனை ஆர்வத்துடன் நோக்கினுள்.

''என்னோடு இப்போது அம்மாவிடம் போக நீங்கள் உண்மையாக விரும்புகிறீர்களா? நமக்குள் இது எல்லாம் சாத்தியம் அல்ல... ஒருபோதும் நடக்க முடியாது... என்று திண்ணமாய்ச் சொல்லு கிற அம்மாவிடம்?'' ஒரு சொல்லைக் கூற ஜெம்மா தயங்கினுள்... அது அவளுடைய உதடுகளைப் பொசுக்கியது. ஆனால் ஸானின் அதை விருப்புடன் உச்சரித்தான்.

''உன்னை மணப்பது, ஜெம்மா, உன் கணவன் ஆவது என்பதைக் காட்டிலும் மேலான இன் பத்தை நான் அறியேன்!''

தன் காதலுக்கோ தன் பெருந்தன்மைக்கோ, தன் மன உறுதிக்கோ எவ்வித எல்லையும் இருப்ப தாக அவனுக்குத் தெரியவில்லை.

அவனுடைய சொற்களைக் கேட்டதும், கண நேரம் நிற்பவள் போலிருந்த ஜெம்மா முன்னி லும் விரைவாக நடந்தாள்... அளவு கடந்து பெரி தான இந்தத் திடீர் இன்பத்திலிருந்து தப்பி ஓட அவள் விரும்பியது போல் இருந்தது!

ஆனால் திடுமென அவளுடைய கால்கள் துவண் டன. சந்தின் மூலையிலிருந்து திரும்பி, அவளுக்குச் சில அடிகள் தூரத்தில் வந்து கொண்டிருந்தான் ஹெர் கிளியூபெர். புதிய தொப்பியும் புதிய மேல் கோட்டும் அணிந்து அம்பு போன்று நேராக, சடை நாய் போன்ற சுருட்டை முடியுடன் நடந் தான் அவன். ஜெம்மாவையும் ஸானினையும் அவன் கண்டான். ஒரு மாதிரி உள்ளுக்குள் செருமி நுடங் கும் மேனியைப் பின்னே சாய்த்தவாறு மிடுக்காக அவர்களை நோக்கி நடந்தான். ஸானினுடைய

நெஞ்சில் உறுத்தல் ஏற்பட்டது. கிளியூபெருடைய முகத்தைக் கூர்ந்து நோக்கியவன், இகழ்ச்சி ததும்பும் வியப்பையும் அனுதாபத்தையும் கூட அதில் தோற்றுவிக்க அவன் முடிந்தவரை முயன் றதைக் கண்டு, செம்மை படிந்த அந்த இழிந்த முகத்தின் மேல் பார்வை செலுத்தி, தனக்குள் கோபம் பொங்குவதைத் திடீரென உணர்ந்து முன்னே நடந்தான்.

ஜெம்மா அவனுடைய கையைப் பிடித்து, அமைதியான உறுதியுடன் தன் கையை அவன் கரத் தில் கோத்துக் கொண்டு தன் முன்னாள் மணமக னின் முகத்தை நேராகப் பார்த்தாள்... அவன் கண்களைச் சுரித்து, உடலை நெளித்து, ஒரு புறம் வளைந்து ஒதுங்கி, ''பாட்டின் வழக்கமான முடிவு!'' (Das alte Ende vom Liede!) என்று பற்களைக் கடித்தவாறு முணுமுணுத்து, வழக்கம் போலத் தளுக்கும் குலுக்குமான துள்ளு நடை நடந்து அப் பால் போய் விட்டான்.

''என்ன சொன்னான் அந்தக் கேடுகெட்ட வன்?'' என்று கேட்டு, கிளியூபெரைத் துரத்திக் கொண்டு பாய முற்பட்டான் ஸானின். ஆனால் ஜெம்மா அவனைத் தடுத்து, அவன் கையில் கோத்துக் கொண்ட கரத்தை எடுக்காமல் அவ னோடு மேலே நடந்தாள்.

ரொஸேல்லியின் மிட்டாய்க் கடை முன்னே தெரிந்தது. ஜெம்மா இன்னொரு முறை நின்றாள்.

"Dimitri, monsieur Dimitri" என்றாள். ''நாம் இன்னும் வீட்டுக்குள் போகவில்லை, இன் னும் அம்மாவைப் பார்க்கவில்லை... நீங்கள் இன் னும் யோசனை செய்ய விரும்பினால்... நீங்கள் இன்பமும் சுதந்திரமும் உள்ளவர், திமீத்ரி.''

விடை அளிக்கும் வகையில் ஸானின் அவ

னுடைய கையைத் தன் மார்பில் மிக மிக வலிவாக அழுத்திக் கொண்டு அவளை முன்னே இழுத்தான்.

பிராவு லெஞேரே உட்கார்ந்திருந்த அறைக் குள் ஸானினுடன் புகுந்த ஜெம்மா, ''அம்மா, அசல் மாப்பிள்ளையை அழைத்து வந்திருக் கிறேன்!'' என்ருள்.

## 29

காலராவையோ சாவையே தாஞே அழைத்து வந்திருப்பதாக ஜெம்மா அறிவித்திருந்தால் பிராவு லெஞேரே அந்தச் செய்தியால் இதை விட அதிகப் புகலின்மைக்கு உள்ளாகி இருக்க மாட்டாள் என்று எண்ண வேண்டும். அவள் உடனே மூலையில் சுவர்ப் புறம் முகத்தைத் திருப்பி யவாறு உட்கார்ந்து கண்ணீர் பெருக்கி, கண வனையோ மகனையோ சாகக்கொடுத்த ருஷ்யக் குடியானவப் பெண்பிள்ளை போல அனேகமாக ஒப்பாரி வைக்கலானுள். முதலில் ஒரேயடியாகக் குழப்பம் அடைந்து விட்ட ஜெம்மா தாயின் கிட்டே கூடப் போகவில்லை! அடித்த சிலை போல அறை நடுவில் நின்று கொண்டிருந்தாள். ஸானின் திகைத்துத் தடுமாறினுன். அவனுக்கே கண்ணீர் விட வேண்டும் போல் இருந்தது! அடக்க முடியாத இந்த அழுகை முழுதாக ஒரு மணி நேரம் தொடர்ந்தது: முழுதாக ஒரு மணி நேரம்! வேற் ருர் யாரும் வந்து விடாமல் இருப்பதற்காகக் கடைப் பகுதியின் வெளிக் கதவைச் சாத்திப் பூட்டு வது மேல் என்று பந்தலியோனே முடிவு செய் தான். நல்ல காலம் அது காலை வேளை. பந்தலி யோனேக்கும் மலைப்பாய் இருந்தது. ஜெம்மாவும் ஸானினும் அவசரப்பட்டு விட்டதை அவன் ஒப்ப

வில்லை. அதே சமயம் அவர்களைக் கண்டனம் செய் யவும் தயங்கினான். தேவை ஏற்பட்டால் அவர் களுக்கு ஆதரவு அளிக்க ஆயத்தமாய் இருந்தான்: கிளியூபெரை அவ்வளவு தூரம் பிடிக்கவில்லை அவ னுக்கு! தமக்கைக்கும் ஸானினுக்கும் இடையே தூது போய் வந்தவனாகத் தன்னை மதித்துக் கொண்ட எமீலியோ காரியம் அருமையாகப் பலித்து விட்டதால் அனேகமாகப் பெருமை அடைந்திருந்தான்! பிராவு லெனோரே இப்படி ஏங்கித் தவிப்பது எதற்காக என்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. மாதர்கள், எல் லோரிலும் மேலான மாதர்கள்கூட, புரிந்து கொள் ளும் திறன் அற்றவர்கள் என்று மனதுக்குள் அக் கணமே முடிவு செய்து கொண்டான்! எல்லாரை யும் விட சங்கடமாய் இருந்தது ஸானினுக்கு. அவன் பிராவு லெனோரேயை நெருங்கியதுமே அவள் வீரிட்டு, கைகளை வீசி அவனை அப்பால் விரட் டினாள். ''உங்கள் மகளை மணக்க என்னை அனு மதியுங்கள்!'' என்று தூர நின்றபடி இரைந்து கூவ அவன் பல தடவை வீணே முயன்றான். ''நான் இவ் வளவு குருடியாக, ஒன்றையுமே காணாமல் எப்படி இருக்க முடிந்தது!'' என்று தன் மேல் சிறப்பாக ஆத்திரம் கொண்டாள் பிராவு லெனோரே. ''என் ஜியோவான்னி பத்தீஸ்தா மட்டும் உயிரோடு இருந்தால், இது ஒன்றுமே நடந்திருக்காது!'' என்று கண்ணீருக்கிடையே மறுபடி மறுபடி கூறி னாள். ''அட கடவுளே, என்னதான் இது? முடி வாகப் பார்த்தால் இது அசட்டுத்தனம் அல் லவா?'' என்று எண்ணமிட்டான் ஸானின். ஜெம் மாவைப் பார்க்க அவன் துணியவில்லை, அவன் மேல் பார்வை செலுத்த அவளும் தயங்கினாள். பொறுமையுடன் தாயாரைத் தேற்றியதோடு

நிறுத்திக் கொண்டாள். தாயார் முதலில் அவளை யும் அப்பால் தள்ளினாள்...

முடிவில், புயல் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கியது. பிராவு லெனோரே அழுவதை நிறுத்தினாள், தான் ஒண்டிக் கொண்டிருந்த மூலையிலிருந்து தன்னை அழைத்துப் போய், சாளரத்தின் பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்த்தவும் ஆரஞ்சு மலர் நீர் தனக்குப் பருகக் கொடுக்கவும் ஜெம்மாவை அவள் அனுமதித்தாள். ஸானினை நெருங்க விடவில்லை... இல்லவே இல்லை! ஆனால் அறையில் இருக்க அனுமதித்தாள் (முன்னர் அவன் போய் விட வேண்டும் என்று மறுபடி மறுபடி கோரினாள்), அவன் பேசிய போது இடை முறிக்க வில்லை. நிலவிய அமைதியை ஸானின் உடனே பயன்படுத்திக் கொண்டு வியப்பூட்டும் சொல்வன்மையுடன் பேசினான். ஜெம்மாவின் முன்னிலையில் தன் நோக்கங்களையும் உணர்ச்சிகளையும் இத்தகைய ஆவேசத்துடனும் இவ்வளவு நம்பிக்கை அளிக்கும் வகையிலும் வேறு சூழ்நிலையில் அவன் வெளியிட்டிருப்பது சந்தேகந்தான். இந்த உணர்ச்சிகள் மிக மிக உளமார்ந்தவையாகவும் இந்த நோக்கங்கள் மிக மிகத் தூயவையாகவும் இருந்தன—''ஸெவீல் நாவிதன்'' நாடகத்தில் வரும் அல்மாவீவினுடையவை போல.* இந்த நோக்கங்களின் பிரதிகூலமான அம்சங்களை பிராவு லெனோரேயிடமோ தன்னிடமேயோ அவன் மறைக்க வில்லை. ஆனால் இந்தப் பிரதிகூலங்கள் பார்

---

* பிரெஞ்சு எழுத்தாளர் பொமார்ஷே (1732-1799) இயற்றிய நகைச்சுவை நாடகப் பாத்திரத்துடன் ஸானின் கேலியாக ஒப்பிடப்படுவது அவனுடைய வருங்கால நடத்தையைச் சாடையாகக் குறிக்கிறது.

வைக்குத்தான் அப்படித் தோன்றின! அவன் அயல் நாட்டான், அவர்கள் சற்று முன்தான் அவனை அறிமுகம் செய்து கொண்டார்கள், அவனுடைய சுபாவத்தைப் பற்றியோ அவனுடைய உடைமைகளைப் பற்றியோ அவர்களுக்கு ஒன்றும் நிச்சயமாகத் தெரியாது என்பது உண்மையே. ஆனால் தான் ஒழுங்கானவன், ஏழை அல்ல என்பதற்கு வேண்டிய சான்றுகளைக் காட்ட அவன் தயார். தன் சொந்த நாட்டாரின் சந்தேகத்துக்கு அறவே இடமற்ற சாட்சியங்களை அவன் எடுத்துக் காட்டுவான்! ஜெம்மா தன்னோடு இன்பமாக இருப்பாள், உறவினர்களைப் பிரிந்ததால் அவளுக்கு ஏற்படும் துயரத்தைப் போக்கத் தன்னால் முடியும் என்று அவன் நம்புகிறான்!.. பிரிவு பற்றிய குறிப்பு, ''பிரிந்ததால்'' என்ற ஒரு சொல், எல்லாக் காரியத்தையும் கெடுக்கப் பார்த்தது... பிராவு லெனோரே துடி துடித்து அலை பாய்ந்தாள்... பிரிவு தாற்காலிகமாகத்தான் இருக்கும் என்றும் ஒரு வேளை அது ஏற்படாமலே இருந்து விடலாம் என்றும் ஸானின் சட்டென்று கூறினான்!

ஸானினுடைய சொல்வன்மை வீண் போகவில்லை. பிராவு லெனோரே அவனைப் பார்க்கத் தொடங்கினாள். அவளுடைய பார்வையில் இன்னமும் துயரமும் கண்டிப்பும் தோன்றின என்றாலும் முந்திய அருவருப்பும் கோபமும் இல்லை. பின்பு அருகே வரவும் தன் பக்கத்தில் உட்காரவும் கூட (மறு பக்கத்தில் ஜெம்மா உட்கார்ந்திருந்தாள்) அவனை அனுமதித்தாள். பிறகு அவனைக் கடிந்து கொள்ளத் தலைப்பட்டாள்—வெறும் பார்வையால் மட்டும் இன்றிச் சொற்களாலும். அவளுடைய இதயம் சற்று மென்மை அடைந்திருந்ததை இது காட்டியது. அவள் குறை சொல்லத்

தொடங்கினுள். அவளுடைய குறைகளும் வரவர அடங்கி மென்மை ஆயின. அவற்றுக்கு இடை யிடையே மகளிடமும் ஸானினிடமும் அவள் கேள் விகள் கேட்டாள். பிறகு தன் கையைப் பிடித்துக் கொள்ள ஸானினை அனுமதித்தாள், கையை உடனே விடுவித்துக் கொள்ளவில்லை... பின்னர் அவள் மீண்டும் அழத் தொடங்கினுள், ஆனுல் இப் போது அவள் பெருக்கியது முற்றிலும் வேறுவகை யான கண்ணீர்... பிறகு அவள் ஏக்கம் ததும்பப் புன்னகை செய்து, ஜியோவான்னி பத்தீஸ்தா இல்லாதது பற்றிக் குறைப்பட்டுக் கொண்டாள். ஆனுல் முந்தியதற்கு மாருன அர்த்தத்தில்... இன் னும் நொடிப் போது சென்றதும் ஸானின், ஜெம்மா, இரு குற்றவாளிகளும் அவள் காலடி யில் மண்டி இட்டார்கள். அவள் ஒவ்வொருவர் தலையிலும் கை வைத்து ஆசி கூறினுள். இன்னும் ஒரு கணம் கழிந்ததும் அவர்கள் அவளைத் தழுவி முத்தம் இட்டார்கள், எமீலியோ களிப்பால் சுடர் வீசிய முகத்துடன் அறைக்குள் ஓடிவந்து, நெருக்கமாக இணைந்திருந்த குழுவோடு சேர்ந்து கொண்டான்.

பந்தலியோனே அறைக்குள் எட்டிப் பார்த்த வன், ஒரே நேரத்தில் வாய்க்குள் சிரித்துக் கொண் டும் முகத்தைச் சுளித்துக் கொண்டும் கடைப் பகுதிக்குப் போய், வெளிக் கதவைத் திறந்தான்.

## 30

புகலின்மையிலிருந்து ஏக்கத்துக்கும் அதிலிருந்து ''அமைதியான சமரச மனப்பான்மைக்கும்'' மாற்றம் பிராவு லெஞேரேயிடம் கணிசமாக விரை வில் நடந்தேறி விட்டது. இந்த அமைதியான

சமரச மனப்பான்மையும் மறைமுக மகிழ்ச்சியாக மாறுவதற்கு நேரம் தாழ்த்தவில்லை. ஆயினும், நாகரிகத்தைக் கருதி அதை அவள் எல்லா வகை யிலும் மறைத்தாள், அடக்கிக் கொண்டாள். அறி முகமான முதல் நாளிலிருந்தே ஸானினை பிராவு லெஞேரேக்குப் பிடித்திருந்தது. அவன் தன் மரு மகன் ஆகப் போகிறுன் என்ற எண்ணத்துக்குப் பழகியதும் அதில் சிறப்பாக விரும்பத்தகாத எது வும் அவளுக்குப் புலப்படவில்லை. ஆனால் ஓரளவு மனத்தாங்கல் கொண்ட... இன்னும் சரியாகச் சொன்னால், கவலை நிறைந்த தோற்றத்தை முகத் தில் வருவித்துக் கொள்வது கடமை என்று அவள் எண்ணினாள். தவிரவும், அண்மை நாட்களில் நடந்தவை எல்லாம் மிகவும் அசாதாரணமான வையாக இருந்தன... ஒன்றை விட ஒன்று! நடை முறை அனுபவம் உள்ளவள், தாய் என்ற முறை யில் ஸானினிடம் பல விதமான கேள்விகள் கேட் பதும் தன் கடமை என்று பிராவு லெஞேரே கரு தினாள். காலையில் ஜெம்மாவைச் சந்திக்கப் போன போது அவளை மணப்பதாக எண்ணவே எண்ணாத ஸானின்—உண்மையில் அப்போது அவன் எதைப் பற்றியும் எண்ணவில்லை, தன் ஆர்வத்தின் கவர்ச் சிக்கு மட்டுமே ஆளாகி இருந்தான்—தனது பாத் திரத்தை, மணமகன் பாத்திரத்தை, முழு ஆயத்தத் துடன், உற்சாகத்துடன் கூட என்று சொல்ல லாம்—ஏற்றுக் கொண்டான். எல்லாக் கேள்வி களுக்கும் விவரமாகவும், விரிவாகவும் மகிழ்ச்சி யுடனும் விடை அளித்தான். அவன் உண்மையான, இயல்பான பிரபு வம்சத்தவன் என்று உறுதிப் படுத்திக் கொண்டு அவன் சிற்றரசன் இல்லை என்பதால் சிறிது வியப்பு கூட அடைந்த பிராவு லெஞேரே ஆழ்ந்த தோற்றத்தை மேற்கொண்டு,

தான் அவனோடு எவ்விதச் சடங்கும் பாராட் டாமல் மனந்திறந்து பேசப் போவதாகவும் தாயார் என்ற புனிதமான பொறுப்பு அவளுக்கு இதைக் கட்டாயம் ஆக்குகிறது என்றும் ''அவனை முன் கூட்டி எச்சரித்தாள்.'' இதற்கு ஸானின், அவ ளிடம் தான் வேறு வித நடத்தையை எதிர் பார்க்கவில்லை என்றும் தன் மேல் இரக்கம் காட்ட வேண்டாம் என்று அவளை வற்புறுத்தி வேண்டிக் கொள்வதாகவும் பதில் அளித்தான்.

அதன் பின் பிராவு லெனோரே முக்கிய விஷயத் துக்கு வந்தாள். ஹெர் கிளியூபெர் (இந்தப் பெயரை உச்சரிக்கையில் அவள் லேசாகப் பெரு மூச்சு விட்டாள், உதடுகளை இறுக்கிக் கொண் டாள், திக்கினாள்)—ஜெம்மாவின் முந்திய மண மகனை ஹெர் கிளியூபெர் இப்போதே ஆண்டுக்கு எண்ணாயிரம் குல்தென் வருவாய் பெறுவதாகவும் ஆண்டுக்கு ஆண்டு இந்தத் தொகை மளமள வென்று அதிகமாகிக் கொண்டு போகும் என்றும் கூறி, திருவாளர் ஸானினுடைய வருவாய் என்ன என்று கேட்டாள்.

''எண்ணாயிரம் குல்தென்'' என்று நீட்டிய குரலில் திருப்பிச் சொன்னான் ஸானின்... ''எங்கள் பணத்தில் கணக்கிட்டால் இது ஏறக்குறையப் பதினையாயிரம் ரூபிள்... எனது வருவாய் இதை விட மிகவும் குறைவானது. துலா குபேர்னியா வில் எனக்குக் கொஞ்சம் சொத்து இருக்கிறது... நன்றாக நிர்வகித்தால் அது ஆண்டுக்கு ஐந்து, அல்லது ஆறு ஆயிரம் ரூபிள் வருவாய் தரக் கூடும், கட்டாயம் தர வேண்டும்... ஆமாம், நான் அரசாங்க அலுவலில் சேர்ந்தால் இரண்டாயிரம் ரூபிள் வரை ஆண்டுச் சம்பளம் கிடைக்கும்.''

''அரசாங்க அலுவலில் ருஷ்யாவிலா?'' என்று

கூவினுள் பிராவு லெஞேரே. ''அப்படியாஞல் நான் ஜெம்மாவைப் பிரிய வேண்டுமா?''

''தூதரகப் பணியில் சேரலாம்'' என்று தொடர்ந்தான் ஸானின். ''சில தொடர்புகள் எனக்கு இருக்கின்றன... அப்போது வெளி நாடுகளில் பணி ஆற்ற வேண்டி வரும். இல்லாவிட்டால் இன்னென்றும் செய்யலாம்—இது எல்லாவற்றையும் விட மேல். சொத்தை விற்று, கிடைக்கிற பணத்தை லாபகரமான ஏதேனும் தொழிலில் முதலீடு செய்யலாம். உதாரணமாக, உங்கள் மிட்டாய்க் கடையை நவீனப் பாங்கில் சீர்படுத்தலாம்.'' தான் பொருத்தம் இல்லாமல் பிதற்றுவதை ஸானினும் உணர்ந்தான். ஆஞல் விளங்காத துணிச்சல் அவனை ஆட்கொண்டிருந்தது! அவன் ஜெம்மாவை நோக்கிஞன். ''நடைமுறை'' உரையாடல் தொடங்கியது முதல் அவள் அடிக்கடி எழுந்து அறையில் நடமாடுவதும் மறுபடி உட்கார்வதுமாக இருந்தாள். ஸானின் அவளை நோக்கிஞன். அப்புறம் அவனுக்கு எவ்விதத் தடையும் இருக்கவில்லை. இப்போதே, மிகச் சிறந்த முறையில் காரியத்தைச் சீர்படுத்த அவன் தயார்—அவள் மட்டும் கலவரம் அடையாதிருந்தால் போதும்!

''மிட்டாய்க் கடையைச் சீராக்குவதற்குக் கொஞ்சம் பணம் எனக்குத் தர ஹெர் கிளியூபெரும் விரும்பிஞர்'' என்று சிறிது தயக்கத்துக்குப் பின் கூறிஞள் பிராவு லெஞேரே.

''அம்மா! தயவு செய்! அம்மா!'' என்று இத்தாலிய மொழியில் கூவிஞள் ஜெம்மா.

''இந்த விஷயங்களைப் பற்றி முன் கூட்டியே பேசி விட வேண்டும், என் மகளே'' என்று அதே மொழியில் விடை இறுத்தாள் பிராவு லெஞேரே.

அவள் மறுபடி ஸானினுடன் பேசத் தொடங்கி, ருஷ்யாவில் மணம் சம்பந்தமாக எந்த மாதிரிச் சட்டங்கள் நிலவுகின்றன, கத்தோலிக்கப் பெண் களை மணப்பதற்குப் பிரஷியாவில் உள்ளது போலத் தடைகள் இல்லையா?'' என்று கேட்டாள். (கலப்பு மணங்கள் காரணமாகப் பிரஷ்ய அரசாங் கத்துக்கும் கியோல்ன் ஆர்ச்பிஷப்புக்கும் நடந்த விவாதத்தை ஜெர்மனி முழுதும் அந்தக் காலத் தில், 1840ம் ஆண்டில், நினைவு வைத்திருந்தது.)* ருஷ்யப் பிரபுவுக்கு வாழ்க்கைப் பட்டதும் தன் பெண்ணும் சீமாட்டி ஆகி விடுவாள் என்று கேள்விப்பட்டதும் பிராவு லெனோரே சற்று மகிழ்ச்சியை வெளியிட்டாள்.

''ஆனால் நீங்கள் முதலில் ருஷ்யா போக வேண்டி இருக்குமே?''

''எதற்காக?''

''வேறு எதற்காக? உங்கள் அரசரிடம் அனு மதி பெறுவதற்குத்தான்!''

இது வேண்டவே வேண்டாம் என்று ஸானின் அவளுக்கு விளக்கினான்... ஆனால் மண விழாவுக்கு முன்னால் ஒருவேளை மிகக் குறுகிய நேரத்துக்கு ருஷ்யா போய் வருவது அவனுக்கு அவசியமாக

---

* கியோல்ன் ஆர்ச்பிஷப்பாக 1835ம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட க. துரோஸ்தே கத்தோ லிக்கச் சர்ச்சின் நலன்களைக் காத்து வெறியுடன் போராடி வந்தார். கத்தோலிக்கர்களுக்கும் கத் தோலிக்கர் அல்லாதவர்களுக்கும் இடையே கலப்பு மணங்களை அனுமதிக்கும் பிரஷ்ய அரசாங்கத் தீர்மானத்தை எதிர்த்து அவர் சமரசமற்ற போராட்டம் நடத்தினார். இந்தச் சச்சரவு 1837ம் ஆண்டு வரை நீடித்தது. அவ்வாண்டு பிரஷ்ய அரசாங்கம் துரோஸ்தேயைப் பதவியிலிருந்து அகற்றிக் கோட்டையில் சிறை வைத்தது.

லாம் என்ருன். (இந்தச் சொற்களைக் கூறிய போது அவனுடைய இதயம் வேதனையால் துடித்தது. அவனைப் பார்த்துக் கொண்டிருந்த ஜெம்மா அதைப் புரிந்து கொண்டு முகம் சிவந்து சிந்தனையில் ஆழ்ந்தாள்.) தாயகத்தில் இருக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சொத்தை விற்க முயல்வதாகவும், என்ன ஆனுலும் தேவையான பணத்தை அங்கிருந்து கொண்டு வருவதாகவும் சொன்ஞன்.

''அதே கையோடு என் போர்வைக்கு ஆஸ்திரஹான் ஆட்டுக்குட்டித் தோலும் வாங்கி வரும்படி கேட்டுக் கொள்கிறேன்'' என்ருள் பிராவு லெஞேரே. ''அங்கே அவை வியப்பூட்டும் அளவுக்கு நன்ருய் இருக்குமாம், ஆச்சரியப்படும் அளவுக்கு மலிவும் கூடவாம்!''

''கட்டாயம், மிகுந்த சந்தோஷத்துடன் வாங்கி வருகிறேன்—உங்களுக்கும் ஜெம்மாவுக்கும்!'' என்று கூவினுன் ஸானின்.

எமீலியோ பக்கத்து அறையிலிருந்து தலையை நீட்டி, ''எனக்கு வெள்ளிச் சரிகைப் பூவேலை செய்த உயர்ந்த ரக ஆட்டுத் தோல் தொப்பி'' என்ருன்.

''ஆகட்டும். உனக்கும் வாங்கி வருகிறேன்... பந்தலியோனேக்குச் சோடுகள்.''

''அட எதற்காக இதெல்லாம்? எதற்காக?'' என்ருள் பிராவு லெஞேரே. ''நாம் இப்போது முக்கியமான விஷயங்களைப் பேசிக் கொண்டிருக்கிருேம். ஆனுல் இன்னும் ஒன்று'' என்று தொடர்ந்தாள் காரியக்கார மாது. ''சொத்தை விற்பதாக நீங்கள் சொல்லுகிறீர்கள். ஆனுல் இதை நீங்கள் எப்படிச் செய்வீர்கள்? பண்ணையாட்களையும் விற்பீர்கள் என்று அர்த்தமா?''

ஸானினுக்கு யாரோ விலாவில் ஊசியால் குத்தியது போலத் தூக்கிவாரிப் போட்டது. பிராவு லெனோரையிடமும் அவளுடைய மகளிடமும் பண்ணை அடிமைமுறை பற்றிப் பேசுகையில், தனக்கு அது ஆழ்ந்த கோபம் ஊட்டுவதாகவும், பண்ணையாட்களை எந்தக் காரணத்தை முன்னிட்டும் தான் ஒருபோதும் விற்கப் போவதில்லை என்றும் ஏனென்றால் இந்த மாதிரி விற்பனை ஒழுக்க நெறிக்குப் புறம்பானது என்று கருதுவதாகவும் பல முறை உறுதி கூறியிருந்தான்.

''நல்லவன் என்று எனக்குத் தெரிந்த மனிதனுக்குச் சொத்தை விற்க முயல்வேன்'' என்று சற்றுத் திக்கியவாறு சொன்னான். ''இல்லாவிட்டால், பண்ணையாட்களே சொத்தை வாங்கிக் கொள்ள முன் வரலாம்.''

''இது எல்லாவற்றிலும் மேல்'' என்று ஒப்புக் கொண்டாள் பிராவு லெனோரே. ''இல்லாவிட்டால் உயிருள்ள ஆட்களை விற்பதாவது...''

"Barbari!"* என்று முணுமுணுத்தான் பந்தலியோனே. எமீலியோவைத் தொடர்ந்து அவனும் அடுத்த அறையின் வாயில் அருகே தென்பட்டான், ஆனால் விளங்காதவன் போல விழித்து விட்டு மறைந்து விட்டான்.

''படு மோசம்!'' என்று எண்ணிக் கொண்ட ஸானின் மறைவாக ஜெம்மா மீது பார்வை செலுத்தினான். அவனுடைய கடைசிச் சொற்களை அவள் கேட்கவில்லை போல் இருந்தது. ''அட பரவாயில்லை!'' என்று மறுபடி நினைத்துக் கொண்டான் ஸானின்.

காரியார்த்தமான பேச்சு இதே தோரணையில்

---

* நாகரிகம் அற்றவர்கள்! (இத்.).

அனேகமாக மதியச் சாப்பாட்டு வேளை வரையில் தொடர்ந்தது. கடைசியில் பிராவு லெனோரே முற்றிலும் வசப்பட்டுவிட்டாள். ஸானினை அவள் திமீத்ரி என்று அழைத்தாள், விரலைக் காட்டிக் கொஞ்சலாக அச்சுறுத்தினாள், அவனுடைய வஞ் சகத்துக்குப் பழி வாங்குவதாகக் கூறினாள். அவ னுடைய உறவினர்களைப் பற்றி நிறையவும் விரி வாகவும் விசாரித்தாள், ஏனென்றால் ''இதுவும் மிகவும் முக்கியம்'' என்றாள். திருமண விழாவை, ருஷ்யச் சர்ச்சுச் சடங்கு முறைப்படி அது எப்படி நடக்கிறது என்பதை வருணிக்கும்படி கேட்டுக் கொண்டாள். வெள்ளை மண ஆடையும் தலையில் தங்க [மகுடமுமாக ஜெம்மாவைக் கற்பனையில் கண்டு முன்கூட்டியே வியந்து பாராட்டினாள்.

''இவள் அரசி போலவே அழகானவள் இல் லையா?'' என்று தாய்க்கு உரிய பெருமையுடன் கூறினாள். ''இந்த மாதிரி அரசிகள் உலகத்திலேயே கிடையாது!'' என்றாள்.

''இன்னொரு ஜெம்மா உலகத்திலே இல்லை!'' என்று ஒத்துப் பாடினான் ஸானின்.

''ஆமாம், அதனால்தான் அவள் ஜெம்மா!'' (இத்தாலிய மொழியில் ஜெம்மா என்றால் இரத் தினம் என்று பொருள்.)

ஜெம்மா பாய்ந்து தன் தாயை முத்தமிட லானாள்... இப்போதுதான் அவள் தடையின்றி மூச்சுவிடுவது போலவும் அவளை அழுத்திக் கொண்டிருந்த சுமை அவள் உள்ளத்திலிருந்து இறங்கிவிட்டது போலவும் தோன்றியது.

தான் அண்மையில் இதே அறைகளில் கண்ட பகற் கனவுகள் பலித்து விட்டன என்ற எண்ணத் தால் ஸானினுடைய நெஞ்சில் குழந்தைக் குதூ கலம் பொங்கியது. தான் மிக மிக அதிருஷ்டசாலி

என்று அவன் திடீரென உணர்ந்தான். உடலிலும் உள்ளத்திலும் பரவிய குதுகுதுப்பால் ஆட்கொள் ளப்பட்டு அவன் சட்டெனக் கடைப் பகுதிக்குப் போனான். என்ன ஆனாலும் சரி, கல்லாவின் பின் னிருந்து கட்டாயம் வியாபாரம் செய்ய வேண் டும்,சில நாட்களுக்கு முன் செய்தது போல, என்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று... ''எனக்குத் தான் இப்போது இதற்கு முழு உரிமை உண்டே! இப்போது நான் வீட்டு ஆள் ஆகி விட்டேனே!'' என்று நினைத்துக் கொண்டான்.

அவன் மெய்யாகவே கல்லாவுக்குப் பின்னே நின்றான், மெய்யாகவே வியாபாரம் செய்தான், அதாவது, கடைக்கு வந்த இரண்டு பெண்களுக்கு ஒரு ராத்தல் மிட்டாய் விற்றான். ஒன்றின் இடத் தில் முழுதாக இரண்டு ராத்தல் மிட்டாய் கொடுத்து ஒரு ராத்தலுக்கு மட்டுமே விலை வாங்கிக் கொண்டான்.

மதியச் சாப்பாட்டின் போது, மணமகன் என்ற முறையில் ஜெம்மாவின் பக்கத்தில் அதி கார பூர்வமாக உட்கார்ந்தான். பிராவு லெனோரே தன் காரியப் பாங்கைத் தொடர்ந்து கடைப்பிடித் தாள். எமீலியோ ஓயாமல் சிரித்துக் கொண் டிருந்தான். தன்னை ருஷ்யாவுக்கு அழைத்துப் போகும்படி ஸானினை நச்சரித்தான். ஸானின் இரண்டு வாரங்கள் பொறுத்து ருஷ்யா செல்வ தாக முடிவாயிற்று. பந்தலியோனே ஒருவன்தான் ஏங்கிய முகத்துடன் காணப்பட்டான். ''இந்த அழகில் போர்த் துணைவனாக வேறு இருந்தாயே!'' என்று பிராவு லெனோரே அவனைக் குத்திக் காட் டினாள். பந்தலியோனே முறைத்தான்.

ஜெம்மா அனேகமாகச் சாப்பாட்டு நேரம் முழுதும் பேசாதிருந்தாள். ஆனால் அவளுடைய

முகம் இப்போதை விட அழகாகவும் ஒளியுடனும் ஒருபோதும் இருந்ததில்லை. சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு நிமிடம் தோட்டத்துக்கு வரும்படி ஸானினை அழைத்து, மூன்றும் நாள் தான் செர்ரிப் பழங்களை வகை பிரித்த பெஞ்சியின் அருகே நின்று, அவனிடம் சொன்னாள்:

''திமீத்ரி, என்மேல் கோபப்படாதே. ஆனால், நீ கட்டுப்பட்டவனாக எண்ணிக் கொள்ளக் கூடாது என்று உனக்கு இன்னொரு தரம் நினைவுபடுத்த விரும்புகிறேன்...''

அவள் பேச்சை முடிப்பதற்கு அவன் விட வில்லை...

ஜெம்மா முகத்தைச் சாய்த்துக் கொண்டாள்.

''அம்மா சொன்னாளே, நினைவு இருக்கிறதா, நம்முடைய மத நம்பிக்கைகளில் உள்ள வேறு பாடுகளைப் பற்றி? இந்தா!..''

மெல்லிய கயிற்றில் கட்டிக் கழுத்தில் தொங்க விட்டிருந்த சிறு செம்மணிச் சிலுவையைப் பிடித்து வலிவாகச் சுண்டி இழுத்து, கயிற்றை அறுத்துச் சிலுவையை ஸானினிடம் கொடுத் தாள்.

''நான் உன்னுடையவள் என்றால், உன்னு டைய மத நம்பிக்கை தான் என்னுடையதும்!''

ஜெம்மாவுடன் திரும்பி வீட்டுக்குள் போன போது ஸானினுடைய கண்கள் ஈரமாய் இருந் தன.

மாலைத் தறுவாயில் எல்லாம் வழக்கமான போக்கில் நடக்கத் தலைப்பட்டன. அவர்கள் திரெஸெட்டே சீட்டாட்டம்கூட ஆடினார்கள்.

## 31

மறு நாள் ஸானின் மிக அதிகாலையில் கண் விழித்தான். மனித நல உணர்வின் உச்சத்தில்

இருந்தான் அவன். ஆனால் அவனது உறக்கத்தைக் கலைத்தது இது அல்ல. தன் சொத்தை முடிந்த வரையில் விரைவாகவும் முடிந்த வரையில் லாப கரமாகவும் விற்பது எப்படி என்ற பிரச்சினை, ஜீவாதாரப் பிரச்சினை, விதியை நிர்ணயிக்கும் பிரச்சினை அவனுடைய அமைதியைக் குலைத்தது. மிகப் பல்வேறான திட்டங்கள் அவன் மூளையில் ஒன்றை ஒன்று கத்தரித்தவாறு உதித்தன, ஆனால் இன்னும் எதுவும் தெளிவுபடவில்லை. காற்று வாங்க வும் உற்சாகம் பெறவும் விரும்பி அவன் வெளியே சென்றான். தயாரான திட்டத்துடன்—வேறு வகையில் அல்ல —ஜெம்மாவிடம் போக அவன் விரும்பினான்.

கணிசமாகப் பாரியான, கொழுத்த கால்கள் உள்ள, ஆனால் நாகரிகமாக உடை அணிந்த ஓர் உருவம் சற்றே அக்கம் பக்கமாக ஆடியவாறு அவ னுக்கு முன்னே நொண்டி நடந்தது. யாருடைய உருவம் அது? சணல் முடிச் சுருள்கள் வளர்ந்த இந்தப் பின் மண்டையையும், தோள்கள் மேல் நேரே நட்டது போன்ற இந்தத் தலையையும், மென்மையான கொழுப்பு நிறைந்த முதுகையும், உப்பி உயிரற்றுத் தொங்கிய கைகளையும் அவன் எங்கே பார்த்திருக்கிறான்? தனியார் விடுதிப் பள் ளியில் படித்த தன் பழைய தோழன்—ஐந்து ஆண்டுகளாகத் தன் பார்வையில் படாமல் இருந்த தோழன்—போலஸவ் தானா இவன்? முன்னே சென்ற உருவத்தைக் கடந்து போய்த் திரும்பிப் பார்த்தான் ஸானின்... அகலமான, மஞ்சள் பாரித்த முகம், சிறிய பன்றிக் கண்கள், வெள்ளை இமை மயிர்களும் புருவங்களும், குட்டையான தட்டை மூக்கு, கோந்தால் ஒட்டியவை போன்ற பருத்த உதடுகள், ரோமமற்ற உருண்டை

மோவாய்—இவற்ருேடு சிடுசிடுப்பும் சோம்பலும் பிறரை நம்பாத தன்மையும் ததும்பிய முகத் தோற்றம்—ஆமாம், சரிதான்: இது அவன்தான், இப்பலீத் போலஸவ்தான்!

''என் நட்சத்திரம் அதற்குள் மறுபடி வேலே செய்கிறதா என்ன?'' என்று எண்ணிஞன் ஸானின்.

''போலஸவ்! இப்பலீத் ஸீதரிச்! நீதாஞ இது?''

உருவம் நின்று சிறு விழிகளே உயர்த்தி, சற்று தாமதித்த பின், ஒட்டிய உதடுகளே முடிவில் பிரித்து, கம்மிய கீச்சுக் குரலில் சொல்லிற்று:

''திமீத்ரி ஸானிஞ?''

''அவனேதான்!'' என்று கூவி, போலஸவின் ஒரு கையைப் பற்றிக் குலுக்கிஞன் ஸானின். இறுக்கமான சாம்பல் நிற மென்தோல் உறைகள் அணிந்த அந்தக் கைகள், போலஸவின் ஊதிய தொடைகளே ஒட்டி முன் போலவே உயிரின்றித் தொங்கின. ''நீ இங்கே நிரம்ப நாட்களாக இருக் கிருயா? எங்கிருந்து வந்தாய்? எங்கே தங்கி இருக் கிருய்?''

''விஸ்பாதெனிலிருந்து நேற்று வந்தேன்'' என்று நிதானமாக விடை அளித்தான் போலஸவ். ''மனேவிக்கு வேண்டிய சாமான்கள் வாங்கு வதற்காக. இன்றே விஸ்பாதெனுக்குத் திரும்பு கிறேன்.''

''அடே, ஆமாம்! நீ மணமானவன்—அதோடு, உன் மனேவி பெருத்த அழகியாம், சொல்லுகிருர் கள்!''

போலஸவ் ஓரக் கண்ணுல் பார்த்தான்.

''ஆமாம், சொல்லுகிருர்கள்.''

ஸானின் வாய் விட்டுச் சிரித்தான்.

''நீ மாருமல் முன் போலவே இருப்பதைக்

காண்கிறேன்... விடுதிப் பள்ளியில் இருந்தாயே, அப்படியே அசட்டைப் போக்கு உள்ளவனாக இருக்கிருய்.''

''எதற்காக நான் மாறப் போகிறேன்?''

''உன்னுடைய மனைவி பெரும் பணக்காரி யாம், சொல்லுகிருர்கள்'' என்று, ''சொல்லுகிருர் கள்'' என்னும் சொல்லுக்குத் தனிப்பட்ட அழுத் தம் கொடுத்து வினவினுன் ஸானின்.

''அப்படியும் சொல்லுகிருர்கள்.''

''இப்பலீத் ஸீதரிச், உனக்கே இது தெரி யாதோ?''

''கேள் தம்பீ திமீத்ரி... பாவ்லவிச்தானே? ஆமாம், பாவ்லவிச்! மனைவியின் விவகாரங்களில் நான் தலையிடுவது கிடையாது.''

''தலையிடுவது கிடையாதா? எந்த விவகாரத் திலுமா?''

போலஸவ் மறுபடி ஓரக் கண்ணுல் பார்த்தான்.

''எந்த விவகாரத்திலும், தம்பீ. அவள் தன் பாட்டில் இருக்கிருள்... அப்படியே நானும் என் பாட்டில் இருக்கிறேன்.''

''இப்போது எங்கே போகிருய்?'' என்று கேட் டான் ஸானின்.

''இப்போது நான் எங்கும் போகவில்லை. வீதி யில் நின்று உன்னோடு பேசிக் கொண்டிருக்கிறேன். நாம் பேச்சை முடித்ததும் என் விடுதிக்குப் போவேன், காலையுணவு சாப்பிடுவேன்.''

''என்னைத் தோழனுக்கிக் கொள்ள—விரும்பு கிருயா?''

''அதாவது, நீ சொல்வது காலையுணவைப் பற்றியா?''

''ஆமாம்.''

''தயவு பண்ணு. இரண்டு பேராகச் சாப்பிடு

வது எவ்வளவோ குதூகலமாய் இருக்கும். நீ அலப்பன் அல்லவே?''

''இல்லை என்றே நினைக்கிறேன்.''

''அப்படியானுல் சரி.''

போலஸவ் முன்னே நகர்ந்தான். ஸானின் அவனுடன் சென்றுன். போலஸவின் உதடுகள் மறுபடி ஒட்டிக் கொண்டு விட்டன. அவன் பேசாமல் செருமினுன், இடமும் வலமுமாகத் தள்ளாடினுன். ''அழகான பணக்காரியை மனைவியாக வலைப் படுத்த இந்தக் குண்டுக் கட்டைக்கு எப்படி முடிந்தது? இவன் பணக்காரன் அல்ல, உயர் குலத்தவன் அல்ல, அறிவுக் கூர்மை உள்ளவனும் அல்ல. சோம்பேறி, மந்த புத்தி, தூங்குமூஞ்சி, வயிறுதாரி என்று விடுதிப் பள்ளியில் பெயர் வாங்கி இருந்தான். 'சாளைவாயன்' என்ற பட்டம் பெற்றிருந்தான். விந்தைதான்!''—இவ்வாறு எண்ணமிட்டான் ஸானின்.

''ஆனுல் இவனுடைய மனைவி நிரம்பப் பணக்காரி என்றுல்—அவள் யாரோ வரிக் குத்தகைக்காரரின் மகளாம், சொல்லுகிருர்கள்—என் சொத்தை விலைக்கு வாங்க மாட்டாளா? மனைவியின் எந்த விவகாரத்திலும் தலையிடுவது கிடையாது என்று இவன் சொன்னுலும் இதை நம்புவது முடியாது அல்லவா? தவிர, விலையையும் ஒப்பக் கூடியதாக, சரசமாகக் கேட்பேன்! முயன்று பார்க்காமல் இருப்பானேன்? ஒருவேளை, என் நட்சத்திரந்தான் இப்படி எல்லாம் வேலை செய்கிறது போலும்.... முடிவு செய்து விட்டேன்! முயன்று பார்க்கிறேன்!''

போலஸவ் ஸானினை பிராங்க்பர்ட் நகரின் சிறந்த விடுதிகளில் ஒன்றுக்கு அழைத்துப் போனுன். அதில் சிறந்த அறையை அமர்த்தி

இருந்தான். மேசைகள் மேலும் நாற்காலிகள் மேலும் குவிந்து கிடந்தன அட்டைப் பெட்டிகளும் மரப் பெட்டிகளும் பொட்டலங்களும்... ''எல்லாம், தம்பீ, மாரியா நிக்கலாயெவ்னுவுக்காக!'' (போலஸவின் மனைவியுடைய பெயர் இது). போலஸவ் சாய்வு நாற்காலியில் அமர்ந்து, ''கடுமையான வெப்பம்!'' என்று முனகி, டையை அவிழ்த்தான். பிறகு மணி அடித்துத் தலைமைப் பரிசாரகனை அழைத்து, சம்பிரமமான காலையுணவுக்கு ஆர்டர் கொடுத்தான். ''ஒரு மணிக்கு வண்டி தயாராய் இருக்க வேண்டும்! தெரிந்ததா, சரியாக ஒரு மணிக்கு!'' என்றுன்.

தலைமைப் பரிசாரகன் குழைவாகப் பணிந்து வணங்கி விட்டு அடிமைத்தனம் ததும்ப அகன்றுன்.

போலஸவ் வெயிஸ்ட்கோட்டுப் பொத்தான்களைக் கழற்றினுன். அவன் புருவங்களை உயர்த்தியதையும் உஸ் உஸ் என்று பெருமூச்சு விட்டதையும் மூக்கை விடைத்ததையும் கொண்டே, பேசுவது அவனுக்குக் கடினமாய் இருக்கும் என்பதையும் நாக்கை அசைக்கும்படி ஸானின் தன்னைக் கட்டாயப்படுத்துவானு, அல்லது பேச்சு நடத்தும் சிரமத்தைத் தானே மேற்கொள்வானு என்று சிறிது கலவரத்துடன் அவன் எதிர்பார்ப்பதையும் கண்டு கொள்ள முடிந்தது.

நண்பனுடைய மனநிலையைப் புரிந்து கொண்ட ஸானின் கேள்விகளால் அவன் மேல் சுமை ஏற்றுமல், மிக மிக இன்றியமையாத விவரங்களை மட்டும் கேட்டுத் தெரிந்து கொண்டான்: போலஸவ் இரண்டு ஆண்டுகள் படைப் பணி புரிந்தானும் (ஈட்டிக் குதிரைப் படையில்! குட்டைச் சீருடுப்பில் பார்க்க நிரம்ப நன்ருகத்தான் இருந்திருப்பான்!),

மூன்று ஆண்டுகளுக்கு முன் மணம் செய்து கொண்டாளும். இப்போது இரண்டாவது ஆண்டு மனைவியோடு வெளிநாட்டில் இருந்தாளும். ''அவள் விஸ்பாதெனில் எதற்கோ சிகிச்சை செய்து கொள்ளுகிருளாம்.'' பிறகு அவர்கள் பாரிஸ் நகருக்குப் போவார்களாம். தன் தரப்பில் ஸானின் தனது முந்திய வாழ்க்கையையும் திட்டங்களையும் பற்றி இவ்வாறே சுருக்கமாகக் கூறிஞன். பின்பு நேராக முக்கிய விஷயத்துக்கு வந்தான். அதாவது, சொத்தை விற்பது என்ற தனது நோக்கம் பற்றித் தெரிவித்தான்.

சிற்றுண்டி வர வேண்டி இருந்த வாயில் பக்கம் எப்போதாவது மட்டும் பார்வை செலுத்தியவாறு போலஸவ் மௌனமாக அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். முடிவில் காலை ஆகாரம் வந்தது. வேறு இரு பணியாட்கள் உடன் வர, தலைமைப் பரிசாரகன் சில தட்டுக்களை வெள்ளி மூடிகளால் மூடி எடுத்து வந்தான்.

''உன் பண்ணை துலா குபேர்னியாவில் தானே இருக்கிறது?'' என்று சாப்பாட்டு மேசை அருகே அமர்ந்து கைத்துவாலை நுனியைக் கழுத்துப் பட்டைக்குள் செருகியவாறு கேட்டான் போலஸவ்.

''ஆமாம்.''

''யெப்ரேமொவோ மாவட்டத்தில்... எனக்குத் தெரியும்.''

''என்னுடைய அலெக்சேயெவ்கா பண்ணையை அறிவாயா?'' என்று தானும் உணவு மேசை அருகே உட்கார்ந்தவாறு கேட்டான் ஸானின்.

''அறிவேன், அறியாமல் என்ன'' என்று முட்டைப் பொரியலையும் குடைக்காளான் கறியையும் வாய்க்குள் தள்ளிஞன் போலஸவ். ''மாரியா நிக்க

லாயெவ்ஞவுக்கு—என் மனைவிக்கு—அண்டை யில் சொத்து இருக்கிறது... இந்தப் புட்டியைத் திறவும் பரிசாரகரே! நிலம் நல்லதுதான், ஆனல் உன் பண்ணையாட்கள்தாம் மரங்களை வெட்டி விட்டார்கள். எதற்காக அதை விற்கிருய்?''

''பணம் வேண்டும், அண்ணே. நான் சரச மாகத் தருவேன். நீயே வாங்கலாமே... விரும் பினல்.''

போலஸவ் ஒரு கிளாஸ் மதுவை மடக்கு மடக் கென்று குடித்து, கைத்துவாலையால் துடைத்துக் கொண்டு மறுபடி சவைப்பதில் முனைந்தான், மெதுவாகவும் ஓசையுடனும்.

''ம்—ஆமாம்'' என்று முடிவில் பேசத் தொடங்கினன்... ''நான் சொத்து வாங்கப் போவதில்லை. முதல் கிடையாது. அந்த வெண் ணெயை இப்படி நகர்த்தேன். ஒருவேளை மனைவி வாங்கினலும் வாங்குவாள். அவளிடம் பேசு. நீ விலையைக் கூட்டிக் கேட்காவிட்டால் அவள் இதற்குத் தயங்க மாட்டாள்... ஆனலும் இந்த ஜெர்மன்காரர்கள் இருக்கிருர்களே, சரியான மட்டிக் கழுதைகள்! மீனைப் பக்குவமாக அவிக்கக் கையாலாகாதவர்கள். நிரம்பச் சுளுவான காரி யம் ஆயிற்றே என்று தோன்றும், ஊம்? இந்த அழ கில் ''பாத்தர்லாந்தை* ஒன்று சேர்க்க வேண் டும்'' என்று வேறு கதைக்கிருர்கள். பரிசாரகரே, இந்த ஆபாசத்தை அப்புறப்படுத்தும்!''

''பண்ணை நிர்வாகத்தையும்... உன் மனைவியே கவனித்துக் கொள்கிருளா என்ன?'' என்று கேட் டான் ஸானின்.

---

* தந்தையர் நாடு என்று பொருள்படும் Vaterland என்னும் ஜெர்மன் சொல்.—மொ-ர்.

''அவளேதான். இதோ கட்லெட்டுகள் நன்ருய் இருக்கின்றன. சாப்பிட்டுப் பார். நான்தான் உன்னிடம் சொன்னேனே, திமீத்ரி பாவ்லவிச், மனேவியின் விவகாரம் எதிலும் நான் தலையிடுவது கிடையாது என்று — இப்போதும் அதையே உனக்குத் திருப்பிச் சொல்கிறேன்.''

போலஸவ் மொச்சு மொச்சென்று தொடர்ந்து சவைத்தான்.

''ஹ்ம்... ஆனுல் அவளோடு நான் பேச்சு வார்த்தை நடத்துவது எப்படி முடியும், இப்பலீத் ஸீதரிச்?''

''அது நிரம்பச் சுலபம், திமீத்ரி பாவ்லவிச். விஸ்பாதெனுக்கு வா. இங்கிருந்து தூரமல்ல. பரிசாரகரே, உங்களிடம் ஆங்கிலக் கடுகுத் துவையல் இருக்கிறதா? இல்லையா? மாடுகள்! நேரம் மட்டும் கடத்தாதே. நாங்கள் நாளே மறுநாள் போய் விடுவோம். உன் கிண்ணத்தில் மது ஊற்றட்டுமா? மது நல்ல மணம். புளித்ததில்லே.''

போலஸவின் முகம் மலர்ந்து சிவந்தது. அவன் சாப்பிட்ட போதும்... குடித்த போதும்தான் அது வழக்கமாக மலர்ந்தது.

''மெய்யாகவே... இதை எப்படிச் செய்வது என்று எனக்குத் தெரியவில்லே'' என முணுமுணுத்தான் ஸானின்.

''ஆமாம், அப்படி என்ன உனக்குத் திடீர்த் தேவை?''

''திடீர்த் தேவை ஏற்பட்டதால்தானே கேட்கிறேன், அண்ணே.''

''பெரிய தொகை வேண்டுமோ?''

''ஆமாம். நான்... உனக்கு இதை எப்படிச் சொல்வது? நான் திட்டம் இட்டிருக்கிறேன்... மணம் செய்து கொள்ள.''

உதடுவரை கொண்டு போன மதுக் கிண்ணத்தை மேசை மேல் வைத்தான் போலஸவ்.

''மணம் செய்து கொள்ளவா?'' என்று கர கரத்த, வியப்பினால் கரகரத்த குரலில் கத்தி, ஊதிய கைகளை வயிற்றின் மேல் வைத்துக் கொண்டான். ''இப்படித் திடுதிப்பென்று?''

''ஆமாம்... விரைவில்.''

''மணப் பெண் ருஷ்யாவில் இருக்கிறாளாக்கும்?''

''இல்லை, ருஷ்யாவில் இல்லை.''

''பின்னே எங்கே?''

''இங்கே, பிராங்க்பர்ட்டில்.''

''யார் அவள்?''

''ஜெர்மன்காரி,அதாவது,இல்லை, இத்தாலியப் பெண். இங்கே வசிப்பவள்.''

''பணக்காரியோ?''

''பணம் இல்லாதவள்.''

''அப்படியானால் காதல் நிரம்பத் தீவிரமோ?''

''வேடிக்கையான ஆளப்பா நீ! ஆமாம், தீவிரம்.''

''இதற்காக உனக்குப் பணம் வேண்டுமாக்கும்?''

''ஆமாம்... ஆமாம், ஆமாம்.''

போலஸவ் மதுவை மடக்கென்று குடித்து வாய் கொப்பளித்துக் கை கழுவிக் கைத்துவாலையில் துப்புரவாகத் துடைத்துக் கொண்டு ஒரு சுருட்டை எடுத்துப் புகைக்கலானான். ஸானின் பேசாமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஒரே வழி'' என்று தலையைப் பின்னே சாய்த்து மெல்லிய தாரையாகப் புகையை விட்டவாறு வாய்க்குள் முனகினான் போலஸவ். ''என் மனைவியிடம் போ. அவள் விரும்பினால் உன்

''அவளேதான். இதோ கட்லெட்டுகள் நன்ருய் இருக்கின்றன. சாப்பிட்டுப் பார். நான்தான் உன்னிடம் சொன்னேனே, திமீத்ரி பாவ்லவிச், மனேவியின் விவகாரம் எதிலும் நான் தலையிடுவது கிடையாது என்று — இப்போதும் அதையே உனக்குத் திருப்பிச் சொல்கிறேன்.''

போலஸவ் மொச்சு மொச்சென்று தொடர்ந்து சவைத்தான்.

''ஹ்ம்... ஆனுல் அவளோடு நான் பேச்சு வார்த்தை நடத்துவது எப்படி முடியும், இப்பலீத் ஸீதரிச்?''

''அது நிரம்பச் சுலபம், திமீத்ரி பாவ்லவிச். விஸ்பாதெனுக்கு வா. இங்கிருந்து தூரமல்ல. பரிசாரகரே, உங்களிடம் ஆங்கிலக் கடுகுத் துவையல் இருக்கிறதா? இல்லையா? மாடுகள்! நேரம் மட்டும் கடத்தாதே. நாங்கள் நாளை மறுநாள் போய் விடுவோம். உன் கிண்ணத்தில் மது ஊற்றட்டுமா? மது நல்ல மணம். புளித்ததில்லை.''

போலஸவின் முகம் மலர்ந்து சிவந்தது. அவன் சாப்பிட்ட போதும்... குடித்த போதும்தான் அது வழக்கமாக மலர்ந்தது.

''மெய்யாகவே... இதை எப்படிச் செய்வது என்று எனக்குத் தெரியவில்லை'' என முணுமுணுத்தான் ஸானின்.

''ஆமாம், அப்படி என்ன உனக்குத் திடீர்த் தேவை?''

''திடீர்த் தேவை ஏற்பட்டதால்தானே கேட்கிறேன், அண்ணே.''

''பெரிய தொகை வேண்டுமோ?''

''ஆமாம். நான்... உனக்கு இதை எப்படிச் சொல்வது? நான் திட்டம் இட்டிருக்கிறேன்... மணம் செய்து கொள்ள.''

உதடுவரை கொண்டு போன மதுக் கிண்ணத்தை மேசை மேல் வைத்தான் போலஸவ்.

''மணம் செய்து கொள்ளவா?'' என்று கர கரத்த, வியப்பினுல் கரகரத்த குரலில் கத்தி, ஊதிய கைகளை வயிற்றின் மேல் வைத்துக் கொண்டான். ''இப்படித் திடுதிப்பென்று?''

''ஆமாம்... விரைவில்.''

''மணப் பெண் ருஷ்யாவில் இருக்கிருளாக்கும்?''

''இல்லை, ருஷ்யாவில் இல்லை.''

''பின்னே எங்கே?''

''இங்கே, பிராங்க்பர்ட்டில்.''

''யார் அவள்?''

''ஜெர்மன்காரி, அதாவது, இல்லை, இத்தாலியப் பெண். இங்கே வசிப்பவள்.''

''பணக்காரியோ?''

''பணம் இல்லாதவள்.''

''அப்படியானுல் காதல் நிரம்பத் தீவிரமோ?''

''வேடிக்கையான ஆளப்பா நீ! ஆமாம், தீவிரம்.''

''இதற்காக உனக்குப் பணம் வேண்டுமாக்கும்?''

''ஆமாம்... ஆமாம், ஆமாம்.''

போலஸவ் மதுவை மடக்கென்று குடித்து வாய் கொப்பளித்துக் கை கழுவிக் கைத்துவாலையில் துப்புரவாகத் துடைத்துக் கொண்டு ஒரு சுருட்டை எடுத்துப் புகைக்கலானுன். ஸானின் பேசாமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஒரே வழி'' என்று தலையைப் பின்னே சாய்த்து மெல்லிய தாரையாகப் புகையை விட்டவாறு வாய்க்குள் முனகினுன் போலஸவ். ''என் மனைவியிடம் போ. அவள் விரும்பினுல் உன்

எல்லாத் தொல்லையையும் ஒரு நொடியில் தீர்த்து விடுவாள்.''

''ஆனால் நான் அவளைப் பார்ப்பது எப்படி, உன் மனைவியை? நீங்கள் நாளை மறுநாள் போய் விடுவீர்கள் என்று சொல்லுகிறாயே.''

போலஸவ் கண்களை மூடிக் கொண்டான்.

''ஒன்று சொல்கிறேன் கேட்கிறாயா'' என்று உதடுகளால் சுருட்டை உருட்டிப் பெருமூச்சு விட்டவாறு கூறினான். ''இருப்பிடத்துக்குப் போ. மளமளவென்று மூட்டை கட்டு. நேரே சாமான் களோடு இங்கே வா. ஒரு மணிக்கு நான் கிளம்பு கிறேன். என் வண்டி விசாலமானது. உன்னைக் கூட அழைத்துப் போகிறேன். இது எல்லாவற்றை யும் விட மேல். இப்போது கொஞ்சம் தூங்கு கிறேன். நாம் பாடுவோமே, அந்த மாதிரி நான் கட்டாயம் கொஞ்ச நேரம் தூங்க வேண்டும். இயற்கை கோருகிறது—நானும் எதிர்ப்பதில்லை. நீயும் எனக்கு இடைஞ்சல் பண்ணாதே.''

ஸானின் சிந்தித்தான், சிந்தித்தான், பின்பு திடீரென்று தலையை நிமிர்த்தினான்: அவன் முடிவு செய்து விட்டான்!

''சரி, நல்லது, நான் ஒப்புக் கொள்கிறேன். உனக்கு நன்றி தெரிவிக்கிறேன். பன்னிரண்டரை மணிக்கு நான் இங்கே இருப்பேன். சேர்ந்து விஸ் பாதெனுக்குப் போவோம். உன் மனைவி கோபிக்க மாட்டாள் என்று நம்புகிறேன்...''

ஆனால் போலஸவ் அதற்குள் மூக்கால் சீழ்க்கை அடிக்கத் தொடங்கி விட்டான். ''இடைஞ்சல் பண்ணாதே!'' என்று குழறினான், கால்களைச் சற்று ஆட்டி விட்டுக் குழந்தை போலத் தூக்கத்தில் ஆழ்ந்தான்.

அவனுடைய பாரியான உருவத்தையும் தலை

யையும் கழுத்தையும் ஆப்பிள் போன்று உருண்டையான உயரத் தூக்கிய மோவாயையும் இன்னெரு தரம் பார்வையிட்ட ஸானின் விடுதியிலிருந்து வெளியேறி, மளமளவென்று அடி வைத்து ரொஸேல்லியின் மிட்டாய்க் கடைக்கு விரைந்தான். ஜெம்மாவுக்கு முன்கூட்டித் தெரிவிப்பது அவசியமாக இருந்தது.

## 32

மிட்டாய்க் கடைப் பகுதியில் தாயுடன் அவள் இருக்கக் கண்டான். பிராவு லெஞேரே முதுகைக் கூனியவாறு சிறிய மடக்கு அளவு கோலால் சாளரங்களின் இடையில் இருந்த தூரத்தை அளந்து கொண்டிருந்தாள். ஸானினைக் கண்டதும் அவள் சிறிது கூச்சப்பட்டாலும், முதுகை நிமிர்த்தி உற்சாகமாக அவனை வரவேற்ருள்.

''உங்கள் நேற்றைய வார்த்தைகளைக் கேட்ட பின், நம்முடைய கடையை எப்படிச் சீர்படுத்துவது என்ற எண்ணமே மூளையில் ஓயாமல் சுழன்று கொண்டிருக்கிறது'' என்று பேசத் தொடங்கினுள். ''இதோ இங்கே, நிலைக் கண்ணுடித் தட்டுகள் உள்ள இரண்டு அலமாரிகளை வைக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இப்போது இது மோஸ்தர், தெரியுமல்லவா! பிறகு இன்றும்...''

''அருமை, அருமை'' என்று அவள் பேச்சில் குறுக்கிட்டான் ஸானின். ''இதை எல்லாம் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டியதுதான். ஆனல் கொஞ்சம் இப்படி வாருங்கள், நான் உங்களுக்கு ஒரு சேதி சொல்லுகிறேன்.'' அவன் பிராவு லெஞேரேயையும் ஜெம்மாவையும் கை பிடித்து அடுத்த அறைக்கு அழைத்துப் போனுன். பிராவு

லெஞேரே கலவரம் அடைந்து, அளவுகோலைக் கை நழுவ விட்டாள். ஜெம்மாவும் கலவரம் அடைந்திருப்பாள், ஆனுல் ஸானினை நன்ருக உற்றுப் பார்த்த பின் அமைதி அடைந்தாள். கவலை தோய்ந்திருந்தாலும் அவனுடைய முகம் உற்சாகக் கிளர்ச்சியையும் உறுதியையும் அதே சமயம் காட்டியது.

இரு மாதர்களையும் உட்காரச் சொல்லி அவர்களுக்கு முன்னே நின்று கைகளை வீசி முடியைச் சிலுப்பியவாறு விஷயம் முழுவதையும் தெரிவித்தான்—தான் போலஸவைச் சந்தித்தது, அவன் விஸ்பாதெனுக்கு வரும்படி அழைத்தது, சொத்தை விற்பதற்கான வாய்ப்பு எல்லாவற்றையும்.

''என்னுடைய மகிழ்ச்சியை எண்ணிப் பாருங்கள்'' என்று முடிவில் கூவினுன். ''விவகாரத்தில் இப்போது ஏற்பட்டுள்ள திருப்பத்தைப் பார்க்கும் போது நான் ருஷ்யா போவதற்குக் கூட ஒரு வேளை அவசியம் ஏற்படாது! மண விழாவையும் நான் நினைத்ததை விட எவ்வளவோ விரைவாக நாம் கொண்டாடலாம்!''

''நீங்கள் எப்போது போக வேண்டும்?'' என்று கேட்டாள் ஜெம்மா.

''இன்றே—ஒரு மணி நேரத்தில். என் நண்பன் வண்டி அமர்த்தி இருக்கிருன். என்னை அங்கே கொண்டுவிடுவான்.''

''நீங்கள் எங்களுக்குக் கடிதம் எழுதுவீர்களா?''

''தாமதிக்காமல்! அந்தச் சீமாட்டியோடு பேசி முடித்ததுமே எழுதுகிறேன்.''

''அந்தச் சீமாட்டி பெரும் பணக்காரி என்ரு சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டாள் காரியக்காரி பிராவு லெஞேரே.

''அளவு கடந்து! அவளுடைய தகப்பனர் கோடீசுவரர். சொத்தை எல்லாம் அவளுக்கு விட்டுப் போயிருக்கிருர்.''

''எல்லாவற்றையும் அவள் ஒருத்திக்கா? ஊம்—இது உங்கள் அதிருஷ்டம். ஆனல், சாக்கிரதை, உங்கள் சொத்தை மலிவாக்கி விடாதீர்கள்! புத்தி சாலித்தனமாக, உறுதியாக இருங்கள்! ஆசைக்கு இடம் கொடுக்காதீர்கள்! முடிந்த வரை விரைவில் ஜெம்மாவின் கணவர் ஆகி விட உங்களுக்கு இருக்கும் ஆர்வம் எனக்குப் புரிகிறது... ஆனல் எல்லாவற்றுக்கும் முன்னல் எச்சரிக்கை வேண்டும்! ஒரு விஷயத்தை மறந்து விடாதீர்கள்: சொத்தை எவ்வளவு அதிக விலைக்கு விற்கிறீர்களோ, அவ்வளவு அதிகப் பணம் உங்கள் இருவருக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் இருக்கும்.''

ஜெம்மா முகத்தைத் திருப்பிக் கொண்டாள். ஸானின் மறுபடி கைகளை ஆட்டினன்.

''என் எச்சரிக்கையைப் பற்றி நீங்கள் நம்பிக்கையாக இருக்கலாம், பிராவு லெனேரே! தவிர நான் பேரமே பண்ணப் போவதில்லை. உள்ள விலையை அவளிடம் சொல்லுவேன். கொடுத்தாளானல் நல்லது. கொடுக்காவிட்டால் அவள் பாடு!''

''உங்களுக்கு அவளோடு பழக்கம் உண்டா... இந்தச் சீமாட்டியோடு?'' என்று கேட்டாள் ஜெம்மா.

''நான் அவள் முகத்தைப் பார்த்ததே கிடையாது.''

''நீங்கள் எப்போது திரும்புவீர்கள்?''

''முயற்சி பலிக்காவிட்டால் நாளை மறுநாள். பலித்தால் ஒருவேளை இரண்டொரு நாள் அதிகம் பிடிக்கும். என்ன ஆனலும் தேவைக்கு மேல் ஒரு

நிமிடம் கூடத் தாமதிக்க மாட்டேன். என் உள்ளத்தை இங்கே விட்டுப் போகிறேனே! ஆனால் நான் உங்களோடு பேசிக் கொண்டிருந்து விட்டேன். புறப்படுவதற்கு முன் நான் இருப்பிடத்துக்கும் போயாக வேண்டும்... அதிருஷ்டத்துக்குக் கையைக் கொடுங்கள், பிராவு லெனோரே, எங்கள் ருஷ்யாவில் எப்போதும் இப்படிச் செய்வது வழக்கம்.''

''வலது கையையா, இடது கையையா?''

''இடது கையை—இதயத்துக்குக் கிட்டே இருப்பதால். நாளை மறுநாள் வருவேன்—வெற்றியுடனோ, தோல்வியுடனோ. நான் வெற்றியாளனாகத் திரும்புவேன் என்று எனக்கு எதுவோ சொல்லுகிறது! விடை கொடுங்கள், என் நல்லவர்களே, என் இனியவர்களே...''

பிராவு லெனோரேயை அவன் தழுவி முத்தமிட்டான். ஜெம்மாவைத் தன்னுடன் அவளது அறைக்கு—ஒரு நிமிடத்துக்கு—அழைத்தான். ஏதோ மிக முக்கியமான சேதி அவளுக்குத் தெரிவிக்க வேண்டும் என்றான்... உண்மையில் அவளிடம் தனிமையில் விடை பெற அவனுக்கு விருப்பம் உண்டாயிற்று. பிராவு லெனோரே இதைப் புரிந்து கொண்டாள், எனவே, அது அப்படி என்ன முக்கியமான சேதி என்று தெரிந்து கொள்ள ஆசைப்படவில்லை.

அதற்கு முன் ஒருபோதும் ஸானின் ஜெம்மாவின் அறைக்குப் போனது கிடையாது. தான் போற்றி வந்த அறை வாயிலைத் தாண்டியதுமே காதலின் கவர்ச்சி அனைத்தும், அதன் தழலும் பேருவகையும் இனிய அச்சமும் அவனுக்குள் மூண்டன... சுற்றும் கனிந்த பார்வை செலுத்தி, இனிய மங்கையின் காலடியில் மண்டியிட்டு முகத்

தை அவள் மேனியில் புதைத்துக் கொண்டான்...

''நீ என்னவனு?'' என்று கிசுகிசுத்தாள் ஜெம்மா. ''நீ திரும்பி வருவாயா, சீக்கிரம்?''

''நான் உன்னவன்... திரும்பி வருவேன்'' என்று மூச்சு திணற மறுபடி மறுபடி சொன்னுன் ஸானின்.

''நான் உனக்காகக் காத்திருப்பேன், என் அன்பே!''

சில விஞடிகளுக்குப் பின் ஸானின் தன் விடுதியை நோக்கி வீதியில் ஓடிஞன். பந்தலியோனே ஒரே அலங்கோலமாக மிட்டாய்க் கடை வாயிலிலிருந்து தன் பின்னே தாவியதையும் தன்னிடம் ஏதோ கத்திச் சொன்னதையும் உயரத் தூக்கிய கையுடன் அச்சுறுத்துபவன் போலச் சைகை செய்ததையும் அவன் கவனிக்கத்தானும் இல்லே.

---

சரியாகப் பன்னிரண்டே முக்கால் மணிக்கு ஸானின் போலஸவிடம் போய்ச் சேர்ந்தான். நான்கு குதிரைகள் பூட்டிய வண்டி போலஸவின் விடுதி வாயிலருகே நின்று கொண்டிருந்தது. ஸானினேக் கண்டதும், ''ஆ! முடிவு செய்து விட்டாயா?'' என்று மட்டும் கூறிஞன் போலஸவ். கோடை காலமாய் இருந்த போதிலும் தொப்பி, மேல் கோட்டு, ரப்பர் மேல்சோடுகள் ஆகியவற்றை அணிந்து பஞ்சுப் பற்றைகளேக் காதுகளில் திணித்துக் கொண்டு வாயிலுக்கு வந்தான். பரிசாரகர்கள் அவன் வாங்கி இருந்த ஏராளமான சாமான்களே அவனுடைய உத்தரவுப்படி வண்டியின் உள் பகுதியில் ஒழுங்காக வைத்தார்கள், அவனுடைய இருக்கை மேல் பட்டுத் தலேயணேகளேப் பரப்பிஞர்கள், சாமான் பைகளேயும் மூட்டைகளேயும் அடுக்

கிஞர்கள், உணவுப் பண்ட டப்பாக்களைக் காலருகே வைத்தார்கள், வண்டியோட்டியின் பீடத்தில் பெட்டிகளை வைத்துக் கட்டிஞர்கள். போலஸவ் தாராளமாகப் பணம் கொடுத்தான். பிறகு, பின்புறமாகத்தான் என்ருலும் உதவிக்குத் தயாராக முன்வந்த வாயில் காப்போன் மரியாதையுடன் தாங்க, முக்கி முனகியவாறு வண்டியில் ஏறிக்கொண்டான். உட்கார்ந்ததும் தன்னைச் சுற்றி இருந்தவை எல்லாவற்றையும் நன்ருக அழுத்தித் தேய்த்துச் சீர்படுத்திஞன், சுருட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான், அப்புறந்தான் விரலசைப்பால் ஸானினுக்குச் சைகை செய்தான், ''நீயும் ஏறிக் கொள்!'' என்று. ஸானின் அவன் பக்கத்தில் அமர்ந்தான். வோத்காவுக்குக் காசு வேண்டுமாஞல் வண்டியை ஒழுங்காக ஓட்டிப் போகும்படி அஞ்சல்காரனுக்கு வாயிற்காப்போன் வாயிலாக உத்தரவிட்டான் போலஸவ். படிகள் மடக்கப்பட்டன, கதவுகள் மூடப்பட்டன, வண்டி புறப்பட்டது.

## 33

பிராங்க்பர்ட்டிலிருந்து விஸ்பாதெனுக்கு இப்போது ரயிலில் ஒரு மணிக்கும் குறைவான நேரமே பயணம் செய்ய வேண்டும். அந்தக் காலத்திலோ, விரைவு அஞ்சல் வண்டி சுமார் மூன்று மணி நேரத்தில் இந்தத் தொலைவைக் கடந்தது. குதிரைகள் ஓர் ஐந்து தரம் மாற்றப்பட்டன. போலஸவ் ஒன்ரு உறங்கி வழிந்தான், இல்லாவிட்டால் சுருட்டைப் பற்களில் இடுக்கியவாறு வெறுமே அசைந்து ஆடிஞன், மிகக் கொஞ்சமே பேசிஞன். சன்னலுக்கு வெளியே ஒரு தடவை கூட அவன் பார்க்கவில்லை.

வனப்பு வாய்ந்த காட்சிகளில் அவன் அக்கறை செலுத்தவில்லை. ''இயற்கையா—அது நாசமாய்ப் போக!'' என்று கூட அறிவித்தான். ஸானினும் மௌனமாய் இருந்தான். அவனும் இயற்கைக் காட்சிகளை வியந்து நோக்கவில்லை. அவனுக்கு அதில் நாட்டம் செல்லவில்லை. ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். நிலையங்களில் போலஸவ் ஒழுங்காகக் கணக்குத் தீர்த்தான், கடிகாரத்தைப் பார்த்து நேரத்தைக் குறித்தான், அஞ்சல்காரர்களுக்கு அவர்களுடைய பணி ஆர்வத்தைப் பொறுத்து கொஞ்சமோ நிறையவோ இனும் கொடுத்தான். பாதி வழியில் உணவுச் சாமான் டப்பாவிலிருந்து இரண்டு ஆரஞ்சுப் பழங்களை எடுத்து, அவற்றில் நல்லதைத் தனக்கு வைத்துக் கொண்டு மற்றதை ஸானினுக்குக் கொடுத்தான். ஸானின் தன் வழித் துணைவனை உற்றுப் பார்த்து, பக்கென நகைத்தான்.

''எதற்காகச் சிரிக்கிருய்?'' என்று தன் வெண்மையான குட்டை நகங்களால் ஆரஞ்சுத் தோலை முயற்சியுடன் உரித்தவாறு கேட்டான் போலஸவ்.

''எதற்காகவா? நீயும் நானும் செய்யும் பயணத்திற்காகத்தான்'' என்ருன் ஸானின்.

''அதனுல் என்ன?'' என்று ஒரு ஆரஞ்சுச் சுளையை வாயில் திணித்துக் கொண்டு கேட்டான் போலஸவ்.

''இது மிகவும் விந்தையானது. நேற்று நான் உன்னைப் பற்றி நினைக்கவே இல்லை. இன்ருே, நான் உன்னோடு வண்டிப் பயணம் செய்கிறேன், என் சொத்தை எனக்கு அறவே பழக்கமற்ற உன் மனைவிக்கு விற்பதற்காக.''

''எல்லாம் நடக்கிறதுதான்'' என்ருன் போலஸவ். ''நீ இன்னும் நீண்ட காலம் வாழ்ந்திரு,

நிறையக் காண்பாய். உதாரணமாக, நான் படைத் தலைவரின் ஏவலனாகக் குதிரை ஏறிச் செல்வதாகக் கற்பனை செய்ய முடியுமா உன்னால்? ஆனால் நான் குதிரை ஏறிச் சென்றேன். பெருஞ் சிற்றரசர் மிகயீல் பாவ்லவிச் ஆணையிட்டார்: 'கெச்சை நடையில், கெச்சை நடையில் செலுத்த வேண்டும் இந்தக் கொழுத்த கார்னெட்டு!* வேகத்தை அதிகமாக்கு!' என்று.''

ஸானின் காதுக்குப் பின்னால் சொறிந்து கொண்டான்.

''தயவு செய்து ஒன்று சொல்லு, இப்பலீத் ஸீதரிச், உன் மனைவி எந்த மாதிரிப் பெண்? அவளுடைய விருப்பு வெறுப்புக்கள் என்ன? இந்த விஷயம் எனக்குத் தெரிய வேண்டும் பார்.''

''அவருக்கு என்ன, 'கெச்சை நடையில்!' என்று சுளுவாக ஆணையிட்டு விட்டார்'' என்று திடீர்க் கோபத்துடன் சொன்னான் போலஸவ். ''ஆனால் எனக்கோ... எனக்கு எப்படி இருந்தது? நான் எண்ணிப் பார்த்தேன்: உங்கள் பதவியை யும் சின்னங்களையும் நீங்களே வைத்துக் கொள் ளுங்கள்—அவை எக்கேடும் கெடட்டும்!'' என்று முடிவு செய்தேன். ஆமாம்... நீ என் மனைவியைப் பற்றிக் கேட்கிறாயா? மனைவிக்கு என்ன? மனுஷி, எல்லாரையும் போல. அவளிடம் அசாக்கிரதை யாக மட்டும் இருக்காதே. அவளுக்கு இது பிடிக் காது. முக்கியமானது என்னவென்றால் நிறையப் பேசு... சிரிக்க வைக்கும்படி. உன் காதலைப் பற்றிச் சொல்லேன்... இன்னும் வேடிக்கையாக, புரிந்ததா.''

---

* Cornette என்ற பிரெஞ்சுச் சொல். புரட்சிக்கு முந்திய காலத்தில் குதிரைப்படைச் சிற்றதி காரியைக் குறித்தது.—மொ-ர்.

''இன்னும் வேடிக்கையாகவா? அது எப்படி?''

''அட அப்படித்தான். காதல் கொண்டு விட்ட தாகவும் மணம் செய்து கொள்ளப் போவதாக வும் நீ என்னிடம் சொன்ஞய் அல்லவா? இப்போது அதையே விவரித்துச் சொல்லு.''

ஸானினுக்கு மனத்தாங்கல் ஏற்பட்டது.

''இதிலே வேடிக்கையானதை என்ன கண் டாய்?''

போலஸவ் விழிகளை மட்டும் உருட்டிஞன். ஆரஞ்சுச் சாறு அவன் மோவாயில் வழிந்தது.

''சாமான்கள் வாங்க உன்னை உன் மனைவி தான் பிராங்க்பர்ட் அனுப்பிஞளா?'' என்று சிறிது நேரத்துக்குப் பின் கேட்டான் ஸானின்.

''அவளே தான்.''

''என்ன சாமான்கள் இவை?''

''தெரிந்ததுதான்: விளையாட்டுச் சாமான் கள்.''

''விளையாட்டுச் சாமான்களா? உனக்குக் குழந் தைகள் இருக்கிருர்களா என்ன?''

போலஸவ் ஸானினிடமிருந்து அப்பால் கூட விலகிஞன்.

''அட போ அப்பா! எனக்கு எதற்காகக் குழந் தைகள் இருக்கப் போகிருர்கள்? இவை பெண் களின் சிங்காரங்கள்... அழகுச் சாதனங்கள்.''

''உனக்கு இவற்றைப் பற்றித் தெரியுமா என்ன?''

''தெரியும்.''

''மனைவியின் எந்த விவகாரத்திலும் தலையிடு வதில்லை என்று என்னிடம் எப்படிச் சொன்ஞய்?''

''மற்றவற்றில் தலையிடுவதில்லை. இது... பரவாயில்லை. சலிப்பைப் போக்கிக் கொள்வதற் காகச் செய்யலாம். தவிர, என் சுவையை மனைவி

நம்புகிறுள். நான் பேரம் பண்ணுவதிலும் சமர்த் தன் ஆயிற்றே.''

போலஸவ் தொடர்ச்சி இல்லாமல் பேசத் தொடங்கினுன். அவன் அதற்குள் களேத்துப் போய் விட்டான்.

''உன் மனேவி பெரும் பணக்காரியோ?''

''பணத்துக்கு என்னவோ குறைவில்லே. ஆனுல் பெரும்பாலும் தனக்கே.''

''ஆனுல் உனக்கும் குறை சொல்ல இடம் இல்லே போலிருக்கிறதே?''

''நான் கணவனுய் இருப்பது அதற்காகத் தானே. பணத்தைப் பயன்படுத்தாமல் வேறு இருக்க வேண்டுமா நான்? தவிர நான் அவளுக்கு உபயோகமான ஆள் ஆயிற்றே! என்னேடு இருப் பது அவளுக்கு அதிருஷ்டம்! நான் சௌகரிய மான ஆள்!''

போலஸவ் பட்டுக் கைக்குட்டையால் முகத் தைத் துடைத்துக் கொண்டு உஸ்ஸென்று மூச்சு விட்டான். ''இரக்கம் காட்டு. இன்னும் சொற் களே உச்சரிக்கும்படி கட்டாயப் படுத்தாதே. எனக்கு இந்த வேலே எவ்வளவு கடினம், பார்'' என்று அவன் சொல்லுவது போல் இருந்தது.

ஸானின் அவனே நிம்மதியாக இருக்க விட்டு விட்டு மீண்டும் எண்ணங்களில் ஆழ்ந்தான்.

---

விஸ்பாதெனில் அவர்களுடைய வண்டி போய் நின்ற விடுதி அரண்மனே போலவே இருந்தது. அதன் உட்புறம் மணிகள் கிணுகிணுத்தன, பரபரப்பும் ஓட்ட சாட்டமும் தொடங்கின, கறுப்பு பிராக் கோட்டுகள் அணிந்து எடுப்பாகத் தோற் றம் அளித்த ஆட்கள் தலேவாயில் அருகே குதிக்க

லாயினர். தங்க மயமாகச் சொலித்த வாயில் காப்போன் வண்டிக் கதவுகளை ஒரே வீச்சில் திறந்தான்.

போலஸவ் வெற்றி வீரன் போல இறங்கி, கம்பளம் விரித்து நறு மணம் கமழ்ந்த படிகளில் ஏறத் தொடங்கினான். சிறப்பாக உடை அணிந்திருந்த ஒருவன் அவனருகே பாய்ந்து வந்தான். ருஷ்ய முக அமைப்பு கொண்ட அவன் போலஸவின் சொந்தப் பணியாள். இனிமேல் எங்கும் அவனை உடன் அழைத்துச் செல்லப் போவதாகவும் ஏனென்றால் தலைக்குநாள் பிராங்க்பர்ட்டில் தன்னை இரவில் வென்னீர் இல்லாமல் வைத்து விட்டார்கள் என்றும் போலஸவ் அவனிடம் சொன்னான். பணியாள் பயங்கரத் தோற்றத்தை முகத்தில் வருவித்துக் கொண்டான். பின்பு சட்டெனக் குனிந்து ரப்பர் மேல் சோடுகளை எஜமானனின் கால்களிலிருந்து கழற்றினான்.

''மாரியா நிக்கலாயெவ்னு அறையில் இருக்கிறார்களா?'' என்று கேட்டான் போலஸவ்.

''ஆமாம்—ங்க, உடை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். லஸான்ஸ்கயா சீமாட்டியின் வீட்டில் உணவு கொள்ள இசைந்திருக்கிறார்கள்.''

''ஆ! இந்த இவள் வீட்டிலா?.. இரு! அங்கே வண்டியில் சாமான்கள் இருக்கின்றன, நீயே எல்லாவற்றையும் எடுத்து அறைக்குக் கொண்டு போ. திமீத்ரி பாவ்லவிச், நீ தனி அறை அமர்த்திக் கொள். ஒரு முக்கால் மணி நேரத்தில் என் அறைக்கு வா. சேர்ந்து சாப்பிடுவோம்'' என்றான் போலஸவ்.

போலஸவ் நீந்துபவன் போல மிதந்து போய் விட்டான். ஸானின் ஒரு சாதாரண அறையை அமர்த்திக் கொண்டு உடல் கழுவி உடை மாற்றிச்

சிறிது ஓய்வு கொண்ட பிறகு, ''மேதகு (Durch-laucht) சிற்றரசர் வான் பேலஸோஃப்'' இருந்த பிரமாண்டமான பகுதிக்குச் சென்றான்.

மிக நேர்த்தியான விருந்தறையின், நடுவில் மிக ஆடம்பரமான வெல்வெட் சாய்வு நாற்காலியில் வீற்றிருந்த இந்தச் ''சிற்றரசனைக்'' கண்டான். ஸானினுடைய அசட்டைப் போக்குள்ள நண்பன் அதற்குள் வெந்நீரில் குளித்து விலை மிக்க வெண்பட்டு அங்கி அணிந்து இலகினான். தலையில் கருஞ் சிவப்புக் குல்லாய் மாட்டி இருந்தான். ஸானின் அவனை நெருங்கி, சிறிது நேரம் அவனைப் பார்வை இட்டுக் கொண்டிருந்தான். போலஸவ் சிலை போல அசையாமல் உட்கார்ந்திருந்தான். முகத்தைக் கூட ஸானின் பக்கம் திருப்பவில்லை, புருவங்களைக் கூட அசைக்கவில்லை, ஒலியே செய்யவில்லை. உண்மையிலேயே மாட்சி மிக்க காட்சி! ஒரு இரண்டு நிமிடங்கள் அவனை வியந்து நோக்கிக் கொண்டிருந்த பின், பேச்சு தொடங்கவும் இந்தப் புனித நிசப்தத்தைக் குலைக்கவும் ஸானின் வாய் எடுப்பதற்குள் பக்கத்து அறைக் கதவு திடீரெனத் திறந்தது, அதன் நிலையில் தோன்றினாள் அழகிய இள நங்கை ஒருத்தி. கறுப்பு லேஸ் தைத்த வெண் பட்டு உடையும் கைகளிலும் கழுத்திலும் வைரங்களுமாக இலங்கிய அவள்தான் மாரியா நிக்கலாயெவ்னா போலஸவா. அவளுடைய அடர்ந்த சணல் நிறக் கூந்தல் எடுத்துக் கட்டப்படாமல் தலையின் இரு மருங்குகளிலும் பின்னல்களாகத் தொங்கியது.

## 34

''ஆ, மன்னித்துக் கொள்ளுங்கள்!'' என்று பாதி கூச்சத்துடனும் பாதி கேலியாகவும் புன்

னகை செய்தவாறு கூறி, ஒரு பின்னல் நுனியைச் சட்டென்று பிடித்துக் கொண்டு தன் ஒளி வீசிய பெரிய சாம்பல் நிற விழிகளை ஸானின் மேல் நாட்டினாள் அவள். ''நீங்கள் வந்து விட்டீர்கள் என்று நான் நினைக்கவில்லை.''

''இவர்தாம் ஸானின், திமீத்ரி பாவ்லவிச், பிள்ளைப் பருவம் முதல் என் நண்பர்'' என்று முன் போலவே ஸானின் பக்கம் திரும்பாமலும் எழுந்திருக்காமலும் விரலால் அவனைக் காட்டிக் கூறினான் போலஸவ்.

''ஆமாம்... அறிவேன்... நீ ஏற்கெனவே என்னிடம் சொல்லி விட்டாய். அறிமுகம் செய்து கொண்டதில் மிகவும் மகிழ்கிறேன். ஆனால், இப்பலீத் ஸீதரிச், உன்னிடம் ஒரு உதவி கேட்க விரும்பினேன்... என் பணிப் பெண் இன்றைக்கு ஏதோ சரியாய் இல்லை...''

''உன் கூந்தலைச் சீர்படுத்த வேண்டுமா?''

''ஆம், ஆம், தயை செய்து. மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்று முந்திய புன்னகையுடன் திருப்பிச் சொல்லி, ஸானினைப் பார்த்துத் தலையசைத்து வணக்கம் தெரிவித்து விட்டு, சட்டெனத் திரும்பிக் கதவின் மறுபுறம் மறைந்து விட்டாள் மாரியா நிக்கலாயெவ்னா. சிறிது நேரமே தோன்றிய போதிலும், கவர்ச்சி மிக்க கழுத்து, வியப்பூட்டும் தோள்கள், வியப்பூட்டும் இடை ஆகியவற்றின் வடிவமைந்த உளப்பதிவை விட்டுச் சென்றாள்.

போலஸவ் எழுந்து சிரமத்துடன் தள்ளாடியவாறு அதே கதவுக்குப் பின் சென்றான்.

''சிற்றரசர் போலஸவின்'' விருந்தறையில் தான் இருந்தது எஜமானி அம்மாளுக்கு மிக நன்றாகத் தெரிந்திருந்தது என்பதில் ஸானினுக்கு

நொடிப் போதும் சந்தேகம் உண்டாகவில்லை. நடிக்கப் பெற்ற நாடகத்தின் நோக்கம் எல்லாம் தன் கூந்தலைக் காட்டுவதுதான். கூந்தல் மெய்யாகவே நன்ருய் இருந்தது. திருமதி போலஸவாவின் இந்தக் குறும்பினுல் ஸானின் உள்ளுக்குள் மகிழ்ச்சி கூட அடைந்தான். ''என்னை வியப்பில் ஆழ்த்தவும் என் முன் பகட்டவும் அவள் விரும்பினுள் என்ருல், ஒருவேளை, எப்படிச் சொல்ல முடியும்? சொத்தின் விலை விஷயத்தில் சுளுவாக இணங்கி வரக் கூடும்'' என்று நினைத்தான். அவனுடைய உள்ளம் ஜெம்மாவால் முழுதும் நிறைந்திருந்தபடியால் மற்ற மாதர்கள் அவனுக்கு ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. அவர்களை அவன் அரை குறையாகவே கவனித்தான். ''ஆமாம், மற்றவர்கள் என்னிடம் சொன்னது உண்மைதான்: இந்தச் சீமாட்டி பிரமாதமானவள்!'' என்று மட்டும் எண்ணியதுடன் இந்தத் தடவையும் நிறுத்திக் கொண்டான்.

அவன் மட்டும் இத்தகைய அசாதாரணமான உளநிலையில் இருக்காவிட்டால் வேறு விதமாகக் கருத்து வெளியிட்டிருப்பான்: கலீஷ்கின் குடும்பத்தில் பிறந்த மாரியா நிக்கலாயெவ்ஞ, மிகவும் குறிப்பிடத்தக்க பேர்வழி. அவளைப் பேரழகி என்று சொல்ல முடியாது. கீழ்க் குடியில் பிறந்ததற்கான தடங்கள் அவளிடம் போதிய அளவு துலக்கமாகத் தென்பட்டன. அவளுடைய நெற்றி தாழ்ந்திருந்தது, மூக்கு கொஞ்சம் சதைப்பற்று உள்ளதாகவும் மேல் தூக்கியும் இருந்தது. தோலின் மென்மையையும் கைகள், கால்களின் ஒயிலையும் குறித்துப் பெருமை அடித்துக் கொள்ள அவளால் முடிந்திராது. ஆனல் இவை எல்லாம் எம்மாத்திரம்? அவளைச் சந்தித்தவன் எவனும்,

பூஷ்கினின் சொற்களில் கூறுவதானுல், ''அழகுத் தெய்வத்தின்'' சன்னிதியில்* நின்றிருக்க மாட்டான், ஆனுல் ஓரளவு ருஷ்யத் தன்மையும் ஓரளவு ஜிப்சித் தன்மையும் கொண்டதும் மலர்ச்சி பெற்றதும் சக்தி உள்ளதுமான பெண் மேனியின் கவர்ச்சிக்கு முன் நின்றிருப்பான்... அவ்வாறு நிற்பதை விரும்பாமலும் இருந்திருக்க மாட்டான்!

ஆனுல் ஜெம்மாவின் உருவம் கவிகள் பாடும் மூன்றடுக்குக் கவசம் போல ஸானினைப் பாதுகாத்தது.

ஒரு பத்து நிமிடங்கள் கழிந்ததும் மாரியா நிக்கலாயெவ்ஞ தன் கணவன் உடன் வர மீண்டும் காட்சி அளித்தாள். அவள் ஸானினை நெருங்கிஞள்... அவளுடைய நடை எப்படி இருந்தது என்ருல், அந்த—ஐயோ! இப்போது தொலைவில் சென்றுவிட்ட — காலத்திலே, சில விசித்திரப் பேர்வழிகள் இந்த நடை ஒன்றைக் கண்டே மூளையைப் பறிகொடுத்தார்கள். ''இந்த மாது நம் பக்கம் வரும்போது நம் வாழ்க்கையின் இன்பத்தை எல்லாம் நம்மிடம் கொண்டு வருபவள் போல் தோன்றுகிருள்'' என்று அவர்களில் ஒருவன் சொன்ஞன். அவள் ஸானினை நெருங்கி, அவன் புறம் கையை நீட்டி, ''நீங்கள் எனக்காகக் காத்திருப்பீர்கள், அல்லவா? நான் விரைவில் வந்து விடுவேன்'' என்று தனது கொஞ்சலான, அடங்கியது போன்ற குரலில் சொன்ஞள்.

ஸானின் மரியாதையாகத் தலை வணங்கிஞன், அதற்குள் மாரியா நிக்கலாயெவ்ஞ வெளி வாயில் திரைக்கு அப்பால் போய் விட்டாள். போகும்

---

* ருஷ்ய மகாகவி அலெக்சாந்தர் பூஷ்கினின் ''அழகி'' (1832) என்ற கவிதையிலிருந்து.

போதே மறுபடி தலையைத் திருப்பி, மீண்டும் புன்னகை செய்தாள், மீண்டும் முன் போலவே வடிவமைந்த உளப்பதிவை விட்டுச் சென்றாள்.

அவள் புன்னகை செய்த போது ஒன்றல்ல, இரண்டல்ல, மூன்று குழிகள் ஒவ்வொரு கன்னத்திலும் ஏற்பட்டன. உதடுகளைக் காட்டிலும்— சிவந்து நீண்டு சுவை ஊறித் ததும்பிய உதடுகளைக் காட்டிலும் — அதிகமாக முறுவலித்தன அவளுடைய விழிகள். உதடுகளின் இடப் புறத்தில் இரண்டு சின்னஞ்சிறு மச்சங்கள் காணப்பட்டன.

போலஸவ் தள்ளாடி நடந்து அறைக்குள் வந்து மீண்டும் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டான். அவன் முன்போலவே பேசாதிருந்தான், ஆனால் வெளிறிச் சுருக்கங்கள் விழுந்த அவனுடைய கன்னங்கள் விந்தையான சிரிப்பால் அவ்வப்போது உப்பின.

ஸானினுக்கு மூன்றே வயதுதான் மூத்தவன் என்றாலும் அவன் கிழவன் போல் காணப்பட்டான்.

விருந்தாளிக்காக அவன் ஏற்பாடு செய்திருந்த மதியச் சாப்பாடு எளிதில் திருப்திப்படுத்த முடியாத சுவையூண் விரும்பியைக் கூட மகிழ்வித்திருக்கும். ஆனால் ஸானினுக்கோ, அது முடிவற்றதாகவும் தாங்க முடியாததாகவும் தோன்றியது! போலஸவ் மெதுவாக, ''உணர்ச்சியுடனும் புரிவுடனும் இடை நிறுத்தத்துடனும்''* சாப்பிட்டான்.

---

* ருஷ்ய எழுத்தாளர் அலெக்சாந்தர் கிரிபயேதவ் (1795—1829) இயற்றிய ''அறிவால் விளைந்த அல்லல்'' என்னும் நகைச்சுவை நாடகத்தில் வரும் சொற்கள்.

தட்டின் மேல் கவனமாகக் குனிந்து, அனேகமாக ஒவ்வொரு துண்டையும் முகர்ந்து பார்த்தான். முதலில் மதுவைக் கொப்பளித்து, பிறகே விழுங்கினுன், உதடுகளால் சப்புக் கொட்டினுன்... சூடான பண்டங்கள் பரிமாறப்பட்டதும் அவன் திடீரென்று பேசத் தொடங்கினுன். ஆனுல் எதைப் பற்றி? மெரினே ஆடுகளைப் பற்றி. ஒரு முழு மந்தை மெரினே ஆடுகளைத் தருவிக்க எண்ணி இருந்தானும். அவற்றைப் பற்றி மிக மிக விவரமாக, மிக மிகக் கனிவுடன், செல்லப் பெயர்களால் அவற்றைக் குறிப்பிட்டவாறு பேசிக் கொண்டு போனுன். கொதிநீர் போன்று சூடான காப்பியை (தலைக்கு நாள் தனக்குக் கொடுக்கப்பட்ட காப்பி பனிக் கட்டிபோலக் குளிர்ந்து சில்லிட்டு இருந்தது என்று கண்ணீர் மல்கி நடுங்கிய குரலில் பரிசாரகனுக்குப் பல முறை நினைவு படுத்தினுன்!) ஒரு கோப்பை பருகி ஹரானு சுருட்டைக் கோணிய மஞ்சள் பற்களால் கடித்துக் கொண்டு தன் வழக்கம் போல உறங்கி வழியலானுன். ஸானின் இதனுல் பெரு மகிழ்ச்சி அடைந்தான். மெத்தென்ற விரிப்பில் ஓசையின்றி முன்னும் பின்னும் நடந்தவாறு ஜெம்மாவோடு தான் நடத்தப் போகிற வாழ்க்கையைப் பற்றியும் என்ன செய்தியுடன் அவளிடம் திரும்புவான் என்பது பற்றியும் எண்ணமிட்டான். ஆனுல் போலஸவ் அவனே குறிப்பிட்டது போல வழக்கத்துக்கு முந்தி விழித்துக் கொண்டான். ஒன்றரை மணி நேரந்தான் தூங்கினுன். கனிய ஊற்று நீரைப் பனிக் கட்டி போட்டுப் பருகிய பின் சொந்தப் பணியாள் அசலான ''கீவ் நகரக்'' கரும் பச்சைச் சாடியில் அவனுக்காகக் கொண்டு வந்த ருஷ்யப் பழக்கூழை (அது இல்லாமல் தன்னுல் வாழ முடியாது என்று

சொல்லிக் கொண்டு) ஓர் எட்டு கரண்டி எடுத்து விழுங்கி விட்டு, வீங்கிய கண்களால் ஸானினே உற்று நோக்கி, தன்னேடு சீட்டாட விருப்பமா என்று கேட்டான். ஸானின் சந்தோஷமாக இசைந் தான். போலஸவ் ஆட்டுக் குட்டிகளேயும் ஈனுத இள மறிகளேயும் கொழுப்புள்ள வாற்சதை ஆடு களேயும் பற்றி எங்கேனும் மறுபடி பேசத் தொடங்கி விடுவானே என்று அவன் பயந்து கொண்டிருந்தான். வீட்டுக்காரனும் விருந்தாளி யும் விருந்தறைக்குப் போனர்கள், பரிசாரகன் சீட்டுக்கட்டை எடுத்து வந்தான், ஆட்டம் தொடங்கியது. அவர்கள் காசு வைத்து ஆட வில்லே என்பது கூறுமலே விளங்கும்.

லைஸ்கயா சீமாட்டியிடமிருந்து திரும்பி வந்த மாரியா நிக்கலாயெவ்ன அவர்கள் இந்தக் குற்றமற்ற பொழுது போக்கில் ஈடுபட்டிருக்கக் கண்டாள். அறைக்குள் வந்து சீட்டுக்களேயும் விரித்த சீட்டாட்ட மடக்கு மேசையையும் பார்த் ததும் அவள் உரக்க நகைத்தாள். ஸானின் இடத் திலிருந்து துள்ளி எழுந்தான், ஆனல் அவள் அவனேத் தடுத்து, ''உட்கார்ந்து விளேயாடுங்கள். நான் இதோ உடை மாற்றிக் கொண்டு உங்களிடம் வருகிறேன்'' என்று கூறி விட்டு, உடை சரசரக்க, கையுறைகளே நடந்தவாறு கழற்றியபடி மீண் டும் மறைந்து விட்டாள்.

மெய்யாகவே மிக விரைவில் அவள் திரும்பி வந்தாள். தனது பகட்டான உடைக்குப் பதில் திறந்து தொங்கிய கைகள் வைத்த அகலமான இள ஊதாப் பட்டு பிளவுஸ் அணிந்திருந்தாள். முறுக்கிய பருத்த கயிறு அவளது இடையை இறுக்கி இருந்தது. அவள் கணவன் அருகே உட்கார்ந்து ஆட்டத்தில் அவன் தோற்கும் வரை காத்திருந்த

பின், ''நல்லது பீஷ்கா*, போதும்!'' என்முள். (''பீஷ்கா'' என்ற சொல்லேக் கேட்டதும் ஸானின் வியப்புடன் அவளேப் பார்த்தான். அவனுடையபார் வைக்கு எதிர்ப் பார்வையால் விடை அளித்துக் கன்னங்களில் ஏற்பட்ட எல்லாக் குழிகளேயும் காட்டியவாறு குதூகலமாகப் புன்னகை செய்தாள் அவள்.) ''போதும். உனக்குத் தூக்கம் வருகிறது என்பது தெரிகிறது எனக்கு. என் கையை முத்தம் இட்டு விட்டுப் போ. திருவாளர் ஸானினும் நானும் இருவராக உரையாடுகிறேம்.''

''எனக்குத் தூக்கம் வரவில்லே'' என்று சிரமத் துடன் நாற்காலியிலிருந்து எழுந்தவாறு சொன் ஞன் போலஸவ். ''ஆனல் போக வேண்டும் என்றல் போகிறேன், கையையும் முத்தம் இடுகிறேன்'' அவள் இடைவிடாத புன்னகையுடன் ஸானினேப் பார்த்தவாறு கணவன் முத்தமிடுவதற்காகக் கையை நீட்டினுள்.

போலஸவும் ஸானினேப் பார்த்து விட்டு விடை பெருமல் அப்பால் சென்முன்.

திறந்த இரு முழங்கைகளேயும் மேசை மேல் ஒரே நேரத்தில் வைத்து ஒரு கை நகங்களால் மறுகை நகங்களேப் பொறுமை இன்றித் தட்டிய வாறு, ''நல்லது சொல்லுங்கள், விவரமாகச் சொல்லுங்கள். நீங்கள் மணம் செய்து கொள்ளப் போகிறீர்களாமே, உண்மைதானு?'' என்று கேட் டாள் மாரியா நிக்கலாயெவ்ஞ.

இந்தச் சொற்களேக் கூறி விட்டு, தலேயை ஒரு புறம் சிறிது சாய்த்து, ஸானினுடைய விழிகளே முன்னிலும் கூர்ந்து ஊடுருவ நோக்கினுள்.

* பன் போன்ற உருண்டை ரொட்டி. கழுக்கு மொழுக்கு என்றிருக்கும் குழந்தைகளேச் செல்ல மாக அழைப்பதற்கான சொல்.—மொ-ர்.

## 35

ஸானின் கற்றுக்குட்டி அல்ல, மக்களிடையே பழகிப் பட்டுத் தேறியவன் என்ருலும், திருமதி போலஸவாவின் கட்டின்மையிலும் மட்டுமீறிச் சொந்தம் பாராட்டும் போக்கிலும் தனது காரியம் பலிப்பதற்கான முன் அறிகுறியை அவன் மீண்டும் கண்டிராவிட்டால் அவளது இந்தக் கட்டற்ற பழகுமுறை தொடக்கத்தில் அவனைக் கூச்சத்துக்கு உள்ளாக்கி இருக்கும். நோக்கம் நிறைவேறுவதற்காக ''இந்தப் பணக்காரச் சீமாட்டியின் சபலங்களுக்கு இணங்கிப் போவோம்'' என்று மனதுக்குள் முடிவு செய்து, அவள் கேட்ட தோரணையிலேயே இயல்பாகப் பதில் அளித்தான்.

''ஆமாம், மணம் செய்து கொள்ளப் போகிறேன்.''

''யாரை? வெளிநாட்டாளையா?''

''ஆமாம்.''

''நீங்கள் அண்மையில்தான் அவளை அறிமுகம் செய்து கொண்டீர்களா? பிராங்க்பர்ட்டிலா?''

''ஆமாம்.''

''அப்படி யார் அவள்? தெரிந்து கொள்ளலாமா?''

''தாராளமாக. அவள் மிட்டாய்க் கடைக்காரனின் மகள்.''

மாரியா நிக்கலாயெவ்ஞ கண்களை விரியத் திறந்து புருவங்களை உயர்த்தினுள்.

''அடே, இது அருமை'' என்று நிதானக் குரலில் சொன்ஞள். ''இது அற்புதம்! உங்களைப் போன்ற இளைஞர்களை உலகில் இனிக் காணக் கிடைக்காது என்று எண்ணி இருந்தேன். மிட்டாய்க் கடைக்காரனின் மகளா!''

''இது உங்களுக்கு வியப்பு அளிப்பதைக் காண்கிறேன்'' என்று தன்மதிப்பை விட்டுக் கொடுக்காமல் கூறினான் ஸானின். ''ஆனால் முதலாவதாக, என்னிடம் அந்தக் காழ்ப்புக்கள் அறவே கிடையாது...''

''முதலாவதாக, இது எனக்குக் கொஞ்சங்கூட வியப்பு அளிக்கவில்லை'' என்று அவன் பேச்சில் குறுக்கிட்டாள் மாரியா நிக்கலாயெவ்னா. ''என்னிடமும் காழ்ப்புக்கள் கிடையா. நானே குடியானவரின் மகள். ஆ? என்ன, வாங்கிக் கட்டிக் கொண்டீர்களா? காதலிக்க அஞ்சாத மனிதர் இருக்கிறார் என்பது எனக்கு வியப்பும் மகிழ்ச்சியும் அளிக்கிறது. நீங்கள் அவளைக் காதலிக்கிறீர்கள் அல்லவா?''

''ஆமாம்.''

''அவள் நிரம்ப நன்றாய் இருப்பாளோ?''

இந்தக் கடைசிக் கேள்வி ஸானினை லேசாக உறுத்தியது... ஆனால் பின்வாங்குவது இப்போது தேவைப்படவில்லை.

''உங்களுக்குத் தெரியும் மாரியா நிக்கலாயெவ்னா'' என்று தொடங்கினான். ''ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய காதலியின் முகம் மற்ற எல்லாருடையவற்றையும் விட மேலானதாகத் தோன்றும். ஆனால் என் மணப்பெண் உண்மையாகவே அழகி.''

''மெய்யாகவா? எந்த வகையில்? இத்தாலிய வகையிலா? தொன்மை ரோமானிய வகையிலா?''

''ஆமாம். அவளுடைய முக அமைப்புக் கூறுகள் மிகவும் திருத்தமானவை.''

''அவளுடைய உருவப் படம் உங்களிடம் இல்லையா?''

''இல்லை.'' (அந்தக் காலத்தில் புகைப்படங்

கள் என்ற பேச்சை இருக்கவில்லை. டாகெரோடைப்புக்கள்* அப்போதுதான் பரவத்தொடங்கி இருந்தன.)

''அவள் பெயர் என்ன?''

''ஜெம்மா.''

''உங்கள் பெயரோ?''

''திமீத்ரி.''

''தகப்பனுர் பெயருக்கு இணங்க?''

''பாவ்லவிச்.''

''ஒன்று சொல்லட்டுமா'' என்று அதே நிதானக் குரலில் தொடர்ந்தாள் மாரியா நிக்கலாயெவ்ஞு. ''உங்களை எனக்கு நிரம்பப் பிடித்திருக்கிறது, திமீத்ரி பாவ்லவிச். நீங்கள் நல்ல மனிதராய் இருக்க வேண்டும். எனக்கு உங்கள் கையைக் கொடுங்கள் சற்றே. நாம் நண்பர்களாய் இருப்போம்.''

தன் அழகிய, வெண்மையான வலிய விரல்களால் ஸானினுடைய கையை இறுகப் பற்றினுள். அவளுடைய கை ஸானினுடையதைக் காட்டிலும் சற்று சின்னதாக இருந்தாலும் எவ்வளவோ அதிக வெப்பமும் மழமழப்பும் மென்மையும் உயிர்த் துடிப்பும் கொண்டிருந்தது.

''ஆனுல் ஒன்று. எனக்கு என்ன எண்ணம் தோன்றுகிறது தெரியுமா?''

''என்ன?''

---

* டாகெரோடைப்பு (படம் பிடிப்பதற்கான தொடக்கக் கால முறை. இதன்படி எடுத்த படத்திலிருந்து வேறு பிரதிகள் எடுக்க முடியவில்லை) என்பது 1839ம் ஆண்டில் டாகெர் லுயீ ழாக் மாந்தே (1787-1851) என்ற பிரெஞ்சுக்காரர் செய்த கண்டுபிடிப்பு.

''நீங்கள் கோபிக்க மாட்டீர்களே? மாட்டீர் கள் அல்லவா? அவள் உங்களுடைய மணப்பெண் என்கிறீர்களே. இது... இது கட்டாயம் தேவை யாய் இருந்ததா என்ன?''

ஸானின் முகம் சுளித்தான்.

''நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை, மாரியா நிக்கலாயெவ்ன.''

மாரியா நிக்கலாயெவ்ன மெல்லெனச் சிரித்து, தலையை வெட்டி அசைத்துக் கன்னத்தில் விழுந்த கூந்தலைப் பின்னே தள்ளினுள்.

''நிச்சயமாக இவர் அருமையானவர்'' என்று சிந்தனையில் ஆழ்ந்தவளாகவும் இன்றி, மறதிக்கு உள்ளானவளாகவும் இன்றி மொழிந்தாள். ''பிரபுவம்ச வீரர்! ஆதர்சவாதிகள் எல்லோரும் மறைந்து விட்டார்கள் என்று சொல்லுகிறார்களே, அவர்களை இதற்கு அப்புறம் நம்பலாமா எங்கே னும்?''

மாரியா நிக்கலாயெவ்ன எப்போதும் ருஷ்ய மொழியில் பேசினுள். அவள் பேசியது வியப்பூட் டும் அளவுக்குத் தூய்மையான, மாஸ்கோ மொழி —பிரபு வம்ச தோரணையில் அல்ல, பொது மக் களின் வழக்கில் உள்ள மொழி.

''பழமைப் பிடிப்பு உள்ள, தெய்வ நம்பிக்கை கொண்ட குடும்பத்தில்,வீட்டில் பயிற்றி வளர்க்கப் பட்டீர்களோ நீங்கள்! எந்த குபேர்னியா உங்க ளுக்கு?'' என்று கேட்டாள் அவள்.

''துலா.''

''அடே, அப்படியானுல் நாம் ஒரே வட்டாரத் துக்காரர்கள். என் தகப்பனுர்... உங்களுக்கு தெரிந்திருக்குமே, என் தகப்பனுர் யார் என்று?''

''ஆமாம், தெரியும்.''

''அவர், துலாவில் பிறந்தார்... துலாக்கார

ராக இருந்தார். சரி, அது கிடக்கிறது... வாருங் கள் காரியத்தைப் பார்ப்போம்.''

''அதாவது... காரியத்தைப் பார்ப்போம் என்ருல் எப்படி? இதனுல் நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''

மாரியா நிக்கலாயெவ்ஞு கண்களைச் சுருக்கிக் கொண்டாள்.

''அட நீங்கள் எந்த நோக்கத்துடன் இங்கே வந்திருக்கிறீர்கள்?'' (அவள் கண்களைச் சுருக்கிக் கொண்ட போது அவை மிகுந்த அன்பையும் ஓர ளவு கேலியையும் வெளியிட்டன. அவற்றை அவள் முழு அளவுக்குத் திறந்த போதோ, அவற்றின் வெளிறிய, அனேகமாக உணர்ச்சி அற்ற பளபளப் பில் பரிவற்ற ஒன்று... அச்சுறுத்தும் ஒன்று தென் பட்டது. அவளது கண்களுக்குத் தனிப்பட்ட அழகைத் தந்தவை அவளுடைய புருவங்கள்— அடர்த்தியானவை, சற்றுக் கவிந்தவை, பட்டு மயிர்ப் புருவங்கள்.) ''உங்கள் சொத்தை நான் விலைக்கு வாங்க வேண்டும் என்று நீங்கள் விரும்பு கிறீர்கள் அல்லவா? உங்கள் மண விழாவுக்காக உங்களுக்குப் பணம் வேண்டும் அல்லவா?''

''ஆம், வேண்டும்.''

''நிறையத் தேவைப்படுகிறதோ?''

''முதல் தரம் சில ஆயிரம் பிராங்குகளுடன் நான் திருப்தி அடைவேன். உங்கள் கணவருக்கு என் சொத்து நிலவரம் தெரியும். நீங்கள் அவ ரைக் கலந்து ஆலோசிக்கலாம். நான் சரசமான விலைக்குக் கொடுப்பேன்.''

மாரியா நிக்கலாயெவ்ஞு தலையை வலமும் இடமுமாக ஆட்டிஞள்.

''முதலாவதாக'' என்று இடை நிறுத்தத்துடன், விரல் நுனிகளால் ஸானினுடைய கோட்டுக்

கை விளிம்பில் அடித்தவாறு தொடங்கினுள். ''கணவரோடு கலந்து ஆலோசிக்கும் வழக்கம் எனக்குக் கிடையாது. அழகுச் சாதனங்கள் விஷயம் ஒன்றில்தான் அவரைக் கலந்து கொள்வேன். இதில் அவர் நிபுணர். இரண்டாவதாக, சரசமான விலைக்குக் கொடுப்பதாக ஏன் சொல்லுகிறீர்கள்? நீங்கள் இப்போது ஆழ்ந்த காதல் கொண்டிருக்கிறீர்கள், எந்த வகையான தியாகத்துக்கும் தயாராய் இருக்கிறீர்கள் என்பதைப் பயன்படுத்திக் கொள்ள நான் விரும்பவில்லை... உங்களிடமிருந்து எந்தத் தியாகத்தையும் நான் ஏற்க மாட்டேன். எப்படி இருக்கிறது? உங்களிடம் உள்ள... இதை எப்படி நன்ருகச் சொல்லுவது?..உயர்குடி உணர்வுகள் என்பதா? இந்த நல்ல பண்புகளைத் தூண்டி ஊக்குவதற்குப் பதிலாக, உங்களிடம் உள்ளதை எல்லாம் பறித்துக் கொள்வேனு? இது என் வழக்கம் அல்ல. தருணம் வாய்க்கும் போது நான் மனிதர்களுக்கு இரக்கம் காட்ட மாட்டேன், ஆனுல் இந்த வகையில் அல்ல.''

அவள் தன்னைக் கேலி செய்கிருளா அல்லது உண்மை சொல்லுகிருளா என்று ஸானினுல் புரிந்து கொள்ளவே முடியவில்லை. ''ஓ, உன்னிடம் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்!'' என்று மட்டும் எண்ணிக் கொண்டான்.

ருஷ்ய சமோவார் என்னும் தேநீர்க் கொதிகலம், தேநீர்ப் பாத்திரங்கள், பாலாடை, ரஸ்குகள் முதலியவற்றை மிகப் பெரிய டிரேயில் வைத்து எடுத்து வந்த பணியாள் ஸானினுக்கும் திருமதி போலஸவாவுக்கும் நடுவில் இவற்றை வைத்து விட்டு அகன்ருன்.

அவள் ஸானினுக்கு ஒரு கோப்பையில் தேநீர் ஊற்றினுள்.

சர்க்கரைக் கட்டிகளை எடுப்பதற்கான சிறு குறடு அங்கேயே இருந்த போதிலும் அவற்றை விரல்களால் எடுத்து அவனுடைய கோப்பையில் போட்டு, ''உங்களுக்குத் தடை இல்லையே?'' என்று கேட்டாள்.

''நன்றாய்ச் சொன்னீர்களே!.. இத்தகைய அழகான கையால்...''

அவன் வாக்கியத்தை முடிக்காமல் கொதிக்கும் தேநீரை ஒரு மடக்கு பருகித் தொண்டையை அனேகமாக வழற்றிக் கொண்டான். அவளோ, கவனமாகவும் தெளிவாகவும் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என் சொத்தின் சரசமான விலையைப் பற்றி நான் ஏன் குறிப்பிட்டேன் என்றால்'' என்று பேச்சைத் தொடர்ந்த ஸானின், ''இப்போது நீங்கள் வெளி நாட்டில் இருப்பதால் உங்களிடம் அதிகப்படியான ரொக்கப் பணம் நிறைய இருக்கும் என்று என்னால் எண்ண முடியவில்லை. தவிர, இந்த மாதிரி நிலைமைகளில் சொத்தை விற்பது... அல்லது வாங்குவது வழக்கத்துக்கு மாறானது. இந்த விஷயத்தை நான் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நானே உணர்ந்தேன்'' என்றான்.

ஸானின் குழம்பினான், தடுமாறினான். மாரியா நிக்கலாயெவ்னா நாற்காலி முதுகில் மெதுவாகச் சாய்ந்து, கைகளைக் கட்டிக் கொண்டு முன் போன்றே கவனமும் தெளிவும் உள்ள பார்வையால் அவனை நோட்டமிட்டுக் கொண்டிருந்தாள். கடைசியில் அவன் பேச்சை நிறுத்தினான்.

''பரவாயில்லை, பேசுங்கள், பேசுங்கள்'' என்று அவனுக்கு உதவும் பாங்கில் கூறினாள் அவள். ''நீங்கள் சொல்லுவதைக் கேட்டுக் கொண்டிருக்

கிறேன். உங்கள் பேச்சைக் கேட்க எனக்குப் பிடிக்கிறது, பேசுங்கள்.''

ஸானின் தன்னுடைய சொத்தை வருணிக்க முற்பட்டான். நிலத்தின் பரப்பளவு என்ன, அது எங்கே இருக்கிறது, அதில் வயல் பகுதி எவ்வளவு, அதிலிருந்து கிடைக்கக் கூடிய ஆதாயம் எவ்வளவு என்பதை எல்லாம் விவரித்தான்... பண்ணை அமைந்திருந்த இயற்கை எழில் மிகுந்த சூழலையும் குறிப்பிட்டான். மாரியா நிக்கலாயெவ்னு மேலும் மேலும் தெளிவாகவும் நிலையாகவும் அவனைப் பார்த்த வண்ணமாக இருந்தாள். அவளுடைய உதடுகள் புன்னகை இன்றிச் சற்று அசைந்து கொண்டிருந்தன. அவள் அவற்றைக் கடித்துக் கொண்டாள். முடிவில் அவனுக்குக் கூச்சம் உண்டாயிற்று. அவன் மீண்டும் பேச்சை நிறுத்தினான்.

''திமீத்ரி பாவ்லவிச்'' என்று தொடங்கிய மாரியா நிக்கலாயெவ்னு சிந்தனையில் ஆழ்ந்தாள்... ''திமீத்ரி பாவ்லவிச்'' என்று மீண்டும் கூறினாள்... ''ஒன்று சொல்லட்டுமா, உங்களுடைய சொத்தை வாங்குவது எனக்கு மிகவும் லாபகரமான விவகாரம், நாம் உடன்பாடு செய்து கொள்வோம் என்று நான் நம்புகிறேன். ஆனால் நீங்கள் எனக்கு... இரண்டு நாள், ஆமாம், இரண்டு நாள் தவணை தர வேண்டும். உங்கள் மணப்பெண்ணை இரண்டு நாட்கள் பிரிந்திருக்க உங்களால் முடியும் அல்லவா? உங்கள் விருப்பத்துக்கு எதிராக அதிக நேரம் உங்களை நிறுத்தி வைக்க மாட்டேன், ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ஆனால் உங்களுக்கு இப்போதே ஐந்து, ஆறு ஆயிரம் பிராங்குகள் வேண்டி இருந்தால் உங்களுக்கு அந்தத் தொகையைக் கடனாகக் கொடுக்க மிகுந்த மகிழ்ச்சியுடன் இசை

வேன். அப்புறம் நாம் கணக்குப் பார்த்துக் கொள் வோம்.''

ஸானின் எழுந்தான்.

''மாரியா நிக்கலாயெவ்ஞ, அனேகமாக அறவே தெரியாத மனிதனுக்கு உதவுவதற்கு நீங்கள் மகிழ்ச்சியுடனும் அன்புகூர்ந்தும் முன் வந்ததற்காக நான் உங்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும்... ஆனல் உங்களுக்குக் கட்டாயமாக வேண்டி இருந்தால், என் சொத்து பற்றி உங்க ளுடைய முடிவுக்காகக் காத்திருப்பது மேல் என்று நினைக்கிறேன்—இரண்டு நாட்கள் இங்கே தங்கி இருக்கிறேன்.''

''ஆம், எனக்கு இது வேண்டும், திமீத்ரி பாவ் லவிச். ஆனல் உங்களுக்கு நிரம்பக் கடினமாய் இருக்குமோ? நிரம்ப? சொல்லுங்கள்.''

''என் மணப் பெண்ணை நான் காதலிக்கிறேன், மாரியா நிக்கலாயெவ்ஞ, அவளைப் பிரிந்திருப்பது எனக்கு எளிதாய் இல்லை.''

''ஆகா, தங்கமானவர் நீங்கள்!'' என்று பெரு மூச்சுடன் சொன்னுள் மாரியா நிக்கலாயெவ்ஞ. ''உங்களை நிரம்ப அலுக்க வைக்க மாட்டேன் என்று உறுதி கூறுகிறேன். நீங்கள் போகிறீர் களா என்ன?''

''நேரம் ஆகி விட்டது'' என்முன் ஸானின்.

''தவிர நீங்கள் பயணக் களைப்பைப் போக்கிக் கொள்ள வேண்டும், அதோடு என் கணவரோடு சீட்டு ஆடிய களைப்பையும் போக்கிக் கொள்ள வேண்டும். ஒன்று சொல்லுங்கள், இப்பலீத் ஸீதரிச்சின், என் கணவரின், பெரிய நண்பரா நீங்கள்?''

''நாங்கள் ஒரே விடுதிப் பள்ளியில் தங்கிப் படித்தோம்.''

''அப்போதே இவர் இப்படித்தான் இருந்தாரா?''

'' 'இப்படித்தான்' என்றால் எப்படி?'' என்று கேட்டான் ஸானின்.

மாரியா நிக்கலாயெவ்னு திடீரென்று வாய் விட்டுச் சிரித்தாள், முகமெல்லாம் சிவப்பேறும் வரை கெக்கலித்தாள், கைக்குட்டையால் உதடுகளைப் பொத்திக் கொண்டாள், நாற்காலியிலிருந்து எழுந்து, களைத்தவள் போலத் தள்ளாடியவாறு ஸானினை நெருங்கி, அவன் பக்கம் கையை நீட்டினாள்.

அவன் அவளுடைய கையை முத்தமிட்டு வணங்கி விடை பெற்றுக் கொண்டு வாயிலுக்குச் சென்றான்.

''தயவு செய்து நாளைக்குக் கொஞ்சம் முன்னதாக வந்து விடுங்கள், கேட்டீர்களா?'' என்று அவனைப் பார்த்துக் கத்தினாள் அவள். அறையிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த அவன் திரும்பிப் பார்த்தான். அவள் மறுபடி சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து இரண்டு கைகளையும் தலைக்குப் பின்னே போட்டுக் கொண்டிருந்ததைக் கண்டான். பிளவுஸின் அகலமான கைகள் அனேகமாகத் தோள்கள் வரை நழுவி இருந்தன. இந்தக் கைகளின் தோரணையும் இந்த உருவம் முழுவதுமே, கவர்ச்சியும் அழகும் வாய்ந்திருந்தன என்பதை ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

## 36

ஸானினுடைய அறையில் நள்ளிரவுக்கு வெகு நேரம் பின்பும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஸானின் மேசை அருகே உட்கார்ந்து ''தன்னுடைய

ஜெம்மாவுக்குக்'' கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அவளுக்கு எல்லாவற்றையும் விவரித்தான். போலஸவ் தம்பதியை—கணவனையும் மனைவியையும்—வருணித்தான். ஆனால் தன் சொந்த உணர்ச்சிகளையே அதிகமாக விவரித்தான். அவளுடன் சந்திப்புக்கு மூன்று நாட்களுக்குப் பின்!!! ஏற்பாடு செய்திருப்பதாக (மூன்று ஆச்சரியக் குறிகளுடன்) கடிதத்தை முடித்தான். அதிகாலையில் இந்தக் கடிதத்தை அஞ்சலில் சேர்த்து விட்டு, குர் ஹாவுஸ் பூங்காவில் உலாவப் போனான். அங்கே அதற்குள் இசை ஒலித்துக் கொண்டிருந்தது. ஆட்கள் கொஞ்சம் பேர்தாம் இருந்தார்கள். இசைக் குழுவினர் இருந்த பந்தலுக்கு எதிரே நின்று ''ராபெர்ட் சாத்தான்''* என்ற ஆபெராவின் இசைக் கதம்பத்தைக் கேட்டான். பின்பு, காப்பி சாப்பிட்டு விட்டு, தனித்திருந்த பக்கத்து நடை பாதையில் ஒரு பெஞ்சில் அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்தான்.

குடையின் பிடி தடதடவென்று — போதிய வலிமையுடன் — அவனுடைய தோளில் தட்டியது. அவன் திடுக்கிட்டான்... அவன் முன்னே நின்றாள் மாரியா நிக்கலாயெவ்னா. மெல்லிய சாம்பல் பச்சை ஆடையும் வெள்ளை மென் வலைத் தொப்பியும் ஆட்டுக் குட்டித் தோல் கை யுறைகளும் அணிந்து, கோடைக் காலை போன்று புதுமைப் பொலிவும் ரோஜா நிறமுமாகத் திகழ்ந்தாள். ஆனால் அவளது அங்க அசைவுகளிலும் பார்வையிலும் அயர்ந்த தூக்கத்தின் இன்ப மயக்கம் இன்னமும் புலப்பட்டது.

---

* ஜெர்மானிய இசை அமைப்பாளர் மெயெர் பியர் (1791-1864) இயற்றிய ஆபெரா. 1831ம் ஆண்டு முதன் முதலாக அரங்கேற்றப்பட்டது.

''வணக்கம்'' என்ருள் அவள். ''இன்று நான் உங்களுக்கு ஆள் அனுப்பினேன், ஆனுல் அதற் குள் நீங்கள் வெளியே போய் விட்டீர்கள். இப் போதுதான் இரண்டாவது தம்ளர் நீர் பருகி னேன். இங்கே கனிய நீர் பருகும்படி என்னைக் கட்டாயப்படுத்துகிருர்கள், எதற்கோ, ஆண்ட வனுக்கே வெளிச்சம்... எனக்கா உடம்பு சரியாய் இல்லே? அதோடு இப்போது முழுதாக ஒரு மணி நேரம் நான் உலாவி ஆக வேண்டும். எனக்கு வழித்துணையாக இருக்க விரும்புகிறீர்களா? அங்கே திருப்தியாகக் காப்பி சாப்பிடுவோம்.''

''நான் சாப்பிட்டாயிற்று'' என்று கூறி எழுந் தான் ஸானின். ''ஆனுல் உங்களோடு உலாவ எனக்கு மிகுந்த மகிழ்ச்சி'' என்ருன்.

''அப்படியானுல் உங்கள் கையை எனக்குக் கொடுங்கள்... பயப்படாதீர்கள்: உங்கள் மணப் பெண் இங்கே இல்லே. அவள் உங்களைப் பார்த்து விட மாட்டாள்.''

ஸானின் செயற்கையாகப் புன்னகை செய் தான். மாரியா நிக்கலாயெவ்ஞ ஜெம்மாவைப் பற்றிக் குறிப்பிட்ட போதெல்லாம் இன்பமற்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. ஆனுலும் அவன் சட்டெனக் கீழ்ப்படிந்து அவள் பக்கம் குனிந் தான்... மாரியா நிக்கலாயெவ்ஞவின் கை அவ னுடைய கைமேல் மெதுவாகவும் மென்மையாக வும் படிந்தது. பின்பு அதில் வழுகிச் சென்று அதோடு ஒட்டிக் கொண்டது போல் ஆகி விட்டது.

''போவோம் வாருங்கள், இதோ இப்படி'' என்று விரித்த குடையைத் தோளுக்குப் பின் சாய்த்துக் கொண்டு கூறிஞள். ''இவ்வூர்ப் பூங்கா எனக்குச் சொந்த வீடு போலப் பழக்கம். நல்ல நல்ல இடங்கள் வழியே உங்களை அழைத்துப்

போகிறேன். ஒன்று சொல்லட்டுமா (இந்த இரண்டு சொற்களை அவள் அடிக்கடி பயன்படுத்தினுள்): சொத்து வாங்குவது பற்றி நீங்களும் நானும் இப்போது பேசாதிருப்போம். காலையுணவு சாப்பிட்ட பிறகு அதைப் பற்றி நன்ருக விவாதிப்போம். இப்போது நீங்கள் எனக்கு உங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும்... யாரோடு பழகுகிறேன் என்பதை நான் தெரிந்து கொள்வதற்காக.அப்புறம், நீங்கள் விரும்பினுல், நான் என்னைப் பற்றி உங்களுக்குச் சொல்கிறேன். சம்மதமா?''

''ஆனுல், மாரியா நிக்கலாயெவ்ன,உங்களுக்கு எது சுவாரசியமாய் இருக்க முடியும்...''

''பொறுங்கள், பொறுங்கள். நீங்கள் என்னைத் தவருகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். நான் உங்களோடு சரசமாட விரும்பவில்லை.'' மாரியா நிக்கலாயெவ்ன தோள்களைக் குலுக்கினுள். ''தொன்மைக் கால உருவச் சிலை போன்ற மணப்பெண் இருக்கிருள் இவருக்கு, நான் இவரிடமா சரசமாடப் போகிறேன்?! ஆனுல் உங்களிடம் இருக்கிறது சரக்கு. அதை விலைக்கு வாங்கப் போகிறேன் நான். உங்களிடம் உள்ள சரக்கு எப்படிப் பட்டது என்று தெரிந்து கொள்ளவும் நான் விரும்புகிறேன்.எங்கே, காட்டுங்கள் அது எப்படிப் பட்டது என்று? என்ன வாங்குகிறேன் என்பதை மட்டும் அல்ல, யாரிடம் வாங்குகிறேன் என்பதையும் தெரிந்து கொள்ள நான் ஆசைப்படுகிறேன். என் தகப்பனுர் கடைப்பிடித்த விதி இது. ஊம், தொடங்குங்கள்... குழந்தைப் பருவத்திலிருந்து இல்லாவிட்டாலும், இதைச் சொல்லுங்கள், நீங்கள் நாட்டுக்கு வெளியே வெகு காலமாக இருக்

கிறீர்களோ? இது வரை எங்கெல்லாம் போனீர்கள்? கொஞ்சம் மெதுவாக நடவுங்கள்—நமக்கு அவசரமாக எங்கும் போக வேண்டியதில்லே.''

''இத்தாலியில் சில மாதங்கள் இருந்து விட்டு அங்கிருந்து இங்கே வந்தேன்.''

''இத்தாலியைச் சேர்ந்த எல்லாவற்றின் மேலும் உங்களுக்குத் தனித் கவர்ச்சி என்று தெரிகிறது. உங்கள் ஆதர்சம் உங்களுக்கு அங்கே கிடைக்காதது விந்தைதான். உங்களுக்கு ஓவியக் கலே பிடிக்குமா? படங்கள்? அல்லது இசை அதிகம் பிடிக்குமோ?''

''எனக்குக் கலேயில் பற்று உண்டு... அழகானது எல்லாம் எனக்குப் பிடிக்கும்.''

''இசையோ?''

''இசையுந்தான்.''

''எனக்கு அது கட்டோடு பிடிக்காது. எனக்குப் பிடித்தவை ருஷ்யப் பாட்டுக்கள் மட்டுந்தான். அதுவும் கிராமத்தில், அதிலும் வசந்த காலத்தில், நடனத்தோடு, தெரிந்ததா... சிவப்புக் காலிக்கோ தலேக்குட்டைகள், பாசி மணி ஆரங்கள், மேய்ச்சல் தரையில் இளம் புல், புகை மணம் வீசுகிறது... அற்புதம்! ஆனுல் பேச்சு என்னேப் பற்றியதல்ல. பேசுங்களேன், சொல்லுங்கள் கதையை.''

மாரியா நிக்கலாயெவ்ன மேலே நடந்தாள், ஓயாமல் ஸானினேப் பார்வையிட்ட வண்ணமாய் இருந்தாள். அவள் உயரமானவள். அவளுடைய முகம் அனேகமாக ஸானினுடைய முகத்தின் மட்டத்துக்கு வந்தது.

அவன் சொல்லத் தொடங்கினுன். முதலில் விருப்பம் இல்லாமலும் தட்டித் தடுமாறியும் பேசினுன். அப்புறம் சரளமாகவும் வரம்பு கடந்தும்கூடப் பேசத் தலேப்பட்டான். மாரியா நிக்கலா

போகிறேன். ஒன்று சொல்லட்டுமா (இந்த இரண்டு சொற்களை அவள் அடிக்கடி பயன்படுத்தினாள்): சொத்து வாங்குவது பற்றி நீங்களும் நானும் இப்போது பேசாதிருப்போம். காலையுணவு சாப்பிட்ட பிறகு அதைப் பற்றி நன்றாக விவாதிப்போம். இப்போது நீங்கள் எனக்கு உங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும்... யாரோடு பழகுகிறேன் என்பதை நான் தெரிந்து கொள்வதற்காக. அப்புறம், நீங்கள் விரும்பினால், நான் என்னைப் பற்றி உங்களுக்குச் சொல்கிறேன். சம்மதமா?''

''ஆனால், மாரியா நிக்கலாயெவ்னா, உங்களுக்கு எது சுவாரசியமாய் இருக்க முடியும்...''

''பொறுங்கள், பொறுங்கள். நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். நான் உங்களோடு சரசமாட விரும்பவில்லை.'' மாரியா நிக்கலாயெவ்னா தோள்களைக் குலுக்கினாள். ''தொன்மைக் கால உருவச் சிலை போன்ற மணப்பெண் இருக்கிறாள் இவருக்கு, நான் இவரிடமா சரசமாடப் போகிறேன்?! ஆனால் உங்களிடம் இருக்கிறது சரக்கு. அதை விலைக்கு வாங்கப் போகிறேன் நான். உங்களிடம் உள்ள சரக்கு எப்படிப் பட்டது என்று தெரிந்து கொள்ளவும் நான் விரும்புகிறேன். எங்கே, காட்டுங்கள் அது எப்படிப் பட்டது என்று? என்ன வாங்குகிறேன் என்பதை மட்டும் அல்ல, யாரிடம் வாங்குகிறேன் என்பதையும் தெரிந்து கொள்ள நான் ஆசைப்படுகிறேன். என் தகப்பனார் கடைப்பிடித்த விதி இது. ஊம், தொடங்குங்கள்... குழந்தைப் பருவத்திலிருந்து இல்லாவிட்டாலும், இதைச் சொல்லுங்கள், நீங்கள் நாட்டுக்கு வெளியே வெகு காலமாக இருக்

கிறீர்களோ? இது வரை எங்கெல்லாம் போனீர்கள்? கொஞ்சம் மெதுவாக நடவுங்கள்—நமக்கு அவசரமாக எங்கும் போக வேண்டியதில்லை.''

''இத்தாலியில் சில மாதங்கள் இருந்து விட்டு அங்கிருந்து இங்கே வந்தேன்.''

''இத்தாலியைச் சேர்ந்த எல்லாவற்றின் மேலும் உங்களுக்குத் தனித் கவர்ச்சி என்று தெரிகிறது. உங்கள் ஆதர்சம் உங்களுக்கு அங்கே கிடைக்காதது விந்தைதான். உங்களுக்கு ஓவியக் கலை பிடிக்குமா? படங்கள்? அல்லது இசை அதிகம் பிடிக்குமோ?''

''எனக்குக் கலையில் பற்று உண்டு... அழகானது எல்லாம் எனக்குப் பிடிக்கும்.''

''இசையோ?''

''இசையுந்தான்.''

''எனக்கு அது கட்டோடு பிடிக்காது. எனக்குப் பிடித்தவை ருஷ்யப் பாட்டுக்கள் மட்டுந்தான். அதுவும் கிராமத்தில், அதிலும் வசந்த காலத்தில், நடனத்தோடு, தெரிந்ததா... சிவப்புக் காலிக்கோ தலைக்குட்டைகள், பாசி மணி ஆரங்கள், மேய்ச்சல் தரையில் இளம் புல், புகை மணம் வீசுகிறது... அற்புதம்! ஆனால் பேச்சு என்னைப் பற்றியதல்ல. பேசுங்களேன், சொல்லுங்கள் கதையை.''

மாரியா நிக்கலாயெவ்னா மேலே நடந்தாள், ஓயாமல் ஸானினைப் பார்வையிட்ட வண்ணமாய் இருந்தாள். அவள் உயரமானவள். அவளுடைய முகம் அனேகமாக ஸானினுடைய முகத்தின் மட்டத்துக்கு வந்தது.

அவன் சொல்லத் தொடங்கினான். முதலில் விருப்பம் இல்லாமலும் தட்டித் தடுமாறியும் பேசினான். அப்புறம் சரளமாகவும் வரம்பு கடந்தும்கூடப் பேசத் தலைப்பட்டான். மாரியா நிக்கலா

யெவ்னு மிகப் புத்திசாலித்தனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். தவிரவும் அவள் கொஞ்சமும் ஒளிவு மறைவு இல்லாமல் நடந்து கொண்டதால் மற்றவர்களும் தம்மை அறியாமலே ஒளிவு மறைவு இன்றி நடந்து கொள்ளும்படிச் செய்தாள். எளி தில் பழக்கமாகி விடும் பெரும் திறன், கார்டினல் ரேத்ஸ்* குறிப்பிடும் le terrible don de la familiarité அவளிடம் இருந்தது. தனது பயணங்களேயும் பீட்டர்ஸ்பர்க் வாழ்க்கையையும் இளமைப் பருவத்தையும் பற்றிக் கூறினன் ஸானின்... மாரியா நிக்கலாயெவ்னு நய நுட்பம் வாய்ந்த பழகுமுறைகள் கொண்ட உயர்குலச் சீமாட்டி யாக இருந்திருந்தால் அவன் அவ்வளவு கட்டின்றிப் பேசி இருக்க மாட்டான். ஆனல் அவளே எந்த மாதிரிச் சடங்குகளேயும் பொறுக்க முடியாத நல்ல பையன் என்று தன்னே அழைத்துக் கொண்டாள். ஸானினுக்கு இதே சொற்களில் தன்னே அறிமுகப்படுத்திக் கொண்டாள். ஆனல் அதே சமயம், இந்த ''நல்ல பையன்'' ஸானின் மேல் லேசாகச் சாய்ந்து கொண்டு, அவனுடைய முகத்தைப் பார்த்தவாறு, அவன் பக்கத்தில் பூனே நடையில் போய்க் கொண்டிருந்தான். அதுவும் இளம் பெண்ணின் உருவத்தில் போய்க் கொண் டிருந்தான். உருக்குலேப்பதும் சோர்வு தருவதும் சந்தடி அற்றதும் பொசுக்குவதுமான காமக் கவர்ச்சி அந்த உருவத்திலிருந்து இடையருது பெருகிப் பரவிக் கொண்டிருந்தது. பாவியும் வலு அற்றவனுமான ஆண்மகனே இந்தக் கவர்ச்சியால்

---

* கார்டினல் ரேத்ஸ் (1614—1679)—பிரெஞ்சு அரசியல் தலேவர், நகைச்சுவை மிளிரும் திறமை நிறைந்த நினேவுக் குறிப்புக்கள் எழுதியவர்.

வதைத்து எடுக்க வல்லவர்கள் ஒரு வகையான—அதுவும் எண்ணிக்கையில் குறைந்தவர்களும் தூய்மை இல்லாத கலப்புப் பிறவிகளுமான —ஸ்லாவியப் பிரகிருதிகள்!

மாரியா நிக்கலாயெவ்ளுவுடன் ஸானினின் உலாவல், மாரியா நிக்கலாயெவ்ளுவுடன் ஸானினின் உரையாடல், ஒரு மணிக்கு மேல் நீடித்தது. அவர்கள் ஒரு தரம் கூட எங்கும் நிற்கவில்லை. பூங்காவின் முடிவற்ற நடைபாதைகளில் ஓயாமல் நடந்த வண்ணமாக இருந்தார்கள். சில வேளைகளில் குன்றின் மேல் ஏறி, போகிற போக்கில் சுற்றுக் காட்சியை வியந்து நோக்கினுர்கள். வேறு வேளைகளில் பள்ளத்தாக்கில் இறங்கி, ஒளி புக முடியாத நிழலில் மறைந்தார்கள். எல்லாம் கையோடு கை கோத்தவாறு. அவ்வப்போது ஸானினுக்கு எரிச்சல்கூட உண்டாயிற்று. ஜெம்மாவுடன், தன் இனிய ஜெம்மாவுடன், இவ்வளவு நீண்ட நேரம் அவன் உலாவியதே இல்லை... இப்போதோ, இந்தச் சீமாட்டி அவனைக் கைப்பற்றிக் கொண்டு விட்டாள்—தப்ப வழி இல்லை!

''உங்களுக்குக் களைப்பாய் இல்லையா?'' என்று ஒரு தரம் அவளிடம் கேட்டான்.

''எனக்கு ஒருபோதும் களைப்பு உண்டாவதில்லை'' என்ருள் அவள்.

உலாவுபவர்கள் எப்போதாவது அவர்களுக்கு எதிர்ப்பட்டார்கள். அனேகமாக எல்லோரும் அவளுக்கு வணக்கம் தெரிவித்தார்கள் — சிலர் மரியாதையாகவும் சிலர் அடிமைப் பணிவுடனும் கூட. அவர்களில் ஒருவனிடம்—பகட்டாக உடை அணிந்த மிக அழகான ஒரு கரு முடியனிடம்—சிறந்த பாரிஸ் ஒலி அழுத்தத்துடன் அவள் தொலை

விலிருந்தே கத்திஞள்; "Comte, vous savez, il ne faut pas venir me voir—ni aujourd'hui, ni demain."*

எல்லா ருஷ்யர்களுக்கும் இயல்பான ''அற்ப ஆவல் காட்டும்'' கெட்ட வழக்கம் காரணமாக, ''யார் இவர்?'' என்று கேட்டான் ஸானின்.

''இவஞ? ஒரு பிரெஞ்சுக்காரன். இங்கே இவர்கள் நிறைய வளையவருகிருர்கள்... இவனும் எனக்குப் பரிந்து உபசாரம் செய்கிருன். ஆஞல் காப்பி சாப்பிடும் நேரம் வந்து விட்டது. வீட்டுக்குப் போவோம் வாருங்கள். உங்களுக்கு நல்ல பசி எடுத்திருக்கும். என் கணவர் பெருந்தகைக்கு எதிர்பார்த்துப் பார்த்து இதற்குள் கண்கள் பூத்துப் போயிருக்கும்.

''கணவர் பெருந்தகை! கண்கள் பூத்துப் போயிருக்கும்!!'' என்று மனதுக்குள் திரும்பிச் சொல்லிக் கொண்டான் ஸானின்... ''அதே சமயம் பிரெஞ்சு மொழியை இவ்வளவு நன்ருகப் பேசுகிருள்... நிரம்ப விசித்திரமான பெண்!''

---

மாரியா நிக்கலாயெவ்ஞ சொன்னது சரிதான். ஸானிஞேடு அவள் விடுதிக்குத் திரும்பிய போது ''கணவர் பெருந்தகை'' அல்லது ''பீஷ்கா'', மாருத குல்லாயும் தலையுமாக உணவு மேசைக்கு முன்னே உட்கார்ந்திருந்தான்.

''உனக்காகக் காத்திருந்து அலுத்துப் போய் விட்டேன்! நீ இல்லாமலே காப்பி சாப்பிட நினைத்தேன்'' என்று அதிருப்தியுடன் முகத்தைக் கோணியவாறு கூறிஞன்.

---

* ''பிரபுவே, இன்றைக்கோ, நாளைக்கோ என்னிடம் வரக் கூடாது, தெரிந்ததா'' (பிரெஞ்சு).

''பரவாயில்லே, பரவாயில்லே'' என்று குதூ கலமாக மொழிந்தாள் மாரியா நிக்கலாயெவ்ஞ. ''நீ கோபப்பட்டாயோ? இது உனக்கு நல்லது. இல்லாவிட்டால் ஒரேயடியாக ஆறிப் போவாய். நான் இதோ விருந்தாளியை அழைத்து வந்திருக் கிறேன். சீக்கிரம் மணி அடி! வாருங்கள் காப்பி குடிப்போம் காப்பி—எல்லாவற்றிலும் மேலான காப்பி—சாக்ஸோனியக் கோப்பைகளில், வெண் பனி போன்று வெளுத்த மேசை விரிப்பின் மேல்!''

தொப்பியையும் கையுறைகளேயும் கழற்றி வைத்து விட்டுக் கைகளேக் கொட்டிஞள்.

போலஸவ் அவளே முறைத்துப் பார்த்தான்.

''என்னவோ களி துள்ளுகிறீர்களே இன்று, மாரியா நிக்கலாயெவ்ஞ?'' என்று தணிந்த குர லில் சொன்ஞன்.

''இதற்கும் உங்களுக்கும் சம்பந்தம் இல்லே, இப்பலீத் ஸீதரிச்! மணி அடி! திமீத்ரி பாவ்லவிச், உட்காருங்கள் — இரண்டாவது தடவை காப்பி சாப்பிடுங்கள்! ஆகா, கட்டளே இடுவது எவ்வளவு குதூகலமாய் இருக்கிறது! வேறு மகிழ்ச்சி உலகத்தில் இல்லே!''

''கீழ்ப்படிய ஆட்கள் இருக்கும் போது'' என்று மறுபடி முணுமுணுத்தான் கணவன்.

''சரிதான், கீழ்ப்படிய ஆட்கள் இருக்கும் போது! அதஞல்தான் எனக்கும் குதூகலமாய் இருக்கிறது. சிறப்பாக உன்ஞேடு. உண்மைதானே, பீஷ்கா? இதோ காப்பியும் வந்து விட்டது.''

பரிசாரகன் எடுத்து வந்த பிரமாண்டமான டிரேயில் நாடக மன்ற விளம்பரமும் இருந் தது. மாரியா நிக்கலாயெவ்ஞ சட்டென அதை எடுத்துக் கொண்டாள்.

''துன்பியல் நாடகம்!'' என்று கோபம் பொங்கக் கக் கூறினள். ''ஜெர்மன் நாடகம்! எல்லாம் ஒன்று தான். ஜெர்மன் நகைச்சுவை நாடகத்தை விட மேல். எனக்கு தனி அறை ஏற்பாடு செய்யுங்கள் — கீழே — அல்லது வேண்டாம்... Fremden-Loge* மேலாய் இருக்கும்'' என்று பரிசாரகனிடம் சொன்ஞள். ''கேட்டீர்களா, கட்டாயமாக Fremden-Loge!''

''ஆனல் Fremden-Loge ஏற்கெனவே மேதகு நகர இயக்குநரால் (seine Excellenz der Herr Stadt-Director) எடுத்துக் கொள்ளப் பட்டிருந்தாலோ?'' என்று துணிந்து கூறினன் பரிசாரகன்.

''மேதகு இயக்குநருக்குப் பத்து தாலெர்கள் கொடுத்துச் சரிக்கட்டுங்கள். தனி அறை எனக்குக் கட்டாயம் கிடைக்க வேண்டும்! கேட்டீர்களா?''

பரிசாரகன் பணிவும் ஏக்கமும் தோன்றத் தலை வணங்கினன்.

''திமீத்ரி பாவ்லவிச், என்னேடு நாடக மன்றத் துக்கு வருகிறீர்களா? ஜெர்மன் நடிகர்கள் படு மோசமானவர்கள், ஆனல் நீங்கள் வருவீர்கள்... ஊம்? சரியா? எவ்வளவு அருமையானவர் நீங்கள்! பீஷ்கா, நீ வர மாட்டாயா?''

''உன் உத்தரவுப்படி'' என்று வாய்வரை கொண்டு போயிருந்த கோப்பையில் கூறினன் போலஸவ்.

''ஒன்று சொல்லட்டுமா. நீ வராதே. நாடக மன்றத்தில் நீ ஓயாமல் தூங்குவாய். தவிர, ஜெர் மன் மொழியும் உனக்குச் சரியாய்த் தெரியாது. நீ இப்படிப் பண்ணு: காரியஸ்தனுக்குக் கடிதம் எழுது. நினைவு இருக்கிறதா, நம்முடைய அரை

---

* வெளிநாட்டாருக்கான தனி அறை (ஜெர் மன்).

வை மில்லைப் பற்றி... விவசாயிகள் அதில் மாவு அரைப்பது பற்றி. அவனுக்குத் தெரிவி, நான் விரும்பவில்லை, நான் விரும்பவில்லை, விரும்பவே இல்லை என்று! மாலை முழுவதற்கும் உனக்கு இது தான் வேலை...''

''நல்லது'' என்ருன் போலஸவ்.

''சரி, அருமை. நீ நிரம்பப் புத்திசாலி. இப்போது, திருவாளர்களே, காரியஸ்தனைப் பற்றி நாம் பேசி விட்டபடியால், நம்முடைய முக்கியமான காரியம் பற்றிப் பேசுவோம். பரிசாரகன் மேசையைத் துப்புரவு செய்ததும் நீங்கள் எங்களுக்கு எல்லாவற்றையும் சொல்லுங்கள், திமீத்ரி பாவ்லவிச், உங்கள் சொத்து பற்றி—எப்படி, எதை, என்ன விலைக்கு விற்பீர்கள், முன் பணமாக எவ்வளவு கேட்பீர்கள்—அதாவது, எல்லா விவரங்களையும்!'' (''நல்ல வேளைதான், முடிவில் விஷயத்துக்கு வந்தாயே!'' என்று எண்ணிக் கொண்டான் ஸானின்.) ''நீங்கள் ஏற்கெனவே சில விவரங்களை எனக்குத் தெரிவித்தீர்கள். உங்களுடைய தோட்டத்தை வருணித்தீர்கள், நினைவு இருக்கிறது—ஆனல் ''பீஷ்கா'' அப்போது உடன் இல்லை... அவர் கேட்கட்டும்—ஏதாவது முணுமுணுப்பார்! மணம் செய்து கொள்ள உங்களுக்கு என்னுல் உதவ முடிகிறது என்று எண்ண எனக்கு நிரம்ப மகிழ்ச்சி. காலை உணவுக்குப் பிறகு உங்கள் காரியத்தைக் கவனிக்கிறேன் என்று நான் தான் உங்களுக்கு வாக்கு அளித்திருந்தேனே. கொடுத்த வாக்கை நான் எப்போதுமே காப்பாற்றுவேன். உண்மைதானே, இப்பலீத் ஸீதரிச்?

போலஸவ் முகத்தைக் கையால் சற்று தேய்த்துக் கொண்டான்.

''இது கலப்பில்லாத உண்மை. நீங்கள் ஒருவரையும் ஏமாற்றியதில்லை.''

''ஒருபோதும் கிடையாது! இனியும் ஒருபோதும் ஒருவரையும் ஏமாற்ற மாட்டேன். நல்லது, திமீத்ரி பாவ்லவிச், விஷயத்தை விவரியுங்கள், நாங்கள் செனேட்டில் சொல்வது போல.''

## 37

ஸானின் ''விஷயத்தை விவரிக்க''—அதாவது, மறுபடி, இரண்டாவது தடவை, தன் சொத்தை வருணிக்கத் தொடங்கினான். ஆனால் இந்தத் தடவை இயற்கை அழகைக் குறிப்பிடவில்லை. தான் எடுத்துக் கூறிய ''புள்ளி விவரங்களை'' உறுதிப்படுத்துவதற்காகப் போலஸவை அவ்வப்போது சாட்சியத்துக்கு அழைத்தான். ஆனால் போலஸவ் வெறுமே ஹ்ம்-ஹ்ம் என்பதும் தலை அசைப்பதுமாக இருந்தான் — ஆதரவாகவா, எதிராகவா என்பது சைத்தானுக்கே கூட விளங்காது போலத் தோன்றியது. எனினும் மாரியா நிக்கலாயெவ்னுவுக்கு அவன் பங்கு கொள்வது தேவைப்படவில்லை. அவள் காட்டிய வர்த்தக, நிர்வாகத் திறமைகளைக் கண்டு ஸானின் பெருவியப்பு அடைந்தான்! பண்ணை நிர்வாகத்தின் எல்லா மர்மங்களும் அவளுக்கு நன்றாகத் தெரிந்திருந்தன. எல்லாவற்றையும் பற்றி அவள் திட்ட வட்டமாகக் கேள்விகள் கேட்டாள், எல்லா விவரங்களையும் உட்புகுந்து ஆராய்ந்தாள். அவளுடைய ஒவ்வொரு கேள்வியும் சரியாக இலக்கைத் தாக்கியது, விட்ட குறையை நிறைவுபடுத்தியது. இந்த மாதிரியான தேர்வை ஸானின் எதிர்பார்க்கவில்லை. அவன் தயார் செய்து கொள்ளவில்லை.

இந்தத் தேர்வு முழுநாக ஒன்றரை மணி நேரம் தொடர்ந்தது. கண்டிப்பும் கூர்ந்த அறிவும் உள்ள நீதிபதிக்கு முன் குறுகிய பெஞ்சில் உட்கார்ந் திருக்கும் குற்றம் சாட்டப்பட்டவன் உணர்வது போன்ற எல்லா உணர்ச்சிகளையும் அனுபவித்துக் கொண்டிருந்தான் ஸானின். ''ஆமாம், இது குற்ற விசாரணை!'' என்று ஏக்கத்துடன் மனதுக்குள் சொல்லிக் கொண்டான். மாரியா நிக்கலாயெவ்ஞ கேலி செய்பவள் போல ஓயாமல் சிரித்துக் கொண் டிருந்தாள். ஆனுல் இதனுல் ஸானின் பாடு லேசாகி விடவில்லை. சில நாட்டுப்புறச் சொற்களின் பொருளை அவன் முழுதும் தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது ''குற்ற விசாரணையின்'' போது தெரிய வந்ததும் அவனுக்கு வியர்வை கூடப் பெருகிற்று...

''சரி, நல்லது!'' என்று முடிவில் தீர்மானித் தாள் மாரியா நிக்கலாயெவ்ஞ. ''உங்கள் சொத் தை இப்போது நான் அறிவேன்... உங்களுக்கு இணையாக. ஒரு பண்ணையாளுக்கு என்ன விலை கேட் கிறீர்கள் நீங்கள்?'' (அந்தக் காலத்தில் நிலச் சொத்தின் விலை அதில் வேலை செய்த பண்ணை யாட்களின் எண்ணிக்கைப் படியே மதிக்கப் பட்டது என்பது தெரிந்ததே.)

''ஆமாம்... நான் நினைக்கிறேன்... ஐந்நூறு ரூபிளுக்குக் குறைவாகக் கேட்க முடியாது'' என்று சிரமத்துடன் கூறிஞன் ஸானின். (ஓ, பந்தலி யோனே, பந்தலியோனே, எங்கே இருக்கிருய் நீ? இங்கே இருந்தால் "Barbari!" என்று நீ மறுபடி கத்த வேண்டி இருக்கும்.)

மாரியா நிக்கலாயெவ்ஞ எண்ணம் இடுபவள் போல விழிகளை வானை நோக்கி உயர்த்திஞள்.

''அதற்கென்ன?'' என்று முடிவில் பேசலாஞள்.

''இந்த விலை மோசமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நான் இரண்டு நாள் தவணை கேட்டு வாங்கி இருக்கிறேன், ஆகவே நீங்கள் நாளை வரை பொறுத்திருக்க வேண்டும். நமக்குள் பேரம் குதிர்ந்து விடும் என்று நினைக்கிறேன். அப்போது நீங்கள் சொல்லுங்கள், உங்களுக்கு முன் பணம் எவ்வளவு வேண்டும் என்று. ஆனால் இப்போது basta cosi!"* என்று ஸானின் ஏதோ சொல்ல வாய் எடுப்பதைக் கண்டு கூவினாள். இகழத்தக்க உலோக விஷயத்தில் போதுமான நேரத்தைப் போக்கி விட்டோம்... á demaim les affaires!** ஒன்று சொல்லட்டுமா: உங்களை இப்போது விட்டு விடுகிறேன்'' (இடையில் செருகி இருந்த எனமல் பூசிய கடிகாரத்தைப் பார்த்தாள்) ...மூன்று மணி வரையில்... உங்களுக்கு இளைப்பாற நேரம் கொடுக்க வேண்டும் அல்லவா? போங்கள், சூதாட்ட அரங்கத்தில் விளையாட.''

''நான் சூதாடுவதே கிடையாது'' என்றான் ஸானின்.

''உண்மையாகவா? அப்படியானால் நீங்கள் தூய்மைக்கு எடுத்துக்காட்டு. ஆனால், நானும் சூதாடுவது கிடையாது. திட்டமாகத் தெரிந்து கொண்டு காசைக் கரியாக்குவது அசட்டுத்தனம். ஆனாலும் சூதாட்ட அரங்குக்குப் போய் ஆட்களின் முகங்களைப் பார்வையிடுங்கள். நிரம்ப வேடிக்கையான பேர்வழிகளைக் காணலாம். ஒரு கிழவி இருக்கிறாள் அங்கே, மகுட வளையமும் மீசையுமாக, அற்புதம்! ருஷ்யச் சிற்றரசர் ஒருவர்—

---

* ''போதும்!'' (இத்.)

** ''காரியம் நாளைக்கு ஒத்திவைக்கப் படுகிறது!'' (பிரெஞ்சு).

அவரும் நல்ல ஆள்தான். பெருமிதம் ததும்பும் உருவம், கழுகு மூக்கு, ஆனல் சூதாட ஒரு தாலெர் பணத்தை வைத்து விட்டு வெயிஸ்ட் கோட்டுக்கு அடியில் மறைவாகச் சிலுவைக் குறி இட்டுக் கொள் கிருர். பத்திரிகைகள் படியுங்கள், உலாவுங்கள் —சுருங்கச் சொன்னல், என்ன வேண்டுமோ செய் யுங்கள்... ஆனல் மூன்று மணிக்கு நான் உங்களை எதிர்பார்ப்பேன்... de pied ferme.* முன்னதாக மதியச் சாப்பாடு சாப்பிட வேண்டும். இந்த வேடிக்கையான ஜெர்மானியர்களின் நாடகம் ஆறரை மணிக்குத் தொடங்கி விடுகிறது.'' அவள் கையை நீட்டினள். "Sans rancune, n'est—ce pas?"**

''நன்ருய்ச் சொன்னீர்களே, மாரியா நிக்கலா யெவ்ன, உங்களிடம் நான் எதற்காக மனத்தாங் கல் கொள்ளப் போகிறேன்?''

''நான் உங்களைச் சித்திரவதை செய்ததற் காக. பொறுங்கள், நான் உங்களை இன்னும் சரியானபடி வதைக்கவில்லை'' என்று கண்களைச் சுருக்கிக் கொண்டு சொன்னள் அவள். அவளுடைய சிவப்பேறிய கன்னங்களில் எல்லாக் குழிகளும் ஒரேயடியாகத் தோற்றம் அளித்தன. ''போய் வாருங்கள்!''

ஸானின் வணங்கி விட்டு வெளியேறினன். குதூகலச் சிரிப்பு அவனுக்குப் பின்னே கேட்டது. அந்தக் கணத்தில் அவன் நிலைக் கண்ணுடியின் அரு காகப் போய்க் கொண்டிருந்தான். கண்ணுடி பின் வரும் காட்சியைப் பிரதிபலித்தது. மாரியா நிக்க லாயெவ்ன தன் கணவனுடைய குல்லாயை

---

* கட்டாயமாக (பிரெஞ்சு).

** ''பழைய மனத்தாங்கல்களை மறந்து விடுவோம், உண்மைதானே?'' (பிரெஞ்சு)

அவனது கண்களை மூடும்படி இழுத்து விட்டாள். அவனோ இரண்டு கைகளையும் வீசியவாறு தத்தளித் தான்.

## 38

தன் அறையை அடைந்ததுமே, ஓ, எவ்வளவு ஆழ்ந்து, மகிழ்ச்சி பொங்க மூச்சு விட்டான் ஸானின்! மாரியா நிக்கலாயெவ்னு சொன்னது உண்மைதான். இளைப்பாறுவது அவனுக்கு வேண்டி இருந்தது. இந்தப் புதிய அறிமுகங்கள், மோதல்கள், உரையாடல்கள் எல்லாவற்றிலு மிருந்து, அவன் மூளையிலும் உள்ளத்திலும் புகுந்து விட்ட இந்த நச்சுப் புகையிலிருந்து, அவனுக்கு அறவே வேற்ருளான பெண்ணுடன் ஊகிக்கவோ வேண்டவோ செய்யாத இந்த நெருக்கத்திலிருந்து விடுபட்டு இளைப்பாறுவது அவனுக்குத் தேவை யாய் இருந்தது. தவிர, இதெல்லாம் நிகழ்வது எப்போது? ஜெம்மா தன்னைக் காதலிக்கிருள் என்று அவன் தெரிந்து கொண்டதற்கு, அவன் அவ ளுடைய மணமகன் ஆனதற்கு அனேகமாக அடுத்த நாள்! இது அடாத செயல் அல்லவா? தன்னை எந்தக் குற்றத்துக்கும் பொறுப்பாளி ஆக்க உண் மையில் அவனுல் முடியவில்லை என்ருலும், மாசு மறுவற்ற தன் காதலியிடம் மனதுக்குள் ஆயிரந் தடவை மன்னிப்பு கேட்டுக் கொண்டான். அவள் தந்த சிலுவையை ஆயிரந் தரம் முத்தமிட்டான். தான் விஸ்பாதெனுக்கு வந்த காரியம் விரைவில் நலமே முடியும் என்ற நம்பிக்கை மட்டும் இல்லா விட்டால், அவன் அங்கிருந்து தலை தெறிக்கத் திரும்பி ஓடி, இனிய பிராங்க்பர்ட்டுக்கு, அன்புக்கு உரிய, இப்போது சொந்தம் ஆகி விட்ட அந்த

வீட்டுக்கு, காதல் கன்னியிடம் போய், அவளுடைய கால்களில் விழுந்திருப்பான்... ஆனால் ஒன்றும் செய்வதற்கு இல்லை! கசப்பு மருந்தை அடியொட்டக் குடித்தாக வேண்டும். உடை மாற்றிக் கொண்டு சாப்பிடப் போக வேண்டும், அங்கிருந்து நாடக மன்றத்துக்கு... நாளைக்காவது இவள் அவனைக் கொஞ்சம் முன்னதாக விட்டு விட்டால் நன்றாய் இருக்கும்!

இன்னொன்றும் அவனைச் சங்கடப்படுத்தியது, அவனுக்குக் கோபம் ஊட்டியது. ஜெம்மாவைப் பற்றியும் அவளோடு தன் மண வாழ்க்கையைப் பற்றியும் வருங்காலத்தில் தனக்குக் கிடைக்க இருந்த இன்பத்தைப் பற்றியும் காதலும் கனிவும் நன்றி கலந்த உவகையும் பொங்க அவன் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். இடையில் இந்த விந்தையான மாது, இந்தத் திருமதி போலஸவா விடாமல் துரத்துகிறாள்... இல்லை! துரத்தவில்லை —துருத்துகிறாள்... தனிப்பட்ட வன்மக் களிப்புடன் இந்தச் சொல்லைக் கூறிக் கொண்டான் ஸானின். அவனது கண்களுக்கு முன் துருத்துகிறாள். அவனால் அவளுடைய உருவத்திலிருந்து தப்ப முடியவில்லை, அவளுடைய குரலைக் கேளாமலும் அவளுடைய பேச்சுக்களை நினைவு கூராமலும் இருக்க முடியவில்லை. அவளுடைய ஆடையிலிருந்து வீசிய, மஞ்சள் லில்லி மலர்களின் மணத்தை ஒத்ததும் நுட்பமும் குளிர்ச்சியும் கொண்டு ஊடுருவுவதுமான தனி வகை மணத்தை உணராதிருக்கக் கூட அவனால் முடியவில்லை. இந்தச் சீமாட்டி வெளிப்படையாக அவனை முட்டாள் ஆக்குகிறாள், இப்படியும் அப்படியுமாக அவனைக் குழை அடிக்கிறாள்... எதற்காக? என்ன வேண்டும் இவளுக்கு? சொகுசில் வளர்ந்து கெட்டுப் போன

வளும் பணக்காரியும் அனேகமாக ஒழுக்கம் அற்ற வளுமான மாதின் வெறும் சபலம் மட்டுந்தானு இது? அப்புறம் இந்தக் கணவன்? இது என்ன பிறவி? அவளுக்கும் அவனுக்கும் உள்ள உறவு என்ன? திருவாளர் போலஸவுடனே, அவருடைய மனைவியுடனே உண்மையில் எந்த விதத் தொடர் பும் இல்லாத அவனுடைய — ஸானினுடைய — மூளையில் ஏன் எழுகின்றன இந்தக் கேள்விகள்? ஒளியும் படிகம் போன்ற தெளிவும் கொண்ட வேறு உருவத்தில் உளமார ஈடுபட்டிருக்கும் போது கூட விடாமல் தொல்லை கொடுக்கும் இந்த உருவத்தை அகற்ற அவனுல் ஏன் முடியவில்லை? அனேகமாகத் தெய்விகமான அந்த உருவமைப் புக் கூறுகளின் ஊடாகப் பார்வைக்குப் புலப்பட எப்படித் துணிந்தன இவை? புலப்படுவதோடு நிற்காமல், துடுக்காக இளிக்க வேறு செய்கின்றன. சாம்பல் நிறமான இந்தக் கொலைகாரக் கண் கள், கன்னங்களில் இந்தக் குழிகள், பாம்புகள் போன்ற இந்தப் பின்னல்கள்—இவை எல்லாம் அவனேடு ஒட்டிக் கொண்டவை போல ஆகி விட் டனவா என்ன? இவற்றை உதறித் தள்ள, அப் பால் எறிய அவனுக்கு வலு இல்லையா, அவனுல் முடியாதா என்ன?

வெட்டிப் பேச்சு! வெட்டிப் பேச்சு! நாளைக்கே இவை எல்லாம் சுவடு இன்றி மறைந்து போகும்... ஆனுல் இவள் நாளைக்கு அவனை விட்டு விடுவாளா?

ஆம்... இந்தக் கேள்விகளை எல்லாம் அவன் தன்னிடம் கேட்டுக் கொண்டான். நேரம் மூன்று மணியை நெருங்கலாயிற்று. அவன் கறுப்புக் கோட்டு அணிந்து, பூங்காவில் சிறிது உலாவிய பின் போலஸவ் தம்பதியரின் பகுதிக்குச் சென்ருன்.

---

விருந்தறையில் இரண்டு ஜெர்மானியர்களை அவன் கண்டான். அவர்களில் ஒருவன் தூதரகத்தின் ஜெர்மானியச் செயலாளன். இவன் ஒரே நெட்டையன், வெண் முடியன், குதிரை முகத்தன். தலை மயிரைப் பின்புறம் வகிடு எடுத்து வாரி இருந்தான் (அந்தக் காலத்தில் இது வழக்கில் இருந்தது). மற்றவன்... ஓ மாயமே! வேறு யார்? வான் டோன்ஹாப், சில நாட்களுக்கு முன் எவனுடன் ஸானின் போர் செய்தானோ, அதே படை அதிகாரி! அவனை இங்கே சந்திப்போம் என்று ஸானின் எதிர்பார்க்கவே இல்லை. தன் வசம் இன்றியே குழப்பம் அடைந்தான், ஆனாலும் அவனுக்கு வணக்கம் தெரிவித்தான்.

''உங்களுக்கு ஒருவரை ஒருவர் தெரியுமா?'' என்று ஸானினுடைய குழப்பத்தைக் கண்டு கொண்ட மாரியா நிக்கலாயெவ்னு கேட்டாள்.

''ஆமாம்... எனக்கு இந்தப் பேறு முன்பே கிடைத்தது'' என்று கூறிய டோன்ஹாப், மாரியா நிக்கலாயெவ்னு பக்கம் சற்றுக் குனிந்து, ''அதே பேர்வழி!.. உங்கள் நாட்டவர்... ருஷ்யர்...'' என்று புன்னகையுடன் தணிந்த குரலில் சொன்னான்.

''இருக்க முடியாது!'' என்று அவன் போலவே தணிந்த குரலில் சொல்லி விரலைக் காட்டி அவனை அச்சுறுத்திய மாரியா நிக்கலாயெவ்னு அவனுக்கும் நெட்டைச் செயலாளனுக்கும் அக்கணமே விடை கொடுத்து அனுப்ப முற்பட்டாள். செயலாளன் அவள் மேல் கண் தலை தெரியாத காதல் கொண்டிருந்தது நன்றாகப் புலப்பட்டது, ஏனென்றால் அவளைப் பார்த்த ஒவ்வொரு தடவையும் வாயைக் கூடத் திறந்தான். தன்னிடம் கோரப்படுவதைச் சாடையிலேயே புரிந்து கொள்ளும்

குடும்ப நண்பன் போல டோன்ஹுறாப் உடனே போய் விட்டான். செயலாளன் போகாமல் பிடிவாதம் செய்யப் பார்த்தான், ஆனால் மாரியா நிக்கலாயெவ்ஞ எவ்விதச் சடங்கும் பாராட்டாமல் அவனை வெளியே அனுப்பி விட்டாள்.

''உங்கள் அரச வம்ச அழகியிடம் போங்கள்'' என்று அவனிடம் சொன்னாள் (ஒழுக்கம் கெட்டவளை வியப்பூட்டும் வகையில் ஒத்திருந்த மொனக்கோ சிற்றரசி ஒருத்தி அப்போது விஸ்பாதெனில் வசித்து வந்தாள்). ''கீழ்க்குடியில் பிறந்த என் போன்றவளிடம் நீங்கள் எதற்காக உட்கார்ந்திருக்க வேண்டும்?''

''நன்ருய்ச் சொன்னீர்களே, சீமாட்டியாரே'' என்று மறுத்துரைத்தான் ஆக்கங்கெட்ட செயலாளன். ''உலகத்தில் உள்ள சிற்றரசிகள் எல்லோரும்...''

ஆனல் மாரியா நிக்கலாயெவ்ஞ இரக்கம் காட்டவில்லை, ஆகவே செயலாளன் தன் பின் வகிடும் தானுமாக வெளியேறினன்.

மாரியா நிக்கலாயெவ்ஞ தன் சிறப்பான தன்மைகள் எல்லாம் எடுப்பாகத் தெரியும் வகையில் அன்று உடை அணிந்திருந்தாள். À la Fontanges* கைகள் வைத்த ரோஜா நிறப் பட்டு உடை அணிந்து காதுகளில் பெரிய வைரத் தோடுகள் போட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் அந்த வைரங்கள் போலவே பளிச்சிட்டன. மகிழ்ச்சியும் உற்சாகமும் பொங்கக் காட்சி அளித்தாள்.

---

* போந்தாஜ் போல (பிரெஞ்சு). **போந்தாஜ் கோமகள்** பிரான்சின் அரசன் **பதினன்காம் லுயீயின்** (1638—1715) ஆசைநாயகிகளில் ஒருத்தி.

ஸானினைத் தன் அருகே உட்கார வைத்துக் கொண்டு பாரிஸ் நகரத்தைப் பற்றி அவனிடம் பேசத் தொடங்கினாள். சில நாட்களுக்குப் பிறகு அங்கே போகத் திட்டம் இட்டிருப்பதாகச் சொன்னாள். ஜெர்மானியர்கள் தனக்கு அலுத்து விட்டதாகவும் அறிவுக் கூர்மையைக் காட்ட முயலும் போது அவர்கள் அசடர்கள் என்றும் அசட்டுத்தனம் செய்கையில் பொருத்தம் இல்லாத அறிவுக் கூர்மை உள்ளவர்கள் என்றும் கூறினாள். பின்பு, இப்போது இங்கே உட்கார்ந்திருந்த படை அதிகாரியோடு சில நாட்களுக்கு முன்னால் ஒரு மாதின் காரணமாக அவன் போர் செய்தது உண்மைதானா என்று திடீரென நேரடியாக—á brule pour—point—அவனிடம் கேட்டாள்.

''உங்களுக்கு இது எப்படித் தெரியும்?'' என்று முணுமுணுத்தான் ஸானின்.

''வதந்திகள் உலகெங்கும் பரவுகின்றன, திமீத்ரி பாவ்லவிச். ஆனால் நீங்கள் செய்தது சரி, ஆயிரந் தரம் சரி என்பதையும் பிரபு வம்ச வீரன் போல நீங்கள் நடந்து கொண்டதையும் அறிவேன். சொல்லுங்கள், அந்த மாது உங்கள் மணப் பெண்ணா?''

ஸானின் புருவங்களை லேசாகச் சுளித்தான்...

''நல்லது, கேட்க மாட்டேன், கேட்க மாட்டேன்'' என்று உடனே சொன்னாள் மாரியா நிக்கலாயெவ்னா. ''உங்களுக்கு இது பிடிக்கவில்லை, என்னை மன்னியுங்கள், கேட்க மாட்டேன்! கோபிக்காதீர்கள்!'' அப்போது பக்கத்து அறையிலிருந்து செய்தித்தாளும் கையுமாக வந்தான் போலஸவ். ''நீ எங்கே வந்தாய்? அல்லது சாப்பாடு தயார் ஆகி விட்டதோ?'' என்று அவனிடம் கேட்டாள்.

''சாப்பாடு இதோ பரிமாறப்படும், ஆனால்

நான் 'ஸேவெர்னயா ப்சிலா'* பத்திரிகையில் என்ன படித்தேன், கேளேன்... சிற்றரசர் குரோமபோய் காலமாகி விட்டார்.''

மாரியா நிக்கலாயெவ்ஞ தலையை நிமிர்த்திஞள்.

''ஆ! சுவர்க்க சாம்ராஜ்யம் அவருக்குக் கிட்டுமாக!'' என்று சொல்லி விட்டு ஸானினைப் பார்த்து, ''ஒவ்வோர் ஆண்டும் என் பிறந்த நாளன்று கமேலியா மலர்களால் என் எல்லா அறைகளையும் அலங்கரித்து வந்தார். ஆனுல் இதற்காகக் குளிர் காலத்தில் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் இருக்கத் தேவை இல்லை'' என்ருள். பின்பு ''அவருக்கு என்ன, வயது எழுபதுக்கு மேல் ஆகி விட்டதோ?'' என்று கணவனிடம் கேட்டாள்.

''ஆகி விட்டது. அவருடைய ஈமச் சடங்கு செய்தித்தாளில் விவரிக்கப் பட்டிருக்கிறது. அரசவையினர் எல்லோரும் வந்திருந்தார்களாம். இதை யொட்டிச் சிற்றரசர் கவ்ரீஷ்கின்** எழுதிய செய்யுள் வெளியாகி இருக்கிறது.''

''அப்படியா, அருமை.''

''படிக்கட்டுமா? அவரை உண்மையான சபா நாயகர் என்று சிற்றரசர் கூறுகிருர்.''

''வேண்டாம், படிக்க வேண்டாம். அவர் என்ன சபா நாயகர் பிரமாதம்? தத்தியாஞ யூரியெவ்ஞவின் நாயகராக மட்டுமே இருந்தார் அவர். சாப்பிடப் போவோம், வாருங்கள். உயிர்த் துடிப்பு உள்ளவர்கள் உற்சாகம் தருபவற்றை

---

* ''வட புலத் தேனி.'' (ருஷ்ய மொழி).

** சென்ற நூற்ருண்டின் நாற்பதுக்களில் பிற்போக்காளர் முகாமில் சேர்ந்து கொண்ட கவிஞரான சிற்றரசர் ப. அ. வியாஸெம்ஸ்கி பற்றிய நையாண்டிக் குறிப்பு இது.

எண்ணுவார்கள். திமீத்ரி பாவ்லவிச், கை கொடுங்கள்.''

---

சாப்பாடு தலைக்கு நாளில் போலவே அற்புதமாய் இருந்தது, நேரம் மிகக் குதூகலமாகக் கழிந்தது. மாரியா நிக்கலாயெவ்னு கதைகள் சொல்லுவதில் திறமை பெற்றிருந்தாள்... இந்த இயற்கைத் திறமை ஒரு மாதுக்கு, அதுவும் ருஷ்ய மாதுக்கு இருப்பது அபூர்வம்! தகுந்த சொற்களைப் பயன்படுத்த அவள் கூசவில்லை. சொந்த நாட்டு மாதர்களை அவள் சிறப்பாக எள்ளி நகையாடிஞள். கூர்மையாக இலக்கில் தைத்த அவளுடைய கேலிச் சொற்களைக் கேட்டு ஸானின் மறுபடி மறுபடி விழுந்து விழுந்து சிரிக்க வேண்டியதாயிற்று. பாசாங்கும் வெற்றுச் சொற்களும் பொய்யும் மாரியா நிக்கலாயெவ்னுவுக்கு அறவே சகிக்க முடியாதவையாக இருந்தன... அவையோ அவளுக்கு அனேகமாக எங்கும் காணப்பட்டன. தன் வாழ்க்கை தொடங்கிய தாழ்நிலை வட்டாரத்தைப் பற்றி அவள் பகட்டிப் பெருமை அடித்துக் கொள்பவள் போல் பேசிஞள். மரவுரிச் சோடுகள் அணிந்து திரிந்த உழத்தி என்றும் நத்தாலியா கிரீலவ்ஞ நரீஷ்கிஞவுக்குக்* குறைந்தவள் அல்ல என்றும் தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டாள். அவளுடைய வயதுள்ள மாதர்கள் பெரும்பாலோரைக் காட்டிலும் தன் வாழ்நாளில் எவ்வளவோ

---

* நத்தாலியா கிரீலவ்ஞ நரீஷ்கிஞ—(*1651—1694*) ருஷ்யப் பேரரசர் அலெக்சாந்தர் மிகாய்லவிச்சின் இரண்டாவது மனைவி, பேரரசர் முதலாம் பீட்டரின் தாய். செல்வமற்ற உயர்குடியில் பிறந்தவள்.

அதிக அனுபவங்களை அவள் பெற்றிருந்தது ஸானி னுக்குக் கண்கூடாகத் தெரிந்தது.

போலஸவ் சிந்தனையில் ஆழ்ந்தவனாகச் சாப் பிடுவதும் கவனத்துடன் மது அருந்துவதும் மனைவியையும் ஸானினையும் எப்போதாவது மட்டுமே பார்வையிடுவதுமாக இருந்தான். வெளிறி, குருடு போலிருந்த அவனுடைய கண் கள் உண்மையில் மிகவும் கூர்ந்த பார்வை கொண் டிருந்தன.

''நீதான் எப்பேர்ப்பட்ட புத்திசாலி!'' என்று அவனைப் பார்த்துக் கூவினாள் மாரியா நிக்கலா யெவ்னா. ''பிராங்க்பர்ட்டில் நான் சொன்ன காரி யங்களை எல்லாம் எப்படி நிறைவேற்றி இருக் கிறாய்! உன் நெற்றியில் முத்தமிடுவேன், ஆனால் உனக்கு இதில் நாட்டமே கிடையாதே.''

''கிடையாது'' என்று பதில் சொல்லி விட்டு அன்னாசிப் பழத்தை வெள்ளிக் கத்தியால் நறுக் கினான் போலஸவ்.

மாரியா நிக்கலாயெவ்னா அவனைப் பார்த்து மேசையில் விரலால் தட்டினாள்.

''அப்படியானால் நாம் பேசிக் கொண்டபடிப் பந்தயம் கட்டுகிறாயா?'' என்று பொருள் பொதிந்த குரலில் கேட்டாள்.

''கட்டுகிறேன்.''

''சரி. நீ தோற்பாய்.''

போலஸவ் மோவாயை முன்னே துருத்தினான்.

''ஊம், மாரியா நிக்கலாயெவ்னா, உனக்கு எவ்வளவுதான் தன்னம்பிக்கை இருந்தாலும் இந்தத் தடவை நீதான் தோற்பாய் என்று நினைக் கிறேன்'' என்றான்.

''எதைப் பற்றிப் பந்தயம்? தெரிந்து கொள்ள லாமா?'' என்று கேட்டான் ஸானின்.

''கூடாது... இப்போது கூடாது'' என்று பதிலளித்துக் கலீரென நகைத்தாள் மாரியா நிக்கலாயெவ்னு.

மணி ஏழு அடித்தது. வண்டி தயார் என்று பரிசாரகன் அறிவித்தான். மனைவியை வழியனுப்பிய உடனேயே தன் நாற்காலிக்கு மெது நடையாகத் திரும்பினுன் போலஸவ்.

''இதோ பார்! காரியஸ்தனுக்குக் கடிதம் எழுத மறக்காதே!'' என்று நடையிலிருந்து கத்தினுள் மாரியா நிக்கலாயெவ்னு.

''எழுதுகிறேன், கவலைப்படாதே. நான் கருர் பேர்வழி'' என்ருன் கணவன்.

39

விஸ்பாதென் நாடகமன்றம் 1840ம் ஆண்டில் வெளித் தோற்றத்தில் மோசமாய் இருந்தது. அதன் கலைஞர் குழு சொல் ஆடம்பரமும் வெறுமையும் கொண்ட மட்ட ரகத்திலும் கடு முயற்சியும் கீழ்த்தரமும் வாய்ந்த நடைமுறையிலும் எல்லா ஜெர்மானிய நாடக மன்றங்களுக்கும் இயல்பானது என்று இன்றளவும் எண்ணப்படக் கூடிய தரத்துக்கு மயிரிழை கூட உயர்ந்ததாய் இருக்கவில்லை. அண்மைக் காலத்தில், திருவாளர் தெவ்ரியேந்தின்* ''பெயர் பெற்ற'' நிர்வாகத்தில் கார்ல்ஸ்ருவே குழு இதன் முழுச் செவ்வைப் பாட்டைப் பிரதிநிதித்துவப்படுத்தியது. ''மேதகுவான் பலஸோவ் சீமாட்டிக்காக'' அமர்த்தப்

---

* தெவ்ரியேந்த் எதுவார்த் *(1801—1877)*—ஜெர்மன் நடிகர், நாடகாசிரியர், நாடக மன்றச் செயலர்.

பட்ட தனி அறையில் (இதை அமர்த்தப் பரிசார கன் என்ன உத்தியைக் கையாண்டான், நகர இயக்கு நருக்கு உண்மையிலேயே கைக்கூலி கொடுத் தானு என்பது கடவுளுக்கே வெளிச்சம்!) பின் பகுதியில் சிறு உள்ளறை இருந்தது. அதில் சோபாக்கள் போடப்பட்டிருந்தன. அதற்குள் போவதற்கு முன், தனி அறையை மன்றத்திலி ருந்து பிரித்த இடைத் தடுப்புக்களைத் தூக்கி விடும் படி மாரியா நிக்கலாயெவ்ஞ ஸானினைக் கேட்டுக் கொண்டாள்.

''ஆட்கள் என்னைப் பார்ப்பதை நான் விரும்ப வில்லை. பார்த்தால் உடனே வந்து மொய்ப்பார் கள்'' என்ருள்.

அறை காலியாய் இருப்பதாகத் தோன்ற வேண் டும் என்று அவனையும் தன் அருகே மன்றத்துக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார வைத்தாள்.

''பிகாரோவின் மணம்'' என்ற ஆபெராவின் தோற்றுவாயை இசைக் குழு வாசித்தது... திரை தூக்கப்பட்டது. நாடகம் தொடங்கியது.

பெருத்த எண்ணிக்கையில் இயற்றப்படும் செப்பமற்ற நாடகங்களில் ஒன்று அது. இவற்றில் நன்ருகப் படித்த, ஆனுல் இயற்கைத் திறமை இல்லாத ஆசிரியர்கள் சிறந்த, ஆனுல் உயிரற்ற மொழியில், ஏதேனும் ''ஆழமான'' அல்லது ''உடனடி முக்கியத்துவம் உள்ள'' கருத்தைக் கடும் உழைப்புடன், ஆனுல் பாங்கற்ற முறையில் முன்வைத்து, துன்பியல் மோதல் எனப்பட்டதைக் காட்டி... ஆசியக் காலரா போன்ற கொடும் சலிப்பைப் பார்வையாளர்களுக்கு ஏற்படுத்திஞர் கள். மாரியா நிக்கலாயெவ்ஞ பாதி அங்கத்தைப் பொறுமையுடன் கேட்டாள். ஆனுல், தன் காதலி யின் துரோகத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட முதல்

காதலன் (இவன் பூம்பட்டுக் கழுத்துப் பட்டை உள்ள பழுப்பு பிராக் கோட்டும், சிப்பிப் பொத் தான்கள் தைத்த கோடிட்ட மார்புச் சட்டை யும் மெருகிட்ட தோல் பாதவார்கள் கொண்ட பச்சைச் சராயும் வெள்ளை மென்தோல் கையுறை களும் அணிந்திருந்தான்), இந்தக் காதலன் இரண்டு முட்டிகளையும் மார்பில் ஊன்றி முழங் கைகளைக் கூர்ங்கோணத்தில் துருத்தியவாறு நாய் போல ஊளையிடத் தொடங்கியதும் மாரியா நிக் கலாயெவ்னா பொறுமை இழந்தாள்.

''கடைக்கோடி வட்டாரச் சிற்றூரில் கடைக் கோடி பிரெஞ்சு நடிகன் பெயர் பெற்ற தலைமை ஜெர்மன் நடிகனைக் காட்டிலும் இயற்கையாகவும் மேலாகவும் நடிக்கிறன்'' என்று கடுங் கோபத் துடன் சொன்னாள். பிறகு பின்னறையில் போய் உட்கார்ந்து ஸானினை அழைத்து, சோபாவில் தன் பக்கத்தில் கையால் தட்டி, ''இப்படி உட் காருங்கள், பேசிக் கொண்டிருப்போம்'' என்றாள்.

ஸானின் அவள் சொன்னபடிச் செய்தான்.

மாரியா நிக்கலாயெவ்னா அவனைப் பார்த் தாள்.

''நீங்கள் தங்கமானவர் என்பதைக் காண் கிறேன்! உங்கள் மனைவிக்கு உங்களோடு வாழ்வது சுலுவாய் இருக்கும். இந்தக் கோமாளி'' என்று ஊளையிட்டுக் கொண்டிருந்த நடிகனை விசிறி நுனி யால் காட்டினாள் (அவன் வீட்டு ஆசிரியர் பாத் திரத்தில் நடித்துக் கொண்டிருந்தான்). இவன் என் இளமைப் பருவத்தை எனக்கு நினைவுபடுத்தி விட்டான். நானும் ஆசிரியர் மேல் காதல் கொண் டிருந்தேன். அது எனது முதலாவது... இல்லை, என் இரண்டாவது மையல். முதல் தடவை தோன்ஸ்க் மடத்தின் பணிவிடையாளர் மேல்

நான் காதல் கொண்டேன். அப்போது எனக்குப் பன்னிரண்டு வயது. அவரை ஞாயிற்றுக் கிழமை களில் மட்டுந்தான் பார்த்தேன். அவர் வெல் வெட் உள்ளங்கி அணிந்து நறுமண நீரால் வாசனையூட்டிக் கொண்டார். தூபக் கலயத்துடன் கூட்டத்தில் புகுந்து செல்கையில் மாதர்களுடன் பிரெஞ்சு மொழியில் பேசினர்: 'பர்தோன், எக்ஸ்கியூஸே'* என்று. விழிகளை அவர் உயர்த்தி யதே இல்லை. அவருடைய இமை மயிர்கள் இவ் வளவு நீலம்!'' மாரியா நிக்கலாயெவ்ஞ பெரு விரல் நகத்தால் சுண்டு விரலில் பாதியை ஸானினுக்குக் காட்டினுள். ''என் ஆசிரியரின் பெயர் monsieur Gaston! சுவிட்சர்லாந்துக்காரர், பெரிய கல்விமான், நிரம்பக் கண்டிப்பு உள்ளவர், துடியான முக வெட்டு அவருக்கு! கீல் போன்ற கறுப்புக் கிருதாக்கள், கிரேக்க முக அமைப்பு, இரும்பை உருக்கி வார்த்தவை போன்ற உதடு கள்! அவரிடம் எனக்கு அச்சம்! வாழ்நாள் முழு வதிலும் இந்த ஒரு மனிதருக்குத்தான் நான் பயந் தேன். அவர் என் சகோதரனுடைய பயிற்சி ஆசிரியர். இந்தச் சகோதரன் பிறகு இறந்து போனுன்... மூழ்கி விட்டான். எனக்கும் துர்மர ணம் நேரும் என்று ஒரு ஜிப்சி குறி சொன்ஞள். ஆனுல் இது வெறும் பேச்சு. எனக்கு இதில் நம்பிக்கை இல்லை. என் கணவரைக் கட்டாரியும் கையுமாக உங்களால் கற்பனை செய்ய முடியுமா?''

''கட்டாரியால் இல்லாமலும் சாக முடியுமே'' என்ருன் ஸானின்.

''இதெல்லாம் பொருளற்ற பேச்சு! நீங்கள் மூடநம்பிக்கை உள்ளவரா? நான் அறவே இல்லை.

---

* ''மன்னிக்க வேண்டும்''.—மொ-ர்.

வருவது வந்தே தீரும். Monsieur Gaston எங்கள் வீட்டில், என் தலைக்கு மேலே வசித்து வந்தார். சில நாட்களில் நான் இரவில் விழித்துக் கொண்டேன், அவருடைய காலடி ஓசையைக் கேட்டேன். அவர் வெகு நேரம் கழித்துப் படுத்துக் கொண்டார். நினைத்துப் பார்க்கும் போது நெஞ்சு ஆழ்ந்த மரியாதையால்... அல்லது வேறு உணர்வால் நிறைந்து பொங்குகிறது. என் தகப்பனர் அனேகமாக எழுத்தறிவு இல்லாதவர். ஆனல் எங்களுக்கு நல்ல கல்விப் பயிற்சி தந்தார். எனக்கு லத்தீன் மொழியும் புரியும், தெரியுமா?''

''உங்களுக்கா? லத்தீனு?''

''ஆம். எனக்குக் கற்பித்தார் Monsieur Gaston. நான் அவரிடம் ''ஈனிடு''* படித்தேன். சலிப்பூட்டுவது, ஆனல் நல்ல கட்டங்கள் சில உண்டு. டிடோவும் ஈனியசும் காட்டில் இருக்கும் கட்டம் நினைவு இருக்கிறதா?..''

''ஆமாம், நினைவு இருக்கிறது'' என்று அவசரமாகக் கூறினன் ஸானின். தான் படித்த லத்தீனை அவன் வெகு காலத்துக்கு முன்பே மறந்து விட்டான். ''ஈனிடு'' பற்றி ஏதோ மேலோட்டமாகத் தான் தெரிந்து வைத்திருந்தான்.

மாரியா நிக்கலாயெவ்னு தன் வழக்கப்படிப் பக்கவாட்டிலிருந்து கீழ்ப் பார்வையாக அவன் மேல் கண்ணோட்டினுள்.

''ஆனல் நான் பெரிய பண்டிதை என்று நினைத்து விடாதீர்கள். ஆ, கடவுளே, இல்லை. நான் கற்றுத் தேர்ந்தவளும் அல்ல, எந்த விதமான இயற்கைத் திறமைகளும் எனக்குக் கிடை

---

* ஈனிடு—தொன்மை ரோமானியக் கவிஞர் வர்ஜில் (கி. மு. முதல் நூற்றுண்டு) இயற்றிய பெருங் காப்பியம்.

யாது. எழுதவும் அரை குறையாகத்தான் வரும்... மெய்யாக; வாய் விட்டுப் படிக்க என்ஞல் முடியாது. பியானே வாசிக்கவோ, படம் வரையவோ, தைக்கவோ, ஒன்றுமே தெரியாது எனக்கு! இது தான் என் முழுமையான சொரூபம்!''

அவள் கைகளைப் பரப்பி வைத்துக் கொண்டாள்.

''நான் உங்களுக்கு இதை எல்லாம் சொல்லுவது, முதலாவதாக இந்த மட்டிகளின் குரல்களைக் கேளாதிருப்பதற்காக'' (அவள் அரங்கைச் சுட்டிக் காட்டிஞள். அங்கே அந்த நேரத்தில் நடிகனுக்குப் பதில் ஒரு நடிகை ஊளையிட்டுக் கொண்டிருந்தாள், அவளும் முழங்கைகளை முன்னே துருத்திக் கொண்டிருந்தாள்), ''இரண்டாவதாக, நான் உங்களுக்குக் கடன் பட்டவள் என்பதால். உங்களைப் பற்றி நீங்கள் நேற்று எனக்குச் சொன்னீர்களே.''

''நீங்கள் விரும்பிக் கேட்டதால் சொன்னேன்'' என்ருன் ஸானின்.

''உங்களுக்கு மட்டும் தெரிந்து கொள்ள விருப்பம் இல்லையோ, நான் எப்பேர்ப்பட்ட பெண் பிள்ளை என்று? ஆஞல் இதஞல் எனக்கு வியப்பு உண்டாகவில்லை'' என மறுபடி சோபாத் தலையணைகளில் சாய்ந்து கொண்டு கூறிஞள். ''மனிதர் மணம் செய்து கொள்ளப் போகிருர், அதுவும் காதலித்து, இருவர் போர் வேறு நிகழ்த்திய பின்... வேறு எதையும் பற்றி எண்ணமிட அவருக்கு எங்கே நேரம்?''

மாரியா நிக்கலாயெவ்ஞ சிந்தனையில் ஆழ்ந்து, விசிறிப் பிடியைக் கடிக்கலாஞள். அவளுடைய பற்கள் பருத்தவை, ஆஞல் வரிசையானவை, பால் போன்று வெண்மையானவை.

இந்த இரண்டு நாட்களாக எதிலிருந்து தன்னால் விடுபட முடியவில்லையோ அந்த நச்சுப் புகை தன் தலைக்கு மறுபடி ஏறத் தொடங்கி விட்டதாக ஸானினுக்குத் தோன்றியது.

அவனுக்கும் மாரியா நிக்கலாயெவ்னாவுக்கும் உரையாடல் தணிந்த, அனேகமாகக் கிசுகிசுத்த குரலில் நடந்து கொண்டிருந்தது. இது அவனுக்கு இன்னும் அதிக எரிச்சலையும் கிளர்ச்சியையும் ஊட்டியது...

இதெல்லாம் எப்போதுதான் முடியும்?

பலவீனமான மனிதர்கள் ஒருபோதும் தாங்களே முடிப்பதில்லை, முடிவை ஓயாமல் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

அரங்கில் யாரோ தும்மினார்கள். இந்தத் தும்மல் ஆசிரியரால் ''நகைச்சுவையுள்ள கட்டம்'' அல்லது ''அம்சம்'' என்ற வகையில் நாடகத்தில் புகுத்தப்பட்டிருந்தது. நகைச்சுவையுள்ள வேறு அம்சம் எதுவும் அதில் இல்லை. எனவே பார்வையாளர்கள் இந்த அம்சத்தால் திருப்தி அடைந்து சிரித்தார்கள்.

இந்தச் சிரிப்பும் ஸானினுக்கு எரிச்சல் உண்டாக்கிற்று.

சிடுசிடுக்கிறோமா மகிழ்கிறோமா, சலிப்பு அடைகிறோமா, குதூகலப்படுகிறோமா என்று அவனுக்கே திண்ணமாகத் தெரியாத நேரங்கள் இருந்தன. ஓ, ஜெம்மா மட்டும் அவனைப் பார்த்திருந்தால்!

---

''உண்மையில் இது விந்தையானது'' என்று திடீரெனப் பேசத் தொடங்கினாள் மாரியா நிக்கலாயெவ்னா. '' 'நான் மணம் செய்து கொள்ளப்

போகிறேன்' என்று ஒரு மனிதர் நம்மிடம் சொல்லுகிறார், அதுவும் ஒரே அமைதியான குரலில். 'நான் நீரில் குதிக்கப் போகிறேன்' என்று யாரும் நம்மிடம் அமைதியாகச் சொல்லுவதில்லை. பார்க்கப்போனால், வித்தியாசம் அப்படி என்ன? விந்தைதான், மெய்யாக.''

ஸானினுக்கு எரிச்சல் மண்டியது.

''வித்தியாசம் பெரியது, மாரியா நிக்கலாயெவ்னு! சிலருக்கு நீரில் குதிப்பது அச்சமே தருவதில்லை. அவர்களுக்கு நீந்தத் தெரியும். தவிரவும்... மணங்களின் விந்தையைப் பொறுத்தவரை... பேச்சு இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டது என்றால்...''

அவன் சட்டென்று பேச்சை நிறுத்தி நாக்கைக் கடித்துக் கொண்டான்.

மாரியா நிக்கலாயெவ்னு விசிறியால் உள்ளங்கையில் அடித்துக் கொண்டாள்.

''முழுவதும் சொல்லுங்கள், திமீத்ரி பாவ்லவிச், அரைகுறையாக நிறுத்தாதீர்கள், நீங்கள் என்ன சொல்ல வந்தீர்கள் என்பது எனக்குத் தெரியும். 'பேச்சு இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டது என்றால், அன்பார்ந்த திருமதி மாரியா நிக்கலாயெவ்னு போலஸவா, உங்களுடைய மணத்தைக் காட்டிலும் விந்தையானதைக் கற்பனையே செய்ய முடியாது... உங்கள் கணவரை நான் நன்றாக அறிவேனே, பிள்ளைப் பிராயம் முதலே!! என்று சொல்ல வந்தீர்கள். இதுதானே நீங்கள் சொல்ல விரும்பியது, நீந்தத் தெரிந்தவரே!''

''ஒன்று சொல்ல அனுமதியுங்கள்'' என்று தொடங்கினான் ஸானின்...

''இது உண்மை இல்லையா என்ன? உண்மை

இல்லையா?'' என்று விடாப்பிடியாகக் கேட்டாள் மாரியா நிக்கலாயெவ்னு. ''எங்கே, என் முகத்தைப் பார்த்துச் சொல்லுங்கள், நான் சொன்னது உண்மையல்ல என்று!''

தன் விழிகளை எங்கே மறைப்பது என்று ஸானினுக்குத் தெரியவில்லை.

''நல்லது, உங்கள் விருப்பம். நீங்கள் கட்டாயமாகக் கோருவதனுல் சொல்லுகிறேன்: உண்மை தான்'' என்று கடைசியில் கூறினுன்.

மாரியா நிக்கலாயெவ்னு தலையை ஆட்டினுள்.

''அப்படி வாருங்கள் வழிக்கு... சரி. ஏழையோ... அசடோ... அழகற்றவளோ இல்லாத ஒருத்தி இந்த மாதிரி விசித்திரமாக... நடந்து கொண்டதற்குக் காரணம் என்னவாக இருக்க முடியும் என்று உங்களைக் கேட்டுக் கொண்டீர்களா நீங்கள். நீந்தத் தெரிந்த நீங்கள்? உங்களுக்கு இதைத் தெரிந்து கொள்ள ஆவல் ஏற்படவில்லை போலும். ஆனுலும் பரவாயில்லை. நான் உங்களுக்குக் காரணத்தைச் சொல்லுகிறேன். இப்போது அல்ல, இடைவேளை முடிந்தவுடன். யாரேனும் வந்து விடுவார்களோ என்று எனக்கு ஓயாமல் பதற்றம் உண்டாகிறது...''

மாரியா நிக்கலாயெவ்னு இந்தக் கடைசிச் சொற்களைக் கூறி முடிப்பதற்குள் வெளிக் கதவு உண்மையாகவே பாதி திறந்தது, தனி அறைக்குள் துருத்தியது ஒரு தலை—சிவந்து எண்ணெயும் வியர்வையும் வடிந்தது, இன்னும் இளமையானது என்றுலும் பற்கள் இல்லாதது, நேரான நீண்ட முடியும் தொங்கு மூக்கும் வௌவாலுடையவை போன்று பிரமாண்டமான காதுகளும் உள்ளது, ஆவல் ததும்பிய மங்கிய சிறு விழிகளில் தங்க

பிரேம் கண்ணுடியும் அதன் மேல் pince—ner*ம் அணிந்தது. இந்தத் தலை சுற்று முற்றும் கண்ணேட்டியது, மாரியா நிக்கலாயெவ்ஞவைக் கண்டது, கீழ்மை தோன்ற இளித்தது, அசைந்தது... நரம்பு புடைத்த கழுத்து அதன் பின்னே நீண்டது...

மாரியா நிக்கலாயெவ்ஞ அதைப் பார்த்துக் கைக்குட்டையை ஆட்டினுள்.

''நான் இங்கே இல்லை! Ich bin nicht zu Hause, Herr P...! Ich bin nicht zu Hause... க்ஷ்ஷ்ஷ், க்ஷ்ஷ்ஷ்!''

தலை திகைத்தது, செயற்கையாகச் சிரித்தது, ஒரு காலத்தில் எவர் காலடியில் கெஞ்சிக் குழைந்து கொண்டு இருந்ததோ அந்த லீஸ்டு** போன்று நடித்து விம்முவது போல "Sehr gut! Sehr gut!"*** என்று சொல்லி விட்டு மறைந்தது.

''யார் இந்தப் பேர்வழி?'' என்று கேட்டான் ஸானின்.

''இவஞ? விஸ்பாதென் விமர்சகன். 'இலக்கிய வாதி' அல்லது கூலிப் பணியாள், எப்படி வேண்டுமோ வைத்துக் கொள்ளுங்கள். இவ்வூர் வரிக் குத்தகைக்காரன் இவனைக் கூலிக்கு அமர்த்தி இருக்கிருன், ஆகையால் எல்லாவற்றையும் புகழ்வதும் எல்லாவற்றையும் குறித்துப் பரவசப்படுவதும் இவனுடைய கடமை. உள்ளுக்குள் இவனுக்கு ஒரே எரிச்சலும் புகைச்சலுமாய் இருக்கிறது, ஆனல் அதைக் காட்டிக் கொள்ளக்கூட இவ

---

* வில் கண்ணுடி.

** பேரென்த்ஸ் லீஸ்டு — (1811—1886) — ஹங்கேரியப் பியானே கலைஞர், இசை அமைப்பாளர்.

*** ''நிரம்ப நல்லது! நிரம்ப நல்லது!'' (ஜெர்மன்).

னுக்குத் துணிவு கிடையாது. இவன் பயங்கரமான அரட்டைக் கல்லி. இதோ போய் நான் நாடக மன்றத்தில் இருப்பதை எல்லோரிடமும் சொல்லி விடுவானோ என்று அஞ்சுகிறேன். ஆனால் எல்லாம் ஒன்றுதான்.''

இசைக்குழு வால்ட்ஸ் மெட்டை வாசித்தது, திரை மறுபடி தூக்கப்பட்டது... கோரணியும் விம்மலும் அரங்கில் மறுபடி தொடங்கின.

மாரியா நிக்கலாயெவ்னு மீண்டும் சோபாவில் உட்கார்ந்து,''நல்லது'' என்று பேச்சை தொடர்ந் தாள். ''நீங்கள் மாட்டிக் கொண்டு விட்டீர்கள், உங்கள் மணப் பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்து இன்பம் அனுபவிப்பதற்குப் பதில் என்னோடு இருப் பது உங்களுக்குக் கட்டாயம் ஆகி விட்டது... ஆகையால் உருட்டி விழிக்காதீர்கள், சிடுசிடுக் காதீர்கள். எனக்கு உங்கள் நிலைமை புரிகிறது. உங்களை விருப்பம் போலப் போக விட்டு விடு கிறேன் என்று ஏற்கெனவே வாக்கு கொடுத்திருக் கிறேன். இப்போது என் குற்ற ஏற்பைக் கேளுங் கள். எனக்கு எல்லாவற்றையும் விட உகப்பானது எது என்று தெரிந்து கொள்ள விரும்புகிறீர்களா?''

''விடுதலை'' என்று கூறினான் ஸானின்.

மாரியா நிக்கலாயெவ்னு தன் கையை அவ னுடைய கையின் மேல் வைத்தாள்.

''ஆமாம், திமீத்ரி பாவ்லவிச்'' என்றாள். சிறப்பான ஏதோ ஒன்று, சந்தேகமற்ற நேர்மை யும் முக்கியத்துவமும் உள்ளது, அவளுடைய குரலில் ஒலித்தது. ''எல்லாவற்றிலும் அதிகமாக வும் முதன்மையாகவும் நான் விரும்புவது விடு தலை. நான் இதைச் சொல்லிப் பெருமை அடித்துக் கொள்வதாக நினைக்காதீர்கள்.பெருமை பாராட்ட இதில் ஒன்றும் இல்லை.நிலைமை இப்படிப்

பட்டது, எப்போதும் எனக்கு இப்படி இருந்தது, நான் சாகும் வரை இருந்து வரும். குழந்தைப் பருவத்தில் நான் அடிமைத்தனத்தை மிக நிறை யப் பார்த்து அலுத்துப் போனேன், அதனால் போதுமான துன்பம் அனுபவித்து விட்டேன் என்று நினைக்கிறேன். தவிர என் ஆசிரியர் Monsieur Gaston என் கண்களைத் திறந்து விட்டார். இப்பலீத் ஸீதரிச்சுக்கு நான் ஏன் வாழ்க்கைப் பட்டேன் என்பது இப்போது உங்களுக்கு ஒரு வேளை புரியும். இவரிடம் நான் கட்டற்றவள், முழு மையாகச் சுதந்திரமானவள் — வளி போல, வீசும் காற்று போல... மணத்துக்கு முன்பே இதை நான் அறிந்திருந்தேன். இவரோடு நான் விருப் பம் போல வாழலாம் என்பதை அறிந்திருந் தேன்!''

மாரியா நிக்கலாயெவ்னு பேச்சை நிறுத்தி விட்டு விசிறியை ஒரு புறம் எறிந்தாள்.

''உங்களுக்கு இன்னொன்று சொல்லுகிறேன்: சிந்தனை செய்ய எனக்கு விருப்பந்தான்... அது மகிழ்ச்சி தருவது, நாம் அறிவு பெற்றிருப்பதும் அதற்காகத் தானே. ஆனால் எனது சொந்தச் செயல்களின் விளைவுகள் பற்றி நான் சிந்திப்பதே கிடையாது. விளைவுகள் நேரும் போது என் மேல் நான் இரக்கம் கொள்வது இல்லை—இம்மி அளவு கூட! எனக்குப் பிடித்த பழமொழி ஒன்று உண்டு: "Cela ne tire pas á consèquence"*. இதை ருஷ்ய மொழியில் எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. இது சரிதான்: என்ன tire à consèquence? இங்கே, இந்த உலகத்தில், நான் யாருக்

---

* இதனால் எவ்வித விளைவுகளும் ஏற்பட மாட்டா! (பிரெஞ்சு).

கும் கணக்கு காட்ட வேண்டியதில்லை. ஆனால் அங்கே (அவள் விரலை மேல் நோக்கி உயர்த்தினாள்)—சரி, அங்கே அவர்களுக்குத் தெரிந்த விதத்தில் தீர்ப்பு செய்யட்டும். அங்கே என் வழக்கு விசாரிக்கப்படும் போது நான் நாளுக இருக்க மாட்டேன்! நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா? உங்களுக்குச் சலிப்பாய் இல்லையா?''

ஸானின் குனிந்த தலையுடன் உட்கார்ந்திருந்தான். அவன் தலையை நிமிர்த்திஞன்.

''எனக்குச் சலிப்பாகவே இல்லை, மாரியா நிக்கலாயெவ்ஞ, நீங்கள் சொல்வதை ஆவலாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். ஆனால் நான்... ஒப்புக் கொள்கிறேன்... என்னையே கேட்டுக் கொள்கிறேன், எதற்காக நீங்கள் இதை எல்லாம் என்னிடம் சொல்லுகிறீர்கள்?''

மாரியா நிக்கலாயெவ்ஞ சோபாவில் சிறிது நகர்ந்தாள்.

''உங்களையே கேட்டுக் கொள்கிறீர்களா... அவ்வளவு தூரம் ஊகிக்க முடியாதவரா நீங்கள்? அல்லது அவ்வளவு அடக்கம் உள்ளவரோ?''

ஸானின் தலையை இன்னும் மேலே உயர்த்திஞன்.

''இதை எல்லாம் நான் உங்களிடம் ஏன் சொல்லுகிறேன் என்ருல்'' என்று அமைதியான குரலில் தொடர்ந்தாள் மாரியா நிக்கலாயெவ்ஞ. ஆனால் அவளுடைய முகத் தோற்றத்துக்கு இந்த அமைதி முழுதும் பொருந்தவில்லை. ''உங்களை எனக்கு நிரம்பப் பிடித்திருப்பதால் தான் சொல்லுகிறேன். ஆமாம். வியப்படையாதீர்கள், நான் கேலி செய்யவில்லை. உங்களைச் சந்தித்த பிறகு என்னைப் பற்றிய மோசமான எண்ணம்... அல்லது மோச

மானது கூட அல்ல, தவறான எண்ணம் உங்கள் நினைவில் பதிந்திருக்கும் என்று எண்ண எனக்கு உகப்பாய் இல்லை. அதனால்தான் உங்களை இங்கே இழுத்து வந்தேன், உங்களோடு தனியாக இருக்கிறேன், உங்களிடம் இப்படி மனந்திறந்து பேசுகிறேன்... ஆமாம், மனந்திறந்து. நான் பொய் சொல்லவில்லை. ஒன்றைக் கவனத்தில் வையுங்கள், திமீத்ரி பாவ்லவிச், நீங்கள் வேறு ஒருத்தியைக் காதலிக்கிறீர்கள், அவளை மணக்க ஏற்பாடு செய்கிறீர்கள் என்பதை நான் அறிவேன்... என் சுயநலம் இன்மைக்கு நியாயம் வழங்குங்கள்! 'Cela ne tire pas à conséquence' என்று சொல்ல இதோ உங்களுக்குத் தருணம் வாய்த்திருக்கிறது!''

அவள் கலீரென நகைத்தாள், ஆனால் அவளுடைய சிரிப்பு திடீரென்று இடையில் நின்றுவிட்டது. தன் சொற்களே தனக்கு அதிர்ச்சி ஊட்டி விட்டன போல அவள் அசைவற்றிருந்தாள். வழக்கமான நேரங்களில் குதூகலமும் துணிவும் சுடர் விடும் அவளுடைய விழிகளில் நாணம் போன்ற ஒன்று, துயரம் போன்ற ஒன்று கூட, சட்டெனத் தோன்றியது.

''பாம்பு! ஐயோ, இவள் பாம்பு!'' என்று நினைத்துக் கொண்டான் ஸானின். ''ஆனால் எவ்வளவு அழகான பாம்பு!''

''என்னுடைய லார்னெட்டைக்* கொடுங்கள்'' என்று திடீரெனக் கூறினாள் மாரியா நிக்கலாயெவ்னா. ''இந்த jeune première** அவ்வளவு மோசமானதா என்று பார்க்க எனக்கு விருப்பம்

---

* Lornette என்னும் பிரெஞ்சுச் சொல். நாடக மன்றத்தில் பார்வையாளர்கள் பயன்படுத்தும் பிடி வைத்த தொலைநோக்கி.

** குட்டி அரங்கேற்றம் (பிரெஞ்சு).

உண்டாகிறது. இளைஞர்கள் காதலில் மட்டு மீறி ஈடுபடக் கூடாது என்ற ஒழுக்க நெறி நோக்கத் துக்காக அரசாங்கம் இதை ஏற்பாடு செய்திருக் கிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.''

ஸானின் அவளுக்கு லார்னெட்டைக் கொடுத் தான். அவளோ, அவனிடமிருந்து அதை வாங்கிக் கொண்டு அவனுடைய கையை இரண்டு கைகளா லும் கொஞ்சம் ஓசையுடன் சட்டெனப் பிடித்துக் கொண்டாள்.

''சிந்தனையில் ஆழ்ந்து விடாதீர்கள்'' என்று புன்னகையுடன் கிசுகிசுத்தாள். ''ஒன்று சொல் லட்டுமா? எனக்கு விலங்கு பூட்ட முடியாது. ஆனால் நானுந்தான் விலங்கு பூட்டுவது இல்லையே! நான் விடுதலையை விரும்புகிறேன், கடமைகளை ஏற்க மறுக்கிறேன் — என் விஷயத்தில் மட்டும் அல்ல. நல்லது, இப்போது கொஞ்சம் நகருங்கள், நாடகத்தைக் கேட்போம் வாருங்கள்.''

மாரியா நிக்கலாயெவ்னா லார்னெட் வழியாக அரங்கைப் பார்க்கலானாள். ஸானினும் அங்கேயே பார்க்கத் தொடங்கினான்—தனி அறையின் அரை இருட்டில் அவள் பக்கத்தில் உட்கார்ந்து அவ ளுடைய சொகுசான மேனியின் வெப்பத்தையும் நறு மணத்தையும் முகர்ந்தவாறும், விருப்பமின்றி முகர்ந்தவாறும், மாலையில்—சிறப்பாகக் கடைசி நிமிடங்களில்—அவள் தன்னிடம் சொன்ன வற்றை எல்லாம் அதே போல விருப்பமின்றி மறுபடி மறுபடி எண்ணிப் பார்த்தவாறும்.

## 40

நாடகம் இன்னும் ஒரு மணிக்கு மேல் நீடித் தது, ஆனால் மாரியா நிக்கலாயெவ்னாவும் ஸானி

னும் அரங்கைப் பார்ப்பதை விரைவில் நிறுத்தி விட்டார்கள். அவர்களுடைய உரையாடல் மறுபடி தொடங்கி, முந்திய பாதையிலேயே சென்றது. ஆனால் இந்தத் தடவை ஸானின் முன்போலப் பேசாதிருக்கவில்லை. தன் மேலும் மாரியா நிக்க லாயெவ்னு மேலும் உள்ளுக்குள் அவன் கோபம் கொண்டான். அவளுடைய ''சித்தாந்தம்'' எவ் வளவு ஆதாரமற்றது என்று அவளுக்கு நிரூபித்துக் காட்ட முயன்றான்—அவளுக்குச் சித்தாந்தங் களில் அக்கறை இருந்தது போல! அவளோடு அவன் வாதம் புரியத் தொடங்கினான். இதனால் அவள் மனதுக்குள் மிகுந்த மகிழ்ச்சி அடைந் தாள். ''வாதிக்கிறான் என்றால் இணங்கி வரு கிறான், அல்லது வருவான் என்று அர்த்தம். இரையைக் கொத்த வருகிறான், அசைந்து கொடுக் கிறான், [கூசி விலகுவதை விட்டு விட்டான்!'' இவ்வாறு முடிவு செய்து அவள் அவனுடைய வாதங்களை மறுத்தாள், சிரித்தாள், இணங்கினாள், சிந்தனையில் ஆழ்ந்தாள், தாக்கினாள்... இதற்கு இடையே அவனுடைய முகமும் அவளுடைய முகமும் ஒன்றை ஒன்று நெருங்கின. அவனுடைய கண்கள் அவளுடைய விழிகளிலிருந்து விலக வில்லை... அந்த விழிகளோ அவனுடைய முக அமைப்புக் கூறுகள் மீது உலாவித் திரிவன போலவும் சுற்றுவன போலவும் இருந்தன. பதிலுக்கு அவன் புன்னகை செய்தான். திட்டமற்ற பொதுக் கருத் துக்களைப் பற்றி அவன் பேசத் தொடங்கி, பரஸ் பர உறவுகளில் இருக்க வேண்டிய நேர்மையைப் பற்றியும் கடமையைப் பற்றியும் காதல், திரும ணம் ஆகியவற்றின் புனிதத்தைப் பற்றியும் விவா தித்தது அவளுக்குச் சாதகமாய்ப் போயிற்று... தெரிந்த சேதி: இந்தப் பொதுக் கருத்துக்கள்

தொடக்கமாக... ஆரம்பப் புள்ளியாகப் பயன் பட மிகவும் ஏற்றவை...

மாரியா நிக்கலாயெவ்னுவை நன்கு அறிந்த வர்கள் ஒரு விஷயத்தை உறுதியாய்ச் சொன்னுர் கள்: வலிமையும் திண்மையும் வாய்ந்த அவ ளுடைய இயல்பு முழுவதிலும் மென்மையும் பணி வும் உள்ள ஒரு தன்மை, அனேகமாகக் கன்னியின் நாணம் போன்ற ஒன்று திடீரென வந்த போது (ஆனுல் அது எங்கிருந்துதான் வந்ததோ?..), ஆம், அப்போது விவகாரம் ஆபத்தான திருப்பத்தை மேற்கொண்டது.

ஸானின் விஷயத்திலும் விவகாரம் இந்தத் திருப்பத்தை மேற்கொண்டு விட்டதாகத் தோன் றியது... ஒரு கணமாவது மனத்தை ஒருமுகப் படுத்த வாய்த்திருந்தால் அவன் தன்னை இகழ்ந்து கொண்டிருப்பான். ஆனுல் மனதை ஒரு முகப்படுத் தவோ தன்னை இகழவோ அவனுக்கு நேரமே கிடைக்கவில்லை.

அவளோ, நேரத்தை வீணுக்கவில்லை. இதெல் லாம் நிகழ்ந்ததற்குக் காரணம், அவன் பார் வைக்கு நன்ருய் இருந்ததுதான்! ''எங்கே பெறு வோம் எங்கே இழப்போம் என்று எப்படி அறிவது?'' என்று விருப்பம் இன்றியே சொல்ல வேண்டி இருக்கிறது.

நாடகம் முடிந்தது. சால்வையைத் தனக்குப் போர்த்தும்படி மாரியா நிக்கலாயெவ்னு ஸானி னைக் கேட்டுக் கொண்டாள். உண்மையிலேயே அற்புதமான அவளுடைய தோள்களை மெல்லிய துணியால் அவன் முழுவதும் போர்த்தும் வரை அவள் அசையாதிருந்தாள். பின்பு அவனேடு கை கோத்துக் கொண்டு தாழ்வாரத்துக்கு வந்தவள்,

அனேகமாக வீரிடத் தெரிந்தாள்: தனியறை வாயிலின் பக்கத்தில் ஏதோ ஆவி போல எதிர்ப் பட்டான் டோன்ஹுாப். அவனது முதுகுக்குப் பின்னே தென்பட்டது விமர்சகனின் ஆபாச உருவம். ''இலக்கியவாதியின்'' எண்ணெய் வடிந்த முகம் வன்மக் களிப்பால் ஒரேயடியாகப் பளிச் சிட்டது.

''சீமாட்டியாரே, நீங்கள் உத்தரவு கொடுத் தால், உங்கள் வண்டியைத் தேடிக் கொண்டு வரட்டுமா?'' என்று மாரியா நிக்கலாயெவ்னுவிடம் வினவினுன் இளம் படை அதிகாரி. கட்டுக்கு அடங் காத சீற்றத்தால் அவனுடைய குரல் நடுங்கியது.

''வேண்டாம், தயவு செய்யுங்கள். என் வேலைக்காரன் கொண்டு வருவான்'' என்று பதி லளித்து விட்டு, ''இருங்கள். இங்கே!'' என்று கட்டளையிடும் தோரணையில் கிசுகிசுத்தாள். பின்பு ஸானினைத் தன்னேடு இழுத்துக் கொண்டு விரை வாக வெளியேறினுள்.

''அட போய்த் தொலையுமேன்! என்னை எதற் காக நச்சரிக்கிறீர்? என்று இலக்கியவாதி மேல் வள்ளென விழுந்தான் டோன்ஹுாப். தன் எரிச்சலை யார் மேலாவது காட்டுவது அவனுக்குத் தேவை யாய் இருந்தது!

"Sehr gut! Sehr gut!" என்று முணுமுணுத்து விட்டு மாயமாய் மறைந்தான் இலக்கியவாதி.

வெளி நடையில் மாரியா நிக்கலாயெவ்னுவுக் காகக் காத்திருந்த அவளுடைய பணியாள் கண் இமைப்பதற்குள் அவளது வண்டியைத் தேடிக் கொண்டு வந்தான். அவள் சட்டென்று அதில் ஏறிக்கொண்டாள். அவள் பின்னே ஸானினும் ஏறி அமர்ந்தான். கதவு மூடப்பட்டதும் மாரியா நிக்கலாயெவ்னு பொங்கிப் பொங்கிச் சிரித்தாள்.

''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டான் ஸானின்.

''ஆ, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள், தயவு செய்து... டோன்ஹாப் உங்களோடு மறுபடி போரிட்டால் என்ன ஆகும்... எனக்காக... என்ற எண்ணம் என் மூளையில் உதித்தது... அற்புதமாய் இருக்கும் அல்லவா?''

''இவரோடு உங்களுக்கு நிரம்ப நெருங்கிய பழக்கமோ?'' என்று கேட்டான் ஸானின்.

''இவனோடா? இந்தச் சின்னப் பையனோடா? நான் இட்ட வேலைகளைச் செய்பவன் இவன். நீங்கள் கவலைப்படாதீர்கள்!''

''அட நான் கவலையே படவில்லை.''

மாரியா நிக்கலாயெவ்னு பெருமூச்செறிந்தாள்.

''ஆ, எனக்குத் தெரியும் நீங்கள் கவலைப்படவில்லை என்பது. ஆனல் கேளுங்கள். ஒன்று சொல்லட்டுமா? நீங்கள் நிரம்ப இனியவர், என்னுடைய கடைசி வேண்டுகோள் ஒன்றை நீங்கள் மறுக்கக் கூடாது. மூன்று நாட்களுக்குப் பின் நான் பாரிஸ் போய் விடுவேன் என்பதை மறக்காதீர்கள். நீங்களோ, பிராங்க்பர்ட் திரும்பி விடுவீர்கள்... நாம் எப்போது சந்திக்கப் போகிறோம்?''

''எந்த மாதிரி வேண்டுகோள் இது?''

''உங்களுக்குக் குதிரையேற்றம் கட்டாயம் தெரிந்திருக்குமே?''

''தெரியும்.''

''அப்போது இப்படிச் செய்வோம். நாளைக் காலையில் நான் உங்களை என்னோடு அழைத்துப் போகிறேன். ஊருக்கு வெளியே போவோம். நம்மிடம் அருமையான குதிரைகள் இருக்கும். அப்புறம் திரும்புவோம், காரியத்தை முடிப்போம்,

அவ்வளவுதான். ஆச்சரியப்படாதீர்கள், இது வெறும் சபலம், நான் பைத்தியம் பிடித்தவள் என்று என்னிடம் சொல்லாதீர்கள்—இதெல்லாம் இருக்கலாம்—ஆனால் 'எனக்குச் சம்மதம்' என்று மட்டும் சொல்லுங்கள்!''

மாரியா நிக்கலாயெவ்னா முகத்தை அவன் பக்கம் திருப்பினாள். வண்டியில் இருட்டாய் இருந்தது, ஆனால் அந்த இருட்டிலேயே அவளுடைய விழிகள் பளிச்சிட்டன.

''உங்கள் விருப்பம், எனக்குச் சம்மதம்'' என்று பெருமூச்சுடன் சொன்னான் ஸானின்.

''ஆ! நீங்கள் பெருமூச்சு விடுகிறீர்கள்!'' என்று அவனை நையாண்டி செய்தாள் மாரியா நிக்கலாயெவ்னா. 'நுகத்தில் கழுத்தைக் கொடுத்த பின் வலிக்கிறதே என்றால் முடியுமா?' என்ற பழமொழியின் அர்த்தம் இதுதான். ஆனால் இல்லை, இல்லை... நீங்கள் அருமையானவர், நல்லவர். கொடுத்த வாக்கை நானும் காப்பாற்றுவேன். இதோ என் கை, உறை இல்லாத கை, செயல் புரியும் வலது கை. அதைப் பிடித்துக் கொள்ளுங்கள், அதன் அழுத்தலை நம்புங்கள். நான் எந்த மாதிரிப் பெண்பிள்ளையோ, அறியேன். ஆனால் மனிதப் பிறவி என்ற முறையில் நான் நேர்மையானவள். என்னுடன் விவகாரத் தொடர்பு வைத்துக் கொள்ளலாம்.''

என்ன செய்கிறோம் என்று தானே நன்றாகப் புரிந்து கொள்ளாமல் ஸானின் அந்தக் கையை உதடுகளில் ஒற்றிக் கொண்டான். மாரியா நிக்கலாயெவ்னா கையை மெதுவாக விடுவித்துக் கொண்டு திடீரென மௌனத்தில் ஆழ்ந்தாள். வண்டி நிற்கும் வரை அவள் பேசவில்லை.

அவள் இறங்கலானாள். என்ன இது? ஸானி

னுக்குத்தான் அப்படித் தோன்றியதா, அல்லது விரைவான, பொசுக்கும் பரிசத்தைக் கன்னத்தில் அவன் உண்மையாகவே உணர்ந்தானு?

தங்கமயமாகப் பளபளத்த வாயில் காப்போன் அவளைக் கண்டதும் ஏந்தி வந்த விளக்குத் தண்டின் நான்கு மெழுகுவத்திகள் படிக்கட்டை வெளிச்சத்தில் முழுக்காட்டின. அதில் ஏறிய வாறு, ''நாளை சந்திப்போம்!'' என்று கிசுகிசுத் தாள் மாரியா நிக்கலாயெவ்ஞ. அவள் விழிகளைத் தாழ்த்திக் கொண்டிருந்தாள். ''நாளை சந்திப் போம்!''

தன் அறைக்குத் திரும்பிய ஸானின் ஜெம்மா விடமிருந்து வந்த கடிதம் மேசை மேல் இருக்கக் கண்டான். சட்டென... அவன் பயந்து போனுன், ஆனுல் தனது அச்சத்தைத் தன்னிடமிருந்தே மறைப்பதற்காக உடனே மகிழ்ச்சி அடைந்தான். கடிதத்தில் சில வரிகளே எழுதப்பட்டிருந்தன. ''காரியத்தின் தொடக்கம்'' நல்லபடி வாய்த்த தில் ஜெம்மா மகிழ்ச்சி தெரிவித்திருந்தாள். பொறுமையாய் இருக்கும்படி அவனுக்கு யோசனை கூறி இருந்தாள். வீட்டில் எல்லோரும் நலம் என் றும் அவன் திரும்பி வருவதை எதிர்பார்த்து மகிழ் வதாகவும் எழுதி இருந்தாள். கடிதம் கொஞ்சம் வறண்டதாக ஸானினுக்குப் பட்டது. ஆனுலும் பேனுவையும் காகிதத்தையும் எடுத்தான்... பின்பு எல்லாவற்றையும் எறிந்து விட்டான். ''என்ன எழுதுவது? நாளைக்கு நானே திரும்பி விடுவேன்... நேரம் ஆகிவிட்டது, நேரம் ஆகிவிட்டது!''

தாமதமின்றிப் படுக்கையில் படுத்துக் கூடிய விரைவில் தூங்க முயன்முன். நடமாடிக் கொண் டும் விழித்துக் கொண்டும் இருக்கையில் அவன் கட் டாயம் ஜெம்மாவைப் பற்றி எண்ணத் தொடங்கி

இருப்பான். அவளைப் பற்றி நினைக்க அவனுக்கு ஏதனாலோ வெட்கமாய் இருந்தது. மனச் சான்று விழித்துக் கொண்டு விட்டது. ஆனால், மறு நாளே எல்லாம் ஒரேயடியாக முடிந்து விடும், இந்த நிலையற்ற சீமாட்டியை என்றென்றைக்கும் பிரிந்து விடுவோம், இந்தச் சப்புச் சவற்றை எல்லாம் மறந்து விடுவோம் என்ற எண்ணத்தால் அவன் தன்னைத் தேற்றிக் கொண்டான்!...

வலுவற்றவர்கள் தங்களோடு பேசிக் கொள்ளும் போது தீவிரமான சொற்களைத் தாராளமாகப் பயன்படுத்துகிறார்கள்.

Et puis... cela ne tire pas à consèquence!

## 41

உறங்குவதற்காகப் படுத்த போது இப்படி எண்ணமிட்டான் ஸானின். ஆனால் மறுநாள் மாரியா நிக்கலாயெவ்னா சவுக்கின் பவளப் பிடியால் அவனுடைய அறைக் கதவைப் பொறுமை இன்றித் தட்டிய பின் வாயிலில் அவளைக் கண்ட போது அவன் என்ன நினைத்தான்? பருமனாக எடுத்துக் கட்டிய பின்னல் மீது ஆடவர் தொப்பி அணிந்து, முகவலைத் திரையை நகர்த்தித் தோள் மேல் போட்டுக் கொண்டு, உதடுகளிலும் விழிகளிலும் முகம் முழுவதிலும் புன்னகை தவழ, கருநீலச் சவாரி உடையின் பின் தொங்கல் கை மேல் இலக நின்று கொண்டிருந்தாள் அவள். அப்போது அவன் என்ன நினைத்தான் என்பது பற்றி வரலாறு மௌனம் சாதிக்கிறது.

"என்ன? தயாரா?" என்று கணீரென ஒலித்தது குதூகலக் குரல்.

ஸானின் கோட்டுப் பொத்தான்களைப் போட்டுக் கொண்டு பேசாமல் தொப்பியை எடுத்துக் கொண்டான். மாரியா நிக்கலாயெவ்னு பளிச்சிடும் பார்வையை அவன் மேல் வீசி, தலையை அசைத்து விட்டுப் படிக்கட்டில் தடதடவென்று இறங்கிச் சென்ருள். அவன் அவள் பின்னே விரைந்தான்.

வாசலுக்கு எதிரே வீதியில் முன்பே நின்று கொண்டிருந்தன மூன்று குதிரைகள். ஒன்று தங்க நிறமும் செம்பழுப்புமான உயர் சாதிப் பெண் குதிரை . பற்கள் தெரியும்படித் திறந்த வாயுள்ள உலர்ந்த மூஞ்சியும் பிதுங்கிய கரு விழிகளும் மானுடையவை போன்ற கால்களும் உள்ளது. கொஞ்சம் மெலிந்தது என்ருலும் அழகானது, நெருப்பு போலப் பொறி பறப்பது. இது மாரியா நிக்கலாயெவ்னுவுக்காக. ஸானினுக்காக இருந்த தூய கரு நிறக் குதிரை பெரியது, அகலமானது, கொஞ்சம் கனத்தது. மூன்ருவது பரி குதிரைக்காரனுக்காக. மாரியா நிக்கலாயெவ்னு தன் குதிரை மேல் அனுயாசமாக ஏறி அமர்ந்தாள்... குதிரை கால்களை அடித்து வாலை உயர்த்திப் பிட்டத்தைத் தணித்தவாறு சுழன்றது. ஆனல் மாரியா நிக்கலாயெவ்னு (குதிரையேற்றத்தில் தேர்ந்தவள்!) அதை நிறுத்திஞள். போலஸவிடம் சொல்லிக் கொள்ள வேண்டி இருந்தது. அவன் எப்போதும் போலக் குல்லாயும் பொத்தான்கள் போடாத அங்கியுமாக மாடி முகப்புக்கு வந்து மெல்லிழைக் கைக்குட்டையை ஆட்டினன், ஆனல் புன்னகையே செய்யவில்லை. மாருக முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்தான். ஸானினும் தன் குதிரை மேல் ஏறிக் கொண்டான். மாரியா நிக்கலாயெவ்னு சவுக்கிஞல் கணவனுக்குச் சலாம் செய்தாள்,

பின்பு தன் குதிரையின் வளைந்த மழமழப்பான கழுத்தில் அதனால் அடித்தாள். குதிரை பின் கால் களில் எம்பி நின்று முன்னே தாவி, பழக்கப்பட்ட மெது நடையில் புறப்பட்டது. எல்லா நரம்பு களும் துடிக்க, கடிவாளத்தைக் குதப்பி வெறுங் காற்றைக் கடித்துத் திடீர் திடீரென்று செருமிய வாறு நடந்தது அது. பின்னே சென்ற ஸானின் மாரியா நிக்கலாயெவ்னா மீது பார்வை செலுத் தினான். நன்றாகப் பொருந்திய, ஆனால் இறுக்கமற்ற கச்சு அணிந்த அவளுடைய விகுவான மெல்லிய மேனி தன்னம்பிக்கையும் லாகவமும் துலங்க அழகாக அசைந்து கொண்டிருந்தது. அவள் தலை யைப் பின்னே திருப்பி ஸானினை வெறும் கண் சாடையால் அழைத்தாள். அவன் அவளுக்குப் பக்கத்தில் வந்தான்.

''ஊம், பார்த்தீர்களா, எவ்வளவு நன்றாய் இருக்கிறது'' என்றாள் அவள். ''கடைசியாக, பிரிவதற்கு முன்னால் உங்களிடம் சொல்லுகிறேன்: நீங்கள் அற்புதமானவர். பச்சாத்தாபப்பட மாட் டீர்கள்.''

இந்தக் கடைசிச் சொற்களைக் கூறிய போது அவற்றை உறுதிப்படுத்தவும் அவற்றின் பொருளை அவன் உணரும்படிச் செய்யவும் விரும்பியவள் போலத் தலையை மேலும் கீழுமாகச் சில தடவை கள் ஆட்டினாள்.

அவளுடைய தோற்றத்தில் குமிழியிட்ட இன்பத்தைக் கண்டு ஸானின் பெரு வியப்பு அடைந்தான். நிரம்ப... மிக நிரம்பத் திருப்தி அடைந்த குழந்தைகளிடம் காணப்படும் பெரு மிதம் கூட அவளது முகத்தில் ததும்பியது.

சற்று தூரத்தில் இருந்த நகர எல்லை வரை யில் மெது நடையாகப் போன அவர்கள் அங்

கிருந்து சாலையில் குதிரைகளை நாற்கால் பாய்ச்சலில் விரட்டிச் சென்றார்கள். பருவ நிலை நன்றாக, இதமாக இருந்தது. அவர்களுக்கு எதிரே பெருகி வந்த காற்று அவர்களுடைய காதுகளில் சீழ்க்கை அடித்தது. அவர்களுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. இளமையும் உடல் நலமும் உள்ள வாழ்க்கை, கட்டின்றி முன்னே விரைந்த இயக்கம் ஆகியவற்றின் உணர்வு அவர்கள் இருவரையும் ஆட்கொண்டது. இந்த உணர்வு நொடிக்கு நொடி வளர்ந்து கொண்டு போயிற்று.

மாரியா நிக்கலாயெவ்னா குதிரையின் வேகத்தை மட்டுப்படுத்தி மீண்டும் மெது நடையாக ஓட்டினாள். ஸானின் அவளது உதாரணத்தைப் பின்பற்றினான்.

உவகை பொங்க ஆழ்ந்த பெருமூச்சு விட்டு, ''இதோ இதுதான் வாழ்க்கையை வாழத் தக்கது ஆக்குகிறது'' என்று பேசத் தொடங்கினாள் அவள். ''நாம் எதை விரும்பினோமோ, எது நடக்கக் கூடாததாகத் தோன்றியதோ, அதைச் செய்ய வாய்த்து விட்ட போது இந்த வாய்ப்பைப் பயனும் படுத்திக் கொள்வோம், நெஞ்சே, இறுதி வரையில்!'' இவ்வாறு கூறிக் குரல்வளையைக் குறுக்காகத் தடவிக் காட்டினாள். ''தான் எவ்வளவு பெருந்தன்மை உள்ளவன் என்று அப்போது மனிதன் உணர்கிறான். இப்போது நானேதான்... எவ்வளவு பெருந்தன்மை உள்ளவள்! உலகம் முழுவதையும் தழுவிக் கொள்ளலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. அதாவது, இல்லை, உலகம் முழுவதையும் அல்ல!.. இதோ இவனை நான் தழுவிக் கொள்ள மாட்டேன்'' என்று பிச்சைக்கார உடையும் தானுமாக ஒரு புறம் ஒதுங்கிய கிழவன் ஒருவனைச் சவுக்கால் சுட்டிக் காட்டினாள். ''ஆனால்

இவனுக்கு இன்பமூட்ட நான் தயார். இந்தாரும், எடுத்துக் கொள்ளும்'' என்று ஜெர்மன் மொழியில் உரக்கக் கத்தி, பணப் பையை அவன் காலருகே எறிந்தாள். கனத்த துணிப் பை (தோல் பை அந்தக் காலத்தில் வழக்குக்கு வரவில்லை) சாலையில் ஓசையுடன் விழுந்தது. வழிப்போக்கன் வியந்து நின்று விட்டான். மாரியா நிக்கலாயெவ்ஞவோ கெக்கலித்து, குதிரையைப் பாய்ச்சலில் விரட்டினுள்.

''குதிரையேற்றத்தில் உங்களுக்கு நிரம்பக் களிப்பு உண்டாகிறதோ?'' என்று அவளை எட்டிப் பிடித்த ஸானின் கேட்டான்.

மாரியா நிக்கலாயெவ்ஞ குதிரையின் வேகத்தைச் சட்டென மறுபடி மட்டுப்படுத்தினுள். வேறு வகையில் அவள் அதை நிறுத்தவில்லை.

''நன்றி அறிவிப்பிலிருந்து தப்பி வெளியேற விரும்பினேன், அவ்வளவுதான். எனக்கு நன்றி தெரிவிப்பவன் என் மகிழ்ச்சியைக் கெடுக்கிருன். ஏனென்றுல் நான் இதைச் செய்தது அவனுக்காக அல்ல, எனக்காக. எனக்கு நன்றி தெரிவிக்க அவன் எப்படித் துணியலாம்? நீங்கள் கேட்டது என் காதில் சரியாகப் படவில்லை.''

''நான் கேட்டேன்... நான் அறிய விரும்பினேன், நீங்கள் இன்று இவ்வளவு குதூகலமாக இருப்பதற்குக் காரணம் என்ன என்று.''

''ஒன்று சொல்லட்டுமா'' என்றுள் மாரியா நிக்கலாயெவ்ஞ. ஒன்று ஸானின் சொன்னது இப்போதும் அவள் காதில் விழவில்லை, அல்லது அவனுடைய கேள்விக்கு விடை அளிப்பது அவசியம் என்று அவள் நினைக்கவில்லை. ''நம்மை நிழலாய்த் தொடர்கிருனே, இந்தக் குதிரைக்காரன் எனக்கு ஓரேயடியாக அலுத்துப் போய் விட்டான். திரு

வாளர்கள் எப்போதுதான் வீட்டுக்குப் போவார்களோ என்றே எண்ணிய வண்ணமாய் இருக்க வேண்டும் இவன். எப்படி இவனிடமிருந்து கழற்றிக் கொள்ளலாம்?'' அவள் பையிலிருந்து குறிப்பு நோட்டைச் சட்டென்று எடுத்தாள். ''ஒரு கடிதம் கொடுத்து இவனை நகரத்துக்கு அனுப்பலாமா? கூடாது... சரி இல்லை! ஆ! இப்படிச் செய்யலாம்! அதோ, முன்னே இருப்பது என்ன? சாப்பாட்டுக் கடையா?''

அவள் காட்டிய திசையில் பார்த்தான் ஸானின்.

''ஆமாம், சாப்பாட்டுக் கடைதான் போலிருக்கிறது.''

''அப்படியானால் நிரம்ப நல்லது. நாம் திரும்பும் வரை இந்தச் சாப்பாட்டுக் கடையில் பீர் குடித்துக் கொண்டு இருக்கும்படி இவனுக்கு உத்தரவிடுகிறேன்.''

''ஆனால் இவன் என்ன நினைப்பான்?''

''நமக்கு அதில் என்ன அக்கறை? தவிர, இவன் நினைக்கவே போவதில்லை, பீர் குடிக்கப் போகிறான், அவ்வளவுதான். நல்லது, ஸானின்'' (குலப் பெயரால் மட்டும் அவனை அவள் அழைத்தது இதுவே முதல் தடவை), ''விடுங்கள் குதிரையை, பாய்ச்சலில்!''

சாப்பாட்டுக் கடைக்கு நேராகப் போனதும் மாரியா நிக்கலாயெவ்னா குதிரைக்காரனை அருகே அழைத்து, தான் வேண்டுவது என்ன என்பதை அவனுக்குத் தெரிவித்தாள். ஆங்கிலக் குடும்பத்தில் பிறந்தவனும் ஆங்கில மனப்பான்மை கொண்டவனுமான குதிரைக்காரன், பேசாமல் தொப்பி விளிம்பில் கை வைத்துச் சலாம் செய்து விட்டு,

குதிரையிலிருந்து குதித்து இறங்கி, கடிவாளத்தைப் பிடித்து அதை நடத்திச் சென்றான்.

''இப்போது நாம் சுதந்திரப் பறவைகள்!'' என்று கூவினாள் மாரியா நிக்கலாயெவ்னா. ''எந்தத் திக்கில் போகலாம் நாம்—வடக்கிலா, தெற்கிலா, கிழக்கிலா, மேற்கிலா? பாருங்கள், இப்போது நான் முடிசூட்டு விழாவில் ஹங்கேரிய மன்னன்* போல'' (அவள் சவுக்கு நுனியால் நான்கு திசைகளையும் சுட்டினாள்). ''எல்லாம் நமது! இல்லை, ஒன்று சொல்லட்டுமா: அங்கே எவ்வளவு அருமையான மலைகள், எப்பேர்ப்பட்ட காடு, பார்த்தீர்களா! போவோம் வாருங்கள் அங்கே, மலைகளுக்கு, மலைகளுக்கு!

In die Berge, wo die Freiheit thront!**

அவள் சாலையிலிருந்து குதிரையைத் திருப்பி, நடமாட்டமற்ற குறுகிய பாதையில் அதை விரட்டிச் சென்றாள். பாதை மலைகளுக்குப் போவதே போல் காணப்பட்டது. ஸானின் அவள் பின்னே குதிரையைச் செலுத்தினான்.

---

* ஹங்கேரிய மன்னர்களுக்குப் புனிதர் ஸ்டீபனின் மகுடம் சூட்டுவதற்கு இடைக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட சடங்கைத் துர்கேனிவ் இங்கே குறிக்கிறார். இதன்படி, புதிய மன்னன் வெண் புரவியில் ஏறி முடிசூட்டு மலைச் சிகரத்தை அடைந்து, வாளை உருவி, கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகளில் நான்கு வீச்சுக்கள் செய்தான். பகைவன் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அவனிடமிருந்து ஹங்கேரியைக் காக்க அரசன் ஆயத்தமாய் இருந்ததை இந்தச் சடங்கு உருவகப்படுத்தியது.

** விடுதலை ஆட்சி செலுத்தும் மலைகளுக்கு! (ஜெர்மன்).

## 42

இந்தப் பாதை விரைவில் ஒற்றையடிப் பாதை யாக மாறி, முடிவில் ஒரு கிடங்கு குறுக்கிட்டதால் அறவே மறைந்து விட்டது. ஸானின் திரும்பலாம் என்றான், ஆனால் மாரியா நிக்கலாயெவ்னா, ''வேண் டாம்! நான் மலைக்குப் போக விரும்புகிறேன்! பறவைகள் பறப்பது போல நேரே போவோம்'' என்று கூறி, கிடங்கைத் தாண்டும்படி குதிரையை முடுக்கினாள். ஸானினும் கிடங்கைத் தாண்டினான், கிடங்கின் மறு புறம் தொடங்கியது புல் வெளி. முதலில் உலர்ந்தும் பிறகு நனைந்தும் அப்புறம் ஒரே சதுப்பு நிலமாகவும் இருந்தது அது. நீர் எங்கும் கசிந்து குட்டங்களாகத் தேங்கி நின்றது. மாரியா நிக்கலாயெவ்னா குதிரையை வேண்டு மென்றே இந்தக் குட்டங்கள் வழியே செலுத் தினாள். கலகலவென்று சிரித்து ''வாருங்கள், பள்ளிச் சிறுவர்கள் ஆகலாம்!'' என்று மறுபடி மறுபடி சொன்னாள்.

'' 'துளிகள் தெறிக்க வேட்டையாடுவது' என்றால் என்ன தெரியுமா?'' என்று கேட்டாள் அவள்.

''தெரியும்'' என்றான் ஸானின்.

''என் சிறிய தகப்பனார் நாய்களுடன் விலங்கு களைத் துரத்தி வேட்டையாடி வந்தார். நான் அவரோடு குதிரை ஏறிப் போனேன்—வெண்பனி உருகும் வசந்த காலத்தில். அற்புதம்! இப்போது நாம் போகிறோமே அந்த மாதிரி — துளிகள் தெறிக்க. ஒன்றுதான் எனக்கு விளங்கவில்லை. நீங்கள் ருஷ்யர், ஆனால் இத்தாலியப் பெண்ணை மணக்க விரும்புகிறீர்கள். ஆனால் அது உங்கள் பாடு. இது என்ன? மறுபடி கிடங்கா? ஹாப்!''

குதிரை கிடங்கைத் தாண்டிற்று. ஆனால் தொப்பி மாரியா நிக்கலாயெவ்னாவின் தலையிலிருந்து விழுந்து விட்டது, கூந்தல் கலைந்து தோள்களில் சிதறியது. குதிரையிலிருந்து இறங்கித் தொப்பியை எடுத்துக் கொடுக்க ஸானின் விரும்பினான், ஆனால் அவள் அவனைப் பார்த்து, ''தொடாதீர்கள், நானே எடுத்துக் கொள்கிறேன்!'' என்று கத்தினாள். சேணத்திலிருந்து கீழே குனிந்து சவுக்குப் பிடியை வலைத் திரையில் மாட்டித் தூக்கினாள், தொப்பியை எடுத்துத் தலையில் அணிந்தாள், ஆனால் கூந்தலை எடுத்துக் கட்டாமல் மீண்டும் குதிரையைப் பாய்ச்சலில் விரட்டினாள், ஹெ-ஹே என்று ஆரவாரமும் செய்தாள். ஸானின் அவள் அருகாகப் பாய்ந்தான், அகழ்களையும் வேலிகளையும் ஓடைகளையும் அவள் அருகாகத் தாண்டினான், விழுந்தான், சமாளித்து எழுந்து முன்னேறினான். மலையில் ஏறியவாறு அவள் முகத்தையே இடைவிடாமல் பார்த்துக் கொண்டிருந்தான். எப்பேர்ப்பட்ட முகம்! அது முழுவதும் திறந்திருந்தது போலத் தோன்றியது. பேராசையும் ஒளியும் வெறியும் சுடர்ந்த விழிகள் திறந்திருந்தன. உதடுகளும் மூக்குத் துளைகளும் விரியத் திறந்து ஆர்வத்துடன் மூச்சு விட்டுக் கொண்டிருந்தன. அவள் நேரே தனக்கு முன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பார்வையில் பட்டவற்றை எல்லாம் — நிலத்தையும் வானத்தையும் சூரியனையும் காற்றையும் கூட— வசமாக்கிக் கொள்ள ஆசைப்பட்டது அந்த உள்ளம். அதன் வருத்தமெல்லாம், ஆபத்துக்கள் குறைவு என்ற ஒன்றுதான். ஓயாமல் ஆபத்துக்களைச் சமாளிக்க வேண்டி இருந்தால் எவ்வளவு நல்லது! ''ஸானின்!'' என்று கத்திக் கூப்பிட்டாள்

அவள்.''பியூர்கெரின் லெனேராவில்*வருவது மாதிரி இது. நீங்கள் உயிரற்றவர் அல்ல என்பதுதான் வித்தியாசம், ஊம்?.. நான் உயிர் உள்ளவள்!'' துணிவு ஊட்டும் ஆற்றல்கள் ஊற்றெடுத்துப் பொங்கின. துணிந்த பெண் ஒருத்தி குதிரையை நாற்கால் பாய்ச்சலில் விரட்டிச் செல்லவில்லை, குதிரை உடலும் மனித முகமும் கொண்ட—பாதி விலங்கும் பாதி தேவதையும் ஆன—கின்னர மங்கையே இப்படிப் பாய்ந்து ஓடுகிறுள், அவளுடைய புயல் வேகப் பாய்ச்சலால் மிதித்துத் துவைக்கப்படும் நிலப் பரப்பு—நிதானப் போக்கும் நல் வளர்ப்பும் உள்ள பிரதேசம்—பெரு வியப்பு அடைகிறது என்று ஸானினுக்குத் தோன்றியது.

மேலெல்லாம் நுரையும் நீர்த் துளிகளுமாக இருந்த குதிரையைக் கடைசியில் நிறுத்தினுள் மாரியா நிக்கலாயெவ்னு. குதிரை அவளுக்கு அடியில் தள்ளாடியது. வலியது ஆனுலும் எடை மிகுந்த ஸானினின் குதிரைக்கோ, மூச்சு இரைத்தது.

''என்ன? நன்ருய் இருக்கிறதா?'' என்று விந்தையாகக் கிசுகிசுத்தாள் மாரியா நிக்கலாயெவ்னு.

''அற்புதம்!'' என்று உவகை பொங்கக் கூறினுன் ஸானின். அவனுக்கு இன்பக் கிளர்ச்சி உண்டாயிற்று.

''இருங்கள், அடுத்தபடி என்ன செய்யலாம்?'' அவள் கையை நீட்டினுள். அதிலிருந்த உறை கிழிந்திருந்தது.

''உங்களைக் காட்டுக்கு, மலைகளுக்கு அழைத்

* ஜெர்மானியக் கவிஞர் பியூர்கெர் (1747—1794) இயற்றிய ''லெனேரா'' என்னும் கதைப்பாட்டு.

துப் போவதாகச் சொன்னேன்... இதோ அவை, மலைகள்!'' என்றாள். மெய்தான்: துணிந்த குதிரை யேற்ற நிபுணர்கள் வந்து சேர்ந்த இடத்திற்குச் சுமார் இருநூறு தாவடித் தொலைவில் தொடங் கின உயர்ந்த மரங்கள் அடர்ந்த மலைகள். ''பாருங்கள்: சாலையும் அதோ தெரிகிறது. நிதானப்படுத்திக் கொள்வோம், பின்பு முன் னேறுவோம். மெது நடையாகத்தான். குதிரை களை இளைப்பாற விட வேண்டும்.''

அவர்கள் புறப்பட்டார்கள். மாரியா நிக்கலா யெவ்னா ஒரு வலிய கை வீச்சால் கூந்தலைப் பின்னே போட்டாள். பிறகு கையுறைகளைப் பார்த்து, அவற்றைக் கழற்றினாள்.

''கைகள் தோல் நாற்றம் அடிக்கும். ஆனால் உங்களுக்குத்தான் இது பரவாயில்லையே, ஊம்?..'' என்றாள்.

மாரியா நிக்கலாயெவ்னா புன்னகை செய்தாள், ஸானினும் முறுவலித்தான். வெறி கொண்ட இந்தக் குதிரைச் சவாரி அவர்கள் இருவரையும் முடிவாக அருகே கொண்டு வந்து நண்பர்கள் ஆக்கிவிட்டது போல் இருந்தது.

''உங்களுக்கு என்ன வயது?'' என்று அவள் திடீரெனக் கேட்டாள்.

''இருபத்திரண்டு.''

''இருக்க முடியாது! எனக்கும் வயது இருபத் திரண்டு. நல்ல வயதுகள். இரண்டையும் கூட்டி னாலும் முதுமைக்கு நிறையத் தொலைவு இருக் கும். ஆனால் ஒரே வெக்கை. என் முகம் சிவந்து விட்டதோ?''

''சிவப்புப் பூப் போல!''

மாரியா நிக்கலாயெவ்னா முகத்தைக் கைக்குட் டையால் துடைத்துக் கொண்டாள்.

''காடு போய்ச் சேர்ந்தால் போதும். அங்கே குளுகுளுவென்று இருக்கும். பழங்கால மரங்கள் உள்ள நல்ல காடு. நெடுங்கால நண்பன் போல. உங்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்களா?''

ஸானின் சற்று யோசித்தான்.

''இருக்கிறார்கள்... ஆனால் கொஞ்சம் பேர். உண்மை நண்பர்கள் இல்லை.''

''எனக்கு இருக்கிறார்கள் உண்மை நண்பர்கள், ஆனால் நெடுங்கால நண்பர்கள் அல்ல. இதோ இந்தக் குதிரையும் தோழி தான். எவ்வளவு கவனமாக நம்மைச் சுமந்து செல்கிறது! ஆகா, இங்கே அருமையாக இருக்கிறது! நாளைக்கு மறு நாள் நான் உண்மையாகவே பாரிஸ் போவேனா என்ன?''

''ஆமாம்... போவீர்களா என்ன?'' என்று எதிரொலித்தான் ஸானின்.

''நீங்கள் பிராங்க்பர்ட் போய் விடுவீர்களோ?''

''நான் கட்டாயம் பிராங்க்பர்ட் போய் விடுவேன்.''

''சரி, அதற்கென்ன—சந்தோஷமாகப் போங்கள்! ஆனால் இன்றைய நாள் நமது... நமது... நமது!''

---

குதிரைகள் காட்டோரத்தை அடைந்து உள்ளே போயின. மரங்களின் நிழல் எல்லாப் புறங்களிலுமிருந்து விரிவாகவும் மென்மையாகவும் அவர்கள் மேல் கவிந்தது.

''ஓ, இது சுவர்க்கம்! இந்த நிழலில் இன்னும் ஆழத்தில், மேலே போவோம், ஸானின்!''

குதிரைகள் சற்று அசைந்தாடி, செருமிச் சீறியவாறு ''நிழலில் இன்னும் ஆழத்தில்'' அமைதியாக முன்னேறின. அவை சென்ற பாதை திடீ

ரென ஒரு பக்கம் திரும்பி, கணிசமாகக் குறுகிய கணவாயில் புகுந்தது. ஈதர் புதர், பெரணி, தேவ தாருக் கீல், நனைந்த முந்திய ஆண்டுத் தழை ஆகிய வற்றின் மயக்கமூட்டும் அடர் மணம் அதில் ஒரேயடியாகக் குமைந்தது. பெரிய பழுப்புப் பாறைகளின் பிளவுகளிலிருந்து நிலையான குளிர்மை பரவியது. பாதையின் இரு மருங்குகளிலும் பச்சைப் பாசி படர்ந்த உருண்டைத் திட்டுக்கள் எழும்பி இருந்தன.

''நில்லுங்கள்! இந்த வெல்வெட்டில் உட்கார்ந்து இளைப்பாற விரும்புகிறேன். எனக்கு இறங்க உதவுங்கள்'' என்றாள் மாரியா நிக்கலாயெவ்னா.

ஸானின் குதிரையிலிருந்து குதித்து இறங்கி அவளிடம் ஓடினான். அவள் அவனுடைய தோள் மேல் கையை ஊன்றி, சட்டென்று தரையில் குதித்து ஒரு வெல்வெட்டுத் திட்டின் மேல் உட்கார்ந்தாள். இரண்டு குதிரைகளின் கடிவாள வார்களையும் பிடித்தவாறு அவளுக்கு எதிரே நின்றான் ஸானின்.

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்...

''ஸானின், உங்களால் மறக்க முடியுமா?''

தலைக்குநாள்... வண்டியில் நடந்தது ஸானினுக்கு நினைவு வந்தது.

''இது என்ன, கேள்வியா... அல்லது கண்டனமா?

''நான் யாரையும் எதற்காகவும் கண்டனமே செய்ததில்லை. ஆமாம், வசிய மருந்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?''

''எதில்?''

''வசிய மருந்தில். நம் நாட்டுப் பாடல்களில் வருமே, தெரியுமா? சாதாரண மக்களின் ருஷ்யப் பாடல்களில்?''

''ஓ! அதைப் பற்றியா சொல்கிறீர்கள்...'' என்று இழுத்தான் ஸானின்.

''ஆம், அதைப் பற்றித்தான். நான் நம்பு கிறேன்... நீங்களும் நம்புகிறீர்கள்.''

''வசிய மருந்து... பில்லி சூனியம்... எல்லாம் உலகத்தில் சாத்தியந்தான். முன்பு நான் நம்பா திருந்தேன் — இப்போது நம்புகிறேன். என்னையே எனக்கு அடையாளம் தெரியவில்லை'' என்றான் ஸானின்.

மாரியா நிக்கலாயெவ்னு சற்றுச் சிந்தனை செய்து சுற்று முற்றும் கண்ணோட்டினாள்.

''இந்த இடம் அறிமுகமானது போல எனக்குத் தோன்றுகிறது. ஸானின், அந்த அகன்று படர்ந்த ஓக் மரத்துக்கு அப்பால் சிவப்பு நிறக் கட்டைச் சிலுவை தெரிகிறதா, பாருங்கள்! தெரி கிறதா இல்லையா?'' என்றாள்.

ஸானின் ஒரு பக்கம் சில அடிகள் விலகினான்.

''தெரிகிறது.''

மாரியா நிக்கலாயெவ்னு மனநிறைவு தோன்றச் சிரித்துக் கொண்டாள்.

''ஆ, நல்லது! நாம் எங்கே இருக்கிறோம் என் பது எனக்குத் தெரிந்து விட்டது. நாம் இன்னும் வழி தவறி விடவில்லை. அது என்ன சத்தம்? மரம் வெட்டும் சத்தமா?''

ஸானின் காட்டுக்கு உள்ளே பார்த்தான்.

''ஆமாம்... அங்கே யாரோ ஒருவன் உலர்ந்த கிளைகளை வெட்டிக் கொண்டிருக்கிறான்.''

''தலை மயிரைச் சரிப்படுத்திக் கொள்ள வேண் டும். இல்லாவிட்டால் அவன் பார்த்து விடுவான், கண்டனம் செய்வான்'' என்று கூறிய மாரியா நிக் கலாயெவ்னு தொப்பியைக் கழற்றி விட்டு நீண்ட கூந்தலைப் பின்னிக் கொள்வதில் பேச்சின்றியும்

பெருமிதத்துடனும் முனைந்தாள். ஸானின் அவளுக்கு முன்னே நின்று கொண்டிருந்தான்... சிற்சில இடங்களில் பாசித் துரும்புகள் ஒட்டிக் கொண்டிருந்த உடையின் கருநீல மடிப்புக்களுக்கு அடியில் அவளுடைய வடிவமைந்த அங்கங்கள் எடுப்பாகத் தெரிந்தன.

ஸானினுடைய முதுகுக்குப் பின்னால் ஒரு குதிரை திடீரென்று சுண்டி இழுக்கவே அவன் தன் வசமின்றித் தலையோடு கால் நடுநடுங்கினான். அவனுக்குள் எல்லாமே தாறுமாறாகி இருந்தன. நரம்புகள் தந்திகள் போல விறைப்பாகி இருந்தன. தனக்கே தன்னை அடையாளம் தெரியவில்லை என்று அவன் சொன்னது சரிதான். அவன் மெய்யாகவே வசிகரணத்துக்கு ஆளாகி இருந்தான். அவனுடைய உள்ளமும் உடலும் ஒரே... ஒரே நோக்கத்தால், ஒரே விருப்பத்தால் நிறைந்திருந்தன. மாரியா நிக்கலாயெவ்னா ஊடுருவும் பார்வையை அவன் மேல் செலுத்தினாள்.

''ஊம், இப்போது எல்லாம் இருக்க வேண்டியபடி இருக்கின்றன'' என்று தொப்பியைப் போட்டுக் கொண்டாள். ''நீங்கள் உட்காரப் போவதில்லையா? இதோ இப்படி! வேண்டாம், பொறுங்கள்... உட்காராதீர்கள்! இது என்ன?''

மர முடிகளின் மேலாக, காட்டின் காற்றில் பரவியது தெளிவற்ற அதிர்ச்சி.

''இடியா இடிக்கிறது?''

''அப்படித்தான் தோன்றுகிறது'' என்றான் ஸானின்.

''ஆகா! அப்படியானால் இது விழாக் கொண்டாட்டம்! களிக் கொண்டாட்டம்! இது ஒன்று தான் குறையாக இருந்தது!'' என்று ஆர்ப்பரித்தாள் மாரியா நிக்கலாயெவ்னா. அமிழ்ந்த இடி

யோசை இரண்டாவது தரம் கேட்டது, உயர்ந்து தணிந்தவாறு நெடுகப் பரவிற்று. ''பலே! Bis!* நினைவிருக்கிறதா, நேற்று நான் உங்களுக்குச் சொன்னேனே, 'ஈனிடு' பற்றி? அவர்களும் காட்டில் இடிப் புயலில் அகப்பட்டுக் கொண்டார்கள். ஆனால் நாம் போக வேண்டும்'' என்று சட்டெனத் துள்ளி எழுந்தாள். ''குதிரையை என் பக்கத்தில் கொண்டு நிறுத்துங்கள்... எனக்குக் கைத்தாங்கல் கொடுங்கள். அப்படித்தான். நான் கனமானவள் அல்ல''.

அவள் பட்சி போலப் பறந்து சேணத்தில் அமர்ந்தாள். ஸானினும் குதிரை மேல் ஏறிக் கொண்டான்.

''நீங்கள் என்ன, வீட்டுக்கா?'' என்று நம்பிக்கையற்ற குரலில் கேட்டான்.

''வீட்டுக்கு!!'' என்று இடை நிறுத்தத்துடன் சொல்லி விட்டுக் கடிவாள வாரை எடுத்துக் கொண்டு, ''வாருங்கள் என் பின்னே'' என்று அனேகமாய் அதட்டி உத்தரவிட்டாள்.

சாலைக்குப் போய், சிவப்புச் சிலுவையைக் கடந்து பள்ளத்தாக்கில் இறங்கினாள். நாற்சந்தி வரை போய் வலப் புறம் திரும்பி மீண்டும் மலைக்குச் சென்றாள்... பாதை எங்கு போயிற்று என்று அவள் அறிந்திருந்தது புலப்பட்டது. அது மேலும் மேலும் காட்டிற்குள் சென்றது. அவள் ஒன்றும் பேசவுமில்லை, அக்கம் பக்கம் பார்க்கவுமில்லை. மிடுக்குடன் முன்னே போனாள். ஸானின் பணிவுடன் கீழ்ப்படிந்து அவளைப் பின் தொடர்ந்தான். துடிப்பற்றுப் போன அவன் நெஞ்சில் சுய விருப்பத்தின் ஒரு பொறி கூட இல்லை. மழை தூற்றத்

---

* ''இரண்டாவது தடவை!'' (லத்தீன்).

தொடங்கியது. அவள் குதிரையை வேகமாக விரட்டினாள். அவன் பின்தங்காமல் அவளைத் தொடர்ந்தான். முடிவில், பிர் மரச் சோலையின் இருண்ட பசுமையின் ஊடாக, சாம்பல் நிறப் பாறை முகட்டுக்கு அடியில் அவனுக்குத் தென் பட்டது காட்டுக் காவலனின் அற்றலைந்த குடிசை. அதன் படல் சுவற்றில் இருந்தது தாழ்ந்த கதவு. மாரியா நிக்கலாயெவ்னா புதர்களின் ஊடாகக் குதிரையைச் செலுத்தி அதிலிருந்து குதித்து, சட்டென்று குடிசைக் கதவருகே போய் ஸானின் பக்கம் திரும்பி, ''ஈனியசு?'' என்று கிசுகிசுத் தாள்.

---

நான்கு மணி நேரம் கழிந்த பின் மாரியா நிக் கலாயெவ்னாவும் ஸானினும் சேணத்தில் உறங்கி வழிந்து கொண்டிருந்த குதிரைக்காரன் பின் தொடர விஸ்பாதென் தங்கு விடுதிக்குத் திரும்பி வந்தார்கள். காரியஸ்தனுக்கு எழுதிய கடிதத் தைக் கையில் பிடித்தவாறு தன் மனைவியை எதிர் கொண்டான் போலஸவ். அவளைச் சிறிது உற்றுப் பார்த்த பின் முகத்தில் ஓரளவு அதிருப்தியைக் காட்டினான்.

''பந்தயத்தில் நான் தோற்று விட்டேனா என்ன?'' என்று வாய்க்குள் முணுமுணுக்கக் கூடச் செய்தான்.

மாரியா நிக்கலாயெவ்னா வெறுமே தோள் களைக் குலுக்கினாள்.

---

அன்றே இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு, கதியற்றவன் போலவும் பாழ்பட்டவன் போல வும் தன் அறையில் அவளுக்கு எதிரே நின்று கொண்டிருந்தான் ஸானின்...

''எங்கே போவதாக உத்தேசம்? பாரிசுக்கா, அல்லது பிராங்க்பர்ட்டுக்கா?'' என்று அவனிடம் கேட்டாள் அவள்.

''நீ எங்கே இருப்பாயோ அங்கே போவேன், நீ என்னை விரட்டியடிக்கும் வரை உன்னோடு இருப்பேன்'' என்று பதிலளித்து, தன்னை அடிப்படுத்தியவளின் கைகளில் புகலற்று விழுந்தான் அவன். அவள் அவற்றை விடுவித்துக் கொண்டு அவன் தலை மேல் வைத்து, பத்து விரல்களாலும் அவனுடைய தலைமயிரைப் பிடித்தாள். எதிர்க்க வகையற்ற இந்த முடிகளை நிதானமாகச் சேர்த்துப் பிடித்து முறுக்கினாள். அவளுடைய மேனி விறைப்பாக நிமிர்ந்தது. உதடுகளில் வெற்றிப் புன்னகை தவழ்ந்தது. அகன்று வெளிறிப் பளிச்சிட்ட விழிகளில் வெற்றியால் ஏற்பட்ட மந்திப்பும் தெவிட்டலும் மட்டுமே காணப்பட்டன. பிடிபட்ட பட்சியை உகிர்களால் குத்திப் பிய்க்கும் கழுகின் கண்கள் இப்படி இருப்பது உண்டு.

## 43

அலுவலறையின் நிசப்தத்தில் தன் பழைய காகிதங்களை ஒழுங்குபடுத்துகையில் அவற்றின் நடுவே செம்மணிச் சிலுவை கிடைத்த போது திமீத்ரி ஸானின் நினைவுபடுத்திக் கொண்டவை இவை. நாம் விவரித்துள்ள நிகழ்ச்சிகள் அவனுடைய மனத் திரையில் தெளிவாகவும் தொடர்ச்சியாகவும் காட்சி அளித்தன... ஆனால் திரும்பி போலஸவாவிடம் தான் அவ்வளவு இழிந்த முறையில் கெஞ்சியது, அவளுக்கு அடிப்பட்டது, தன் அடிமை வாழ்க்கை தொடங்கியது ஆகியவை வரை வந்ததும் தனக்குத் தென்பட்ட காட்சிகளி

லிருந்து அவன் முகத்தைத் திருப்பிக் கொண் டான். மேற்கொண்டு நினைவுகூர அவன் விரும்ப வில்லை. நினைவாற்றல் அவனைக் கைவிட்டு விட்ட தாக இதற்கு அர்த்தம் இல்லை—இல்லவே இல்லை! அந்த நிமிடத்துக்குப் பிறகு என்ன நடந்தது என் பதை அவன் அறிந்திருந்தான், மிக நன்றாக அறிந் திருந்தான். ஆனால், இத்தனை ஆண்டுகள் கழிந்த பிறகும், இப்போது கூட வெட்கம் அவனைப் பிடுங் கித் தின்றது. நினைவை அடக்காமல் விட்டு விட் டதுமே தன் மேல் இகழ்ச்சி கட்டுக்கு அடங்காமல் வெள்ளமாய்ப் பெருகி மற்ற எல்லா உணர்ச்சி களையும் அலைபோல அடித்துப் போய்விடும் என் பதில் அவனுக்குச் சந்தேகமே ஏற்படவில்லை. இந்த உணர்வுக்கு அவன் அஞ்சினான். ஆனால் எழுந்த நினைவுகளிலிருந்து தப்ப அவன் எப்படி எல்லாமோ முயன்றும் அவற்றை முழுமையாக அடக்க அவனால் முடியவில்லை. தான் ஜெம்மாவுக்கு அனுப்பிய இழிதகைமையும் கண்ணீரும் பொய் யும் நிறைந்த அவலக் கடிதத்தை நினைத்துக் கொண்டான். அந்தக் கடிதத்துக்குப் பதில் வர வில்லை... இந்த மாதிரி ஏமாற்றுக்குப் பிறகு, இத்தகைய துரோகத்துக்குப் பிறகு, அவளிடம் போவது, அவளிடம் திரும்புவது, கூடவே கூடாது! அந்த அளவு மனச்சான்றும் நேர்மையும் அவ னிடம் இன்னும் எஞ்சி இருந்தன. தவிரவும், தன் மேல் இருந்த நம்பிக்கையையும் மதிப்பையும் அவன் அறவே இழந்துவிட்டான். எதற்கும் பொறுப்பு ஏற்றுக் கொள்ள அஞ்சினான். பிற்பாடு, — ஓ, வெட்கக்கேடு! — போலஸவ் தம்பதியின் பணியாளை பிராங்க்பர்ட்டுக்கு அனுப்பித் தன் சாமான்களை எடுத்து வரச் செய்தது, அஞ்சி நடுங் கியது, கூடிய விரைவில் போய்விட வேண்டும்

பாரிசுக்கு, பாரிசுக்கு என்றே எண்ணிக் கொண் டிருந்தது, மாரியா நிக்கலாயெவ்னுவின் உத்தரவுப் படிப் போலஸவுக்கு இணங்கிப் போனது, அவனுக நடித்தது, டோன்ஹாபின் தயவைச் சம்பாதிக்க முயன்றது, மாரியா நிக்கலாயெவ்னு தனக்குத் தந்ததே போன்ற இரும்பு மோதிரத்தை அவ னுடைய விரலில் கண்டது ஆகிய நிகழ்ச்சிகளை ஸானின் நினைவு கூர்ந்தான்!!! இன்னும் மோசமான, இன்னும் வெட்கக் கேடான நிகழ்ச்சிகள் அப்புறம் நினைவுக்கு வந்தன... பரிசாரகன் ஒரு முகவரிச் சீட்டை அவனிடம் கொடுத்தான். ''மாட்சிமை தங்கிய மொதேன் கோமகனின் அர சவைப் பாடகன் பந்தலியோனே சிப்பத்தோலா'' என்ற பெயர் அதில் இருந்தது! கிழவனிடமிருந்து ஒளிந்து கொள்ளப் பார்த்தான் ஸானின், ஆனல் நடையில் முதியவனைச் சந்திக்காமல் தப்ப அவ னல் முடியவில்லை. நரைத்த முன்னுச்சி மயிர் சிலுப்பி நிற்க, அவனுக்கு எதிர்ப்பட்டது எரிச்சல் மண்டிய முகம். தணல் போல அனல் வீசின முதிய விழிகள். அச்சுறுத்தும் கூச்சல்களும் “Maledizione!”* என்ற சாபமும் ஒலித்தன. “Codardo! Infame traditore!”** என்ற பயங்கரச் சொற்கள் கூடக் கேட்டன. ஸானின் கண்களைச் சுருக்கிக் கொண்டான், தலையைக் குலுக்கினுன், மறுபடி மறுபடி முகத்தைத் திருப்பிக் கொண்டான், ஆனு லும் அடுத்த காட்சிகளைக் காணுதிருக்க அவனுக்கு முடியவில்லை: பயண வண்டியின் குறுகலான முன் இடத்தில் அவன் உட்கார்ந்திருக்கிறுன்... வசதி

---

* ''நீ பாழாய்ப் போக!'' (இத்.).

** ''பயங்கொள்ளி! கடை கெட்ட துரோகி!'' (இத்.).

யான பின் இருக்கைகளில் அமர்ந்திருக்கிறார்கள் மாரியா நிக்கலாயெவ்னாவும் போலஸவும். நான்கு குதிரைகள் வண்டியை இழுத்துக் கொண்டு விஸ்பாதென் சாலை வழியே பாய்ந்து ஓடுகின்றன— பாரிசுக்கு! பாரிசுக்கு! ஸானின் தோல் சீவித் தந்த பேரிக்காயைத் தின்று கொண்டிருக்கிறான் போலஸவ். மாரியா நிக்கலாயெவ்னா ஸானினைப் பார்த்துக் கேலியாகக் குறுநகை செய்து கொண்டிருக்கிறாள். அடிமையான அவனுக்கு ஏற்கெனவே பழக்கமாகி விட்ட குறுநகை—சொந்தக்காரனின், ஆளுபவனின் குறுநகை—அது...

அட கடவுளே! அதோ அங்கே, வீதி முனையில், நகரிலிருந்து வெளியேறுவதற்கான இடத்துக்கு அருகில், நிற்பது யார்? மறுபடி பந்தலியோனேயா? அவனோடு இருப்பது யார்? எமீலியோவா? ஆம், அது அவன்தான், மகிழ்ச்சிப் பெருக்கில் திளைத்த அந்த விசுவாசமுள்ள பையன்தான்! தன் வீரனும் ஆதர்ச மனிதனுமாக விளங்கிய ஸானினை அவனுடைய குழந்தை நெஞ்சம் போற்றி வழிபட்டு வந்தது வெகு காலத்துக்கு முன்பா என்ன? இப்போது வெளிறி இருக்கிறது அவனது அழகான முகம் — மாரியா நிக்கலாயெவ்னா அதைக் கவனித்து வண்டிச் சாளரத்துக்கு வெளியே எட்டிப் பார்க்கும் அளவுக்கு அழகான முகம். உயர் பண்பு திகழும் அந்த முகம் இப்போது வன்மத்தையும் இகழ்ச்சியையும் கொட்டுகிறது. விழிகள்—அந்த விழிகளைப் பெரிதும் ஒத்திருந்த விழிகள்—ஸானினை உறுத்து நோக்குகின்றன. உதடுகள் இறுகி... பின்பு மனத்தாங்கல் பொங்கத் திறந்து கொள்கின்றன.

பந்தலியோனேயோ, கையை நீட்டி ஸானினைச் சுட்டிக் காட்டுகிறான்—யாருக்கு? பக்கத்தில் நின்று

கொண்டிருந்த சடை நாய் தர்த்தாலியாவுக்கு. தர்த்தாலியா ஸானினைப் பார்த்துக் குலைக்கிறது. நேர்மை உள்ள நாயின் குலைப்பே பொறுக்க முடியாத அவமதிப்பாக ஒலிக்கிறது... மானக்கேடு!

அப்புறம் அங்கே — பாரிசில் — வாழ்க்கை, பொருமைப்படவோ குறை சொல்லவோ உரிமை அற்ற அடிமையாக இழிவுகளும் சித்திர வதைகளும் அனுபவிப்பதும் முடிவில் நைந்த உடை போல எறியப்படுவதும்...

பிறகு தாயகம் திரும்புவது, நஞ்சேறி வெறுமை ஆகி விட்ட வாழ்க்கை, அற்பத் தொந்தரவு, அற்பப் பாடுகள், கசப்புள்ள, பயனற்ற கழிவிரக்கம், அவ்வளவே பயனற்றதும் கசப்புள்ளதுமான மறதி, வெளிப்படையானது இல்லாவிட்டாலும், ஆற்ற முடியாத அற்பப் புண் போன்று, கணக்கிடவே முடியாத கடனைக் காசு காசாகக் கொடுத்துத் தீர்ப்பது போன்று, நிமிடந் தோறும் இடைவிடாமல் வதைத்த தண்டனை...

துன்பக் கோப்பை தளம்பத் தளம்ப நிறைந்து விட்டது—போதும்!

---

ஜெம்மாவால் ஸானினுக்குக் கொடுக்கப்பட்ட சிலுவை எப்படித் தப்பித்தது, அவன் அதை ஏன் திருப்பிக் கொடுக்கவில்லை, அன்று வரை ஒரு தரங்கூட அது அவனுடைய பார்வையில் படாதது எப்படி நேர்ந்தது? சிந்தனை செய்தவாறு வெகு நேரம் உட்கார்ந்திருந்தான் அவன். இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, அனுபவத்தால் படிப்பினை பெற்றுத் தெளிந்திருந்த அவனுக்கு ஒரு விஷயம் விளங்கவே இல்லை: தன்னை அவ்வளவு கனிவுடனும் ஆர்வத்துடனும் காதலித்த ஜெம்

மாவை, தான் காதலிக்கவே செய்யாத ஒரு பெண் பிள்ளையின் பொருட்டு விட்டு விட அவனால் எப்படி முடிந்தது?.. தான் வெளிநாடு, செல்லப்போவ தாக அறிவித்து, தன் நண்பர்களையும் தனக்கு அறி முகமானவர்களையும் மறுநாள் அவன் வியப்பில் ஆழ்த்தினான்.

நண்பர் குழாத்துக்கு ஒன்றும் புரியவில்லை. அப்போது நல்ல பனிக்காலம். தட்டு முட்டு சாமான்கள் அமைந்த அருமையான வீட்டை அண்மையில்தான் அவன் வாடகைக்குப் பிடித் திருந்தான். இத்தாலிய ஆபெராவுக்கு முன்கூட்டி டிக்கெட்டு வாங்கி இருந்தான். அந்த ஆபெரா வில் நடித்துப் பாடுவதாக இருந்தாள் சாட்சாத் திருமதி பத்தி — உலகப் புகழ் பெற்ற திருமதி பத்தி! இந்த எல்லாவற்றையும் உதறி விட்டு அவன் திடுதிப்பென்று புறப்பட்டது ஏன் என்று நண்பர்களுக்கும் தெரிந்தவர்களுக்கும் விளங்கவில்லை. ஆனால் மற்றவர்களுடைய விவ காரங்களில் நெடு நேரம் ஈடுபடுவது மனிதர்களு டைய இயல்புக்குப் புறம்பானது. எனவே, ஸானின் வெளிநாடு செல்லப் புறப்பட்ட போது அவனை வழியனுப்ப ரயில் நிலையத்துக்கு வந்தவன் ஒரு பிரெஞ்சுத் தையல்காரன் மட்டுமே — அவனுங் கூட "pour un saute-en-barque en velours noir, tout à fait chic"* ஸானின் கொடுக்க வேண்டி யிருந்த பணத்தை வாங்கிக் கொள்ளும் நம்பிக் கையுடன் வந்திருந்தான்.

---

* மிக மிக மோஸ்தர்படிக் கறுப்பு வெல் வெட்டில் தைத்த மாலுமிக் கோட்டுக்காக (பிரெஞ்சு).

## 44

தான் வெளிநாடு போவதாக ஸானின் நண்பர்களிடம் சொன்னான், ஆனால் எங்கே என்று சொல்லவில்லை. அவன் நேரே பிராங்க் பர்ட்டுக்கு விரைந்தான் என்பதை வாசகர்கள் எளிதில் ஊகித்திருப்பார்கள். எல்லா இடங்களி லும் பரவி விட்ட இருப்புப் பாதைகளின் துணை யால், பீட்டர்ஸ்பர்கிலிருந்து புறப்பட்டதற்கு நான்காம் நாள் அவன் பிராங்க்பர்ட் போய்ச் சேர்ந்து விட்டான். 1840ம் ஆண்டுக்குப் பிறகு அவன் அங்கே போகவே இல்லை. ''வெள்ளை அன்னம்'' தங்கு விடுதி முந்திய இடத்திலேயே இருந்தது, நன்றாக நடந்து வந்தது. ஆனால் முதல் தரமானதாக இப்போது அது மதிக்கப்படவில்லை. பிராங்க்பர்ட்டின் பிரதான வீதியான ஸேயில் கொஞ்சந்தான் மாறி இருந்தது. ஆனால் திருமதி ரொஸேல்லியின் வீடு மட்டும் அல்ல, அவளுடைய மிட்டாய்க்கடை இருந்த தெரு கூட இருந்த சுவட்டையே காணோம். ஒரு காலத்தில் தனக்கு நன்கு பழக்கமாகி இருந்த இடங்களில் மதி இழந் தவன் போலச் சுற்றி அலைந்த ஸானின் எதையும் அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. முந்திய கட்டுமானங்கள் மறைந்து விட்டன. அவற்றின் இடத்தில் காணப்பட்டன நெருக்கமாகக் கட்டப் பட்ட பெரிய பெரிய கட்டிடங்களும் பகட்டான பங்களாக்களும் அமைந்த புதிய வீதிகள். ஜெம்மா விடம் தன் காதலை அவன் கடைசியாகத் தெரி வித்த பொதுத் தோட்டங்கூடப் புதர்கள் மண்டி ஒரேயடியாக மாறி இருந்ததைக் கண்ட ஸானின், அதே தோட்டந்தானா இது? என்று தன்னைக் கேட் டுக் கொண்டான். அவன் என்ன செய்வான்? எப்படி,

யாரிடம் விசாரிப்பான்? அந்த நிகழ்ச்சிகளுக்குப் பின் முப்பது ஆண்டுகள் கழிந்து விட்டன... லேசான விஷயமா என்ன? அவன் விசாரித்தவர் களில் யாரும் ரொஸேல்லி என்ற பெயரைக் கூடக் கேள்விப்பட்டிருக்கவில்லை. பொது நூலகத்தில் தகவல் கேட்டுப் பார்க்கும்படி யோசனை சொன் ஞன் தங்கு விடுதிச் சொந்தக்காரன். எல்லாப் பழைய செய்தித்தாள்களும் அங்கே கிடைக்கும் என்றுன். ஆனல் அதிலிருந்து ஸானின் பெறக் கூடிய நன்மை என்ன என்பதை அவனுல் விளக்க முடியவில்லை. புகலற்றுப் போன ஸானின் ஹெர் கிளியூபெரைப் பற்றி விசாரித்தான். விடுதிச் சொந்தக்காரனுக்கு இந்தப் பெயர் நன்ருய்த் தெரிந்திருந்தது. ஆனல் இங்கும் தோல்வி ஏற்பட் டது. பகட்டும் மினுக்குமுள்ள அந்த வர்த்தகன் போடு போடென்று போட்டு முதலாளி என்ற பட்டத்துக்கு உயர்ந்த பின் நொடித்துப் போய்ச் சிறையில் காலமாகி விட்டதாகத் தெரிய வந் தது... ஆனல் இந்தச் செய்தியால் ஸானினுக்குத் துளிக் கூடத் துயரம் உண்டாகவில்லை. தனது பய ணம் கொஞ்சம் யோசனை அற்றது என்று அவன் எண்ணத் தலைப்பட்டான்... ஆயினும், ஒரு நாள் பிராங்க்பர்ட் முகவரிப் பட்டியலைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த போது, ஓய்வு பெற்ற மேஜர் (Major a. D.) வான் டோன்ஹாப் என்ற பெயர் அவனுக்குத் தட்டுப்பட்டது. இந்த டோன் ஹாப் ஏன் அந்த டோன்ஹாபாக இருக்க வேண் டும், அந்த டோன்ஹாப் கூட ரொஸேல்லி குடும் பத்தாரைப் பற்றித் தனக்கு ஏதாவது தகவல் தெரிவிக்க எப்படி முடியும் என்பது விளங்கா விட்டாலும் ஸானின் உடனே வண்டி வைத்துக் கொண்டு அவனிடம் போகப் புறப்பட்டான்,

மூழ்குபவன் துரும்பைக் கூடப் பற்றிக் கொள்ளு வது உண்டே.

ஸானின் போன போது ஓய்வு பெற்ற மேஜர் வான் டோன்ஹாப் வீட்டில் இருந்தான். தன்னை வரவேற்ற நரைத்தலைத் திருவாளர் தன் முன்னாள் எதிராளி என்பதை ஸானின் உடனே கண்டு கொண்டான். அவனும் ஸானினை அடையாளம் தெரிந்து கொண்டான், அவனுடைய வருகையால் மகிழ்ச்சி கூட அடைந்தான். இளமையையும் இள மைப் பருவக் குறும்புகளையும் இந்த வருகை அவ னுக்கு நினைவூட்டியது. ரொஸேல்லி குடும்பத்தார் வெகு காலத்துக்கு முன்பே அமெரிக்காவுக்கு, நியூயார்க் நகரத்துக்குப் போய் விட்டதாக அவனிடமிருந்து ஸானின் தெரிந்து கொண்டான். ஜெம்மா ஒரு வர்த்தகனுக்கு வாழ்க்கைப் பட்ட தாகவும் தனக்குத் தெரிந்த ஒரு வர்த்தகன் இருப் பதாகவும், அமெரிக்காவில் இவனுக்கு நிறையத் தொழில் தொடர்புகள் உண்டு ஆகையால் ஜெம் மாவின் கணவனுடைய முகவரி இவனுக்குத் தெரிந் திருக்கும் என்றும் சொன்னான் டோன்ஹாப். இந்த வர்த்தகனிடம் போய் வரும்படி ஸானின் டோன் ஹாபைக் கேட்டுக் கொண்டான். அவ்வாறே செய்த டோன்ஹாப்—ஓ இன்பம்!—ஜெம்மாவின் கணவர் திருவாளர் ஜெரெமி ஸ்லோக்கமின் முகவரியைத் தெரிந்து வந்தான். Mr. J. Slocum, New—York, Broadway, No. 501 என்ற இந்த முகவரி 1863ம் ஆண்டுக்கு உரியது என்று அவன் கூறினான்.

''நம்முடைய முன்னாள் பிராங்க்பர்ட் நகர அழகி இன்னும் உயிரோடு இருப்பதாகவும் நியூ யார்க்கிலிருந்து வெளியேறவில்லை என்றும் நம்பு வோம்!'' என்ற டோன்ஹாப், குரலைத் தாழ்த்தி,

''அது சரி, அந்த ருஷ்யச் சீமாட்டி என்ன ஆனாள், விஸ்பாதெனில் தங்கி இருந்தாளே, அவள், நினைவு இருக்கிறதா? திருமதி வான் போ... வான் போலஸோவ், இன்னும் உயிரோடு இருக்கிறாளா?'' என்று வினவினான்.

''இல்லை. வெகு காலத்துக்கு முன்பே இறந்து போனாள்'' என்று பதிலளித்தான் ஸானின்.

டோன்ஹாப் விழிகளை உயர்த்தியவன், ஸானின் மறுபுறம் திரும்பி முகம் சுளித்ததைக் கண்டு மேற்கொண்டு ஒரு சொல் பேசாமல் அகன்றான்.

---

ஜெம்மா ஸ்லோக்கமின் நியூயார்க் முகவரிக்கு அன்றே கடிதம் எழுதினான் ஸானின். அவளைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து கொள்ளும் ஒரே நோக்கத்துடன் பிராங்க்பர்ட் வந்திருப்பதாகவும் அங்கிருந்தே கடிதம் எழுதுவதாகவும் குறிப்பிட்டான். அவளிடமிருந்து பதிலை எதிர் பார்க்கத் தனக்கு அணு அளவும் உரிமை கிடையாது என்பதைத் தான் மிக நன்றாக உணர்ந்திருப்பதாகவும் அவளுடைய மன்னிப்புக்குத் தான் எவ்வகையிலும் அருகன் அல்ல என்றும் இன்பமான சூழ்நிலையில் வாழும் அவள் தன்னை வெகு காலத்துக்கு முன்பே மறந்திருப்பாள் என்று மட்டுமே நம்புவதாகவும் எழுதினான். தற்செயலான ஒரு நிலைமை கடந்த கால நினைவுகளைத் தீவிரமாக எழுப்பி விட்டதன் விளைவாகவே தன்னைப் பற்றி அவளுக்கு நினைவுபடுத்தத் துணிந்ததாகக் குறிப்பிட்டான். குடும்பம் இல்லாமல் தனிக்கட்டையாகத் தான் நடத்தி வரும் அவல வாழ்க்கையை விவரித்தான். அவளுக்கு எழுதும்படித் தன்னைத்

தூண்டிய காரணங்களைப் புரிந்து கொள்ளும்படி அவளை வற்புறுத்தி வேண்டிக் கொண்டான். தன்னுடைய குற்றத்துக்கு உரிய தண்டனையை நீண்ட காலமாக அனுபவித்து வருவதாகவும் இன்னும் மன்னிப்பு பெறுதிருப்பதாகவும், இந்தக் குற்ற உணர்வைக் கல்லறைக்குக் கொண்டு போகும் படித் தன்னை வைத்து விடாமல் இருக்குமாறும் எழுதினான். அவள் போயிருக்கும் புது உலகில் அவளுடைய வாழ்க்கை எப்படி இருக்கிறது என்று சுருக்கமாகவாவது தெரிவித்துத் தனக்கு மகிழ்ச்சி அளிக்கும்படிக் கேட்டுக் கொண்டான். ''எனக்கு ஒரு வார்த்தையாவது எழுதினீர்களானால் தங்கள் வனப்பு வாய்ந்த உள்ளத்துக்குத் தக்க செயலைச் செய்தவர் ஆவீர்கள். அதற்காக என் கடைசி மூச்சு உள்ளவரை நான் தங்களுக்கு நன்றி பாராட்டிக் கொண்டிருப்பேன். நான் இங்கே வெள்ளை அன்னம்'' (இந்தச் சொற்களுக்கு அவன் அடிக்கோடு இட்டான்) ''தங்கு விடுதியில் இருக்கிறேன். உங்கள் பதிலுக்காக வசந்த காலம் வரை காத்திருப்பேன்'' என்று கடிதத்தை முடித்தான் ஸானின்.

இந்தக் கடிதத்தை அனுப்பி விட்டுக் காத்திருந்தான் ஸானின். அறையிலிருந்து அனேகமாக வெளியேறுமலும் யாரையுமே பார்க்காமலும் தொடர்ந்து ஆறு வாரங்கள் அவன் விடுதியில் தங்கி இருந்தான். ருஷ்யாவிலிருந்தோ வேறு எங்கிருந்தேனுமோ அவனுக்குக் கடிதம் எழுதக் கூடியவர் யாரும் இல்லை. இந்த நிலைமை அவனுக்குப் பிடித்திருந்தது. தன் பெயருக்குக் கடிதம் வந்தால் தான் எதிர்பார்க்கும் அதே கடிதமே அது என்று அவன் உடனே தெரிந்து கொள்வான். காலை முதல் மாலை வரை படிப்பதில் அவன் ஈடுபட்டிருந்

தான்—பத்திரிகைகளே அல்ல, ஆழ்ந்த நூல்களே, வரலாற்று நூல்களே. இந்தத் தொடர்ந்த படிப்பும் இந்த மௌனமும் நத்தை போன்று மறைந்து வாழும் இந்த வாழ்க்கையும் அவனுடைய உள நிலைக்குப் பொருந்தி இருந்தன: இந்த ஒன்றுக்காகவே ஜெம்மாவுக்கு நன்றி! ஆனால் அவள் உயிரோடு இருக்கிருளா இல்லையா? பதிலளிப்பாளா மாட்டாளா?

கடைசியில் வந்தது கடிதம்—அமெரிக்க அஞ்சல் தலை ஒட்டி, நியூயார்க் நகரிலிருந்து அவன் பெயருக்கு. உறை மேல் முகவரி ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது... அவன் கையெழுத்தை அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை. அவனுடைய நெஞ்சு பக்குப் பக்கென்று துடித்தது. உறையைத் திறக்க அவன் தயங்கினுன். திறந்த பின் கடிதத்தில் கையெழுத்தைப் பார்த்தான்: ஜெம்மா! அவனுடைய விழிகளிலிருந்து கண்ணீர் பெருகியது. அவள் குலப்பெயர் இல்லாமல் தன் இயற் பெயரால் மட்டும் கையெழுத்து இட்டிருந்ததே அவள் சமாதானம் அடைந்து விட்டதை, மன்னித்து விட்டதைக் காட்டும் அடையாளமாக அவனுக்குப் பட்டது! மெல்லிய நீல அஞ்சல் காகிதத்தைப் பிரித்தான். அதிலிருந்து ஒரு நிழற்படம் விழுந்தது. சட்டென்று அதை எடுத்தவன் அப்படியே மலைத்து நின்று விட்டான்: அதில் இருந்தாள் ஜெம்மா, உயிருள்ள ஜெம்மா, முப்பது ஆண்டுகளுக்கு முன் அவன் அறிந்திருந்த அதே இள மங்கை! அதே கண்கள், அதே உதடுகள், முகம் முழுவதும் அதே மாதிரி. படத்தின் மறு பக்கத்தில் ''என் மகள் மரியான்னு'' என்ற சொற்கள் காணப்பட்டன. கடிதம் முழுவதும் மிகுந்த பரிவுடனும் எளிமையாகவும் எழுதப்பட்டிருந்தது.

தனக்கு எழுதத் தயங்காததற்காகவும் தன் மேல் நம்பிக்கை வைத்ததற்காகவும் ஸானினுக்கு நன்றி தெரிவித்த ஜெம்மா, அவன் ஓடிப்போன பிறகு தான் பட்ட துயரையும் மறைக்கவில்லை. ஆனாலும் அவனைச் சந்தித்தது தனது நல்ல திர்ஷ்டம் என்று எண்ணுவதாகவும் எப்போதும் எண்ணி வந்திருப்பதாகவும் ஏனென்றால் ஹெர் கிளியூபெரின் மனைவி ஆவதிலிருந்து அந்தச் சந்திப்பு தன்னைத் தடுத்ததாகவும், எனவே தற்போதையக் கணவரைத் தான் மணப்பதற்கு மறைமுகமாகத்தான் என்றாலும் அது காரணமாய் இருந்ததாகவும், தான் இவருடன் இந்த இருபத்தெட்டு வருஷங்களாகச் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வருவதாகவும் தங்கள் குடும்பம் நியூயார்க் நகர் முழுவதற்கும் தெரிந்தது என்றும் எழுதி இருந்தாள். தனக்கு நான்கு மகன்களும் ஒரு மகளும் இருப்பதாகவும் பதினெட்டு வயதான மகளுடைய திருமணம் நிச்சயமாகிவிட்டது என்றும் அவள் தன் தாயை மிகவும் ஒத்திருப்பதாக எல்லோரும் சொல்லுவதால் அவளுடைய நிழற்படத்தை அனுப்பி இருப்பதாகவும் தெரிவித்திருந்தாள். துயரச் செய்திகள் கடிதத்தின் கடைசியில் இருந்தன. பிராவு லெனோரே மகளோடும் மருமகனோடும் நியூயார்க் வந்தவள் அங்கே காலமாகி விட்டதாகவும் ஆனால் தன் குழந்தைகள் இன்பமாய் இருப்பதைக் கண்டு களிக்கவும் பேரக் குழந்தைகளைச் சீராட்டவும் அவளுக்கு வாய்த்தது என்றும் எழுதியிருந்தாள். பந்தலியோனேயும் நியூயார்க் போக ஏற்பாடு செய்து கொண்டிருந்தானும், ஆனால் பிராங்க்பர்ட்டிலிருந்து புறப்படுவதற்குச் சற்று முன்பு காலமாகி விட்டானும். ''அப்புறம் எமீலியோ, நம்முடைய

இனிய, ஈடு எதிர் இல்லாத எமீலியோ, தாயகத்தின் விடுதலைக்காக சிசிலியில் வீர மரணம் அடைந்தான்.* மாபெரும் கரிபால்டியின் தலைமையில் போரிட்ட 'ஆயிரவர்களில்' ஒருவனாக அவன் சிசிலிக்குப் போனான். எங்கள் செல்வத் தம்பியை இழந்ததால் நாங்கள் கண்ணீர் பெருக்கினோம், ஆனால் துயரத்தோடு கூடவே நாங்கள் பெருமையும் அடைந்தோம். என்றும் அவன் மேல் பெருமை கொள்ளுவோம், அவனுடைய நினைவைப் புனிதமாகப் போற்றுவோம்! அவனுடைய தன்னலமற்ற, உன்னத ஆன்மா தியாகியின் மகுடம் புனையத் தகுதி உள்ளது!'' என்று குறிப்பிட்டிருந்தாள். ஸானினுடைய வாழ்க்கை மிக மோசமாக அமைந்து விட்டதாகத் தோன்றுவதாகவும் அது குறித்து வருந்துவதாகவும் எழுதி விட்டு, அவன் அமைதியும் ஆன்ம சாந்தியும் பெற வாழ்த்தி இருந்தாள். அவனைக் காண விரும்புவதாகவும் ஆனால் இம்மாதிரிச் சந்திப்புக்கு வாய்ப்பு எவ்வளவு குறைவு என்பதை உணர்வதாகவும் கூறி இருந்தாள்...

இந்த கடிதத்தைப் படித்த போது ஸானினுக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை வருணிக்க நாம் முயலப் போவதில்லை. இத்தகைய உணர்ச்சிகளை வெளியிடத் திருப்தி தரக்கூடிய சொற்கள் கிடையா. எந்தச் சொல்லையும் விட அவை ஆழமானவை, வலியவை, திட்டமாக வரையறுக்க முடியாதவை.

---

* இத்தாலியின் விடுதலைக்காக நடந்த போராட்டத்தின் ஒரு பகுதியைத் துர்கேனிவ் இங்கே குறிக்கிறார். ஜூஸெப்பே கரிபால்டியின் தலைமையில் ''செஞ்சட்டையினரான'' ஆயிரம் வீரர்கள் நடத்திய வெற்றிகரமான படையெடுப்பு அது (1860)

